# திருவருள் அடையும் வழி

ஆசிரியர்
**தஞ்சை நா.சாமிநாதன்**

குமரன் பதிப்பகம்
வள்ளுவர் இல்லம்
223, மூன்றாம் தெரு,
பிலோமினா நகர்,
தஞ்சாவூர்–6.

# பதிப்புக் குறிப்புகள்


| | | |
|---|---|---|
| நூல் தலைப்பு | : | திருவருள் அடையும் வழி |
| ஆசிரியர் | : | தஞ்சை நா.சாமிநாதன் |
| பொருள் | : | ஆன்மீகம்–உரைநடை |
| உரிமை | : | ஆசிரியர்க்கு |
| முதற்பதிப்பு | : | பிப்ரவரி 2002 |
| வெளியீடு | : | குமரன் பதிப்பகம்,<br>வள்ளுவர் இல்லம்,<br>223, மூன்றாம் தெரு,<br>பிலோமினா நகர்,<br>தஞ்சாவூர்–6. |
| தாள் தன்மை | : | சேசாயி வெள்ளைத்தாள் 13.7 கே.ஜி. |
| பக்கம் | : | 240 + 32 = 272 |
| எழுத்து | : | 10 புள்ளி |
| படிகள் | : | 1200 |
| அச்சிட்டோர் | : | பொன்னையா ஆப்செட் பிரஸ்,<br>கீழவீதி, தஞ்சாவூர். |
| விலை | : | ரூ.75.00 |

உ
சிவ சிவ

கயிலை மாமுனிவர்
திருவளர்திரு காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்
அதிபர், காசித்திருமடம்.
திருப்பனந்தாள்-612 504
(தஞ்சை மாவட்டம்)
தேதி : 5.6.2000

## வாழ்த்துரை

மன்னுயிர்த் தொகுதியுள் மாண்புறு மனிதப் பிறப்பு அரிதாகவே பெறப்படும். மக்களாகப் பிறந்தோர் பிறவிப்பயனை உணர்ந்து, மீண்டும் பிறவா நெறி அறிந்து இறையடி அடைய முயல வேண்டும். அப்பேரா இயற்கைப் பெருநெறி அடைய இறைவன் திருவருள் வேண்டும். அத்திருவருளை அடைவதற்கு நம் முன்னோர்கள் பலவித நெறிகளை வகுத்துத் தந்துள்ளனர். அவை சாத்திரங்களாகவும், தோத்திரங்களாகவும் சைவ சமயச் சான்றோர்களால் ஆக்கப்பெற்றுள்ளன. பெறற்கரிய மனிதப் பிறவியைப் பெற்றோர் காலத்தை வீண் போக்காது மெய்ந்நூல்களைக் கற்றும் கேட்டும் அவற்றின் வழிநின்றும் இறைவனை வழிபட்டுத் திருவருள் பெற வேண்டும்.

இக்குறிக்கோளை அடைதற்குத் துணைபுரிய ஏதுவாக, சிவத்திரு நா.சாமிநாதன் அவர்கள் "திருவருள் அடையும் வழி" எனும் நூலை அரிதின் முயன்று திருவருள் துணையால் ஆக்கி உள்ளார்கள். இந்நூலைப் பற்றி அறியும் வாய்ப்பு கிட்டியது. ஆசிரியரது கடும் உழைப்பும், பரந்த பல்நூல் அறிவும், சைவசமயத்தில் அழுத்தமான உறைப்பும் இந்நூல் வாயிலாக அறியக் கிடக்கின்றன. இந்நூலுள் நூல்களைப் பொது நூல், சிறப்பு நூல் என வகுத்துக்கொண்டு, வேதங்கள், ஆகமங்கள் பற்றி விரிவாக ஆராயப்பட்டுள்ளது. அகச்சமயம், புறச்சமயம் பற்றிய செய்திகள் விளக்கமாகத் தரப்பட்டுள்ளன

முப்பொருள் பற்றிய விளக்கங்கள் நுட்பமாகவும், விரிவாகவும் தரப்பட்டுள்ளன. உயிர்களின் தோற்ற வளர்ச்சி, முத்திற உயிர்களின் தன்மைகள் சிறப்புற விளக்கப்பட்டுள்ளன.

படைப்புத்தோற்றம் அட்டவணை இட்டுக் காட்டப்பட்டுள்ளமையால் படிப்போர்க்கு எளிதில் விளங்குவதாக உள்ளது.

அவத்தைகள், மாயை, வாக்குகள், ஏழுகோடி மந்திரங்கள் ஆகியவை மிக விரிவாக ஆராயப்பட்டுள்ளன. மாயை பற்றி மிக விரிவாக விளக்கப்பட்டுள்ளது. ஐம்பொறிகளின் ஐம்புலன்கள், ஐம்பூதங்கள், தசநாடிகள், முக்கரணங்கள், வினைகள் ஆகியவை மிகமிக விரிவாக விளக்கப்பட்டுள்ளன.

சைவ சமய உண்மைகள் யாவும் ஆராயப்பட்டுக் கொடுக்கப்பட்டுள்ளன. சாத்திர உண்மைகளை எளிய முறையில், உலகியல் காட்டுகள் மூலம் விளக்குவது இந்நூலின் சிறப்பாக உள்ளது. தாம் எடுத்துக் கொண்ட பொருளுக்கு ஏற்ப பல்வேறு தோத்திர, சாத்திரங்களிலிருந்து மேற்கோள்கள் காட்டியிருப்பது ஆசிரியரின் கடும் உழைப்பிற்கும் பரந்துப்பட்ட சமய நூல் அறிவிற்கும் சான்று பகர்வதாகும்.

எளிய இனிய தமிழ்நடையில் நூல் அமைந்திருப்பது பாராட்டிற்குரியதாகும். சைவ சமய உண்மைகளை எளிமையாக அறிந்து கொள்வோர்க்கு இந்நூல் பெரிதும் பயன்படும். ஆசிரியர் பல நூல்களின் துணை கொண்டு அரிதின் திரட்டிய கருத்துகள் சைவர் பலருக்குப் பெருந்துணை புரியும். ஏறத்தாழ 75 நூல்களிலிருந்து ஆசிரியர் கருத்துகளைத் திரட்டித் தம் விளக்கத்தைத் தந்துள்ளார். நூல்முகமாக நூலின் கருத்தை அழகாக விளக்கித் தொகுத்துக் கூறியுள்ள பாங்கு குறிப்பிடத்தக்கது.

சைவ சமயத்திற்குப் பலர் ஒல்லும் வகையான் தொண்டு செய்து வருகிறார்கள். இந்நூல் ஆசிரியர் தாம் நீண்ட நாள் கற்றுணர்ந்த சமயக் கருத்துகளைப் பிறரும் அறிந்து பயன்பெற்று இன்புற வேண்டும் எனும் கருத்தால் இந்நூலை யாத்துள்ளமை அவர் சைவ சமயத்தின்பால் கொண்ட அளவிலாப் பற்றினையே காட்டுகிறது.

பல்லாற்றானும், பலருக்கும் பயன்படும் வகையில் இந்நூலை ஆக்கிய சிவத்திரு நா.சாமிநாதன் அவர்கட்கு சிவஞானமும், தீர்க்காயுளும், மேன்மேலும் சித்திக்குமாறு அருள வேண்டுமென்று எல்லாம் வல்ல செந்தில்வளர் கந்தப்பெருமான் திருவடிகளைச் சிந்திக்கின்றோம்.

சைவ அன்பர்கள் இந்நூலைப் பயின்று "திருவருள் அடையும் வழியை" உணர்ந்து எல்லாம் வல்ல சிவபரம்பொருளின் திருவருளுக்கு உரியதாகுக.

சுபம். சிவசிவ

திருக்கயிலாய பரம்பரை
சீர் வளர் சீர்
சிவப்பிரகாச பண்டாரச்சந்நிதி அவர்கள்
குரு மகாசந்நிதானம்
திருவாவடுதுறை ஆதீனம்.

திருவாவடுதுறை 609 803
(நாகை மாவட்டம்)

நாள் : 12.9.2000

"நமச்சிவாய வாஅழ்க நாதன்தாள் வாழ்க
இமைப்பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான் தாள்வாழ்க
கோகழி ஆண்ட குருமணிதன் தாள்வாழ்க
ஆகமம் ஆகிநின்று அண்ணிப்பான் தாள்வாழ்க
ஏகன் அனேகன் இறைவன் அடி வாழ்க"

## வாழ்த்துரை

சமயங்கள், உயிர்கள் படிப்படியாக அறிவு விளக்கம் பெற்று நன்னெறியில் ஒழுகி மேலான பேரின்ப நியைத்தை அடைவதற்கு வகுக்கப் பெற்ற படிக்கட்டுகள்; துணைபுரியும் ஞானவிளக்குகள் ஆகும். உலகில் உள்ள சமயங்கள் பல. ஏனைச் சமயங்கள் போலல்லாமல் முழுமுதற் கடவுளாகிய சிவபெருமானால் நிலைபெறுத்தப்பெற்ற மாட்சியுடையது சைவம்.

சைவ சமயத்தின் நோக்கம் திருவருள் அடைதல் - பேரின்ப வீடு அடைதல், அதற்கு உரிய நல்வழி சைவ உண்மைகளை அறிவுறுத்தும் சிவாகமங்கள், திருமுறைகள், மெய்கண்ட சாத்திரங்கள் முதலிய சமய நூல்களைத் தெளிவாக அறிந்து அவை தெரிவிக்கும் கொள்கைகளைத் தழுவி நடத்தல். ஞான நூல்களாகிய இவற்றின் அரும்பொருள்களைத் தெளிவாக அறிந்து பயன்கொளச் சிவஞானம் கைவரப் பெற்ற நல்லாசிரியர்களின் உரை நூல்கள் உளவேனும் அவை, முறையாகக் கற்று வல்லார்க்கே உதவுவனவாயுள்ளன. அனைவரும் சைவப் பேருண்மைகளை எளிதின் அறிந்து வாழ்வாங்கு வாழவும் திருவருள் பெற்றுப் பிறவிப்பயனை அடையவும் சித்தாந்த புலமை மிக்க அறிஞர் பெருமக்கள் உரைநடையில் நூல்கள் பல இயற்றி உள்ளனர்.

செந்தமிழ்ப் புலமையும் சித்தாந்த நூல்களில் ஆழ்ந்த ஆராய்ச்சித் திறனும் உடைய அன்பர் தஞ்சாவூர் திரு.நா.சாமிநாதன், எம்.ஏ., பி.எட்., அவர்கள் சைவநூற் கருத்துக்களை யாவரும் எளிதாக அறிந்து பேரின்பம் அடைவதற்கு உதவியாகத் 'திருவருள் அடையும் வழி' எனும் நூலை நல்லவண்ணம் இயற்றி வழங்குவது மகிழ்வளிக்கின்றது. வகுத்துக் கொள்ளப்பெற்ற தலைப்புகளில் தெளிவாகவும் விரிவாகவும் எளிய இனிய நடையில் சமய உண்மைச்செய்திகளை விளக்கியிருப்பது பாராட்டுதற்குரியது. கற்று வல்லார் முடிவாக படிக்கத் தெரிந்த ஆண்மக்கள் பெண்மக்கள் எல்லோரும் படித்துப் பயன்அடையத்தக்கதாக இயற்றப்பெற்ற இவ்வினிய நூலை அன்பர்கள் அனைவரும் பெற்றுப் பயின்றுப் பெரும்பயன்கொள்ளவும் அன்பர் பணி மேலும் தொடர்ந்து இன்பம் பெருக்கவும் அருள நம் ஆன்மார்ந்த மூர்த்தி அருள்தரு ஞானமா நடராசப் பெருமான் திருவடி மலர்களைச் சிந்திக்கின்றோம்.

முகவரி: புலவர் நா.சாமிநாதன், எம்.ஏ., பி.எட்., 223-3 ஆம் தெரு, பிலோமினா நகர், தஞ்சாவூர் 6.

உ
சிவமயம்
"சைவத்தின் மேல் சமயம் வேறில்லை"

**ஸ்ரீ-ல-ஸ்ரீ சங்கரலிங்கதேசிக பரமாச்சார்யசுவாமிகள்**
*ஆதீன கர்த்தர்,*
*ஸ்ரீ கந்த பரம்பரை ஸ்ரீ சிவாக்கிரயோகிகள் ஆதீனம்,*
*சூரியனார்கோயில்,*
*திருமங்கலக்குடி அஞ்சல், அ.கு.எ.612 102,*
*தஞ்சை மாவட்டம்.*

To

*நா.சாமிநாதன், M.A., B.Ed.,*
*வள்ளுவர் இல்லம்,*
*223, மூன்றாம் தெரு,*
*பிலோமினா நகர், நா.கோட்டை,*
*தஞ்சாவூர் 613 006.*

தேதி : 7.8.2000
முகாம் :

அன்புடையீர்!

குருவருளும் திருவருளும் என்றும் அருள்புரிவதாக.

தாங்கள் எழுதித் தொகுத்த "திருவருள் அடையும் வழி" எனும் ஸ்ரீ-ல-ஸ்ரீ மகா சந்நிதானம் திருக்கண்சார்த்தி, தற்காலத்திற்கேற்ப எளிய முறையில், வருங்கால சந்ததியினர் யாவரும் படித்து உணரும் நிலையில் இந்நூல் அமைகின்றது எனலாம் என்றும், மேலும் தோத்திர சாத்திர, ஆகம நூல்களையும் ஆதீனக் குருமூர்த்திகளின் நூல்களையும் ஆதாரமாகக் கொண்டு விளங்குவதால் சிறப்புடையது. இத்தகு நூற்பணி சிறந்து விளங்கிட ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களை ஆசீர்வதித்துள்ளார்கள். சுபம்.

. . . . . . .

*7.8.2000*
சூரியனார் கோயில்

உத்திரவுப்படி
ஸ்ரீ காலத்தி
ஸ்ரீ மடாலயம்-ஸ்ரீகாரியம்

## அணிந்துரை

'கவிக்காவலர்', 'தெய்வீக இயற்றமிழ் வேந்தர்'
**முனைவர் வே.இரா.மாதவன்,**
இணைப்பேராசிரியர், ஓலைச்சுவடித்துறை,
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்-613 005.

மனித வாழ்வியல் நெறிகளின் தொகுப்பே சைவ சித்தாந்தம் ஆகும். உடல், மனம், உயிர், சமுதாயம் என்ற நால்வகைப் பக்கங்களால் இணைக்கப் பெற்றவனே மனிதன் என்பது ஒரு சமுதாயக் கோட்பாடு ஆகும். இவையேயன்றி, தனிமனிதன் இன்னும் எவ்வெப் பொருள்களோடு தொடர்பு கொண்டுள்ளான் என அறிவதும், அவன் வாழ்வியல் அடிப்படை என்ன என்று ஆய்வதும், நன்நெறி கொண்டு திருவருளை அடைய வேண்டுவதும் அவனுடைய கடமைகளாகின்றன. இவற்றைத் தெளிவுறுத்தும் வண்ணமே தோத்திர நூல்களையும் சாத்திர நூல்களையும் ஆன்றோர் பெருமக்கள் உருவாக்கித் தந்துள்ளனர். இவற்றின் விளக்கங்களாக மேலும் பல நூல்கள் காலந்தோறும் வெளியிடப் பெற்று வருகின்றன.

இவ்வகையில், "திருவருள் அடையும் வழி" என்னும் இவ்வரிய நூலைச் சிவத்திரு புலவர் நா.சுவாமிநாதன், எம்.ஏ., பி.எட்., அவர்கள் அரிதின் முயன்று வடிவமைத்துள்ளார். பரந்த நூலறிவும் சைவ சமயப் பற்றும் ஒருங்கே அமையப் பெற்று, மிக ஆழமாகவும் நுண்ணிதின் உணர்ந்தும் இதனை இவர் உருவாக்கியுள்ளார். சைவ சமயத் தத்துவக் கருத்துக்களை மிக எளிமையாகவும் பொருள் புலப்பாட்டுடனும் படைத்துள்ளமை மிகவும் பாராட்டுக்குரியதாகும்.

திருவருள் அடையும் வழியைக் காட்டும் சாத்திரங்கள் பல இருப்பினும், சைவ சித்தாந்தத்தின் சிறப்பை விரிவாக எடுத்துரைப்பதில் இந்நூல் தனியிடம் பெறுகின்றது. இறைவன், உயிர்கள் என்னும் இரண்டிற்கும் தடையாயுள்ள தளைகள் பற்றி நன்கு அறிதலும், முன்னோர் சென்ற வழியையும் வழியின் தன்மைகளையும் அறிதலும் திருவருள் அடையும் வழி என்பதை இந்நூலாசிரியர் திறம்படத் தொகுத்துரைக்கின்றார். இவற்றைப் பத்துப் பெருந்தலைப்புகளில் இவர் வகுத்தும் அமைக்கின்றார்.

முதலாவதாக, நூல் என்னும் பகுதியில், பொது நூல், சிறப்பு நூல் பற்றி விளக்கியிருப்பதுடன், ஞான நூல்களாகிய உண்மை நூல்கள், மெய்கண்ட சாத்திரமாகிய இலக்கண நூல்கள், சிவாகமங்கள் ஆகியவற்றையும் சுட்டியுரைக்கின்றார். சமயங்கள் பற்றி

இரண்டாவதாக எடுத்துரைக்கின்றார். உலகாயதம் முதலான ஆறு புறப்புறச் சமயங்களும் அவற்றின் கொள்கைகளும் விளக்கப் பெறுகின்றன. அடுத்து, தருக்கம் முதலான புறச் சமயங்களும் அவற்றின் கொள்கைகளையும் கூறி, பாடாண வாத சைவம் முதலான அகச்சமயங்களும் அவற்றின் கொள்கைகளையும் விரித்துரைக்கின்றார். இறுதியாக, சௌரம், சைவம், சாக்தேயம், வைணவம், காணாபத்தியம், கௌமாரம் ஆகியவை காட்டும் நெறிகளைச் சுட்டுகின்றார்.

மூன்றாம் பகுதியில் முப்பொருள் உண்மைகள் முறையாக விளக்கப் பெற்றுள்ளன. உள்பொருள்கள், ஆகமம் கூறும் பொருள்கள் பற்றியும், கருத்து வேறுபாடுகள் பற்றியும் அமையும் எண்ணங்களும் நினையத் தக்கன. முப்பொருள்களில் ஒன்றான இறைவனின் குணங்கள், ஆகமம் கூறும் இறைவன் இலக்கணம், முத்திறம், படைப்புத் தொழிலும் வடிவமும் பற்றிய சிந்தனைகள் பல குறிப்பிடத்தக்கன. இங்கு, இறைவனுக்கு உருவம் கிடையாது. ஆயினும், வழிபடுவோர் தத்தம் விருப்பப்படி வெவ்வேறு உருவம் படைத்து வழிபடுகின்றனர் என்றும், உருவமற்ற உயிர் உருவமான உடலை இயக்குவதைப் போலவே உருவமற்ற இறைவனும் உருவமான அண்டத்தையும் (உலகம்) பிண்டத்தையும் (உடல்) இயக்குவான் என்றும் தெளிவாக விளக்கி, சிவஞானமுனிவர் கருத்துக்களையும் தொகுத்துரைப்பது நாம் நினைந்து நினைந்து போற்றத்தக்கதாம்.

அடுத்து ஐந்தாவதாக அமையும் உயிர் பற்றிய விளக்கப் பகுதிகள் மிக விரிவானவை. ஆழ்ந்த சிந்தனைக்குரியவை. உயிர் இலக்கணம், உயிருக்கு வழங்கும் பெயர்கள், உயிர் வகைகள், உயிரின் தொழில்கள் மற்றும் குணங்கள் பற்றித் தனித்தனியே விளக்கிய பின்னர் உயிர் தோன்றுமிடத்தையும் இந்நூலாசிரியர் எடுத்துரைக்கின்றார். உயிரும் ஆறறிவும் பற்றிக் கூறி, மனிதன் பெயர்க்காரணம் பற்றி விளக்குவது இவர்தம் ஆழ்ந்த தத்துவ நூலாராய்ச்சியுணர்வுக்குச் சான்றாம்.

மனிதன் அறிவுப்பொருள், தானே அறியான். அறிவிக்க அறிவான் என்பதை எடுத்துக்காட்டி, அறிவின் வகைகளைக் கூறிய பின்பு, தனிநிலை (கேவலாவத்தை), கலப்பு நிலை (சகலாவத்தை), தூய நிலை (சுத்தாவத்தை) ஆகியவை விளக்கப் பெறுகின்றன. ஒரு மலத்தார் (விஞ்ஞானகலர்), இருமலத்தார் (பிரளயாகலர்), மும்மலத்தார் (சகலர்) என்னும் உயிர் வகை பற்றி அமையும் விளக்கங்கள் குறிப்பிடத்தக்கனவாம்.

உயிரின் ஐந்து அவத்தைகளான நனவு (சாக்கிரம்), கனவு (சொப்பனம்), உறக்கம் (சுழுத்தி), பேருறக்கம் (துரியம்), உயிர்ப்பு அடங்கல் (துரியாதீதம்) ஆகியவற்றிற்கான எளிய விளக்கங்களைத் தருகின்றார் இந்நூலாசிரியர். அடுத்து, பாசம், மலம், அழுக்கு, கட்டு எனப் பலவாறு வழங்கப்பெறும் முப்பொருளில் ஒன்றான தளை பற்றிய எண்ணங்கள் இடம்பெறுகின்றன. தளைக் காரணிகளில் முதன்மையானதான தன்முனைப்பு (ஆணவம், செருக்கு, அகங்காரம்) என்பதன் தன்மைகளை இவர் குறிப்பிடும் பாங்கு மிக அருமையானதாகும்.

சினம், ஆசை, துன்பம், செருக்கு, நகை, அயர்வு, மோகம், விபரித ஞானம், மயக்க ஞானம், கீழ் இருத்துதல் ஆகியவற்றின் தீமைகளை விளக்கி ஆகமக் கருத்துக்களுடன் நிறுவுகின்ற முறைமையும், தன்முனைப்பு என்னும் பொருளினைத் தரும் பல சொற்களின் பட்டியலையும் தொகுத்துத் தந்து அவற்றைத் தனித்தனியே சான்றுகளுடன் விளக்குவதும் பாராட்டுக்குரியதாகும்.

படைப்புத் தோற்றுவாயான "மாயை" என்னும் சொல் தமிழில், மா-பெரிது, ஐ-வியப்பு என அமைந்து மாயை "பெருவியப்பு" (உலகங்களும் உயிரினங்களும் தோன்றுவதற்குக் காரணமான பெரு வியப்பிற்குரிய பொருள்) என்றும்; வடமொழியில், மா-ஒடுங்குதல், யா-தோன்றுதல் என அமைந்து, மாயா - உலகம் தோன்றுவதற்கும் ஒடுங்குவதற்கும் காரணமானது என்றும் பொருந்தி வருவதை இந்நூலாசிரியர் மிகத் தெளிவாக விளக்கி, மாயையின் இலக்கணம், தன்மைகள், விளைவு, செயல்கள், வகைகள் ஆகியவற்றை நிரல்பட எடுத்துரைப்பதும் காரண காரிய தத்துவங்களை விளக்குவதும் குறிப்பிடத்தகும் பகுதிகளாகும்.

சுத்த மாயையை விளக்குமிடத்து அதன் பெயர்கள், செயல்களைக் கூறி, மொழியின் தோற்றத்தையும் எடுத்துரைக்கின்றார். அசுத்த மாயையை விளக்குமிடத்து தத்துவ வகைகளைக் குறிப்பிடுகின்றார். பின்பு அமையும் மாயையின் படிமுறை வளர்ச்சி (பரிணாமம்), சிவ தத்துவம், மனம், ஐம்பொறிகள், பஞ்ச பூதங்கள் பற்றிய விளக்கங்கள் அனைத்தும் சமயக் கல்வியாளர்களுக்குரிய அரும்பெரும் சிந்தனை விருந்தாம்.

கருமம் அல்லது வினை என்பதன் விளக்கங்களை மிகத் தெளிவாக இவர் நிறுவுகின்றார். மனத்தால் செய்யும் வினைகள், சொல்லால் ஏற்படும் நல்வினை, மெய்யால் செய்யும் நல்வினை என இவற்றைப் பகுத்துக் காட்டி, அவற்றின் பயன்களையும் கூறி, பாவம் நீங்கும் வழிகளையும் கூறுகின்றார். ஊழ்வினை பற்றிய கொள்கை

விளக்கங்களுடன் வினை நீக்கம் பற்றிய எண்ணங்களையும் தொகுத்துரைத்து, நிறைவாகத் திருவருள் அடையும் வழிகளை நிறுவுவது இவர்தம் தனிச்சிறப்பாகும்.

அவனருளாலே தான் அவன் தாள் வணங்குகிறோம் என்ற அடிப்படையில் அனைத்து உயிர்களும் இறைவன் திருவருளாலேயே பிறக்கின்றன என்பதும், அவை முன்வினைப்பயன் துய்க்கத்தக்க உடல் பெறுவதும் உலகப் பொருள்கள் பெறுவதும் அத்திருவருளாலேயே என்பதும் அருளாளர்கள் முடிபாகும். இத்தகைய பேரருளுடைய திருவருளைச் சார்ந்து நிற்றலே உயிர்களின் பண்பாகும். சத்தியநெறி என்னும் ஞானநெறியில் சென்று பேரறிவாகிய இறைவன் திருவடியில் இரண்டறக் கலப்பதுவே பிறவிப் பயனாகும் என்பதையும் ஆன்றோர்கள் வலியுறுத்தியுள்ளனர். இவற்றை எளிய நடையிலே எடுத்துக்காட்டும் இந்நூலாசிரியர் இப்பிறவியிலேயே இத்திருவருள் பெறலாம் எனவும் உறுதிபடக் கூறுகின்றார்.

"பிறப்பு என்னும் பேதைமை நீங்கச் சிறப்பு என்னும் செம்பொருள் காண்பது அறிவு" என்னும் வள்ளுவர் வாய்மொழிக்கேற்ப இவரும் மெய்யுணர்வு பெறத்தக்க இத்தகைய வழிமுறைகளைக் கூறுகின்றார். ஞானநூற் திறங்களை ஆய்ந்தறிந்து, தன்முனைப்பு அகன்று, பற்றினை விட்டு, எல்லா உயிரிடத்து அன்பு கொண்டு, இறை தொண்டை இடைவிடாது செய்பவர்களுக்கு இறைவன் தானே முன்வந்து அருள்புரிவான் என்பதை இந்நூலாசிரியர்தம் நீண்ட நெடிய அனுபவ வாயிலாகவும் எடுத்துக் கூறியிருப்பது இந்நூல் கற்பார் அனைவருக்கும் பயன்மிகத் தருவதாகும்.

"கற்று ஈண்டு மெய்ப்பொருள் கண்டார், தலைப்படுவர் மற்று ஈண்டு வாரா நெறி" என்னும் மொழிக்கேற்ப முத்தியாகிய வீட்டு நெறியைப் புலப்படுத்திக் காட்டும் சைவ சித்தாந்தக் கருத்துக்களை மிக எளிமையாக விளக்கியுரைக்கும் அரும்பெரும் பணியை மதிப்பிற்குரிய புலவர் நா.சுவாமிநாதன் அவர்கள் இந்நூல் வழியே நிறைவு செய்துள்ளார். தம் வாழ்நாளில் தாம் பயின்றும், செவி மடுத்தும், செம்மாந்துணர்த்தும் அறிந்த அரிய சமய தத்துவக் கருத்துக்களை யெல்லாம் இவ்வாறு வகை தொகைப்படுத்திய பிறரும் உணரும் வண்ணம் நூலாக்கித் தந்துள்ளமை இறையருளில் இவருக்குள்ள உண்மை ஈடுபாட்டைப் பறை சாற்றும்.

இவ்வரிய நூலை அனைவருக்கும் அச்சிட்டு வழங்க நிதியுதவி நல்கிய திருமலை திருப்பதி தேவத்தானத்தார் பெரிதும் பாராட்டுக்குரியவராவர்.

யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்னும் உயரிய கோட்பாட்டினுக்கு விளக்கமாகவும் இந்நூலை இவர் படைத்துள்ளார். மனித வாழ்வியல் நெறியை உணர விழைவோர்களுக்கும், சைவ சித்தாந்த ஆய்வு மாணாக்கர்களுக்கும், சமயச் சிந்தனையாளர் பலருக்கும் இந்நூல் மிகவும் பயனுடையதாகும்.

படைப்பாற்றல் மிக்க கவிஞராகவும், தத்துவ நூலாசிரியராகவும், சிறந்த பண்பாளராகவும் திகழும் பாவலர் சிவத்திரு. புலவர் நா.சுவாமிநாதன் அவர்கள் எல்லா நலன்களுடன் நீண்ட ஆயுளும் பெற்று, இதேபோன்று மேலும் பல நூல்களையும் எழுதி வெளியிட வேண்டுமென எல்லாம் வல்ல எம்பெருமான் திருவருளை நினைந்து போற்றி வணங்குகிறேன்.

தஞ்சாவூர், அன்பன்,
31.1.2002 வே.இரா.மாதவன்

முனைவர் வே.இரா.மாதவன்,
"திருமகள் இல்லம்",
30, நட்சத்திர நகர், முதல் தெரு,
தஞ்சாவூர்-613 003,
தொலைபேசி எண் : 333167.

# நூன்முகம்

நா.சாமிநாதன்,
வள்ளுவர் இல்லம்,
223, மூன்றாம் தெரு,
பிலோமினா நகர்,
தஞ்சாவூர்-613 006.

"எண்ணிய எண்ணியாங் கெய்துப எண்ணியார்
திண்ணிய ராகப் பெறின்" திருக்குறள் 665.

இறைவனை வழிபட்டுத் திருவருள் பெற பல நூல்கள் உள. பல நூல்களின் துணை கொண்டு எழுதப்பெற்ற இந்நூலைப் படிப்போர் பயன்பெறுவராயின் என் முயற்சி பயன்விளைவித்ததாகும்.

"திருப்பதி வேங்கடாசலபதி பாமாலை" என்னும் மரபுக் கவிதை நூலை எழுதி வெளியிட அருள்புரிந்த திருப்பதி வேங்கடாசலபதி, இந்நூலை அச்சிட்டு வெளியிட அருளோடு பொருள் உதவியும் புரிந்துள்ளார். அவரது திருவடி போற்றி! போற்றி!! சரணம்! சரணம்!!

திருமலை திருப்பதி தேவஸ்தானம் நூல் வெளியிட சமய நூல்களுக்கு உதவும் திட்டத்தின்கீழ் இந்நூல் அச்சிட்டு வெளியிட பொருள் உதவி புரிந்துள்ளார்கள். எனவே தேவஸ்தானத்திற்கும், பொருள் உதவிபுரிய பரிந்துரை செய்த பொறுப்பாளர்களுக்கும் என் நன்றியையும், வணக்கத்தையும் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

திருப்பனந்தாள், காசிமடம், அதிபர் கயிலை மாமுனிவர் திருவளர் திரு.காசிவாசி முத்துக்குமாரசாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் என்னையும் ஒரு பொருட்டாகக் கருதி வாழ்த்துரை வழங்கியுள்ளமைக்கு நன்றியையும் வணக்கத்தையும் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

திருவாவடுதுறை ஆதினம், குருமகா சந்நிதானம், திருக்கயிலாய பரம்பரை சீர்வளர் சீர் சிவப்பிரகாச பண்டாரச் சந்நதி அவர்கள் என்னையும் ஒரு பொருட்டாகக் கருதி வாழ்த்துரை வழங்கியுள்ளமைக்கு நன்றியையும் வணக்கத்தையும் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

சூரியனார் கோயில் ஸ்ரீ கந்த பரம்பரை ஸ்ரீ சிவாக்கிர யோகிகள் ஆதினம், ஆதின கர்த்தர் ஸ்ரீ-ல-ஸ்ரீ சங்கரலிங்க பரமாச்சார்ய சுவாமிகள் அவர்கள் என்னையும் ஒரு பொருட்டாகக் கருதி வாழ்த்துரை வழங்கியுள்ளமைக்கு நன்றியையும் வணக்கத்தையும் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

தஞ்சாவூர், பல்கலைக்கழகம், ஓலைச்சுவடித்துறை இணைப்பேராசிரியர், 'கவிக்காவலர்', 'தெய்வீக இயற்றமிழ் வேந்தர்', முனைவர் வே.மாதவன் அவர்கள் விரிவான அணிந்துரை வழங்கியுள்ளமைக்கு நன்றியையும் வணக்கத்தையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூல் எழுதத் தொடங்கிய காலந்தொட்டு, அச்சிட்டு வெளிவரும் வரை தூண்டுகோலாகவும் துணையாகவும் விளங்கிய தஞ்சாவூர் அரசர் மேனிலைப்பள்ளி முதுகலைப் பட்டதாரி ஆசிரியர் திரு.பால.செங்குட்டுவன் அவர்களுக்கு நன்றியை மகிழ்வுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலினை நன்கு அச்சிட்டு வழங்கிய தஞ்சாவூர், கீழவீதி, பொன்னையா ஆப்செட் பிரிண்டர்ஸ்க்கு நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

"எல்லோரும் இன்புற்று இருப்பதன்றி வேறு ஒன்றும் அறியோம் பராபரமே" தாயுமானவர்.

அன்புள்ள,
நா.சாமிநாதன்

தஞ்சாவூர் 6,
பிப்ரவரி 2002.

# திருவருள் அடையும் வழி

## பொருளடக்கம்

## 7. தன்முனைப்பு

# திருவருள் அடையும் வழி
## கருவி நூல் பட்டியல்

1. அகத்தியர் துதி
2. அப்பர் தேவாரம்
3. அனுபோக வெண்பா
4. இருபா இருபஃது
5. ஈஸ்வர மெய்ஞ்ஞான நாடி நூல்
6. உபதேச பஃறொடை
7. உபதேச நிட்டை
8. உண்மை நெறி விளக்கம்
9. உண்மை விளக்கம்
10. கந்தர் கலிவெண்பா
11. கர்மரஹஸ்யம்
12. கம்பராமாயணம்
13. காகபுஜண்டர் பெருநூல் காவியம்
14. கிரணாகமம்
15. கைவல்ய நவநீதம்
16. சங்கற்ப நிராகரணம்
17. சதமணிக்கோவை
18. சதமணி மாலை
19. சம்பந்தர் தேவாரம்
20. சித்தாந்த சிகாமணி
21. சித்தாந்தப் பிரகாசிகை
22. சித்தாந்த நிச்சயம்
23. சிதம்பரம் மும்மணிக்கோவை
24. சிவஞான சித்தியார் சுபக்கம்
25. சிவஞான போதம்
26. சிவஞான விலாசம்
27. சிவஞான தீபம்
28. சிவஞான போத வெண்பா
29. சிவஞான மாபாடியம்
30. சிவப்பிரகாசம்
31. சிவப்பிரகாச விளக்கம்
32. சிவப்பிரகாச விகாசம்
33. சிவநெறி பிரகாசம்
34. சைவ சித்தாந்த தத்துவம்
35. ஞானாமிர்தம்
36. தஞ்சைப் பல்கலைக்கழகச் சமூக வாழ்வியல்
37. தத்துவப் பிரகாசிகை
38. தத்துவப்பிரகாசம்

39. தகராலய ரகசியம்
40. தணிகைப் புராணம்
41. திருக்குறள்
42. திருக்களிற்றுப்படியார்
43. திருஞானசம்பந்தர் தேவாரம்
44. திருமந்திரம்
45. திருவருட்பா
46. திருவாசகம்
47. திருவருட்பயன்
48. திருவுந்தியார்
49. திருவானைக்காப் புராணம்
50. தொல்காப்பியம்
51. துகளறுபோதம்
52. நமசிவாய மாலை
53. நாதக்காரிகை
54. நாநாசீவாதக் கட்டளை
55. நிட்டை விளக்கம்
56. நீதிநெறி விளக்கம்
57. நெஞ்சு விடு தூது
58. பண்டாரமும் மணிக்கோவை
59. பரிபூரணாந்த போதம்
60. பரிபாடல்
61. பழமொழி
62. புறநானூறு
63. பெருந்திரட்டு
64. போகக் காரிகை
65. போற்றிப் பஃறொடை
66. மதுரைச் சிவப்பிரகாசர் பாடல்
67. மணிமேகலை
68. முருகன் அகத்தியர் உபதேசம் 500
69. மும்மணிக்கோவை
70. வாக்குண்டாம்
71. வள்ளலார் உரைநடைப்பகுதி
72. வினா வெண்பா
73. வீராகமம்
74. சமயங்கள்
75. ஞானவெட்டியான்

மற்றும் பல ஆய்வு நூல்கள்

# திருவருள் அடையும் வழி

## 1. கணபதி வணக்கம்

மலரடி வணங்கி நிலமதில் நீள்நாள்
நிலைத்திட நின்னைப் போற்றியே
மலம்மூன் றும்நீங் கிதூய மனத்துடன்
எல்லாரும் எல்லாம் பெற்றிட
புலன்ஐந் துமொடுங் கிஒருமை உளம்பெற
நலம்புரி விநாயகா! கணபதி!
நலம்பல நவிலும் நன்னூல் எழுதிட
நின்னருள் வேண்டுகின் றேனே!

## 2. சிவபெருமான் வணக்கம்

அருவாய் உருவாய் அருவுருவா யவரவர்
விருப்ப மாய்விளங் கும்பரம் பொருளே
இருமை இருமை இலையெனும் கருத்தினை
இருவிதம் கூறுவோர் போற்றும் சிவனே!
பெருமை உரையிலும் எழுத்திலும் அடங்கா
திருவே ஆதி அந்தம் இலானே
ஒருமை மனத்துடன் திருவடி வணங்கினேன்
கருத்துடன் நூலைப் படைத்திட அருள்கவே!

## 3. அங்காளம்மை வணக்கம்

எங்கும் நிறைந்தோய் எங்குல தெய்வம்
அங்கா ளம்மையே! பொங்கும் அருளால்
எங்கும் விளங்கிடும் நூலினை ஆக்கிட
செங்கம லதாளினை வணங்குகின் றேனே!

## 4. நாமகள் வணக்கம்

அறிவும் தெளிவும் அளித்து உலகோர்
நெறியும் பண்பும் நீடு ஒழு
நறிய மலர்களைச் சூடியநா மகளே
செறிந்த கருத்துடன் செந்தமிழ் நூலினை
எழுதும் எனக்கு பழுதின் றிஅமைய
தொழுது வேண்டு கின்றேன் அன்னையே
பொழுது எலாம்போற் றும்எனக் குஅருள்
[illegible]ழுதும் வழங்குக தாயே!

## 5. முருகன் வணக்கம்

| | | | |
|---|---|---|---|
| தந்தைக் | குஞானம் | விளக்கிய | சாமி |
| முந்தை | வினைகள் | நீக்கும் | நாதன் |
| கந்தன் | பெருமை | உரைத்திட | இயலுமோ? |
| முந்தை | சொன்னவர் | முழுதும் | இலையே |
| எந்தன் | வினைகள் | எல்லாம் | தீர்த்து |
| உந்தன் | திருவடி | சேர்வதே | எண்ணம். |
| அந்தம் | வேண்டும் | தொடர்பிற | விக்கே |
| எந்தனுக் | கஅருள்க | ஞானக் | குருவே! |
| புன்னெறி | விட்டு | நன்னெறி | ஒழுகிட |
| வன்மனம் | மாறி | நன்மனம் | விளங்கிட |
| முன்வினை | ஒழிந்து | பின்வினை | வராது |
| நின்னால் | இருவினை | ஒப்பு | ஏற்பட |
| தன்மல | பரிபா | கம்வந் | திடவே |
| நன்னூல் | பலவும் | படைத்தனர் | ஞானியர் |
| பன்னூல் | தொகுத்து | இந்நூல் | ஆக்கிட |
| அறிவிக் | கஅறியும் | அறிவிலா | உயிர்கள் |
| அறிந்திட | தடையாய் | விளங்கும் | விலங்கெனும் |
| தளையைநீக் | கிதிரு | வருள்அடை | யும் வழி |
| இளையோன் | எழுதிட | அருள்வாய் | முருகா! |
| மும்மலம் | என்றும் | ஐம்மலம் | என்றும் |
| எம்முடை | காலை | தும்பாய்ப் | பிணித்த |
| தளையை | முற்றும் | களைந்திட | ஆணவ |
| முளையை | வறுத்து | விளைவைத் | தடுத்திட |
| இருவினை | ஒழித்த | பருவுடல் | போக்கி |
| திருவருள் | அடைந்திட | உதவிடும் | நூலாய் |
| அமைந்திட | உமையின் | மகவே! | முருகா! |
| உமையே | பணிந்து | வேண்டுகின் | றேனே! |

## 6. அகத்தியர் வணக்கம்

அண்டம் அறிந்து பிண்டம் உணர்ந்து
கண்ட உண்மையை உலகுக் களித்தாய்!
அண்ட முடியா அண்டமொத் தமிகு
ஞானமே மனம்அது செம்மை ஆனால்
வேண்டாம் மந்திரம் என்றமா முனியே
கண்டாய் சுழுமுனை யாற்றலைத் தவத்தால்
எண்ணிய துளய்திட திண்ணிய அகத்தியரே
நின்னடி போற்றி வழுத்துகின் றேனே!

## 7. காப்பு

சாத்திர நூற்பல கண்டனர் சாத்தியர்
தோத்திர நூற்பல ஆக்கினர் சாதகர்
பாத்திரம் கொண்டநூ லுக்குரைக் கண்டவர்
மாத்திரம் எண்ணிலர் வாழ்வில் நாளும்
காத்தவர் சிலரே யாவரும் முத்திக்கு
பாத்திர மானார் சமயக் கருத்தினை
கோத்தவர் கணக்கிலர் சித்தர் முத்தர்
கூத்தன் கலைமகள் கணபதி காப்பே!

# படைப்புத் தோற்றுவாய்
## படிமுறை வளர்ச்சி

படைப்புத் தோற்றுவாய் (மாயை) 1. சுத்த மாயை 2. அசுத்த மாயை

| சுத்த மாயை | 6. அசுத்தமாயை (காரணம்) |
|---|---|
| 1. சிவம் (நாதம்) | 7. காலம், 8. நியதி, 9. கலை, |
| 2. சத்தி (விந்து) | 10. வித்யை, 11. அராகம், |
| 3. சாதாக்கியம் | 12. புருடன், 13. குணம், 14. புத்தி, |
| 4. ஈசுவரம் | 15. அகங்காரம் |
| 5. சுத்த வித்தை (சுத்த தத்துவம் | (வித்தியாதத்துவம்) |

| தைசு அகங்காரம் | | வைகிருத அகங்காரம் | | பூதாதி அகங்காரம் | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 16. | மனம் | 22. | மொழி | 27. | ஓசை | 32. | விண் |
| 17. | கண் | 23. | கால் | 28. | ஊறு | 33. | வளி |
| 18. | காது | 24. | கை | 29. | ஒளி | 34. | தீ |
| 19. | மூக்கு | 25. | எருவாய் | 30. | சுவை | 35. | நீர் |
| 20. | வாய் | 26. | கருவாய் | 31. | நாற்றம் | 36. | மண் |
| 21. | தோல் | | | | | | |

| அறிவுபொறிகள் | தொழில்பொறிகள் | நுண்பொருள் | பருப்பொருள் |
|---|---|---|---|
| 17-21 | 22-26 | 27-31 | 32-36 |

1-5. செலுத்தும் தொகுதி - சிவதத்துவம்

6-12. நுகர்வோன் தொகுதி - புருட தத்துவம்

13-36. நுகர்வு தொகுதி - ஆன்ம தத்துவங்கள்

எண்கள் தோற்றமுறைப் பற்றிக் கொடுக்கப்பட்டுள்ளன.
ஒவ்வொரு தத்துவமும் ஒடுங்கும் காலத்தில் தான் தோன்றிய அதனிடத்தே ஒடுங்கும்.
தோற்றமுறை சிவனிடம் தொடங்கி நிலத்திடம் முடிவுறும்.
ஒடுக்கமுறை நிலத்திடம் தொடங்கி சிவனிடம் முடிவுறும்.
சிவதத்துவத்திற்கு அப்பால் உள்ளவன் பரமசிவன்.
பரமசிவன் நாத முடிவில் விளங்குபவன்.

## மாயை
## தோற்றமுறை - அடங்கள் முறை தத்துவம்

1. அசுத்த மாயையிலிருந்து கால தத்துவம் தோன்றும்.
2. அசுத்த மாயையிலிருந்து நியதி தத்துவம் தோன்றும்.
3. அசுத்த மாயையிலிருந்து கலை தத்துவம் தோன்றும்
4. கலை தத்துவத்திலிருந்து கல்வி தத்துவம் தோன்றும்
5. கல்வி தத்துவத்திலிருந்து பற்று தத்துவம் தோன்றும்.
6. காலம், நியதி, கலை, கல்வி, பற்று என்ற ஐந்தினோடு கூடிய புருட தத்துவம் தோன்றும்.
7. கலை தத்துவத்திலிருந்து மூலப்பிரகிருதி தத்துவம் தோன்றும்.
8. மூலப்பிரகிருதியிலிருந்து முக்குணம் தோன்றும்
9. மூலப்பிரகிருதியிலிருந்து அறியாமை தோன்றும்.
10. குணதத்துவத்திலிருந்து புத்தி தத்துவம் தோன்றும்.
11. புத்திதத்துவத்திலிருந்து அகங்கார தத்துவம் தோன்றும்.
12. தைசத அகங்காரத்திலிருந்து மனம் தோன்றும்.
13. மனத்திலிருந்து அறிவு பொறிகள் தோன்றும்.
14. வைகிரி அகங்காரத்திலிருந்து தொழிற்பொறிகள் தோன்றும்.
15. பூதாதி அகங்காரத்திலிருந்து தன் மாத்திரைகள் தோன்றும்.
16. தன் மாத்திரையிலிருந்து ஐம்பொருள் தோன்றும்.

தோற்றுவாய் பற்றிய கருத்து
வேதம் கூறுவது : பிரமத்திலிருந்து அல்லது ஆன்மாவிலிருந்து விண்ணும், விண்ணிலிருந்து வளியும், வளியிலிருந்து தீயும், தீயிலிருந்து நீரும், நீரிலிருந்து மண்ணும் தோன்றும்.

திருமுறை கூறுவது : 1.22.7 பாடல்.

இருநில னதுபுன லிடைமடி தரஎரி புகஎரி யதுமிக
பெருவளி யினிலவி தரவளி கெடவியன் இடைமுழு வதுகெட
இருவர்க ளுடல்பொறை யொடுதிரி அழிலுரு வுடையன்

முப்பத்தாறு தத்துவம் : 1. ஒலி, 2. ஒளி, 3. சாதாக்கியம், 4. மகேசுவரன், 5. சுத்தவித்தை, 6. மிச்ரமாயை, 7. காலம், 8. நியதி, 9. கலை, 10. புத்தி, 11. பற்று, 12. புருடன், 13. குணம், 14. புத்தி, 15. அகங்காரம், 16. மனம், 17. கண், 18. காது, 19. மூக்கு, 20. வாய், 21. தோல், 22. மொழி, 23. கால், 24. கை, 25. எருவாய், 26. கருவாய், 27. ஊறு, 28. ஒளி, 29. சுவை, 30. ஓசை, 31. நாற்றம், 32. விண், 33. வளி, 34. தீ, 35. நீர், 36. மண்.

உ

முருகன் துணை

# திருவருள் அடையும் வழி

## நூன்முகம்

"அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு." திருக்குறள்: 1

"சுவையொளி ஊறோசை நாற்றமென்று ஐந்தின்
வகைதெரி வான்கட்டே உலகு." திருக்குறள்: 27

"கற்றுஈண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்று ஈண்டு வாராநெறி." திருக்குறள்: 356

*உலகில் வாழும் மாந்தரெல்லாம் பொது நிலையில் ஒத்த வடிவமும், சிறப்பு நிலையில், உறுப்புக்களின் அமைப்பின் வேறுபாட்டால் வேறுபட்ட வடிவமும் உடையவர்களாய் உள்ளனர். வடிவம், வாழ்க்கை முறை, வாழ்க்கையின் கல்வி, பண்பு, வினை புரிதல், மற்றும் எண்ணம், சொல், செயல் ஆகிய பலவற்றாலும் வேறுபட்டத் தன்மையுடையவர்களாய் உள்ளனர். குறிப்பாக, மனிதத் தன்மை வேறுபட்டுள்ளது. உயர்வும், தாழ்வும், மனிதத் தன்மையைப் பொறுத்தே உள்ளது. மனிதத் தன்மை அறிவால் அமைவது. அந்த அறிவும், முயற்சி, முன்வினைப் பயன், சூழ்நிலை பொறுத்தே அமையும்.*[1]

ஒவ்வொரு மனிதனிடமும் பொதுவான கூறுகளும் (Universal Features) *சிறப்புக் கூறுகளும்* (Unique Features) *அமைந்துள்ளன. எனவே ஒவ்வொரு மனிதனும் தனித்தன்மை உடையவன். மனிதர்களை உளவியல் அடிப்படையில் ஆராய்ந்தால், ஒவ்வொரு மனிதனும் சிற்சில கூறுகளில் (1) எல்லா மனிதனைப் போல் இருப்பான். (2) சில மனிதர்களைப் போல் இருப்பான். (3) ஒருவரையும் போல் இல்லாமலும் இருப்பான். உளவியல் ஆய்வாளர் கருத்து.*

*சான்றாக, ஒரு தாய் வயிற்றில் பிறந்த மக்களிடையே பல வேறுபாடுகள் இருப்பதைக் காணலாம். பொதுக்கூறுகளும், சிறப்புக் கூறுகளும் பொருந்தி பொதுவாக, 'உடன் பிறந்தவர்கள்' என்ற நிலையில் பொதுத் தன்மையும், சிலவற்றில் சிறப்புத் தன்மையும் பொருந்தி இருப்பதைக் காணலாம்.*

*மனிதன் உண்பது, உடுத்துவது, உறங்குவது, உல்லாசமாகப் பொழுதைக் கழிப்பது, களிப்பது, கலங்குவது, அஞ்சுவது, மிஞ்சுவது தன்னைத் தானே தலைவனாக எண்ணி செயல்படுவது, செருக்குறுவது, போருக்குப் புகுவது நிலையற்ற உலகையும், உடலையும், செல்வத்தையும், இளமையையும் நிலையானதாக எண்ணி இறுமாந்து வாழ்வதையும் காணலாம். தன்னைச் சூழ்ந்துள்ளவைகள் அனைத்தும் தனக்கே உரிமையுடைத்து என்றெண்ணி, அவற்றைத் துய்ப்பதும், தடுப்போரைத் தடுப்பதும், தண்டிப்பதும், ஒழிப்பதுமான செயல்பாட்டில் ஈடுபடுகின்றனர். ஆனால் ஏன் பிறந்தோம்? எப்படி பிறந்தோம்? என்பது பற்றிய உண்மையை உணர முற்படுவது இல்லை.*

*ஆனால், மெய்ஞ்ஞானிகள் பிறவி ஏன் ஏற்பட்டது? எப்படி ஏற்பட்டது? பிறவியின் பயன் மற்றும் நோக்கம் என்ன? பிறப்பும் இறப்பும் மாறி மாறி வருவது ஏன்? என்பவற்றை எல்லாம் சிந்தித்து அளவையியல்படி (தர்க்கவியல்-Logic) ஆராய்ந்து உண்மையை உணர்ந்தனர். அதை உலகில் உள்ளோர் உணரவும், உயர்வு பெறவும் உண்மை நூல் படைத்தனர். தாம் கண்டு உணர்ந்தவற்றை 'முடிந்த முடிவாக' (சித்தாந்தம்) எழுதினர். பலருக்கும் எடுத்துரைத்துப் பக்குவப்படுத்தினர்.*

*திருவருள் அடையும் வழியைக் காட்டுவது பல சாத்திரங்கள் ஆயினும் சைவசித்தாந்தம் சிறப்பு பெறுகிறது. எங்ஙனம் ஒருவன் ஓர் இடத்தை அடைய விரும்பி பயணம் கிளம்பினால் சேரவேண்டிய இடத்தையும் அது உள்ள திசையையும், இடையிலுள்ள தூரத்தையும் மட்டும் அறிந்தால் போதுமா? பயணம் செய்யும் வண்டி வசதியையும், பயணத்திற்கு என்னென்ன தடைகள், எங்கெங்கு உள்ளன, அத்தடைகளை எப்படி நீக்குவது, பயணம் முழுமை பெற்று சேரவேண்டிய இடத்தை அடைய பயணம் செய்வோனின் உடல்நலம், வலிமை, உள்ள நலம், வலிமையைக் கவனிக்க வேண்டியது மிக மிக இன்றியமையாதது. மேலும் முன்னர் சென்று அடைந்தவர்கள் அனுபவமும் உதவும். அதனையும் அறிதல் வேண்டும். இங்ஙனம் ஆராயின் சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நான்கு வழிகள் உள்ளன. பயணத்தைத் தடை செய்யும் வலிமை பொருந்திய தளைகள் (பாசம்) உள்ளன. தடை செய்வது மட்டுமின்றி பயணமே வேண்டாம் என்ற உணர்வை ஊட்டும். எனவே தடையாகவுள்ள தளைகளை அறிந்து அவற்றை நீக்க வேண்டும். நீக்கும் வழியையும் அறிய வேண்டும். தனக்கேற்ற வழி எதுவென (நான்கில்) முடிவு செய்தல் வேண்டும். எண்ணியதை எண்ணியாங்கு எய்திட திண்ணியராக இருத்தல் வேண்டும். அதற்காகக் கற்கவேண்டிய நூல்களைக் கசடறக் கற்றலும் கற்றபின் அதன்வழி நடத்தலும்[2] அதன்வழி நடந்து வாலறிவன் நற்றாள் தொழவும்[3] வேண்டும் என்பதை அறிதல்*

வேண்டும். நால்வர், நாயன்மார்கள், அருளாளர்கள், சித்தர்கள், மெய்ஞ்ஞானிகளின் வாழ்க்கை நெறியும் வழிகாட்டும்.

எனவே இறைவன், உயிர்கள், இரண்டிற்கும் தடையாயுள்ள தளைகள் பற்றி நன்கு அறிதலும், முன்னோர் சென்றவழியையும், வழியின் தன்மைகளையும் அறிந்தால் அதுவே திருவருள் அடையும் வழி ஆகும்.

# 1. நூல்

நூல்கள் எனப்படுவன பாடல்களின் தொகுப்பு (இன்னாளில் உரைநடை) அவை தாம் கூறப்புகுந்த பொருளைப் பற்றி தெளிவாக, விளக்கமாக உரைக்கும் கருத்துக் கருவூலமாகும். பாடல்கள் இயற்கையான அறிவும், நன்னூலறிவும், பட்டறிவும் சேர்ந்து படைக்கப் பெற்றது. பாடல்களில் அழகும் ஆழமும் இருந்தால் பயன். நடையழகும், பிறச்சிறப்புக்களும் கூடியிருப்பினும் பயனில. உலகில் பட்டறிவையும், கருவி நூல் படிப்பையும் கொண்டு படைக்கப்பட்டன பாடல் நூல்கள். இது உரைநடை நூல்களுக்கும் பொருந்தும்.

தமிழ் மொழியில் நூல்களை இலக்கணம் இலக்கியம் என இரு பிரிவாகப் பிரித்து உள்ளனர். இலக்கணம், எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என ஐவகைப்படும். பொருள் திணையைப் பற்றியது. திணை என்பது மனிதனுடைய ஒழுக்கம் பற்றியது. ஒழுக்கம் என்பது அகஒழுக்கம், புறஒழுக்கம் என இருவகைப்படும். இதுவே அகப் பொருள் எனவும், புறப்பொருள் எனவும், அகத்திணை எனவும், புறத்திணை எனவும் கூறப்படும். இந்த அகஒழுக்கம் புறஒழுக்கம் பற்றிய நூல்களால் தமிழனின் ஒழுக்கம் பற்றிய நிலையும், சிறப்பும் பற்றி அறியலாம். திருமூலர் பெருமான் நல்ல தமிழில் படைக்க என்னை ஆண்டவன் படைத்தனன் என்கிறார்.

இலக்கியம் வாழ்வியல் இலக்கியம், சமய இலக்கியம் என இருவகை. சமய இலக்கியம் சாத்திரம் எனப்படும். சாத்திரமும் ஒரு இலக்கணமே. சிவாகம ஞானப் பாதங்கள் இலக்கியமே, உண்மையை உணர்த்துவதால் ஞான நூலாகிறது. இந்த ஞான நூல்களும் இலக்கணம், பட்டறிவு ஆகியவை கூறுவன உள. இந்நூல்களின் எண்ணிக்கை கூறஇயலாது. எனவேதான் குமரகுருபரர் நீதிநெறி விளக்கத்தில் முழுவதும் கற்றவர் இல்லை. சிறிது கற்றவுடன் களிப்படைய வேண்டாம் என்றார்.[4]

## 1.1. பொது நூல்

வேதம் நான்கு. இவை பல முனிவர்கள் தரிசித்த பாடல்கள். இறையருள் கொண்டும், இறைமை வேட்கையிலும் எழுந்தவை என்பர். வேதங்கள் மனிதர்களால் இயற்றப்பட்டதன்று. அது வரையறை செய்ய முடியாத காலப் பழைமை உடையது என்றும், பேராற்றல் பெற்றது என்றும் கூறுவர். இது மனிதர்களுக்குப் பொதுக் கருத்தினைப் புகட்டுவது.

## 1.2. சிறப்பு நூல்

ஆகமம் மக்களுக்குச் சிறப்பு நூலாகப் படைக்கப்பட்டது. இதுவும் வேதம் போன்று தோற்றம், படைப்பு கூறமுடியாதது. ஆகமத்தின் தெளிவாகச் சித்தாந்தம் உருவானது. உண்மைப் பொருளைப் பற்றி அறிவதற்குச் சமய நூலாகக் கருதப்படும். மெய்கண்ட சாத்திரங்களும், பண்டார சாத்திரங்களும் மற்றும் இதனோடு தொடர்புடைய வழி நூல்களும், சார்பு நூல்களும் உரைநடை நூல்களும், மேலும் பன்னிருதிருமுறை, பெரியுபராணம் அருளாளர் பாடல்கள், சித்தர்களின் மெய்ஞ்ஞானப் பாடல்கள் தமிழின் நான்கு மறையாகக் கருதத்தக்க திருக்குறள். திருமந்திரம், திருவாசகம், திருவருட்பா ஆகியவையாகும். மெய்ப்பொருள் இயலாகத் தோன்றி, சமயக் கொள்கையாக வளர்ந்தது. சைவசித்தாந்தம்.

## 1.3. உண்மை நூல்கள்

உண்மை, உலகியல், ஒழுக்கம் ஆகிய மூன்றும் மனித மேம்பாட்டிற்கு வழிகாட்டுவனவாகும். உண்மை நூல்களே ஞான நூல்கள். உண்மை நூல் தத்துவ நூல் எனப்படும். ஞான நூல்களும் இலக்கணம், பட்டறிவு உணர்த்தும்.

## 1.4. இலக்கண நூல்கள்

சைவசித்தாந்தத்தின் மூல நூல்கள் இருபத்து எட்டு ஆகமங்கள் என்பர். நான்கு பிரிவுகள் உடையது. (1) சரியை, (2) கிரியை, (3) யோகம், (4) ஞானம். ஞானம் மெய்யறிவு எனப்படும். சைவசித்தாந்தத்தில் மெய்கண்ட சாத்திரம் எனப்படும் பதிநான்கு நூல்களும் இலக்கண நூலாகும். பட்டறிவும் புகட்டுவன. பண்டார சாத்திரம் எனப்படும் பதிநான்கு நூல்களும் பட்டறிவு நூலாகும். ஆயினும் இலக்கணம் உடையது. பண்டார சாத்திரம் ஐயம் அறுத்து, வழிகாட்டி, மெய்யறிவு

நெறிக்குக் கைகொடுத்து மெல்ல அழைத்துச் செல்லும். மேலும் எண்ணற்ற சைவ சித்தாந்த நூல்கள் வடமொழியிலும் தமிழிலும் உள்ளன.

## 1.5. சமய நூல்கள்

சமய நூல்கள் துன்பமான பிணியையும், காரணத்தையும், அதனைத் தீர்க்கும் வழியினையும் நாடி ஆவனவற்றைச் செய்ய உதவுவன. சாத்திரங்கள் விதிகளை விதிப்பது. விதித்த விதிகளைக் காத்து நடப்பவனைக் காப்பது விதியினை மீறுபவனை ஒறுத்தல் உடையது. மனித மனம் விதிகளை மீறி நடக்கவே விரும்புகின்றது. விதி கட்டுப்பாட்டினை விதிக்கிறது கட்டுப்பாடுகளை நல்ஒழுக்கமும், நற்பண்பும் உடையவர் ஏற்று நடப்பர். அறியாமையாலும், செருக்கினாலும் மீறுபவர் உளர். அறிவு, உடல் வலிமை, பண வலிமை, பதவி வலிமை இவற்றைத் துணையாகக் கொண்டு ஏமாற்றும் முறைகளைக் கைக்கொண்டு மீறி நடப்பவர்களுமுண்டு. இந்தக் கட்டுப்பாட்டிற்கு அடங்கி நடந்து தன்னலம் இழப்பதைவிட (பற்றினை விடுவதைவிட) அதை உடைப்பதே மேலானது என்ற எண்ணம் சிலர்க்கு உண்டாகின்றது. கட்டுப்பாட்டின் மீதுள்ள அச்சம் போன்றே சாத்திரத்தின்மீதும் அச்சம். இந்தச் சாத்திரமும் உலக இயலுக்கு வேண்டிய ஒழுக்க நிலைகளை வற்புறுத்துவதும், உயிர் அமைதிக்கு வேண்டிய உண்மை பட்டறிவினைக் கூறுவதும் என இருவகைப்படும். ஆகமம் விதி நூல். மெய்கண்ட சாத்திரங்கள் இலக்கணமும் பட்டறிவும் உடைய நூல். பண்டாரச் சாத்திரங்கள் பட்டறிவு நூல் ஆகும்.

## 1.6. சிவ ஆகமம்

சிவபெருமானுக்கு ஐந்து முகங்கள். ஐந்து முகங்களிலிருந்தும் இருபத்தெட்டு ஆகமங்கள் தோன்றின. (1) சத்தியோசாதமுகத்தில் 1. காமிகம், 2 யோகசம், 3. சிந்தியம், 4. காரணம், 5. அசிதம். (2) வாமதேவமுகத்தில் 1. தீப்தம், 2. சூக்குமம், 3. சகஸ்ரம், 4. அம்சுமான், 5.சுப்ரபேதம். (3) அகோரமுகத்தில் 1. விஜயம், 2. நிசுவாசம், 3. சுவயம்பூதம், 4. ஆக்னேயம், 5. வீரம். (4) தத்புருட முகத்தில் 1. ரௌரவம், 2. மகுடம், 3.விமலம், 4. சந்திரஞானம், 5. முகபிம்பம். (5) ஈசான முகத்தில் 1. புரோக்கீதம், 2. லளிதம், 3. சித்தம், 4. சந்தானம், 5.சர்வோத்தமம், 6. பாரமேஸ்வரம், 7. கிரணம், 8.வாதுளம் என்பனவாம்.

# 2. சமயங்கள்

சிவஞானமுனிவர் சித்தாந்த சைவமே உண்மை சைவம் எனவும், கொள்கை வேறுபாடுடைய சைவமும் உளது என்பார். உண்மை அடிப்படையில் சமயங்களை நான்காகப் பகுத்துள்ளார்கள். ஆனால் வழக்கில் இருந்தவை, இருப்பவை பல உள. தொன்றுதொட்டே சமயம் ஆறு எனவும், மரபின் அடிப்படையில் நான்கு வகையாகவும் கூறப்பட்டு வருகிறது. எனவே நான்கு வகைப்பட்ட ஆறு சமயம் இருபத்து நான்கு ஆகிறது. ஈண்டு இறை, உயிர், தளையைப் பற்றிய கொள்கையே கூறப்பெறும்.

## 2.1. புறப்புறச் சமயங்கள்

புறப்புறச் சமயம் ஆறு. (1) உலகாயதம். புத்தமதத்தின் நான்கு நெறிகளான, (2) மாத்தியமிகம், (3) யோகசாரம், (4) சௌந்திராந்திகம், (5) வைபாடிகம், (6) ஆருகதம் என்பனவாகும். புத்த மதத்தில் பதினெட்டு உட்பிரிவுகள் உள்ளன. ஒவ்வொன்றும் கொள்கைகளில் சிறுசிறு மாறுபாடு உடையது. வைபாடிகம், சௌந்திராந்திகம் 'ஹீனயானபுத்தம்' எனவும், யோகசாரம் (விஞ்ஞானவாதம்) மாத்திய மிகம், மகாயான புத்தம் எனப்படும். மகாயான புத்த சமயத்தினர் புத்தரைக் கடவுளுக்குச் சமமாக எண்ணி வழிபடுவர்.

### 2.1.1. புறப்புறச் சமயக் கொள்கைகள்

புறப்புறச் சமயத்தார் இறைவன் இல்லை என்பார். உயிர் (ஆன்மா) இல்லை என்பார். ஆனால் சமணர் உயிர் உண்டு என்பார் தளை எட்டு என்பார். அவை: (1) மோகம், (2) அந்தராயம், (3) கோத்திரம், (4) நாமம், (5) ஆயுள், (6) வேதனீயம், (7) தரிசன ஆவரனீயம், (8) ஞான ஆவரனீயம். புத்த சமயத்தினர் உயிர் பற்றி ஏழுவிதமான கருத்தினை உடையவர். உயிர் உண்டா என்றால், (1) உண்டு, (2) இல்லை, (3) உண்டுமாம் இல்லையுமாம், (4) சொல்ல முடியாதது, (5) உண்டு இல்லை சொல்லமுடியாது, (6) இல்லை சொல்ல முடியாதது, (7) உண்டு இல்லை சொல்லமுடியாதது. புத்தசமயத்தினர், வினைகள், பிறவிகள், சுவர்க்கம், நிரையம் உண்டு என்பர். அறிவே உயிர் என்பர் உலகாயதர் (சாருவாகர்). உடலே ஆன்மா, பொறியே ஆன்மா, மூச்சுக் காற்றே ஆன்மா அகக் கருவியே ஆன்மா என்பர். தளை இல்லை என்பார்.

## 2.2. புறச்சமயங்கள்

புறச்சமயங்கள் ஆறு. (1) தருக்கம், (2) மீமாம்சை, (3) ஏகான்மவாதம், (4) சாங்கியம், (5) யோகம், (6) பாஞ்சராத்திரம் (வைணவம்) மீமாம்சர்கள் பூர்வமீமாம்சர்கள். கொள்மாவாதிகள் உத்திரமீமாம்சர்கள் என்றும் கூறப்படுவர். ஏகான்மாவதம் (1) சப்தப் பிரமவாதம், (2) மாயாவாதம், (3) பாற்கரியவாதம், (4) கிரிடாப் பிரமவாதம் என்னும் உட்பிரிவுகளை உடையது. தருக்க சமயம் வைசேடிகம் நியாயம் (நையாயினர்) எனப்படும்.

### 2.2.1. கொள்கைகள்

ஆறு சமயமும் உயிர் உண்டு என்பர். ஏகான்மாவாதிகள் ஒரே உயிர்தான், அது இறை (பரமான்மா) என்பர். சாங்கியர் இறை இல்லை என்பர். யோக சமயத்தார் தன்முனைப்பு (ஆணவம்) உண்டு என்பர். மீமாம்சர்கள் உலகபந்தம் கன்மம் உண்டு என்பர். ஏகான்மாவாதிகள் மாயை உண்டு என்பர். பாஞ்சாந்திரம் (வைணவம்) இறை, உயிர், தளை உண்டு என்பர்.

## 2.3. அகப்புறச் சமயங்கள்

(1) பாசுபதம், (2) மாவிரதம், (3) காபாலகம் (காபாலிகம்) (4) வாமம் (சாக்தம்) சத்திவழிபாடு, (5) வைரவம் (பைரவம்) (6) ஐக்கியவாத சைவம், காளாமுகம் காபாலகத்தின் பகுதி.

### 2.3.1. கொள்கைகள்

ஆறு சமயமும் இறை, உயிர், உண்டு என்பர். தளையும் உண்டு என்பர். ஐக்கியவாத சைவம் தன்முனைப்பு (ஆணவம்) இல்லை என்பர்.

## 2.4. அகச்சமயங்கள்

அகச்சமயங்கள் ஆறு. (1) பாடாணவாத சைவம், (2) பேதவாத சைவம், (3) சிவசமவாத சைவம், (4) சிவசங்கிராந்த சைவம், (5) ஈசுர அவிகாரவாத சைவம், (6) சிவாத்துவித சைவம். பாடாணவாத சைவமும் பேதவாத சைவமும் வேறுபாடு சிறிதே உள்ளதால் இரண்டையும் ஒன்று என்பர். சுத்த சைவம் சிவாத்துவித சைவத்திற்கு மேலானது என்பர்.

### 2.4.1. கொள்கைகள்

இறை, உயிர், தளை மூன்றும் உண்டு என்பர். சிவாத்துவித சைவமும் ஏகான்மாவாத சைவமும் தன்முனைப்பும் தளையும் உண்டு. ஆயினும் முப்பொருள் ஏற்பு இல்லை.

## 2.5. வேறுவித சமயங்கள்

இவை கடவுளை அடிப்படையாகக் கொண்ட சமயங்கள்

| | சமயம் | தன்மை | கடவுள் |
|---|---|---|---|
| 1. | சௌரம் | ஒளிரும் தன்மை | சூரியன் |
| 2. | சைவம் | ஒடுக்கும் தன்மை | சிவன் |
| 3. | சாந்தேயம் | உதவும் தன்மை | சத்தி |
| 4. | வைணவம் | காக்கும் தன்மை | திருமால் |
| 5. | காணா பத்தியம் | குறை நீக்கம் | கணபதி |
| 6. | கௌமாரம் | ஞான உபதேசம் | முருகன் |

## 2.6. அறியும் உண்மை

இறை, உயிர், தளை என்ற முப்பெரும் உண்மை, சித்தாந்த சைவத்திற்குரியது. மூன்றும் விரிவாக அளவியல், அடிப்படையில் பகுத்தறிவிற்கு ஏற்கும் வகையில் நிறுவப்பட்ட கொள்கைகள். தன்முனைப்பு, மாயை, வினை இம்மூன்றும் உயிருக்குத் தளை. இவை உள்ள வரையில் பிறவியும், துன்பமும் தொடரும். உயிர் தன்னுடைய ஞானத்தால் தளைகளை அறுத்து, நீக்கி இறைவன் திருவருள் பெற்று திருவடிசேர வழிகாட்டுகின்றது. இவ்வழி சென்று திருவருள் பெற்றவர் உண்டு.

# 3. முப்பொருள் உண்மை

நாம் வாழும் இவ்வுலகம் அண்டம் எனப்படும். பல அண்டங்கள் உள்அடங்கியது பேரண்டம் (பிரபஞ்சம்) என்பர். இவ்வுலகில் சூரியன் தொடங்கி ஒன்பது கோள்கள் உள. சூரியன் ஒரு விண்மீன். சூரியனைப் போன்ற பல கோடான கோடி விண்மீன் கொண்டது விண்மீன்தட்டு (காலக்ஸி - Galaxy) எனப்படும். இதுவே சூரிய மண்டலம். விண் கங்கை (Milky Way) எனப்படும். இந்த விண்மீன் தட்டு மணிக்குச் சுமார் எட்டு லட்சம் கிலோ மீட்டர் வேகத்தில் சுழல்கின்றது. ஒரு சுற்று சுற்றி முடிய 25 கோடி ஆண்டுகள் ஆகுமாம். இதுபோன்ற கோடிக்கணக்கான மண்டலங்கள்

இப்பேரண்டத்தில் உள்ளனவாம். இது விஞ்ஞானிகள் புறஉலகைப் பற்றிய ஆய்வின் கருத்தாகும். மேலும் புற உலகில் உள்ள அனைத்துப் பொருள்களைப் பற்றியும், உடலையும், உடலிலுள்ள உறுப்புக்களையும் பற்றி ஆராய்ந்துள்ளனர். இவை எல்லாம் அழிவன. ஒரு காலத்தில் இருக்கும் பொருள் வேறொரு காலத்தில் இருக்காது. எனவே என்றும் உள்ள நிலையான உள்பொருள்கள் அல்ல. விஞ்ஞானிகளின் ஆய்வு ஒழுங்குமுறையோடு எண்ணி ஆராய்ந்தது. இது மெய்ப்பொருள் இயல் எனப்படும் மெய்ப்பொருள் தேடி மேலை நாட்டினர் அறிவியலை (விஞ்ஞானம் - Science) கண்டு பிடித்தனர். இவ்வறிவு மனிதனுக்கு மிக்க ஆற்றலைத் தந்த அளவிற்கு மனஅமைதி, மன நிறைவுதர இயலவில்லை.

இந்திய நாட்டில் மெய்ப்பொருள் இயலும் சமயமும் ஒரே வழியில் சென்றதால் மெய்ப்பொருள் இயலும் சமயமும் ஒன்று ஆயின. மெய்ஞ்ஞானிகள் புறஉலகைக் காட்டிலும், அகஉலகைப் பற்றியும் அழியும் பொருளைக் காட்டிலும், என்றும் அழியாப் பொருள் பற்றியும் ஆராய்ந்தனர் மெய்ஞ்ஞானிகள், ஆன்மீகர்கள். ஆன்மீகம் நம்பிக்கையை அடிப்படையாகக் கொண்டது. எவ்வகையிலும் எப்போதும் சோதனைவழி நிரூபணம் செய்ய முடியாதது. மெய்ஞ்ஞானிகளின் சிந்தனைகள் உண்மைகளாக (தத்துவம்) உருப்பெற்றன. பல தத்துவங்கள் தோன்றின. ஆனால் அவை ஒன்று போல் மற்றொன்று இல்லை. எனவேதான் பலசமயங்கள் தோன்றின. அவை ஒவ்வொன்றும் தமக்கென தனித்தனிக் கொள்கைகளை உடையனவாயும், தன்கொள்கைகளே உயர்ந்தன எனவும் கூறின. மனித வாழ்விலும் பலவித தாக்கங்களையும், எண்ணம், சொல், செயல் மாற்றங்களையும் ஏற்படுத்தின. மூட நம்பிக்கைகளும் காலப்போக்கில் இணைந்தன. சில சுயநலமிகள் தன்னலம் கருதி தன் குடும்ப வளர்ச்சிக்கு உதவும் வகையில் கொள்கைகள், சடங்குகள் புகுத்தினர். சமய வேறுபாடு, சாதி வேறுபாடுகள் தோன்றின. இதனால் சமயம் பொய் என்று சொல்லும் நிலை ஏற்பட்டது. ஆயினும் வரையறைக்குட்பட்ட சைவ சித்தாந்த சாத்திரமான மெய்கண்ட சாத்திரம், பண்டார சாத்திரம், பன்னிருதிருமுறைகள் முதலிய தமிழ் உண்மை நூல்களில் இடம் பெறவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. மேலும் குறிப்பிட்டு கூறினால் பொய்களைத் தமிழ் நூல்கள் சாடின எனலாம்.

சான்றாக "சாதி மதம் பேசும் சழக்கர்காள்" என்று அப்பரும், "ஒன்றேகுலம் ஒருவனே தேவன்" எனத் திருமூலரும், "யாதும் ஊரே யாவரும் கேளீர்" என கணிகன் பூங்குன்றனாரும், "எல்லோரும் இன்புற்று இருப்பது அன்றி வேறொன்றும் அறியோம் பராபரமே" எனத் தாயுமானசாமிகளும், "செய்த்தொழில் வேற்றுமையால்" எனத் திருவள்ளுவரும் கூறியது

மட்டுமின்றி வள்ளலார் இராமலிங்கசாமி அவர்கள் சமரச சுத்த சன்மார்க்க சங்கம் தோற்றுவித்து வேறுபாடுகளை வேருடன் களைந்தார். அவர் இறைவன் திருவருளைப் பெற்றதுடனில்லாது எல்லாரும் இறைவன் திருவருள் பெற வழிகாட்டினார். நால்வரும், நாயன்மார்களும் வேறு வேறு சாதியினராயினும் வேறுவேறு தொழிலை உடையவராயினும் நால்வகை வழியாகிய சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நான்கில் ஒரு வழி நடந்து இறைவன் திருவருள் அடைந்தனர்.

எனவே நல்லறிவுடன், உறுதியாக, தெளிவாக, உண்மையாக இறைவன் திருவருளை அடைந்திட விரும்புவோர்க்கு சைவசித்தாந்தமும், அருளாளர்களின் அனுபூதியும் உறுதியாக வழிகாட்டும். வழிகாட்டு நூல்கள் பல உள. பயன் பெற்றோர் வாழ்க்கை நெறியும் சான்றாக உள. அதனால் உண்மையை அறிந்திட முப்பொருளே உள்பொருள், உண்மை பொருள் என்பதை நன்கறிதல் முக்கிய கடமையாகும். சைவ சித்தாந்தம் கூறும் உண்மை பொருள்கள் மூன்றே. அவை இறை, உயிர், தளை என்பன. சிவஞானபோதம் எடுத்துக்காட்டு வெண்பா கூறும் கருத்து.[5] சிவப்பிரகாசம் கூறும் கருத்து[6] ஞானாமிர்தம் ஞானபாதம் சம்மிய ஞானம் கூறும் கருத்து[7] ஒப்புவமையுடையது.

## 3.1. உள்பொருள்கள்

சிவாகமும், சைவசித்தாந்தமும் கூறும் உள்பொருள்கள் இறை, உயிர், தளை என்ற மூன்றேயாகும். இறை-பதி, உயிர்-பசு, தளை-பாசம் எனப்படும்.[8] இறை, உயிர், தளை ஆகிய மூன்று பொருள்களையும் உறுதி செய்து உணர்வதற்குச் சில ஏதுக்களையும் பழம் நூல்கள் எடுத்துக் கூறியுள்ளன. அவைகள் அனுமான அளவை, ஆகம அளவை, காட்சி அளவை ஆகியவையாம்.

## 3.2. ஆகமம் கூறும் பொருள்கள்

உள்பொருள் கூறும் ஆகமங்கள் சில. ஆகமங்களும் அவைகூறும் உள்பொருள்களும் வருமாறு:

1. சுயாம்புவம் ஆகமம் கூறுவது: ஏழு பொருள்கள்
2. பவுட்கரம், மதங்கம் கூறுவது: ஆறு பொருள்கள்
3. பராக்கியம் கூறுவது ஐந்து பொருள்கள்
4. சர்வஞ்ஞானோத்திரம் கூறுவது மூன்று பொருள்கள்.
   மூன்று முதல் ஏழுவரைக் கூறப்பட்டிருந்தாலும் அனைத்திலும் முப்பொருள் உண்டு.

ஆகமங்களில் கூறப்பட்டுள்ள பொருள்களின் எண்ணிக்கை வேறுபாடு உளது போல் தோன்றுகிறது. இதற்கு சிவஞான முனிவர்தரும் விளக்கம் "இவ்வாறு வேறுபட கூறப்படுவனவெல்லாம் மூன்று என்ற பொருள்களை வரையறை செய்து அதன்பின் அவற்றை வகைப்படுத்திக் கூறுவதினால் என்றும் உள்ள பொருள்கள் மூன்று என்பதே எல்லா ஆகமங்களின் கருத்து."

இதுபோன்று எண்ணிக்கையை வரையறை செய்யுங்காலத்து முதன்மையாகச் சிலவற்றைக் கூறுவதும், பின்னர் விரித்து சிலவற்றைச் சேர்ப்பதும் காணலாம். இவைகள் முரண்பாடுகளோ, வேறுபாடுகளோ அல்ல. கால வெள்ளத்தில் ஏற்பட்ட விரிவுகளும் விளக்கங்களும் ஆம். சான்றாக, தொல்காப்பியத்தில் திணை ஒழுக்கங்களைக் கூறுமிடத்து அகத்திணை, புறத்திணை இரண்டு என்பர். பின்னர் எழுந்த பன்னிருபடலம் என்னும் இலக்கண நூலில் அகத்திணை, புறத்திணை, அகப்புறத்திணை, புறப்புறத்திணை என நான்காகக் கூறப்பட்டுள்ளது. இரண்டு திணையே நான்கு திணையாக விரித்துக் கூறப்பட்டுள்ளது. அடுத்து இறைவனின் தொழில் படைத்தல், காத்தல், அழித்தல், ஆகிய மூன்று இதுவே விரிவாக அருளல், மறைத்தல் என்ற இரண்டு தொழில்களையும், சேர்த்து ஐந்து என்பர். தளையை மூன்று என்றும், ஐந்து என்றும் கூறப்பெறுகிறது.

## 3.3. உள்பொருள் தளையா? உலகமா?

உள்பொருள்கள் மூன்று என்று கூறுமிடத்து மூன்றாவது பொருள் 'தளை'. மூன்றாவது பொருள் 'உலகம்' என்றும் கூறுவதுண்டு. எனவே மூன்றாவது உள்பொருள் தளையா? உலகமா? என்ற வினா எழுப்புவது இயற்கை. உலகமே உயிருக்குத் தளையாகத் தானிருக்கின்றது. எனவே உலகமே தளை எனலாம். செயலாற்றலில் தளையின் செயலும், உலகத்தின் செயலும் ஒன்றுபோல்தானிருக்கின்றது. ஆயினும் சைவசித்தாந்தம் மூன்றாவது பொருளைத் தளை (பாசம்) என்றே கூறுகிறது. உலகம் தளையாக விளங்குகின்றது எப்படியெனின் மாயையிலிருந்து உலகம் தோன்றுகின்றது. தோற்றுவிப்பவன் ஒருவன் இவ்வுலகம் தோன்றி வளர்ந்து அழிகிறது. அழிவு என்பது ஒடுக்கம். எதில் உலகம் தோன்றியதோ அதில் உலகம் ஒடுங்குகின்றது. மீண்டும் தோன்கிறது. எனவே உலகம் முற்றும் அழிந்து விடுவதில்லை. நிலை வேறுபாடுதான் அடைகிறது. எனவே நிலை வேறுபாடு பற்றி அழியும் பொருளாகவும் நிலை வேறுபாடு பற்றி எண்ணாதபோது அழியாப் பொருளாகவும் உள்ளது. எனவே உலகம் உள்பொருள்தான், ஏற்கக்கூடியதே.

உலகம் தளையே, எப்படியெனின்? உலகம் என்பது உலகிலுள்ள பொருள்களையே குறிக்கும். மனிதர்கள் உலகப் பொருள்களை அடைவதிலும், அனுபவிப்பதிலும், ஆர்வமும் ஆசையும் உள்ளவர்களாக இருக்கிறார்கள். தளை அறியாமையைத் தரும். துன்பம் தரும். பிறவி உண்டாக்கும். உலகப் பொருள்களும் மனிதர்களுக்கு ஆசையை உண்டாக்குகின்றது. ஆசையின் விளைவு என்ன என்பது பற்றி சிறிதும் எண்ணாதவர்கள் அறியாமை உடையவர்கள். உலகப் பொருள்களை அடைவதிலும் துன்பம், அடைந்தபோது அனுபவிக்கும் போதும், பின்னரும் துன்பம், அடைவதற்கும் அனுபவிப்பதற்கும், காப்பதற்கும் பலவித வினைபுரிதல் வேண்டியுள்ளது. எனவே வினைபுரிவதால் பிறவி ஏற்படுகிறது. உலகப் பொருள்களால் ஏற்படுவது தளை எனலாம். உலகம் தளையாக விளங்குகின்றது என்பது தெளிவாகிறது. நிலைபெறுதல், செயல்படுதல், விளைவு தோற்றுவித்தல் ஆகிய மூன்றிலும் உலகமும், தளையும் ஒன்றாகவே உள்ளது. உலகப் பொருள்கள் ஆசையைத் தோற்றுவித்து துன்பம் தருவதால்தான் திருமூலர் ஆசையைவிட வேண்டுமென்றார்.[9]

## 3.4. முப்பொருள் பற்றிய கருத்து வேறுபாடுகள்

உண்மை பொருள் மூன்றே. சில சாத்திரங்களில் மூன்றிற்குமேல் கூறப்பட்டுள்ளன. ஆயினும் அவை மூன்றின் விரிவே புதிதாக ஒன்றும் சேர்த்துக்கூறப்படவில்லை. இறை, உயிர், தளை என்ற மூன்றினை சேர்த்துக் கூறப்படவில்லை. இறை, உயிர், தளை என்ற மூன்றினை ஆறு என விரித்துக்கூறப்படுகிறது.[10] இறையும் உயிரும் பற்றி கருத்து வேறுபாடும் இல்லை. ஏகான்மவாதிகள் மட்டும் உலகில் பரமான்மாவும், சிவான்மாவும் ஒன்றே என்பர். சிலர் உயிருண்டு இறை இல்லை என்பர். சைவசித்தாந்தம் இறை வேறு, உயிர் வேறு எனக்கூறும் தளையை விரித்து தன் முனைப்பு (ஆணவம்) வினை (கருமம்) மாயை இரண்டு (சுத்த மாயை, அசுத்த மாயை) என ஆறாகக் கூறப்படுகிறது. தளைக்கு விரிவே சொல்லப்பட்டுள்ளது.

## 3.5. கிரணாகமம்

தந்திராவதார படலம் சூ.28.30நூ. பல்வேறுபட்ட நிலையான இயல்புகளை உடைய ஆகமபேதங்கள் என்னால் சொல்லப்பட்டன. எல்லா வகை பேதங்களிலும் உபபேதங்களும் சொல்லப்பட்டன. சில பொருள்களில் சுருக்கமாகவும், சில பொருள்களில் விரிவாகவும் கேட்டவர்களுடைய தகுதிக்கு ஏற்ப அமைந்த தேவர்களுக்கும் ஐசுவரியமாயுள்ள ஆகம பேதங்கள் புகழ் உடையனவாய் உள்ளன. மீண்டும் மீண்டும் கேட்டவர்கள் பேதத்தால் மேற் சொல்லிய பேதங்கள் உண்டாயின. ஆகவே பேதம் என்பது உபசாரமே. பயனில்

பேதமில்லை. எல்லாம் ஒரு பயனைக் கருதின என்பதாம். ஞானத்தில் பேதம் (படிநிலைகள்) உண்டு.

### 3.6. முப்பொருள் கூறும் உண்மைநூல் சான்றுகள்

(1) சிவஞானபோதம்,[11-13] (2) சிவஞானசித்தியார்,[14] (3) சிவப்பிரகாசம்,[15,16] (4) சங்கற்ப நிராகரணம்,[17-21] (5) ஞானாமிர்தம்[22] (6) சிவப்பிரகாச விகாசம்,[23,24] (7) சித்தாந்தப் பிரகாசிகை,[25] (8) சித்தாந்த நிச்சயம்,[26] (9) தத்துவ விளக்கம்,[27] (10) திருமந்திரம்,[28-36] (11) துகளறுபோதம், (12) கிராணாகமம்[37] ஆகிய நூல்களில் முப்பொருள் உண்மை பற்றி கூறப்பட்டுள்ளன. 11-37 பாடல்கள் சான்று அளிக்கின்றன.

## 4. முப்பொருளில் ஒன்று இறை

**பதி :** நிலையான உள்பொருள் மூன்றில் முதற் பொருள் இறை(பதி) இறைவன் உண்டு என்பாரும் உளர். இல்லை என்பாரும் உளர். உண்டு இல்லை என அறியேன் என்பாரும் உளர். இறைவனைப் பற்றி இம்மூன்று கருத்துக்கள் பண்டுதொட்டு இன்றுவரை உலகில் உள்ளது. இது எந்நாளும் இருக்கும். ஏனெனில் இஃது மனித மன இயல்பு. இது தவிர முன்னர் உண்டு என்பார் பின்னர் இல்லை என்பார். முன்னர் இல்லை என்பார் பின்னர் உண்டு என்பார். இஃது அவரவர் அனுபவத்தைப் பொறுத்தது. மேலும் அவர்களது எதிர்ப்பார்ப்பு நிகழாமையும், வாழ்க்கைச் சூழலில் ஏற்பட்ட இன்பம் துன்பம், ஏமாற்றம், வாய்ப்பு, நினைத்தவாறு நடைபெற்றதும், நினைத்தவாறு நடைபெறாததும் இன்னபிற காரணங்கள் மனத்தை மாற்றம் அடைய செய்கின்றது. அதனால் உண்டு என்றவர், இல்லை என்றும், இல்லை என்றவர் உண்டு என்றும் சொல்லுமாறு நிலைமைகள் அமைகின்றன. மனத்தெளிவோடு அவற்றை ஆராய்ந்து பார்க்காது, உடன் தன் கருத்தினை மாற்றிக் கொள்கின்றனர். உள்ளே உண்டு என்று எண்ணுவதுடன் புறத்தே இல்லை என்று கூறுவது. இல்லை என்பதன் மூலமும் உண்டு என்பதின் மூலமும் அவருக்கு செல்வம், செல்வாக்கு, பட்டம், பதவி, பாராட்டு முதலியன கிடைக்கின்றன. எனவே அவர்கள் அறிவுபூர்வமாகவோ, உணர்வு பூர்வமாகவோ, அனுபவம் பூர்வமாகவோ கருத்தினைக் கொள்ளாமல் கிடைக்கக்கூடிய வாய்ப்புக்களை அடிப்படையாகக் கொண்டு கூறுகின்றனர். நடிக்கின்றனர் எனவும் கூறலாம்.

திருமூலர் இறைவன் உண்டா இல்லையா என்பதற்குத் தீர்வாகக் கூறுவது[1] உள்ளத்தில் இருக்கிறான் புறத்தில் இருக்கிறான் என்பவர்க்கு உள்ளத்திலும் இருக்கிறான் புறத்திலும் இருக்கிறான்.

எங்கு இருப்பதாக நினைக்கின்றனோ அங்கு இருக்கின்றான். புறத்தும் இல்லை. அகத்தும் இல்லை என்றால் எங்கும் இல்லை. எனவே உண்டு என்றால் உண்டு. இல்லை என்றால் இல்லை. இறைவனை வழிபட எல்லோராலும் இயலாது. ஏனெனில் அதற்கும் இறைவன் அருள் வேண்டும். மனிதனும் நம்பவேண்டும். மாணிக்கவாசகப் பெருமான் "அவன் அருளால் அவன் தாள் வணங்கி" என்கிறார்.

## 4.1. இறைவனின் குணங்கள்

"ஒரு நாமமும் இல்லாதானுக்கு ஆயிரம் நாமம் . . . . ." என்கிறது திருவாசகம். இறைவனுக்கென ஒரு பெயரும் கிடையாது. ஆனால் இறைவனை வழிபடுவோர் அவரவர் உணர்ந்தபடி, விருப்பப்படி பெயர் வைத்து அழைக்கின்றனர். இப்பெயரெல்லாம் அவனுடையது அன்று. வைத்தவர் உடையது. இறைவன் இப்படிப்பட்ட குணம் உடையவன் என்று வரையறை செய்ய முடியாது. வரையறைக்கு உட்பட்டால் அவர் எல்லைக்கு உட்பட்டவர் ஆவார். எல்லையில்லாத் தன்மையும் எல்லையில்லா ஆற்றலும், எல்லையில்லா காலமும் உடையவரே இறைவன். ஆயினும் இறைவனைப் பற்றி விளக்கம் தரும்போது ஒரு பெயரும் இல்லாதவனுக்கு ஆயிரம் பெயர் வைத்தது போன்று அவரவர் எண்ணத்தில் தோன்றியபடி எல்லை வைத்து கூறுகின்றனர். எனவே கூறியவர்களும் எல்லை இல்லாகுணம் என்பதைக் கருத்திற் கொண்டு மக்கள் ஓரளவு புரிந்து கொள்ள வேண்டும் என்ற எண்ணத்தால் கூறினார் வள்ளுவர். "இறைவனை எண்குணத்தான்"[2] என்று விளக்கம் தருகிறார். இதற்கான விளக்கம் பலரும் பலவாறு கூறியுள்ளனார். எனினும் பரிமேலழகர் கருத்து கவனிக்கத்தக்கது எனலாம். (1) தன் வயத்தான் ஆதல், (2) தூய உடம்பினன் ஆதல், (3) இயற்கை உணர்வினன் ஆதல், (4) முற்றும் உணர்தல், (5) இயல்பாகவே தளைகளிலிருந்து நீங்குதல், (6) பேரருள் உடைமை, (7) முடிவில் ஆற்றல் உடைமை, (8) வரம்பில் இன்பம் உடைமை என்பன எண்குணமாகக் கூறப்பெறுகிறது.

உயிர்கள் நான்கு வகையில் தோன்றுவன : ஏழுவகை பிறப்பை உடையன. அறியாமை உடையன. கணக்கற்ற குற்றமும், நிலையில்லாத எண்ணங்களும் உடையன. உயிர்களுக்கு இல்லாத சிறப்பினை எல்லாம் தொகுத்து எல்லாவற்றிற்கும் மேலானவர் எனக் கூறப்படுகின்றார். பரம்பொருள் என்றால் மேலான பொருள் எனப்படும். மேலும் இந்த எண்குணத்தையும் எவரும் பெறமுடியாது. சிலவற்றைப் பெற்றால் 'இறைத் தன்மை உள்ளவர்' என்றும் 'மனிதருள் தெய்வம்' என்றும் பாராட்டப்படுகின்றனர். பெயர் இல்லாதவனுக்குப் பெயர் வைத்தது போல குணம் இல்லாதவனுக்குக் குணமும், உருவம் இல்லாதவனுக்கு உருவமும் படைக்கப்பெற்றது.

### 4.1.1. ஆகமம் கூறும் இறைவன் இலக்கணம்

பேரறிவே வடிவாகி விளங்கும் நிட்கள சிவமானது: (1) பராபரம் – மேலான பொருளுக்கு எல்லாம் மேலான பொருள். தாயுமானவர் இறைவனைக் குறிப்பிடும் போது பராபரமே என்கிறார். "எல்லோரும் இன்புற்று இருப்பது அன்றி வேறு ஒன்றும் அறியோம் பராபரமே". (2) சூக்தம் – நுண்பொருள் (3) நித்தம் – அழிவற்றது, உள்பொருள் (4) சகலகதம் – எல்லாப் பொருளிலும் நிறைந்து இருப்பது (5) அநிந்திதம் – நிந்தனையற்றது. (7) அனுபவம் – பட்டறிவால் உணரப்படுவது (8) அப்பிரமாணம் – சான்றுகளால் அளக்கப்படாதது (8) பின்னம் – உயிருக்கு வேறானது (10) அநாமயம் – நோய் இல்லாதது.

### 4.1.2. வடமொழியில் உள்ள கருத்து

வடமொழி நூலில் சிவனின் காரண உபாதிகள் ஏழு என்பர் (1). ஈசத்துவம் - இறைமை (2) சர்வஞ்ஞத்துவம் - முற்றறிவு உடைமை (3) வியாபகத்துவம் - எங்கும் தானாதல் (4) மாயாசித்துவம் - இயல்பாக மாயை இல்லாமை (5) சர்வசத்தித்துவம் - வரம்பில் ஆற்றல் (6) சுதந்திரத்துவம் - தன்வயத்தான் ஆதல் (7) பரோக்ஷத்துவம் - ஒன்றி உணர்தல். சிற்றறிவு உடைய மனிதனால் பேரறிவாளனைப் பற்றி வரையறுத்துக் கூறமுடியாது. துதிப் பாடல்களில் கணக்கற்ற சிறப்புக்களை எடுத்துக்கூறி போற்றுகின்றனர். அது அவரவர் அறிந்ததின் அளவே ஆகும்.

## 4.2. இறைவனின் முத்திறம்

(1) இறைவன் உயிரோடு ஒன்றாய் நிற்றல் (2) உயிரோடு வேறாய் நிற்றல் (3) உயிரோடு உடலாய் நிற்றல் என்னும் முத்திறன் உடையவன்.

## 4.3. இறைவனின் தொழில்

பரமசிவன் இலயம், போகம், அதிகாரம் என்னும் மூன்று நிலையிலும் முறையே (1) அருவம், (2) அருவுருவம், (3) உருவம் என்ற திருவுடல் கொண்டு சத்தன், உத்தி, யுக்தன், பிரவிருத்தன் எனவும், சிவன், சதாசிவன், மகேசன் எனவும் பெயர் பெற்று அழித்தல், காத்தல், படைத்தல் என்னும் மூன்று தொழில்களை மேற்கொண்டு நிற்பன் என்பர்.

### 4.3.1. இறைவனின் படைப்புத் தொழில்

இறைவனின் படைப்புத் தொழில் இருவகைப்படும். (1) பொது (2) சிறப்பு. பொது - முதற் காரணமாகிய (உபாதானம்)

விந்துவின்கண் கலையையும் சிவன் முதலான தத்துவங்களையும், புவனங்களையும் அப்புவனம் வாழ்நர்க்கு உடம்புகளையும், பொருள் உலகத்தின்கண்ணும் எழுத்து, சொல், சொற்றொடர் (வன்னம், பதம், வாக்கியம்) முதலானவற்றையும் காமிகம் முதலான ஆகமங்களையும், சொல்லுலகத்தின் கண்ணும் வந்து எய்தச் செய்தல்.[2] சிறப்பு: உயிர்கள் ஒவ்வொன்றுக்கும் உடம்பு உறச்செய்தல்.[3]

## 4.4. இறைவனின் தொழிலும் வடிவமும்

இறைவனின் வடிவம் மூன்று. ஒருவனாகிய. இறைவன் ஒன்பது வேறுபாடாய் நடப்பவன். உருவத்திருமேனியால் அனைத்தும் படைப்பான். நான்முகன், திருமால், உருத்திரன், மகேசன் ஆகிய நான்கும் இறைவனின் உடல். (2) அருவுருவத்திருமேனியால் காத்தல் தொழில் புரிவான். விந்து நாதம் அதன் மேலுள்ள பரை பரமசிவம் என்பவை நான்கும் அருவ நிலை. இலிங்கவடிவம்: அருவத்திருமேனியால் (சதா-சிவவடிவம்) ஒடுக்குதல் தொழில்.[4]

## 4.5. இறைவனுக்கு உருவம் இல்லை

இறைவனுக்கு உருவம் கிடையாது. ஆயினும் வழிபடுவோர் தத்தம் விருப்பப்படி பல உருவம் படைத்து வழிபடுகின்றனர். மானிட உயிர் மானிட உடலை இயக்குகின்றது. உயிர் வேறு. உடல் வேறு. உயிர் இல்லையாயின் உடல் இயங்காது. இறைவன் தொழில் புரிவதற்கு உடல் தேவையில்லை. உருவமற்ற உயிர் உருவமான உடலை இயக்குவதைப் போலவே உருவமற்ற இறைவனும் உருவமான அண்டத்தையும் (உலகம்) பிண்டத்தையும் (உடல்) இயக்குவான் என்பதறிக.

சிற்றறிவு உடைய · மானிடர்களுக்குப் புரிந்துகொள்ள வேண்டிய தத்துவமாகக் கூறப்படுகிறது. இறைவனை மனத்தில் நினைவுகூர வேண்டுமாயின் ஓர் உருவம் தேவை. ஓரிடத்திலிருந்து வணங்க வேண்டுமாயின் இடமும் (கோயிலும்) உருவமும் (சிலைகள்) படமும் தேவை. நடைமுறையில் ஒருவரைப் பார்த்தவுடனே அவரைப் பற்றிய நினைவு வருகிறது. அதனால் கடமையுடன் பொறுப்பு உணர்ந்து நடக்க உதவுகின்றது. உருவம் இல்லையாயின் கடமை, பொறுப்பு நினைவுக்கு வராது.

எனவேதான் மக்களில் சிலர் அவர்களுடைய நினைவிற்குரியவரின் படங்கள், சிலைகள் வைத்து மாலை அணிவித்துப் போற்றி வருகின்றனர். இறைவனுக்கு உருவம் வேண்டாம் என்றால் மதிப்பிற்குரியவர்களுக்கு மட்டும் தேவையா என்ற வினா எழும்பும்.

வள்ளல் இராமலிங்கசாமி தியானம் செய்யும்போது முதலில் சுழுமுனையில் உருவத்தை நிலை நிறுத்தி அதில் மனத்தையும் ஒடுக்கி செய்ய வேண்டுமென்கிறார். பயிற்சியில் தேர்ச்சி பெறும்போது உருவம் மறைந்து அருவதியானம் உண்டாகுமென்கிறார். நடக்கத் தெரியாத சிறு குழந்தைக்கு நடைவண்டியும், நடக்க முடியாத முதியோர்க்கு ஊன்றுகோலும் உதவுவதுபோல வழிபாட்டிற்கு உருவம் தேவைப்படுகிறது எனலாம்.

இறைவன் உருவம் உடையவன் என்பது பொருந்தாது. உருவம் காரியப் பொருள். ஒரு காரியப் பொருள் ஏற்படவேண்டுமானால் அதற்கொரு காரணப் பொருளாகிய இறைவன் இருத்தல் வேண்டும். அவரும் காரியப் பொருள் ஆகிவிடுவார். அவருக்கு ஒரு காரணப் பொருள் தேவை. இப்படியே காரியப் பொருள், காரணப் பொருள் என்று ஆராய்ந்துக் கொண்டே போனால் இதற்கொரு முடிவே கிடையாது. வட்டத்தைச் சுற்றி சுற்றி வருவது போல்தானிருக்கும். இது ஒரு கொள்கை ஆகாது. இதைக் கொள்கை என்றால் குற்றமாகும். உருவம், அருவுருவம், அருவம் என்பதெல்லாம் சமயக் கருத்துக்கள். இவை நம்பிக்கையின் அடிப்படையில் எழுந்தவை. நம்பிக்கையில்தான் மானிட வாழ்க்கையேயுள்ளது.

விரிந்த உலகை (பிரபஞ்சம் - பேரண்டம்) ஆட்டுவிக்கும் ஆற்றல் ஒன்று உண்டு. அதுவே அனைத்துப் பொருள்களையும் ஆட்டுவிக்கின்றது. அந்தப் பேராற்றலை உணர்ந்தால் உலகப் பொருள்களின் தனிப்பட்ட இயக்கத்திற்கு விளக்கம் கிடைக்கும் என்பது சமயக் கோட்பாடு. அதாவது பொதுவான ஆற்றலை அறிந்தால் சிறப்பு ஆற்றலை அறியலாம். இது பொதுவிலிருந்து சிறப்பிற்கு வருவது என்னும் (General to specific) கொள்கை.

இதற்கு மாறானது அறிவியல் கொள்கை. உலகிலுள்ள சிறுசிறு பொருள்களின் இயக்கம், அதற்குரிய காரணம் அறிந்தால் உலகை இயக்கும் ஆற்றலை அறியலாம். இது சிறப்பிலிருந்து பொதுவிற்கு (Specific to General) என்னும் அறிவியல் அறிஞர் கொள்கை.

## 4.6. சிவஞான முனிவர் கருத்து

**"உருவம் எல்லாத் தொழிலையும் செய்யும்; ஆற்றலைத் தடுக்கும். ஆதலின் இறைவன் அருவம் உருவம் என்னும் இருவகை வடிவம் இல்லாமல் தனது ஆற்றலால் விந்துவைக் கலக்கி நாதம் முதலியவற்றைத் தோற்றுவித்து தன்னுடைய விருப்பத்தினால் வடிவம் கொள்வான்"** என்கிறார். இரும்பு,

கற்பாறை உருவம் உடையப் பொருள்கள், மிக்க எடையும் உடையன. காற்று உருவம் இல்லாதது, மிகுந்த குறைந்த எடை உள்ளது. காற்று அனைத்துப் பருப் பொருள்களையும் இரும்பையும் கற்பாறை போன்றவைகளையும் இடம் பெயர்த்து எறியும். எரிமலை சீற்றம் கொடுமையானது. பெரும்புயலோடு ஒப்பிடும்போது குறைந்ததே. நுண்பொருளுக்குள்ள ஆற்றல் பருப்பெருளுக்கு இல்லை என்பதைக் கண்கூடாகக் காணலாம். அதனால் உருவத்தைவிட அருவம் ஆற்றல்மிக்கது என்பதையும் அறியலாம்.

காந்தம் கருவியின் இரும்பை இழுப்பதுபோல் இறைவன் கருவியின்றி சிற்சத்தியால் வினைபுரிவான். தீஒரு பொருள். அதன் இரு தொழிலில் ஒன்று சுடும். மற்றொன்று எரிக்கும். அதுபோல இறைவனும் முத்தொழில் புரிவான். இறைவன் பேரறிவு உடையவன் அறிவுவடிவமாக இருப்பதால் உடல் இன்றி எச்செயலும் புரிவான். அறிவு அதிநுண்பொருள். அறிவு பருப்பொருள் இல்லை ஆயினும் அறிவிற்குள்ள ஆற்றல் எதற்கும் இல்லை.

சமயக் கொள்கைகள் எல்லாம் தத்துவநிலையில் விளக்கப்பட்டுள்ளன. ஆயினும் அக்கருத்தினை விளக்கிக் கூறுவாருமிலர். புரிந்து கொள்வாரும் இலர். அதனால் தத்துவம் புரியாமையால் நல்ல கருத்துக்கள்கூட புரிந்து கொள்ள முடியாமையால் பொய் எனக் கூறும்நிலை ஏற்படுகிறது.

# 5. முப்பொருளில் ஒன்று உயிர்

மாணிக்கவாசகர் திருவாசகம் சிவபுராணத்தில், புல்லாகி, தொடங்கி பூண்டு, புழு, மரம், பறவை, பாம்பு, கல், மனிதராய், பேயாய், கணங்களாய், வல்ல அசுரர், முனிவராய், தேவராய் எல்லாப் பிறப்பும் பிறந்து இளைத்தேன் என்கிறார்.[5]

இன்றைய மானிட உயிர், முன்னர் ஓர் அறிவு உடைய உயிர் முதல் ஐந்து அறிவு உடைய உயிர்வரை பல பிறவிகள் எடுத்துள்ளன. உயிரின் பிறவி புல்லாகவும், புழுவாகவும் இருக்கலாம். மனிதனாகவுமிருக்கலாம் என்பதை அறியும்போது எல்லா உயிர் இனத்தைவிட எல்லாவகையிலும் மனித உயிர் உயர்நிலை உடையது. பொதுவாக உயிரைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டும். அப்படி அறிந்தால்தான் மானிட உயிரின் சிறப்பையும் மேலும் அடைய வேண்டிய சிறப்பையும் பற்றி எண்ணி, சொல்லி, செயல்படலாம்.

## உயிர்கள்

(1) உயிர்கள் எண்ணற்றவை. (2) என்றும் நிலை பேறு உடையவை. எனவே உயிருக்கு அழிவு கிடையாது. அழிவு உயிருக்கு இல்லை என்றாலும் உடலுக்கு உண்டு. சட்டை கிழிந்து அணிந்துக் கொள்ள முடியாதபோது பழைய சட்டையை எறிந்து விட்டுப் புதிய சட்டையை அணிந்துக்கொள்வது போல உயிரும் பழைய உடல் அழிவுறும் காலத்தில் அதனைவிட்டு நீங்கி புதிய உடலில் தங்கும். உடல் மாறிப் பிறப்பதைத் தான் பிறவி என்கிறோம். உயிர் செய்த வினைக்கேற்ப உடலை எடுக்கும் என்பது பிறவிப் பற்றிய கொள்கை. (3) உயிருக்கு உருவம் கிடையாது. ஏதேனும் ஒரு உடலில் புகுந்து வாழும். உடலை வைத்து என்ன பிறவி என்று சொல்ல முடியுமேயொழிய, உயிரை வைத்துச் சொல்ல முடியாது. காரணம் உயிர் அருவமானது. ஆனால் உடலில் உயிர் தங்கி இருக்கும். (4) உடல் உருவம் உடையது. கண்ணிற்கும் தெரியாத நச்சு உயிர்களும், உருவம் உடையனவே. அதனை உருப்பெருக்கியால் பார்க்கலாம். உயிராகிய நுண்பொருள் உடலாகிய பருப்பொருளை இயக்கும் ஆற்றல் உடையது. (5) உயிருக்கு இயற்கையான அறிவு கிடையாது. எனவேதான் மனிதனுக்கு ஒவ்வொன்றையும் சொல்லித்தர வேண்டியுள்ளது. பின்னர் அறிந்ததைக் கொண்டு அறியாததை அறிய முயல்கிறான், சொல்லித்தந்தால் பேசுகிறான். பின்னர் பிறருக்குப் பேச கற்பிக்கிறான். உடல் அழியும். அறிவு அழியாது. அறிவு பிறவிதோறும் கூடிக்கொண்டே வரும் இயல்பினது. விஞ்ஞானிகள் கண்டுபிடித்த அறிவியல் உண்மையை அறிந்து அதைக் கொண்டு மேலும் அத்துறையில் புதிய கண்டுபிடிப்புக்களைக் கண்டுபிடிக்கின்றனர். முந்தைய அறிவு அடிப்படையாகக் கொண்டே படிப்படியாகப் புதிய புதிய சாதனைகள் நாள்தோறும் கண்டுபிடிக்கப்பட்டு வருகிறது. சான்றாக ஏவுகணை தொடர்பான எந்த அறிவியல் கருத்தையும் அடிப்படையிலிருந்து தெரிந்து கொள்ளாமல் ஒருவர் ஏவுகணை செய்வதும், அதில் சாதனை செய்வதும் இயலாது. அதுபோலவே மனிதனின் அறிவில் வேறுபாடு உளது எனின் அவனுடைய முந்தைய அறிவின் அளவையும், ஆற்றலையும் பொறுத்துள்ளது எனலாம். எனவே மனிதர்க்கு மனிதர் அறிவின் ஆற்றலில் வேறுபாடு உள்ளது. ஓர் ஆசிரியரிடம் ஒரு வகுப்பறையில் ஒரே நேரத்தில் ஒரு பாடத்தைக் கற்ற மாணாக்கர் இடத்தும், ஒரு தாய் வயிற்றில் பிறந்து, ஒரே வீட்டில் குடியிருந்து, ஒரே விதமான உணவு, உடை, பழக்கவழக்கங்கள் நடைமுறைகள் கொண்டிருந்தாலும் (குறிப்பு: மனிதனின் அறிவையும் பண்பையும் நிர்ணயம் செய்யக்கூடிய பாரம்பரியம், சூழ்நிலை இரண்டும் ஒன்றாய் அமைந்த நிலையில்) அறிவிலும் பண்பிலும் வேறுபாடு உண்டு.

தந்தைக்கும் மகனுக்கும் வேறுபாடு உள்ளது. அண்ணன் தம்பிகளுக்கிடையே வேறுபாடு உள்ளது. அக்காள் தங்கைகளுக்கு இடையே வேறுபாடு உள்ளது. ஒன்றாய் சேர்ந்து வாழும் உறவினர்க்கு இடையே வேறுபாடு உள்ளது. நெருங்கிப்பழகும் உயிர் தோழர்களுக்கு இடையே வேறுபாடு உள்ளது. மனம் ஒத்து வாழும் கணவன் மனைவிக்கிடையே வேறுபாடு உள்ளது.

6. உணர்த்த உணரும் அறிவுடையன உயிர். எனவே உயிர் சிற்றறிவு உடையது என்பர். உணர்த்துவாரைப் பொறுத்தும், உணரும் ஆற்றலைப் பொறுத்தும், உணரும் சூழ்நிலையைப் பொறுத்தும், உணரும் பொருளைப் பற்றிய முந்தைய அறிவைப் பொறுத்தும் உணர்வதிலும் வேறுபாடு உள்ளதை அறியலாம். முந்தைய அறிவின் முனைப்பே தந்தை மகன், உடன் பிறந்தார், ஒரு வகுப்பு மாணவர்களிடையே வேறுபாடு உள்ளது என்பது ஆராயின் தெரியும். அறிவிற்கு உணர்வே முதல்படியாகையால் உணர்தலில் வேறுபாடு உளதால் அறிவினும் வேறுபாடு உள்ளது.

7. அசடப்பொருள். பிறப்பொருளின் துணையின்றி தன்னைத் தானே காட்ட முடியாத பொருள் சடம் எனப்படும். அசடப் பொருள் என்றால் பிறபொருள் துணையின்றி தன்னைத்தானே காட்டும் ஆற்றல் உடைய பொருள் எனப்படும். மனிதன் தன் அறிவாலும், ஆற்றலாலும் தன்னைப் பிறருக்குக் காட்டிக்கொள்வான். காட்டிக் கொள்வதால் பெருமை பெறுகிறான். அந்தப் பெருமையை உண்மையான தகுதியைவிட அதிகமான தகுதி உடையவனாய்க் காட்டிக் கொள்ள முயல்கிறான். இந்த முயற்சி அவனைப் பொய்யனாய் ஆக்குகின்றது. நம்பிக்கைக்கு உரியவன் அல்லன் என்பதைக் காட்டுகின்றது. தன்னலக்காரன் என்பதையும், எல்லாவற்றிற்கும் மேலான தன்முனைப்புமலம் மிக்கவன் என்பதையும், தன் முனைப்பு மலம்மிக்கப் பெற்றிருப்பதால் அறியாமை உடையவன் என்பதையும் காட்டுகிறது. தன் முனைப்பு மலம் மிகுதியாக இருப்பதால் பிறரை இவன் மதியான் என்றும், தகுதியறியான் என்றும், தகுதியறியும் தகுதியில்லாதவன் என்றும், தகுதியுடையாரை மதியாமையால் அவர் கூறும் நல்கருத்தினையும் கேளான் என்றும், கேள்வி அறிவு பெறாமையால் அறிவு பெறுவதில் ஒருபகுதியை இழக்கின்றான் என்றும் அறியலாம்.

அறிவு இருவகை. ஒன்று நூலறிவு. மற்றொன்று பட்டறிவு. நூல் அறிவு தானே கற்பதாலும் கற்றவர் சொல்வதைக் கேட்பதாலும் ஏற்படும். காட்டிக்கொள்வது இரண்டு வகைப்படும். ஒருவன் தன்னைத் தானே காட்டிக் கொள்வது. இதில் தன்முனைப்பு மலம் பெரிதும் இடம் பெறும். மற்றொன்று பிறரால் காட்டப்படுவதும்

உண்டு. ஒருவர் மூலம் தனக்கும், தன் குடும்பத்தினருக்கும் பொருள், பதவி, நன்மைகள் ஏற்படும் என்ற போது அவனைப் பற்றி அதிகமாகப் புகழ்ந்து அதாவது தகுதிக்கு மேலாகப் புகழ்ந்துரைப்பது. இதுவும் தன்னலமே. பிறரைப் போற்றி உரைப்பதும் தன் முனைப்பு மலத்தின் செயல்பாடேயாதலின் இவரும் தன்முனைப்பு மலத்திற்கு ஆட்பட்டவனாகின்றான்.

8. உயிர்கள் பிறர் அறிவிக்க அறியும் அறிவுடையது. எனவே செயற்கை அறிவுடையன. இயற்கை அறிவுடையவர் இறைவனே. 9. உயிர் இல்லாத உடல் வளர்வதுமில்லை. தொழில் படுவதுமில்லை. செடியாயினும், புழுவாயினும் உயிர் இல்லையென்றால் வளர்வதும் தொழில் படுவதுமில்லை. அழிந்து விடுகிறது. 10. உயிர் இல்லாத உடல் அறிவற்றன. நாற்றம் பெறுவன. அறிவுபெற உயிர் தேவை. உயிர் நீங்கின் உடல் அழியும். உடலின் அணுக்கள் பெறும் மாற்றத்தால் நாற்றம் பெறுகிறது. 11. உயிர்களுக்குத் தனியே வளர்ச்சியும் தொழில் பாடும் கிடையாது. 12. உருவம் இல்லாத உயிர்சள் உருவம் உடைய உடலில் தங்கியுள்ளன. 13. உயிர்கள் தாம் விரும்பும் காலம் வரை உடலில் தங்கி இருக்க முடியாது. விதிவிலக்கு. மெய்ஞ்ஞானிகள். உயிருக்கு வாழ்நாள் கணக்குண்டு. இதை மாற்றவே மரணமில்லாப் பெருவாழ்வு பற்றி மெய்ஞ்ஞானிகள் முயல்கின்றனர். 14. பெற்றோர்கள் உடலுக்கு உயிரைக் கொடுக்கவோ பிரிக்கவோ முடியாது. 15. இறைவன் தான் உடலில் உயிரைப் புகுத்துவதும், பின்னர் பிரித்தலும் ஆகிய தொழிலையுடையவன். 16. இறைவன் உயிரைப் படைக்கவில்லை. உடலைக் கொடுத்து வினைப்பயனைத் துய்க்க செய்கிறான்.

## 5.1. உயிர் இலக்கணம்

சிவாகமங்களில் ஒன்றான பராக்கிய ஆகமச் சூத்திரம் உயிரின் இலக்கணமாகக் கூறுவது: (1) உடம்பிற்கு வேறானவன். (2) அழிவு இல்லாதவன். (3) வியாபகம் உள்ளவன். (4) வேறாயிருப்பவன். (5) தளையோடு கூடியவன். (6) சடத்தன்மை இல்லாதவன். தன்வினைப் பயன் அனுபவிப்பவன். (8) கருத்தனாய் இருப்பவன் (9). சிற்றறிவு உடையவன். (10) இறைவனை உடையவன். மிருகேந்திர ஆகமம் கூறியதைச் சதமணி மாலையும் கூறுகிறது.[6]

## 5.2. உயிருக்கு வழங்கும் பெயர்கள்

உயிருக்குரிய பெயர்கள் காரணம் பற்றி வந்தனவே. இடுகுறிப்பெயர்கள் அல்ல. ஒரு பெயருக்குப் பல பொருள் உண்டு. அப்பெயர் எவ்விடத்தில் எந்நோக்கோடு பயன்படுத்தப்படுகிறது.

என்பதைக் கருத்தில் கொண்டே பொருள் காணல் வேண்டும். மேலும் காலத்திற்குக் காலம் பெயர் பெறும் பொருளும் மாறி வருவதுண்டு. ஆயினும் பெயரின் பொருள் நுண்பொருள். அது கையாளப்பெறும் இடத்தைப் பொறுத்தே அமையும். பொதுநிலையிலும் நுண்ணிய வேறுபாடு உடைய நிலையிலும் பொருள் வேறுபாடு உள. இப்பெயர்களைக் கொண்டு மனிதனின் குணம், தன்மை, இயல்பு, நிலை, அறிவு, ஆற்றல் முதலியவற்றை அறிதல் கூடும். பழம் நூல் படித்து உயிரின் தன்மையை உணர்வதற்கு இப்பெயர்கள் பெரிதும் உதவும் எனலாம்.

### 5.2.1. பெயரும் பொருளும்

*(1) சீவன் (ஜீவன்) உயிர் உடம்பிலுள்ள பொறிகளுடன் கலந்து நிற்கும் நிலை. (2) பசு கட்டுப்பட்ட உயிர் இருவினைப் பயனை நுகர்ந்து நிற்கும் நிலை. (3) சகலன் இன்ப துன்ப நிகழ்ச்சிக்கு ஏதுவான நனவு (சாக்கிர நிலை) முதலான நிலைகளைப் பொருந்தியுள்ள காலத்தில் ஒன்றனைப் பொருந்தி உடம்பினையே 'நான்' என்று எண்ணி ஒழுகும்நிலை. (4) கேவலன். மேலே சொன்னவற்றையெல்லாம் தன்முனைப்பு மலம் ஒன்றுடன் மட்டும் உயிர் விளங்கும் காலத்திய பெயர். (5) சுத்தன். தன்னை மயக்கமறகண்ட போதுள்ள பெயர். (6) வயிந்தவன். 'நானே' முதல்வன் எனக் கருதிய காலத்திய பெயர். (7) திரோதான்மா நானே முதல்வன் எனக் கருதிய காலத்திய பெயர் என்னும் பேராத சுதந்திரத்தை நீக்கிய காலத்திய பெயர். (8) ஞானவான். இறைவனின் மெய்யறிவைக் கண்ட காலத்திய பெயர். (9) அறிவு (ஞானம்) அறிவுகூடியுள்ள போதுள்ள பெயர். (10) பராபரன் சிறப்பு பொருந்திய வியாபக ஞானத்தில் தனக்கு இயல்பாக எழும் அகம், புறம் என்னும் சுட்டறிவை நீக்கி எழுச்சி பொருந்திய அருள் வடிவாய் நின்றபொழுது உயிருக்குப் பெயர். (11) அகசொரூபத்தினன். உயிர் அளவற்ற சுகச்சொரூபத்தைத் தரிசித்த காலத்திய பெயர். (12) பரமானந்தி, அச்சுக சொரூப தரிசினத்தின்பின் பரமானந்தத்தைப் பொருந்த அது தனக்கு உடல் ஆனபோது பெறும் பெயர். (13) சுபாவன் நாடப்படும் அப்பரமானந்தத்தில் புணர்தலும் பிரிதலும் இன்றித் தான் தலை என்னும் இரண்டு சொல் சேர்ந்து 'தாடலை' என்று ஆனதுபோல ஒன்றி விளங்கும் நிலைக்குப் பெயர். (14) சிவன் பரமானந்தத்திற்கு மேல் மேலான நிலை. இவையெல்லாம் உயிரின் அவதாரப் பெயர் ஆகும். பெயர்கள் நூல் சான்றுகள்: திருமந்திரம் பாடல்கள்: புருடனாகிய ஆன்மா.[7] மாயை ஒன்றோடு மட்டும் கூடிய ஆன்மா.[8] உடம்புகள் நான்கிற்கும் உயிராக விளங்கும் சீவன்.[9] அழிவில்லாத புருடன் மட்டும் இதயத்தில் இருப்பது சுழுமுனை.[10] புருடனாகிய உயிர்.[11] ஆன்மதத்துவம் இருபத்து நான்கு புருடதத்துவம் ஒன்று.[12]*

உடையது. துரியாதீதநிலையில் ஞானவடிவாய் நிற்கும் உயிர்.[13] இப்படியாக உயிர் பற்றிய பொருள்கள் இடத்திற்கேற்ப கொள்ள வேண்டும்.

## 5.3. உயிர் வகைகள்

உயிர் எல்லாப் பொருளோடும் அது அதுவாய் நிற்பது ஆதலின் அந்தந்த நிலைக்கு ஏற்ப உயிர் வகையாய்க் கூறப்பெறும். (1) பருவுடல் உயிர் (பூதான்மா) ஐம்பொருள்களின் பரிணாமம் ஆகிய உடம்பினைப் பற்றிக் கொண்டு உயிர் நிற்கும் போதுள்ளது.

### 5.3.1. சொல்லுயிர்

(2) (அந்தரான்மா) நால்வகைச் சொற்களையும் பற்றிக் கொண்டு உயிர் அது அதுவாக நிற்கும் நிலை. 3 உண்மை உயிர் (தத்துவான்மா) ஐம்பொருள்தவிர்ந்த மற்றைய உண்மைகளை (தத்துவங்களை) பற்றிக் கொண்டு நிற்கும் நிலை. அந்நிலையில் எந்த உண்மையை உயிர் பற்றுகின்றதோ இந்த உண்மையாகவே உயிர் விளங்கும். (4) மானிடஉயிர் (சீவான்மா) நுகர்ச்சிக்கு உரியவனாகி மானிட தத்துவத்தைச் சார்ந்து நிற்கும் போது உயிர் இயற்கையின் (பிரகிருதியின்) விளைவாக வரும் இன்ப துன்பங்களை நுகர்ந்து அது அதுவாக நிற்கும் நிலை. (5) மறைமொழி உயிர் (மந்திராத்மா) வானவர், மானிடர், விலங்கு, பறவை, தாவரம் என்பவற்றிற்கு எல்லாம் மறைமொழிகள் உள்ளன. அதற்குரிய அதிதெய்வங்களும் உள்ளன. அம்மறைமொழிகளின் இயல்பும் அவற்றைச் சொல்லும் முறையும் தனித்தனியே உள்ளன. மறைமொழியை மனம் ஒன்றாகக் கணிக்கும் போது படிகம் போன்ற உயிர் மறை மொழி உயிர் எனப்படும். (6) மேலான உயிர் (பரான்மா) மேற்கண்ட ஐந்து வகைகளும் நீங்கி சிவபெருமானோடு இரண்டற எண்ணத்தில் ஒன்றிய உயிராகும்.

'அறிவிக்க அன்றி அறியா உளங்கள்' எனவும், 'ஒருவனாகிய பரமான்மா பல உயிர்களின் விரவி நின்றவன்' எனவும், 'அலகிலுயிர்க்கு உணர்வாகி' எனவும், 'எண்ணரிதாய்' எனவும், 'வறட்டுப் பசுக்கள்' எனவும், 'பல்லுயிர்' எனவும், 'பல்லாருயிர்', 'உலக உயிர்க்கெல்லாம்' எனவும் உயிர்கள் பல என்பதைக் காட்டுகின்றன.

## 5.4. உயிர் அணு அளவினது

உயிர் தன்முனைப்பு மலத்தால் கட்டுண்டது. அதனால் 'அணு' எனப்பட்டது. பரவி இருக்கும் (வியாபகம்) இயல்புடைய உயிரை அணுவாக்குவது தன்முனைப்பே. உடம்பின் உள் இருக்கும் உயிரை எண்ணத்தால் அறிக என்று முண்டக உபநிடதம் கூறுகிறது. ஒரு பசுவின் மயிர் ஒன்றை நூறு கூறிட்டு அதில் ஒரு கூறை நூறாயிரம் கூறாகப் பிரித்தால் அந்த ஒரு பிரிவு அளவே உயிரின் அளவு என்பார் திருமூலர். மேலும் பல நூல்களில் உயிரும் அணுவும் பற்றிக் கூறியுள்ளவைக் காணத்தக்கது.

1. "அணுவுள் அணுவும் . . ." திருமந்திரம்.
2. "மூன்றுதிறத்தணுக்கள் செயும்கன்மங்கட்கு . . ." திருமந்திரம்.
3. "அரன் அருளால் அணுக்கள் . . ." திருமந்திரம்.
4. "இவை போல அணுவை ...மேவும்மலம் ..."
சிவஞானசித்தியார்.
5. "அணுக்களுரு அடையும் அறிவிலாமை யானும் . . ."
சிவஞானசித்தியார்.
6. "இயல்புவர்கள் அணுக்கள் இடர்க் கடல்நின்றும் எடுத்தே . . ."
சிவஞானசித்தியார்.
7. "அருவாகிக் கன்மமார் அணுக்கள் யார்க்கும் ஆவாரமாய் ..."
சிவஞானசித்தியார்.
8. "பலவாகி அணுக்கள் தோறும் படர்வதாகி. . ." சிவப்பிரகாசம்.
9. "நோக்கி அணுவில் அணுநெகிழப் பார்க்கில் ..."
திருக்களிற்றுப்படியார்.
10. "அனாதி யெனப் பெற்ற அணுவை . . ." திருக்களிற்றுப்படியார்.
11. "அருளானது சிவத்தேயாக்கும் அணுவை . . ." உண்மை விளக்கம்.
12. "சுத்த அனுபோகத்தைத் துய்த்தல் அணு . . ." உண்மை விளக்கம்.
13. "மும்மலம் சடமணு . . ." இருபா இருபஃது.

## 5.5. உயிரின் ஐந்தொழில்கள்

உயிர்கள் ஐந்தொழில் புரிகிறது. அவை (1) படைத்தல் - உடன் தோன்றுவது (2) காத்தல் - உயிருடன் வாழ்வது (3) மறைதல் - மயக்கம் உறல் (4) அருளல் - தெளிதல் (5) அழித்தல் - எடுத்த உடல் அழிவது. இதில் உடல் செய்வது படைத்தல், காத்தல், அழித்தல், உயிர் செய்வது அருளல், மறைத்தல், அருளல் - அறிவு தெளிவு பெறுதல், மறைத்தல் -

அறிவு மயங்குதல், உயிரே அறிவு தெளிவுபெறுதல், மயங்குவதும் உடையதாகையால் இன்பதுன்பத்திற்கும் உயிரே காரணமாகின்றது.

நாள்தோறும் மனித வாழ்வில் ஐந்தொழில்களும் நடைபெறும். (1) படைத்தல் - மனத்தால் ஒரு பொருளை நினைப்பது (2) காத்தல் - பொருள் மேல் வேட்கை கொள்ளல் (3) அழித்தல் - கிடைக்கக்கூடிய பொருள் கிடைக்காமல் போதல் (4) மறைத்தல் - பொருள் கிடைக்குமா என மனம் மயங்குதல் (5) அருளல் - அப்பொருள் பற்றி தெரிந்துக் கொள்ளல். இதனால் இன்பம் துன்பம் ஏற்படுகிறது. எனவே பற்றற்ற முறையில் தொழில் புரிதலும், அதன் பயனை விருப்பு வெறுப்பற்ற நிலையில் ஏற்றலும் இருவினை ஒப்பு ஏற்பட ஏதுவாகும்.

## 5.6. உயிரின் குணங்கள்

உயிரின் குணம் மூன்று. அவை (1) உயரியல்பு (சத்துவம்) (2) வன்யியல்பு (இராசசம்) (3) மடியியல்பு (தாமசம்) உலகிலுள்ள பொருள்கள் அனைத்தும் இம்முக்குணத்தினின்றும் தோன்றியவை. மானிடப் பிறவியைப் பொருத்த அளவில் முக்குணங்களில் ஒன்றை பெருமளவும், ஏனைய இருகுணங்களும் குறைந்த அளவும் பெற்றிருக்கும். மூன்றின் அளவும் வேறுவேறாக இருக்கும். அதில் பெரும் பான்மையாக இருக்கும் குணத்தைக் கணக்கிட்டே ஒருவரின் குணம் தீர்மானிக்கப் பெறும். எவருமே ஒருகுணத்தை மட்டும் பெற்றவராக இருக்க மாட்டார். இருக்கவும் இயலாது. இந்த குணங்களின் ஏற்றத்தாழ்வுகள் சூழ்நிலையைப் பொறுத்தும், வினையின் விளைவால் தோன்றும் சூழ்நிலையைப் பொறுத்தும் வேறுபடும். ஒருவருடைய குணத்தையும் குற்றத்தையும் கணக்கிட்டு அதில் எது. அதிகம் உள்ளது என கணக்கிட்டு அவர் குணம் உடையவரா? குற்றம் உடையவரா? என்பதைத் திர்மானிக்க வேண்டும்.[14]

### 5.6.1. உயர்குணம் (சத்துவகுணம்)

இக்குணம் குற்றமற்ற தவம், கொடை, உவப்பு, பொறுமை, தூய்மை, கல்வி ஆகியவை உடையது. இதனால் அறம் (தன்மம் - தருமம்) மெய்யறிவு (ஞானம்) மனஉறுதி (விரும்பாமை - வைராக்கியம்) செல்வம் (ஐசுவரியம்) ஆகிய நான்கு தன்மையன. விரிவாகப் பார்க்கின் பொறுமை உடைமை. மனஉறுதி உடைமை, மனத்தில் நுண்மை உடைமை, துன்பம் வந்த காலத்தில் மகிழும் தன்மை, மனம் மொழி மெய் மூன்றும் உள் மறைவின்றி (கபடம்)

ஒத்திருக்கும் தன்மையுடைமை, நல்ல வேலையையும், பெற்ற வேலையையும் பெரிதாக எண்ணி மகிழ்தல். இறைவன் திருவருள் பெற்று வீடு பேற்றில் விருப்பம் கொள்ளல். ஐம்புலன் அடக்கம் உடைமை. எல்லா உயிரிடத்தும் இரக்கம் உடைமை (சீவகாருண்யம்) மென்மையான உணவையே உண்ணும் தன்மையுடைமை. இக்குணம் வாசியில் மண் (பிருதிவி) நீர் (அப்பு) பூதியங்கள் நடக்கும் போது ஏற்படும்.

## 5.6.2. வன் இயல்பு (இராசச குணம்)

இதன் தன்மை மான உணர்வு, வீரம், முயற்சி, மதம் முதலியன. இதனால் மறம் (அதர்மம்) நான்கு ஆகும். அவை அறத்திற்கு முரண்பட்டது. அதில் வன் இியல்பின் தன்மை. மன உறுதி பாடின்மை மற்றும் பலவும் தோன்றும். வீரம் வன்மையான உணர்வாயினும் அது மனிதனுக்கு ஒரு போது தேவைதான். பகைவர்களிடமிருந்தும், துரோகிகளிடமிருந்தும் கொடுமை யாளர்களிடமிருந்தும், கொள்ளையர்களிடமிருந்தும் தன்னையோ, தன்குடும்பத்தையோ, தன் நாட்டையோ காக்க தேவை. அந்த அளவோடு வீரம் செயல்படின் ஏற்புடைத்து. தமிழர்களின் தனிச்சிறப்பு வீரமும் ஈரமும் ஆகும். வீரம் உடையவன் ஈரம் உடையவனாய் இருத்தல் வேண்டும். அப்படி உடைத்தாயின் 'பொன் மலர் நாற்றம் உடைத்து' போன்றதாகும். வீரத்தையும் ஈரத்தையும் இருகண்ணாகப் போற்றுவார்கள் பண்டைய புலவர்கள். பகைவர்களை வெல்லவேண்டும். வெல்லப்பட்ட பகைவர்க்குத் தீங்கு நேரின் காக்க வேண்டும் என்கிறார் திருவள்ளுவர்.[15] இதனை ஊராண்மை, பேராண்மை என்று புகழ்ந்துரைக்கின்றார். போருக்குப் புறப்பட வேண்டும். போரில் விழுப்புண் பட வேண்டும். அந்நாளே நந்நாள் என்கிறார் வள்ளுவர்.[16] வள்ளுவர் கூறும் வீரம் பகைவர்களிடமிருந்து எளியோரையும் நாட்டையும் காத்தலைக் குறிக்கும். இது தன்னலம் அல்ல. பொதுநலம் பேணும் பெருங்குணம். போர்க் களத்திலும் யார் யாருக்குப் பாதுகாப்பு கொடுத்து காக்க வேண்டும் யாரிடம் எப்படி போரிட வேண்டுமென்ற இலக்கணமும் வகுக்கப்பட்டுள்ளது. இப்படி அன்றி தன்னலம் கருதி, தன்முனைப்பு கொண்டு. செல்வாக்கு, செல்வம், பதவி, பாராட்டு முதலியனவற்றின்மீது பற்றுக் கொண்டு நல்லோருக்கும் எளியோருக்கும் தீங்கு விளைவிப்பது இராசசகுணம் ஆகும். இதனால் உடையவனுக்கோ, பிறருக்கோ நன்மை இல்லை.

உலகியலில் அதிக ஈடுபாடு (லௌகீகப் பிரவிருத்தி). கோபம் முதலிய கொடிய தன்மைகள். யான் எனது என்னும் தன்முனைப்பு (அகங்காரம், மமகாரம்) உடைமை. வஞ்சகம் உடைமை; இரக்கம்

இல்லாமை. நுகர்வில் இன்பம் உடைமை, ஆடம்பரம் உடைமை, துக்கம் உடைமை இவையெல்லாம் உடையவர்கள். இவர்களால் நாட்டிற்கு நன்மை ஏதும் ஏற்படாது. இக்குணம் உடையவரும் அன்பு, அருள், இரக்கமின்றி அறியாமையால் தானும் துன்புற்று, பிறரையும் துன்பத்திற்கு ஆளாக்குவர். இறைவன் திருவருள் அடைய இயலாது.

### 5.6.3. மடி இயல்பு

தாமசகுணம் அருள் இன்மை, உறக்கம், பேருண்டி, கொலை, பொய் இவை உடையவர்கள் இக்குணத்தார்கள். அறியாமை, வறுமை, மறம் இவை தோன்றும். விரிவு பௌட்கர ஆகமத்தில் காணலாம். இதன் தன்மைகள், ஒன்றிலும் மனநிறைவு (திருப்தி) ஏற்படாமை, ஆர்வம் இல்லாமை, உலகியலில் குறைந்த ஈடுபாடு (ஈனபிரவிருத்தி) கோள் சொல்லுதல், தூய்மையற்ற உணவை உண்ணல். அதிக உறக்கம். செருக்கு (கர்வம்) சோம்பல் (மடி) பிறர் மதிப்பைக் குறைக்க எண்ணுதல். அறிவின்மை, விருப்பம் அதிகம் பெற்றிருத்தல் முதலிய தன்மைகளை உடையவர்களாக இருப்பர். இவரும் நல்வாழ்வு பெறார். பிறரையும் நல்வாழ்வு வாழ உதவார்.

இம்மூன்று குணமும் ஒருகுணத்தோடு ஏனைய இருகுணத்தையும் சேர்க்க ஒன்பது குணமாகும். உண்மையில் எந்த ஒரு தனிமனிதனின் குணத்தை ஆராய்ந்து பார்த்தால் ஒரு குணம் மட்டும் உடையவராக இருக்கமாட்டார். ஒன்பதில் ஒன்றாகவே இருப்பர். இதில் இறைவனை அடைய எக்குணம் எல்லாம் தேவைப்படுமோ அவற்றைப் பெற்றிருப்பதும், பெறமுயல்வதும் நலம் பயக்கும். தேவையற்ற அதாவது தீமை பயக்கக் கூடிய குணங்களை விட்டு விட வேண்டும். இதில் எவர் மனஉறுதியும் முயற்சியும் உடையவரோ அவரே இறைவன் திருவருள் அடைவர். திருவருள் அடைய இது ஒருவழி.

ஞான வெட்டியான் பாடல் 173 முதல் 179 முடிய.

## 5.7. உயிர் தோன்றுமிடம்

உயிர்கள் நான்கு வகையில் ஏதேனும் ஒன்றின் வழியே தோன்றுகின்றன. முற்பிறவி வினை, பயன் காரணமாக அதைத் துய்க்கவும் போக்கவும், இப்பிறப்பு இறைவனால் அளிக்கப் பெறுகிறது. அளிப்பவர் இறைவன், பிறவி உயிரின் முன்வினைப் பயனைப் பொறுத்து அமையும்.

"இதான வாறறிந்திடிலோர் - புவி- யெழுவகைத்
தோற்ற நால்யோனியுமே" ஞானவெட்டியான் 597.

### 5.7.1. முட்டையில் தோற்றம்

*(அண்டசம்) அண்டம் - முட்டை. சம் - தோன்றுவது. முட்டையில் தோன்றுவது. அப்படித் தோன்றுவனவற்றுள் சில. பாம்பு, தவளை, ஆமை, முதலை, அரணை, உடும்பு, மீன், ஓந்தி, பறவை, பல்லி ஆகியன.*

### 5.7.2. வேர்வையில் தோற்றம்

*'சுவேதம்' வேர்வையின் தோன்றுவன கிருமி. நச்சுயிர். பேன், விட்டில் பூச்சி முதலியன.*

### 5.7.3. வித்தில், வேரில் தோன்றுவன (உற்பிச்சம்)

*வித்திலோ வேரிலோ தோன்றுவனவற்றில் சில மரம், செடி, கொடி, புல், பூண்டு முதலியன.*

### 5.7.4. கருப்பையில் தோற்றம் (சராயுசம்)

*சராயு - கருப்பப்பை. நான்கு கால் விலங்குகள். மனிதர், தேவர் முதலாயினவர் ஆவர்.*

### 5.7.5. உயிரினங்களின் எண்ணிக்கை

*பேரண்டத்திலுள்ள உயிர்கள் எண்ணிக்கை விபரம்: (1) தாவரங்கள் 19,00,000 (2) ஊர்வன 15,00,000 (3) நீரில் வாழ்வன 10,00,000 (4) விலங்குகள் 10,00,000 (5) மனிதர்கள் 9,00,000 ஆகமொத்தம் 84,00,000.*

*"எண்பத்து நானூறாயிர செனன முஞ்செனித்துப்*
*புண்பட்டு நானும் புலம்பினேன் பூரணமே"*
*பட்டினத்தார் பாடல்.*

## 5.8. உயிரும் அறிவும்

*பொறி அறிவு ஐந்து. மன அறிவு ஒன்று. மொத்த அறிவு ஆறு. எல்லா உயிரும் ஆறு அறிவு உடையன அல்ல. ஓர் அறிவு தொடங்கி, ஆறு அறிவு வரை பெற்றவைகளாய் உள்ளன. மனம் மற்றும் ஐம்பொறி அறிவினைப் பொறுத்தே அறிவின் எண்ணிக்கை*

அமைகிறது. மனிதப் பிறவிதான் எல்லாப் பிறவிகளிலும் மேலானது. இறைவனின் திருவருளைப் பெற வாய்ப்புள்ள பிறவி. வழக்கு நூலாகிய தொல்காப்பியம் மரபியல் சூத்திரம் கூறும் உயிரும் அறிவும் பின்வருமாறு.

### 5.8.1. மெய்யறிவு உடையன

வித்து, வேர்களில் தோன்றிய மரம், செடி, கொடி, புல், பூண்டு ஆகியவை ஓர் அறிவு உடையவை. மெய்யறிவு மட்டுமே இவற்றிற்கு உண்டு.

### 5.8.2. மெய், வாய் அறிவு

மெய்யறிவும், வாய் உணர்வும் ஆகிய இரண்டு அறிவுடையன நந்து. முரளி, கிளிஞ்சல், மட்டி, சுண்ணாம்பு முதலியன.

### 5.8.3. மெய், வாய், மூக்கு அறிவு

மெய், வாய், மூக்கு ஆகிய மூன்று அறிவு உடையன சிதலும், எறும்பும், அட்டையும் ஆகும்.

### 5.8.4. மெய், வாய், மூக்கு, கண் அறிவு

மெய், வாய், மூக்கு, கண் ஆகிய பொறி அறிவு நான்கு உடையன நண்டு, தும்பி, தேனீ, வண்டு முதலியனவாம்.

### 5.8.5. மெய், வாய், மூக்கு, கண், காது அறிவு

மெய், வாய், மூக்கு, கண், காது என்ற ஐம்பொறிகளின் அறிவு ஐந்தும் உடையன. நான்கு கால் விலங்குகள், மன உணர்வில்லா மனிதர்கள் (மாக்கள்) (தோற்றத்தில் மனிதர் போலிருப்பர் அறிவில் விலங்காய் இருப்பவர்).

### 5.8.6. ஐந்து பொறி அறிவும் மனஅறிவும் உடையவர்

ஆறு அறிவினர் மனிதர்கள். ஆயினும் எல்லா மனிதர்களும் ஆறறிவு உடையவர் இல்லை. கண் தெரியாத குருடர். காது கேளாத செவிடர். வாய் பேசாத ஊமையர், பிணியால் பிணிக்கப்பட்டு மன அறிவு இன்றி இருப்போர், பித்தர்கள், மேலும் மயக்கநிலையில் (கோமா ஸ்டேஜ்) உள்ளவர்கள் அனைவரும் ஆறறிவு உடைய மனிதர்

என்று சொல்லமுடியாது. எத்தனை அறிவு எப்போது உடையவர்களாய் உள்ளனரோ அப்போது அத்தனை அறிவு உடையவர் என்று கூறுதலே முறையாகும். பிறந்த நாளன்றே குழந்தை ஆறு அறிவு உடையது இல்லை. ஒவ்வொரு அறிவாகப் பெற்று இறுதியில் ஆறறிவு உடையவர்களாய் ஆகின்றனர்.

## 5.8.7. மன அறிவு

அறிவது என்றால் அறிகின்ற பொருள். அறியும் பொருளுக்கான தோற்றம், அந்தத் தோற்றத்தைப் பற்றிய முன்னரே அறிந்த விளக்கம் இருத்தல் வேண்டும். ஒரு காட்டில் புகுந்தால் முன்னரே அறிந்த மரங்களை இன்னமரம் என்பர். முன்னர் அறியாத மரத்தை என்ன மரம் என்றும் கேட்பர். முன்னரே அறிதல் என்பது காணும் பொருள். அந்தப் பொருளின் தோற்றம், அந்தப் பொருளைப் பற்றிய விளக்கம் அனைத்தும் மனத்தில் நிலை பெற்று இருக்க வேண்டும். மனமே ஐம்பொறிகளின் வாயிலாக உலகை உணர்ந்து அறிய உயிருக்கு உதவுகின்றது.

## 5.9. மனிதன் பெயர்க் காரணம்

அகக் கருவிகள் மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் நான்காகும். மனமே ஏனைய மூன்றிற்கும் நிலைகளன். மனம் உடையவன் மனிதன். மன் + அம், மனம். மன் - மன்னுதல். அதாவது நிலை பெறுவதற்குக் காரணமாய் இருப்பது.

"மன்னா உலகில் மன்னுதல் குறித் தோர்" புறநானூறு.
"மன்னுயிர்க் கெல்லாம் இனிது" திருக்குறள்

மன் என்பது நிலை பேறு என்பதை உணர்த்துகின்றது. உலகிலுள்ள உயிரினங்களில் மனிதனே நிலைபேறு உடையவனாக இருக்க இயலும். மன் + உயிர் மன்னுயிர் ஆயிற்று. மனம் உடையவன் மனிதன். மனம் - மனத்தால் மனித்தன், மனிதன் என்று வந்திருக்கக் கூடும்.

"மாந்தர்கள் விலங்கு என்று உள்ளும் மனத்தன்
"அவியுறு மனத்தன்" கம்பராமாயணம்.
"மனித்தப் பிறவியும் வேண்டுவதே இம் மாநிலத்தே"
அப்பர் தேவாரம்
"மனத்தனாம் மாந்தர்க்கு உணர்ச்சி" திருக்குறள்

மனிதன் மனத்தின் தொழில் கொண்டே எண்ணுகின்றான். பின்னர் சொல்லுகின்றான். பின்னர் செயல்புரிகிறான். மனம் இன்றி சித்தம் புத்தி அகங்காரம் இல்லையோ அது போன்றே சொல்லும் செயலும் இல்லை. ஓர் உயிர் அடுத்தப் பிறவியில் வேறு உடல் எடுக்கக்கூடும். மனிதன் மட்டுமே மன அறிவைக் கொண்டு இறைவன் திருவருளை அடையும் வழி அறியலாம். உயிரின் தன்மையே உய்வு பெறுதலே. பிறவியைக் கடக்க முடியும். உய் + இரு. உயிரு. உயிரு உயிராயிற்று உய் எனின் உய்ந்து, கடந்து, பிறவியைக் கடந்து என்னும் பொருள் ஆகும். எல்லாவற்றையும் கடவுவதனால் கடவுள் எனப்பட்டார்.

## 5.10. உயிர் அறிவு

மனிதன் அறிவுப் பொருள். தானே அறியான். அறிவிக்க அறிவான்.[17] ஒவ்வொன்றாகத் தான் அறிவான். எனவே சிற்றறிவினன். பொறிகளின் உதவியால் அறிவான். பொருள்களில் அழுந்தி அறிவான். அறிந்தவைகளை மறப்பான். மறக்கும் தன்மையால் இருவினை புரிவான். மறதி அறிவு வளர்ச்சிக்குத் தடையாக இருக்கிறது. அதே மறதி மனிதனின் துன்பங்கள், துயரங்கள், சோகங்கள் மறந்து அமைதியாய் இருக்க உதவுகிறது. மறதி பெருந்தீங்கும் சிறுநன்மையும் தருகிறது.

சடப் பொருள்களால் அறிவு பெறுவதால் இது சட அறிவு. உடல் சடப்பொருள். உலகம் சடப் பொருள். உடலாகிய சடப்பொருளை வளர்க்க உலகமாகிய சடப் பொருளின் இயல்பை அறிதலும் அறிந்தவழி அதனைப் பயன்படுத்துவமாகிய அறிவு சட அறிவு. இவ்வுலக வாழ்க்கை மேம்பட உதவுவது. இன்றைய அறிவியல் பொறிகளின் உதவியால் அறியும் அறிவு. சுட்டறிவு, சடஅறிவு, பொறியறிவு பொய் அறிவாவதும் உண்டு சிலபோது. எப்படிஎனில் இனிக்கும் இனிப்பை வெறுத்து நா எரியும் காரத்தைச் சுவைத்து உண்பது உண்மைக்கு மாறானது அல்லவா.

உயிர் அறிவுடைய பொருள் ஆனதால் மாற்றத்திற்கு உட்படாதது. மாற்றத்திற்கு உட்படாதது சத்து எனப்படும். ஆனால் தன் முனைப்பால் மாற்றத்திற்கு உட்படுவதால் அசத்து எனப்படும். ஒருபொழுது சத்தாயும், இன்னொரு பொழுது அசத்தாயும் இருப்பதால் உயிர் சதசத்து எனப்படும்.

எனவே இறைவன் மாற்றத்திற்கு உட்படாமையால் சத்து எனவும் உயிர் இருநிலைகளையும் பெற்றிருப்பதால் சதசத்து எனவும், தளை மாற்றத்திற்கு உட்படுவதால் அசத்து எனவும் கூறப்படும்.

அறிவினால் "அறிந்த யாவும் அசத்து ஆதல் இறுதி" என்கிறது சிவப்பிரகாசம்-55.

உயிர் தளையோடு தொடர்பு உள்ளபோது தளை அறிவு என்றும், தன்னையே பிரமம் என்று எண்ணும்போது உயிர் அறிவு என்றும், இறைவனோடு தொடர்பு உள்ளபோது இறையறிவு என்றும் கூறுவர். அறிவு ஒன்றே எனினும் நிலையைப் பொறுத்து பெயரிடப்படுகிறது. உயிர் தளையோடு தொடர்பு உள்ளபோது சிற்றறிவு. இறைவனோடு தொடர்புடையபோது விரிந்த அறிவு.[18]

## 5.11. அறிவின் வகைகள்

அறிவு நுகர்வு, நினைவு என இருவகைப்படும். நுகர்வு ஏற்புடைய மற்றும் ஏற்பிலா என்னும் இருவகையாகும். ஏற்புடைய மற்றும் ஏற்பில்லாத எனும் இருவகை அறிவைத் தருகிறது. ஏற்புடைய நுகர்வு - ஏற்பிலாத நுகர்வு என இருவகைப்படும். ஏற்புடைய நுகர்வு நிர்ணயிக்கப்பட்ட, நிர்ணயிக்கப்படாத இறை நுகர்வு அறிவுகளாக விளங்குகின்றது. ஏற்புலாத நுகர்வு ஐயம், பிழை இவைகளைக் கொண்டது. நினைவும் ஏற்புடைய நினைவு அல்லது உண்மையான நினைவு, ஏற்பில்லாத நினைவு அல்லது பொய்யான நினைவு என இருவகைப்படும்.

### 5.11.1. அறிவும் அறியாமையும்

மனிதனின் துன்பத்திற்கு தாழ்ச்சிக்கும் காரணம் அறியாமையே. அறியாமை தன் முனைப்பால் உண்டாவது. தன் முனைப்பால் அறியாமை உண்டாகிறது என்றால் முன்னர் அங்கே அறிவு இருந்தது என்பது புலனாகிறது. அறிவு மனிதனிடம் படிப் படியாகத் தோன்றுகிறது. அறியாமை அறிவுக்கு எதிரானது என்றால் அறிவு முற்றிலும் இல்லாதது ஆகிவிடும். அறியாமை அறிவின் இன்மை எனின் இன்மை எதனையும் செய்யாது. இன்மையும் முன் இன்மையாகவோ, பின் இன்மையாகவே இருக்கலாம். உண்மையில் அறியாமை என்பது இருப்பதைத் தெரிந்து கொள்ளாமை எனலாம். பகுத்தறிவு இல்லாமை எனவும். நல்லன எது, தீயன எது என்பதை அறியாமையே அறியாமை எனப்படும். நிலையற்றதை நிலையானதாக எண்ணி, செய்யக்கூடாத தீவினை செய்து வாழ்ந்தால் அதற்குரிய விளைவை விரைவில் அடைந்தே தீரவேண்டும் என்பதை அறியாமையே அறியாமை எனலாம். ஒவ்வொரு வினைக்கும் எதிர்வினை உண்டு என்பதை அறியாதது அறியாமை. தீசுடும் என்பது குழந்தைக்கு முன்னறிவு இல்லாத அறியாமை. கொலை செய்தால்

உறுதியாகத் தண்டனை உண்டு என்று அறிந்து இருந்தும், தப்பித்து விடலாம் என்ன ஆனாலும் பரவாயில்லை எண்ணியபடியே பழிதீர்ப்பேன் என்பது விளைவை அறிந்து இருந்தும் அறிவு வழி நடக்காமையால் வரும் அறியாமை எனலாம்.

வீடு பேற்று நிலையில் மனிதன் உண்மை அறிவைப் பெறுவதால் இப்பிரிவு நிலைகளில் அறியாமையை முன் இன்மையாகவே கருதவேண்டும். அறிவு மற்றொரு வகை அறிவு எனின் பிழை அறிவே எஞ்ஞான்றும் இருக்கும். தன்முனைப்பு உண்டாக்கும் அறியாமை அறிவை மறைப்பதாகும். விளங்கக் கூறின் தன்முனைப்பு இருள். இருள் இருக்கும் பொருளை மறைக்கும். பொருளை இருள் மறைப்பது போல அறிவை அறியாமை மறைக்கும். உயிருக்கு அறிவு உள்ளது. அந்த அறிவை அறியாமை மறைக்கிறது எனப் புலனாகிறது.

## 5.12. உயிர் நிலை மூன்று

உயிர் மூன்று நிலைகளைப் பெறுகிறது. நிலை என்பது அவத்தை எனப்படும். (1) தனிநிலை (கேவலம்) (2) கலப்பு நிலை (சகலம்) (3) தூயநிலை (சுத்தம்) என மூன்றாகும். "ஆன்மா கேவலம், சகலம், சுத்தம் என்னும் மூன்று அவத்தைகளை உடையதாக எண்ணப் பெறுகிறது. மாசு உடையதாய் இருப்பதால் ஆன்மாவிற்கு மாசில்லாதவனாகிய சிவனால் விடுதலை கிடைக்கப் பெறுகிறது. இராணாகமம். பசுபடலம் 23. உயிருக்கு மூன்று அவத்தை உளதென்று ஞானாமிர்தம்[19] சிவஞான விகாசம்[20] போன்ற நூல்களும் நுவல்கின்றது.

### 5.12.1. தனிநிலை (கேவலாவத்தை)

தோற்றமில் காலந்தொட்டு உயிர் தன்முனைப்பால் கட்டுண்டு அறிவற்றிருக்கும். உறக்கத்தில் ஆழ்ந்து சடம் போல உணரும் தன்மையற்று இருக்கும். உடலும் உலகமும் கிடையாது. இது இருள் நிலை. இருளில் விழித்திருக்கும் கண்கள் இருளை மட்டுமே பார்க்கும். தன்முனைப்பிலிருந்து விடுபடும் வழி அறியாமையால் பிறப்பும் இறப்பும் ஏகதேச தன்மையும் இன்றி இருந்தது. தன்முனைப்போடு தனியாக இருக்கும் நிலையே தனிநிலை. அப்போது கலை முதலிய கருவிகளும், நுண்உடல் பருஉடல் இன்றி இருக்கும்.

### 5.12.1.1. தனிநிலையின் தன்மைகள்

(1) அந்நிய படான் (நிலையற்றவனாக ஆகமாட்டான்) (2) புத்தி, குணம் முதலிய எட்டும் உடலுடன் இல்லாதான் (3) எங்கும் பரவி இருப்பான் (சர்வ வியாபி) (4) தன்னை அறியாதிருப்பான் (5) தன்னுரிமை இல்லாதவன். தனக்கென எச்செயலும் செய்யாதான் (6) அறிவு இல்லாதவன். (7) உடல் இல்லாதவன். (8) நுகர்வில் வலிமையில்லாதவன். (9) அறிவற்ற சடம் போன்றவன். (10) ஒளியுடையவன். (11) எதற்கும் முதன்மை இல்லாதவன்.

### 5.12.2. கலப்பு நிலை (சகலாவத்தை)

உயிரானது உடல், கருவி, உலகம், நுகர்பொருள் (தனு கரண புவன போகம்) வடிவாகிய காரிய மாயையுடன் கூடிய இருவினைகளையும் நுகரும் நிலை கலப்பு நிலை. உயிர் மற்றவற்றுடன் கலப்பு உற்ற நிலை கலப்பு நிலை. அனைத்து உயிர்களும் கலப்பு நிலையே.[21] இருளில் இருந்த உயிருக்கு இறைவன் மாயை என்னும் ஒளியை அவ்வுயிர்களோடு சேர்த்தான். அதனால் உடல் கருவி, உலகம் நுகர்வு எல்லாம் சேர்ந்தது. கலந்தது. கலந்ததால் கலப்பு நிலை. இதனால் இறப்பும் பிறப்பும் தொடர்ந்து வரலாயின. இது பெத்த நிலை எனப்படும்.

### 5.12.3. தூய நிலை (சுத்த நிலை)

உயிர் தளைகளில் இருந்து நீங்கி இறையருளில் திளைத்து நிற்பதாகும். இதுவே முத்தி நிலை எனப்படும். வீடு பேறு நிலை.[22]

உயிரின் மூன்று நிலைகளின் மூலம் அறியும் உண்மை முதல் நிலையாகிய தனிநிலையில் தன் முனைப்பு தளையால் கட்டுண்டு ஒளியறியாது இருளில் சிக்கி தனித்து இருந்தது. இறைவன் உயிர்மீது இரக்கம் கொண்டு இருளில் இருந்து மீண்டுவர மாயை என்னும் ஒளியைத் தந்தான். மாயையால் உயிர் உடல் கருவி, உலகம் நுகர்ப்பொருள் பெற்றது. அதனால் இருவினை புரிந்தது. இறப்பிற்கும் பிறப்பிற்கும் காரணமானது கலப்புநிலை.

அறிவுடைய உயிரானது இறப்பிற்கும் பிறப்பிற்கும் தன்முனைப்பும் இருவினையுமே காரணமாக இருப்பதால் அவற்றிலிருந்து விடுபட்டு வரவேண்டும். தளைகள் உயிருக்கு வேறான பொருள். தொடர்பு இருந்தால் பிறவித் துன்பம் தொடரும் என எண்ணி விலக வேண்டும். விலகும் போது இறைவன் நெருங்கி வருவான். இறைவனின் திருவருளால் தூய உயிராக மாறவேண்டும்.

தூய உயிருக்கு இறப்பும் பிறப்பும் இல்லை. இன்பமும் துன்பமும் இல்லை.

தனிநிலை - இருள்நிலை, கலப்புநிலை - மருள்நிலை. தூயநிலை - தெருள்நிலை எனப்படும்.

## 5.13. நிலை மூலம் அறிவது

தளை (மலம்-பாசம்) தனிநிலைக்கும் கலப்பு நிலைக்கும் காரணம். தனி நிலையில் இருளிலிருந்து அறியாமை வயப்பட்டு இருத்தல் வேண்டும், உயிருக்கு இது ஏற்றதல்ல. அடுத்து உடல் கருவி உலகம் நுகர்பொருள் கலந்து வாழும் நிலை. இதனால் இறப்பு, பிறப்பு, இன்பம், துன்பம் இதுவும் அறிவுடைய உயிர்க்கு ஏற்றதல்ல. தனக்குத் தொடர்பு இல்லாத பொருள்களைப் பெற்று இருப்பதால், தான் பெறவேண்டிய திருவருள் பெறமுடியாமல் போவதால் அவற்றை விலக்க வேண்டும். தளைகளை விலக்குவதால் இறைவனின் திருவருளை அடையலாம். இதுவே திருவருள் அடையும்வழி. எனவே இவ்வழி நடந்து இறைவன் திருவருள் பெற்றிட இறைவனைப் பற்றியும், உயிராகிய தன்னைப் பற்றியும், தனக்குத் தளையாக இருக்கும் தளையைப் பற்றியும் நன்கறிந்து நீக்கும் வழி அறிய வேண்டும். சித்தாந்த நெறி, சித்தர் நெறி சிறந்தது.

## 5.14. உயிர் வகை

தளை மலம் எனப்படும். மலம் மூன்று என்றும் ஐந்து என்றும் கூறப்படும். முதன்மையானது மூன்று. துணையானது இரண்டு. மலம் எத்தனை பெற்றுள்ளாரோ அந்த எண்ணிக்கையின் அடிப்படையில் வகை பிரிக்கப்பட்டுள்ளது. ஒருமலம் உடையவர் விஞ்ஞான கலர் என்றும், இரு மலம் உடையவர் பிரளயாகலர் என்றும் மும்மலம் உடையவர் சகலர் என்றும் கூறப்படும். சுத்தமாயை திரோதாயி எனப்படும் இரு மலங்களும் எல்லாவகை உயிருக்கும் உண்டு (23-27).

### 5.14.1. ஒரு மலத்தார்: அறிவு நிலையின் - விஞ்ஞானகலர்

விஞ்ஞான கலர் - விஞ்ஞானம் + கலர். விஞ்ஞானம் மேலான அருள் ஞானம். இறைஞானம். கலர் என்றால் கலையை உடையவர். கலை என்றால் உயிர் வினை நீக்கம் பெறும் வழியைப் படிப்படியாகப் பெற வைப்பது. தன்னுடல் கூட்டினை மிகுந்த மேலான அருள் அறிவால் நீக்கப் பெற்றவர்.

தன்முனைப்பு மலம் ஒன்றினை உடையவர். இறை உணர்வு ஒன்றையே எண்ணுவர். எடுத்தப் பிறவி இன்றி வேறு பிறவி இல்லை. இறைவன் இவர்க்கு உள்நின்று உணர்த்துவான். இவருக்கு வினையும், மாயையும் இல்லை. ஆயினும் சுத்த மாயை உடல், கருவி, உலகம், நுகர்பொருள் உண்டு, மாயைக்கு மயங்காதவர்கள். தனி நிலையினர் விந்து சத்தியால் செயல்படுவர். மந்திர வடிவு பெறுவர்.

### 5.14.1.1. ஒருமலத்தார் இருவகையினர்

ஒருமலத்தார் இருவகையினர். தொன்மை காலம் முதல் இருப்பவர். மற்றொரு பிரிவினர் சாதனையாலோ, தீக்கையினாலோ, யோகப் பயிற்சியாலோ, மெய்ஞ்ஞானத்தாலோ மெய்த்துறவியாலோ இடைப்பட்ட காலத்தில் வினை மாயை ஆகியவற்றின் கட்டுக்களை விட்டு முற்றிலும் நீங்கி அசுத்தமாயையின் மேலுள்ள உலகங்களின் நுகரத்தக்க இன்பங்களுக்கு ஏற்ப தன்முனைப்பு மலத்தின் கூட்டு மட்டிலும் உடையவர். இறைவன் தானே வந்து தீவிரதரம், அருள் வீழ்ச்சி இரண்டடினையும் பதிவித்து அவர்கள் அறிவில் நிற்பான்.

### 5.14.1.2. பக்குவர், பக்குவம் அற்றவர்

ஒருமலத்தார் இருவகைப்படுவர். (1) பக்குவர். பக்குவம் அற்றவர். உணவில் பக்குவம் பெற்ற உணவுபோல எனலாம். சமைக்கப்பட்ட, உண்பதற்குப் பக்குவமாக உள்ள சோறு. கறி. இவர் மலபரிபாகம் மிகுதியால் இறைவன் அருள்பெற்று சாயுச்சிய பதவி பெறுவர்.

இறைவன் திருவருள் பெறவேண்டுமாயின் ஒருமலம் உடையவராகவும், இருமலம் நீங்கியவராயும் இருத்தல் வேண்டும். தன்முனைப்பு மலம் ஒன்றிருக்க, மாயை, வினை நீங்கியவராய் இருத்தல் வேண்டும்.

2. பக்குவர் அற்றவர். நெல், முதலிய தானியங்களை அப்படியே உண்ண முடியாது. அவை உண்ணவேண்டுமானால் உண்பதற்கும், செரிப்பதற்கும் ஏற்ற வகையில் பக்குவம் செய்யவேண்டும். இதுபோன்றே மன பக்குவம் பெற்றவர்கள் பக்குவர் என்றும் பெறாதவர் பக்குவம் அற்றவர் என்றும் கூறப்படும். மல பரிபாகமாக மந்திரத்தாலோ சிவன் அவர்களுடைய ஞானச் செயல்களை விளக்கி அருள் புரிந்து இருக்கையிலும், தூய உயிருக்கு அதிகாரிகள் ஆகையால் அதிகார மலத்தைப் பொருந்தி இருப்பார்கள். இவர்களுக்குத்தூய மாயையும், தூய வினையும் உண்டு.

### 5.14.1.3. ஒரு மலத்தார் நால்வர்

(1) சீவன் முத்தர் உடம்போடு கூடியிருந்த போதே சிவத்தைப் பொருந்தியுள்ளவர். (2) உடம்பைப் பிரிந்தபின் சிவத்தைப் பொருந்தியவர் மூவர். இவர்களில் உயர்நிலையினர். நடுநிலையினர். கீழ்நிலையினர் என மூவகைப்படுவர். இம்மூவரும் சாயுச்சிய பதவியைப் பெறாதவர்கள்.

மும்மலம் உடையவர் சகலர். இருமலம் உடையவர் பிரளயாகலராகவும் ஆகலாம். இரு மலம் உடைய பிரளயாகலர் ஒருமலம் உடைய விஞ்ஞானகலராகலாம். விஞ்ஞான கலரும் பக்குவப் பட்டு மலபரிபாக முற்று இறைவனின் திருவருள் அடைந்து சாயுச்சிய பதவி அடையலாம் என ஆகமங்கள் கூறுகின்றன.

"ஆணவ மாகும் விஞ்ஞான கலருக்கு . . ."திருமந்திரம் 224.
"விஞ்ஞான கலருள் பக்குவர் ... "சிவப்பிரகாசவிகாசம் 71.

இதனால் தன்முனைப்பு உடையவர் விஞ்ஞானகலர். அவருள் பக்குவம் பெற்றவர் உண்டு என்பதும் தெரிகிறது.

## 5.14.2. இருமலத்தார் ஊழிநிலையினர் - பிரளயாகலர்

பிரளயாகலர் என்றால் கலை முதலியதத்துவக் கூட்டைப் பிரளயத்தில் நீக்கப் பெற்றவர். பிரளயம் என்பது பெரிய ஊழிக்காலத்தில் ஏற்படும் ஒடுக்கம். இவர்கள் தன்முனைப்பு வினை ஆகிய இருமலம் உடையவர்கள்.[28] முக்குண மயக்கம் அற்றவர்கள். ஆனால் வினை மலத்தால் வருவினை (ஆகாமியம்) ஏறும். சில பிறவிகளில் வீடுபேறு பெறுவர். அது வினைமலத்தைப் போக்கும் காலத்தையும் ஆற்றலையும் பொறுத்தது. இறைவன் தானே குருவாய் வந்து தோன்றுவார். தோன்றி உணர்த்துவதால் கலை நீங்கும். இது ஊழிக்காலத்தில் நிகழும். ஈண்டு கலை என்பது கட்டினைக் குறிக்கும். இறைவன் முக்கண்ணும் நான்கு தோளும் உடைய வடிவம் கொண்டு ஆட்கொள்வார்.

### 5.14.2.1. பிரளயாகலர் வகை

பிரளயம் ஐந்து வகைப்படும். (1) நித்தப் பிரளயம் (2) பிராகிருதப் பிரளயம் (3) மத்திமபிரளயம் (4)மகாப்பிரளயம் (5) பிரதமமகாப் பிரளயம். இவை நிவர்த்தி ஆதி ஐந்து கலைகளின் (சங்காரத்தை) ஒடுக்கம் குறிக்கும். இறைவன் இவர்களுக்கு

மூவகையிலும் அருள்புரிவார். இவர்களுக்கு வருவினை ஏறுவதால் ஒருசில பிறவிகளில் வீடுபேறு அடைவர். இறைவன் மான், மழு, நான்கு தோள் நீலகண்டம், முக்கண் முதலிய வடிவத்தில் வந்து அருள்புரிவார்.

### 5.14.2.2. இரு மலத்தாரில் பக்குவர்

வினை பக்குவம் பெற்றவர்கள் இறைவனின் அருள் வீழ்ச்சி (சத்திநிபாதம்) பெற்று வீடு பேறு அடைவர்.

தன் முனைப்பு, வினை ஆகிய இருமலம் உடையவர்கள் இறைவன் திருவருளை அடைகின்ற பக்குவம் பெற்றால், வினை பக்குவம் பெறும். அதனால் திருவருளும் வீடுபேறும் கிட்டும். எனவே வினைகளிலிருந்து விடுபட்டு இருவினை ஒப்பு ஏற்பட்டால் பக்குவம் பெறலாம் என்றும் பக்குவம் பெற்றவர் இறைவன் திருவருள் அடையலாம் என்பது புலனாகிறது.

### 5.14.3. மும்மலத்தார்: சகலர்

சகலம் என்றால் அனைத்தும் என்பது பொருள். சகலர் என்றால் அனைத்து மலமும் அதாவது மும்மலமும் உடையவர் எனப் பொருள்படும். கலை முதலிய தத்துவங்களோடு கூடியவர். தத்துவங்கள் (கருவிகள்) உயிரின் அறிவு, விருப்பம், செயல்களை எழுப்பும். இவர்களுக்கு எண்ணற்ற பிறவிகள் உண்டு. பிறவிதோறும் வினைபுரிவர். வினைபுரிவதால் மேன்மேலும் இறப்பு பிறப்பு உண்டாகும். இவர்களுக்கு எப்போது மலபரிபாகம், இருவினை ஒப்பு, அருள் வீழ்ச்சி நிகழ்கின்றதோ அப்போது இறைவன் அருள்புரிவான்.

வாழும் மனிதர் எல்லாம் மும்மலத்தாரே. ஒருசிலர் இருமலம், ஒருமலம் உடையவர் எனின் அவர் உலகியலிருந்து விலகி வெளியே தெரியாமல் அமைதி வாழ்வு உடையவராய் இருப்பர். மும்மலத்தார் இறைவன் திருவருள் அடைய இயலாது. அடையும் வழி என்னவென்றால் மும்மலத்தார் இருமலத்தாராயும், இருமலத்தார் ஒருமலத்தாராயும் பக்குவம் பெறவேண்டும். மாயையிலிருந்து விடுபட வேண்டும். எப்படியெனின் உடல், கருவிகள், உலகம், நுகர்பொருள் மீது பற்றுவிட்டு இவை இறைவன் திருவருள் அடைய தடை என எண்ணவேண்டும். நல்வினை பொன்விலங்கு. தீவினை இரும்பு விலங்கு. இந்த இரண்டு விலங்காகிய இருவினை புரிதலை விட்டு இருவினை ஒப்பு ஏற்படுத்த வேண்டும். மலபரிபாகம் அடைய வேண்டும். மாயையால் வினையும், வினையால் இறப்பும் பிறப்பும் உண்டாகின்றது. எனவே பிறவி வேண்டாம். இறைவனின்

சாயுச்சிய பதவியே வேண்டும் என்பார் மலபரிபாகம் அடைய வேண்டும்.

### 5.13.3.1. சகலரில் பக்குவர், பக்குவம் அற்றவர்

பக்குவர், பக்குவம் பெறாதவர் என இருபிரிவு இதிலும் உண்டு. அறியாமை உடையவர் மூவகையினரும் உண்டு. உயர்நிலை, நடுநிலை, கீழ்நிலை என மூவகைப்படுவர். இவர்கள் மும்மலமும் உடையவர். ஆகையால் தன்னுடைய அவலநிலையை அறியார்கள். அறியாமையால்தான் அவர் அவர்களுக்குத் தோன்றியதை உண்மையென நம்பி வாழ்ந்து துன்புறுகிறார்கள்.

இவர்கள் இறைவன் திருவருளை அடைய தன்நிலைமையை உணரவேண்டும். திருமூலர் இதைத்தான் 'தன்னை அறிதல்' என்றார். தன்னை அறியாதவன் தனக்கே கேடு விளைவித்துக் கொள்வான். "தன்னைத் தான் உயர்த்து வானும் தான். தன்னைத் தான் தாழ்த்து வானும் தான்" இப்படியிருக்க இறைவன் அருள்புரியவில்லையென குறை கூறுவது எங்ஙனம் பொருந்தும். தன்னை அறிந்தால், மலபரிபாகம் இருவினை ஒப்பு பெற்றால் திருவருள் அடையலாம்.

## 5.15. உயிரும் அவத்தைகளும்

உயிரின் அவத்தைகள் ஐந்து. (1) நனவு (சாக்கிரம்) (2) கனவு (சொப்பனம்) (3) உறக்கம் (சுழுத்தி) (4) பேருறக்கம் (துரியம்) (5) உயிர்ப்படங்கல் (துரியாதீதம்) இவை காரிய அவத்தை எனப்படும். தனிநிலை (கேவல அவத்தை) கலப்பு நிலை (சகல அவத்தை, தூய நிலை (சுத்த அவத்தை) ஆகிய மூன்று காரண அவத்தையாகும்.

காரண அவத்தை மூன்றிலும் காரிய அவத்தை ஐந்தும் நிகழ்வதால் காரிய அவத்தைகள் பதினைந்து ஆகும். கேவல அவத்தையும், சுத்த அவத்தையும் ஒன்றுக்கு ஒன்று முரண் ஆனவை. எனவே ஒன்றை ஒன்று பற்றாது. சகல அவத்தை இரண்டிற்கு இடையில் இருந்து இரண்டோடும் தொடர்பு பெறும். சகலத்தில் கேவலம். சகலத்தில் சகலம், சகலத்தில் சுத்தம்" எனச் சகல அவத்தை ஒன்றே மூன்று அவத்தையாக நிகழும், சகலத்தில் கேவலம், சகலத்தில் சகலம் என்னும் இரண்டும் உயிரின் கருவிகளின் கூடுதல் குறைவுகள் அளவால் நிகழும் சகலத்தில் சுத்தமும் சுத்தத்தில் சாக்கிரம் முதலியனவும் இறைவன் திருவருளால் நிகழும்.

## 5.15.1. நனவு

சாக்கிரம் - Beta. இயற்பான வாழ்க்கையில் இயல்பான நிலையில் இருப்பது. சான்றாக, உண்பது, உரையாடுவது, நடப்பது, படிப்பது போன்ற நிலையில் முழு உணர்வுடன் செயல்படுவது. இறையருளால் இன்பம் துன்பம் அறிவது நனவு. உயிர் சுழுமுனையில் இயங்கும். அறிவுக் கருவிகள் ஐந்து. அறிவு புலன் ஐந்தும். தொழில் கருவிகள் ஐந்து, தொழில் கருவிகளின் தொழில் ஐந்து, அறிவு காற்று (உயிர்க்காற்று, மலக்காற்று, தொழில் காற்று, ஒளிக்காற்று, நிரவுக் காற்று) ஐந்து, தொழில் காற்று ஐந்து (தும்மல் காற்று, விழிக் காற்று, கொட்டாவிக் காற்று, இமை காற்று, வீங்கற் காற்று) அகக் கருவிகள் நான்கு (மனம், புத்தி, சித்தம், அகங்காரம்) புருடன் ஒன்று ஆக முப்பத்தைந்து கருவிகள் தொழில்படும்.

### 5.15.1.1. நனவில் நனவு

மனத்தைத் தான் ஈடுபடும் தொழிலில் மட்டும் ஈடுபடுத்தி ஏனைய இதரத் தொழிலில் ஈடுபடுத்தாமல் முழு முயற்சியுடன் ஈடுபடல். சான்றாகப் படிக்கும் மாணவன் தன்படிப்பிலேயே கவனம் செலுத்தி பக்கத்தில் நடைபெறும் நிகழ்ச்சிகள் பக்கம் தன் மனத்தைச் செலுத்தாமல் படிப்பதும், அப்படி படிப்பதால் மறவாதிருத்தலும் ஆகும். நனவில் நனவில் இருப்பவர்களை முன்னின்று அழைத்தால்கூட அவரது செவியில் கேளாது. ஏன் எனில் மனம் நனவு நிலையில் முழு நனவாக இருப்பதால்தான். மனம் அதில் ஒன்றி விடுவதால் புலனும், பொறியும், தொழில் உறுப்புக்களும் அகக் கருவிகளும், நனவிலே நாட்டமுடன் செயல்படுகிறது. இத்தகைய நிலையில் ஈடுபடுவோர் ஈடுபடும் தொழிலில் , செயலில் முழு வெற்றி பெறுவர் என்பது திண்ணம். அறிவியல் அறிஞர்கள் தம் கண்டுபிடிப்புக்களை இத்தகைய நிலையில் எளிதாகக் கண்டுபிடிப்பர்.

### 5.15.1.2. நனவில் கனவு (சாக்கிரத்தில் சொப்பனம்)

கனவு உறக்கத்தில் வருவது. நனவில் கற்பனையாக விளங்கும். எனவே ஈடுபடும் தொழிலில் செயலில் மனம் முழுவதும் நனவு நிலையில் வைத்திருக்காமல் கற்பனையிலும் கனவிலும் செலுத்துவதால் செயல் திறம்பட அமையாது. நனவு நிலையிலிருந்து மறந்துபோய் விடும் நிலை உண்டாகும். நனவில் கனவு நிலை உடையோரால் வாழ்வில் முன்னேற முடியாது. எதையும் சாதிக்க இயலாது. மனம் அலை பாயும். ஒன்றிலும் நிலைக்காது எழுத்தாளர்கள், கவிஞர்கள் நனவில் கனவு காண்பார்கள்.

#### 5.15.1.3. நனவில் உறக்கம்

செயலில் மனத்தைச் செலுத்தாமல் முற்றிலும் வேறுபக்கம் அலைய விடுவது. இதனால் முற்றிலும் மறந்து போய்விடும். தோல்விக்கும், தாழ்விற்கும் இது காரணமாகும்.

#### 5.15.1.4. நனவில் பேருறக்கம் (சாக்கிரத்தில் துரியம்)

செயல்களை ஆழ்ந்து சிந்திக்கும் நிலை.

### 5.15.2. கனவு (சொப்பனம்)

சுழுமுனையில் நடுசக்கரத்தில் இரண்டு அங்குல பிரமாணத்திலே இருப்பது. ஐம்பொறிகளும் ஐந்தொழில் உறுப்புக்களும் கண்டத்திலே நிற்கும் நிலை கனவு.

#### 5.15.2.1. கனவில் நனவு

கனவுகண்டு எழுந்த பின்னர் கனவில் கண்டது முழுவதையும் நனவில் நடந்தது போல மறக்காமல் பிறருக்குச் சொல்லும் நிலை.

#### 5.15.2.2. கனவில் கனவு

கனவில் கண்டவற்றில் சில மட்டும் நினைவில் நிற்கும். சில மறந்து போய்விடும். அக் கருவிகள் செயல்படாமல் இருப்பதால் நினைவில் நிற்கும் ஆற்றலைப் பெறாத நிலை எனவே மறக்கும் நிலை.

#### 5.15.2.3. கனவில் உறக்கம்

கனவில் கண்டவற்றை முற்றிலும் மறந்து இருக்கும் நிலை. ஐம்பொறிகள், தொழில் பொறிகள், அகக் கருவிகள் எதுவுமே செயல்படாமையால் மறக்கும் நிலை.

#### 5.15.2.4. கனவில் பேருறக்கம்

கனவில் கண்டவற்றை எல்லாம் ஆராய்ந்து பார்த்து மகிழ்ச்சியடையாமலும், துன்பப் படாமலும் இவை யெல்லாம் மனத்தின் இயல்பென எண்ணி தெளிந்து உணர்ந்து உயிர் அறிவை விசாரித்திருக்கும் நிலை.

## 5.15.3. (உறக்கம்) சுழுத்தி

அகக் கருவிகள் உறக்கத்தோடு உயிரோடு கூடி சுவாச இருதயத்திலே நின்று கண்டவை. கேட்டவை எதுவும் பிறருக்குச் சொல்ல புலப்படாத உறக்க நிலை.

### 5.15.3.1. உறக்கத்தில் நனவு

உறங்கி எழுந்த பிறகு அந்த உறக்கத்தின் சுகம் முதலான தன்மைகள் இவ்விதமெனப் பிறருக்கு எடுத்துரைக்கும் நிலை.

### 5.15.3.2. உறக்கத்தில் கனவு

உறங்கி எழுந்த பிறகு உறக்கத்தின் தன்மை இன்னதெனத் தோன்றியும் தோன்றாமலும் இருக்கும் ஐயுறவுநிலை.

### 5.15.3.3. உறக்கத்தில் உறக்கம்

உறங்கி எழுந்த பிறகு உறக்கத்தின் சுகம் முற்றிலும் மறந்து போய் விடும் நிலை.

## 5.15.4. பேருறக்கம்

இது நிட்டை எனப்படும் நிலை. உறக்கத்தை விட்டுக் கருவி ஒன்றுடன் உயிர் கொப்பூழிலில் நிற்கும் போது (பூரகம், ரேசகம்) இடகலை, பிங்கலை மூச்சுகள் உண்டாகும். மூச்சு விடுதலும் இழுத்தலும் நடைபெறும்.

### 5.15.4.1. பேருறக்கத்தில் நனவு

நிட்டையில் இருக்கும்போது நனவு செயல்களான உலக விருத்தி உண்டாதல்.

### 5.15.4.2. பேருறக்கத்தில் கனவு

நிட்டையில் இருக்கும்போது உலக விருத்தி தோன்றியும் தோன்றாமலும் இருத்தல்.

### 5.15.4.3. பேருறக்கத்தில் உறக்கம்

நிட்டையில் இருக்கும்போது எந்த எண்ணங்களும் ஏற்படாதிருத்தல்.

### 5.15.4.4. பேருறக்கத்தில் பேருறக்கம்

மேற்கண்ட 15 நிலைகளும் (அவத்தைகளும்) இல்லாமல் அகண்ட பரிபூரணமான பரப்பிரம்மமே நான் என அறிந்து உணர்ந்து தானாகவே இருத்தல் இது எல்லாவற்றிலும் மேலான நிலை.

### 5.15.5. உயிர்ப்படங்கல் (துரியாதீதம்)

பொறிகள் பத்தும் அகக்கருவி நான்கும் பற்றற்று உயிர் தானே மூலாதாரத்திலே சென்று ஓங்க மலம், மதம், மாயை, உணர்வு எதையும் அறியாமல் நிற்கும் நிலையே உயிர்ப்பு அடங்கல் நிலை.

உயிர் ஓரிடத்து நிற்பதில்லை. அகக் கருவிகளோடு எப்போதும் கூடி நிற்பதில்லை. உயிர் நிற்குமிடத்திற்கும் அகக் கருவிகளோடு சேருவதற்கும் இணங்க அவத்தை ஏற்படுகிறது. உணர்வு வேறுபடுகிறது.

நனவு நிலையில் சுழுமுனையிலும், கனவு நிலையில் கழுத்திலும் உறக்கத்தில் இருதயத்திலும், பேருறக்கத்தில் உந்தியிலும் உயிர்ப்பு அடக்கத்தில் உந்தியின் அடிப்பகுதியில் நிலைபெறும்.

உயிர் வியாபகப் பொருள். விரிந்த பொருள். அந்த வியாபகம் முழுவதையும் தன்முனைப்பு மலம் மறைத்து நிற்றலால் தன்முனைப்பிற்குப் பகையாகிய கருவிகள் எவ்விடத்தில் செயல்படுகின்றதோ அவ்விடத்தில் மட்டும் உயிரின் இருப்பிடமாகும். அவ்விதமும் அவத்தைகளுக்கு சில இடத்தில் உயிர் இருப்பதாகக் கூறப்படுகிறது. பாசி விலகிய இடத்தில் நீர் தெரிவது போல மலம் நீங்கிய விடத்த உயிர் நிலை பெறும்.

# 6. முப்பொருளில் ஒன்று தளை

உள்பொருள் மூன்று. அவைகளில் ஒன்று தளை. தளையை, பாசம், மலம், அழுக்கு கட்டு எனவும் கூறப்பெறும் *பாசம்* 'பச்' என்னும் முதனிலையில் பிறந்தது. கட்டுவதற்குப் பயன்படும் கயிற்றினை உணர்த்தும். ஆடு, மாடு போன்ற விலங்குகளை ஓடிவிடாது தடுத்து நிறுத்திட கட்டும் கயிறு போன்றது. உயிர்களைக் கட்டும் அறியாமை பாசம் எனப்படும். உயிரைக் கட்டுவதால் *கட்டு* எனவும் உயிரைக் குற்றப்படுத்துவதால் *மலம்* எனவும், *அழுக்கு* எனவும் கூறப்பெறும். உயிர்கள் இறைவனை அடைவதற்குத் தடையாக உள்ளதால் *தடை* எனவும், இறைவனை அடைய முடியாமல் தளைக்கப் பட்டிருப்பதால் தளை எனவும் கூறப்பெறும். *விலங்கு* கை கால்களுக்குப் பூட்டபெறும் கருவி. அது போன்றதே *தளை* தன்முனைப்பு (ஆணவம்), படைப்புத் தோற்றுவாய் (மாயை) வினை (கன்மம்) ஆகிய மூன்றும் *மும்மலங்கள்.* உடல், கருவி, உலகம், நுகர்ப் பொருள்கள் மீது உயிர்கொண்ட பற்றினைப் பாசம் எனவும் கூறப்பெறும்.

மூன்று தளையும் ஒன்றிற்கு ஒன்று ஒருகால் உதவும். மற்றொரு கால் தடையாகவும் இருக்கும். இந்த தடை அறிவு தடை எனவும், செயல் தடை எனவும் கூறுவர்.

வள்ளல்பெருமான் இராமலிங்கசாமி அவர்கள் தன்முனைப்பை இயற்கை என்றும், படைப்பு தோற்றுவாயை இயற்கையில் செயற்கை என்றும், வினையைச் செயற்கை என்றும் கூறுவார். ஆழ்ந்து நோக்கின் பொருள் விளங்கும் மூன்று தளையும் உயிருடன் கூட்டுக் கொண்டுள்ளது.

## 6.1. கூட்டினை மூன்று என்பர். அவைகளாவன:

### 6.1.1. எதிர் கூட்டுறவு (பிரதிபந்தம்)

தன்முனைப்பு உண்டாக்கும் அறியாமை உயிரின் அறிவிற்கு எதிரானது. உயிரை இறைவனிடம் சேராமல் அறியாமை தடை செய்து நிற்பதால் எதிர் கூட்டுறவு என்பர். எதிர் கூட்டுறவுப் பொருள் தன்முனைப்பு.

### 6.1.2. உடன் கூட்டுறவு

உடன் கூட்டுறவுப் பொருள் வினை. வினையானது தடையின்றி உயிருடன் தொடர்ந்து வருவது. உயிர் இறைவன்

திருவருள் அடையவிடாமல் தடுப்பது, புலன் நுகர்வை நோக்கி செலுத்துவது. வினை உயிருடன் தொடர்ந்து வருவதால் உடன்கூட்டுறவு எனப்படும்.

### 6.1.3. தொடர் கூட்டுறவு

தொடர் கூட்டுறவு உடையது மாயை. படைப்பு தோற்றுவாய் உயிரின் அனைத்தையும் பரவி நிற்கும் இயல்பினை வரம்பிற்குள் உட்படுத்துகின்றது. தன்முனைப்பு அறிவை மறைக்கும். படைப்பு தோற்றுவாய் உயிரின் அறிவை மயக்காது.

## 6.2. தளையின் காரணிகள்

தளையின் காரணிகள் மூன்று[1] என்றும், பிரிவாக ஐந்தும் என்றும் கூறுவர். மூன்று எனின் தன்முனைப்பு, படைப்புத் தோற்றுவாய், வினை எனப்படும். ஐந்து[2] எனின் தன்முனைப்பு, வினை, தூய படைப்பு தோற்றுவாய் தூய்மையிலா படைப்பு தோற்றுவாய், மறைத்தல் (திரோதாயி) என ஐந்தாகும்.

### 6.2.1. தன்முனைப்பு

அறியாமை மிகும்படி உயிர்கள் தோறும் இயல்பாய் அறிவை மறைத்து நிற்கும்.

### 6.2.2. மறைப்பாற்றல் (திரோதாயி)

தன்முனைப்பு மலத்தைப் பொருந்தி நின்று பெரிதும் பக்குவம் படுத்துவது.

### 6.2.3. வினை

உயிர்கள்தோறும் செறிந்திருப்பது. நல்வினை, தீவினை படைப்பு தோற்றுவாய் (மாயை), தூய படைப்பு தோற்றுவாய் (மாயேயம்) வேறாக வைத்து எண்ணப்பட்டதற்குக் காரணம் என்னவெனில் உயிரின் அறிவோடுசேர்ந்து அவ்வறிவை மாயை மயக்கும். மாயேயம் அந்த மயக்கத்திற்கு முன்னிலை பொருளாய் இருக்கும்.

சிவபெருமான் முப்புரம் எரித்தார் என்பர். முப்புரம் என்பது மூன்று தளைகள்.[1]

சுத்தாத்துவாயிருப்போர் வைந்தவம் திரோதம் என்று இரண்டு பாசங்கள் உடையர். மிச்சிராத்துவாயிருப்போர் இந்த இரண்டு பாசத்துடனே ஆணவமும் கன்மமுமாக நான்கு பாசமுடையோர் அசுத்தாத்துவாயிருப்போர் அந்த நான்குடனே மாயேயமும் கூடி ஐவகைப் பாசமும் உடையார். விந்து-வைந்தவம் எனத்திரிந்தது.

ஐம்மலம் உடைய உயிர்கள் தம்மைத் தாமே மதிப்பவர். ஐம்மலம் பாசத்தால் சுண்டுண்டு கொடிய வினைகளைத் துய்ப்பார்கள். இவர்கள் வீடுபேறு விரும்பார். சொர்க்க நெறியை விரும்பி பெறுவர். இவர்கள் இறைவனை அறியாவிட்டாலும் இறைவன் இவர்களை அறிவார்.

## 6.3. ஐம்மலம் பற்றும் முறை

கேவல துரியாதீதத்தில் தன்முனைப்பு நீங்காது நிற்கும். துரியத்தில் மாயை பொருந்தும். கேவல சுழுத்தியில் பொய்யான வினைகள் பிணித்து நிற்கும். கேவல நனவில் மாயேயங்கள் பொருந்தும். காணப்படும் நனவில் திரோதாயி பற்றும்.

## 6.4. தளை தோற்றமில் காலத்தது

முப்பொருளும் தோற்றமில் காலத்தது என்பதால் தளையும் தோற்றமில் காலத்தது.[1] எனவே தோற்றமும் ஒடுக்கமும் இதற்குக் கிடையாது. ஆனால் அண்டத்திற்கும் பிண்டத்திற்கும் (உலகத்திற்கும் உடலுக்கும், தோற்றமும் ஒடுக்கமும் உண்டு). பரிபாடல் இரண்டாம் பாடல் கருத்து சான்றாக அமைகிறது. ஒன்றுக்கு ஒன்று மாறிவரும் இயல்புடைய ஞாயிறும் திங்களும் கெட்டு விண்ணுலகமும் வெறும் பாழாகிவிடப் பின்னர் வானமும் கெட்டு இல்லையாகச் சிதைந்து ஒடுங்கிய ஊழிக்காலங்கள் பற்பல முறையாகக் கழிந்தன. அவ்வூழிகளின் பின்னர் அப்பாழினின்றும் வானம் தோன்றிய முதல் பூதத்தின் ஊழியும், அவ்வானத்தினின்றும் காற்று தோன்றி கிளர்ந்து வீசும் இரண்டாவது பூதத்தின் ஊழிலும், அந்தக் காற்றினின்றும் தீத்தோன்றி சுடர் வீசிய மூன்றாம் பூதத்தின் ஊழியும், அந்தத் தீயினின்றும் பனியும் மழையும் தோன்றிப் பெய்த நான்காம் பூதத்தின் ஊழிலும் ஒடுங்கும் காலத்தே நீரினுள் மூழ்கி ஒடுங்கிய பெரிய நிலமாகிய ஐந்தாம்பூதம் மீண்டும் அவ்வெள்ளத்தின் ஊடே பீடுபெற்று திரண்டு செறிந்த ஐந்தாம் ஊழியும் பற்பல

எண்ணிறந்தனவாகக் கழிந்த பின்னர், இந்நிலத்தின் கண்ணே உயிர்கள் தோன்றும் பொருட்டு. . . . ."[2]

## 6.5. தளை சிறுபொருள்

இறைவன் பெரும்பொருள். தன்னை அடக்கி நிற்கும் பொருள் இன்றி தானே எல்லாப் பொருள்களையும் தன்னுள் அடக்கி நிற்கும். எனவே இறைவன் பெரும்பொருள். உயிர் இடைப் பொருள். இறைவனுக்கும் தளைக்கும் இடையிலுள்ள பொருள். உயிர்தளையிலிருந்து நீங்கின் இறைவனைப் பற்றும். இறையை உணராது இறையிலிருந்து நீங்கின் தளையைப் பற்றும். தளை சிறுபொருள். தளை சிறுமைபொருள். இது தன்னுள் எதையும் அடக்காது. இது ஒன்றில் அடங்கியிருப்பது. ஆனால் உயிரிடம் அடங்கி இருக்க வேண்டிய தளையிடம் பகுத்தறிவு பேசும் மனிதர்கள் அடங்கி நடக்கின்றனர். எவ்வாறெனின் தளையின் ஒரு பகுதி தன்முனைப்பு. தன்முனைப்பு மலத்தின் வயப்பட்டு, தானே மேலானவன் என்றும், தனக்கு நிகர் எவருமில்லையென்றும், எல்லாப் பொருளும் என்னுடையது என்றும், தன்முனைப்பால் அறியாமை வயப்பட்டு, பகுத்தறிவால் நல்லது தீயது அறியாமல் தீயனசெய்து தீவினையின் பயனாகத் துன்புறுக்கின்றனர்.

## நூன்முகம்: நூல்சான்று

1. "நிலத்து இயல்பான் நீர்திரிந்து அற்றாகும் மாந்தர்க்கு
இனத்து இயல்பது ஆகும் அறிவு" திருக்குறள் 452..
2. "கற்றதனால் ஆய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழார் எனின்" திருக்குறள் 2.
3. "கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக" திருக்குறள் 391.
4. "முற்றும் உணர்த்தவர் இல்லை முழுவதூஉம்
கற்றனம் என்று களியற்க" நீதிநெறிவிளக்கம் 4
5. "ஒன்று என்றது ஒன்றேகாண் ஒன்றே பதிபசுவாம்
ஒன்றுஎன்ற நீ பாசத்தோடு உளைகாண் ஒன்று இன்றால்
அக்கரங்கள் இன்றாம் அகர உயிர் இன்றேல்
இக்கிரமத்து என்னும் இருக்கு" சிவஞானபோதம் 2:1.
6. "பல கலைஆகமவேதம் யானவயினும் கருத்துப்
பதிபசு பாசம் தெரித்தல்; பதிபரனே அதுதான்" சிவப்பிரகாசம்.

7. "பிறழா நிலைமைப் பெரும்பெயர் ஞானக்
கறையறு பாதம் முறையுறக் கழறில்
பசுபா சத்தோடு பதியாய், பெற்றி" ஞானாமிர்தம்.
8. "எய்து பொருளொரு மூன்றும் பதிபசுபாச மென்றே
மெய்தந்த ஆகமங் கூறும் இவற்றினுள்" தத்துவவிளக்கம் 10.
9. "ஆசை படப்பட ஆய்வருந் துன்பம்
ஆசை விடவிட ஆனந்த மாமே" திருமந்திரம் 2615.

10. "ஏகன் அநேகன் இருள் கருமம் மாயைஇரண்டு
ஆகஇவை ஆறு ஆதிஇல்" சிவப்பிரகாசம்.
11. "சிவஞான போதம் முதல் சூத்திரம் இறை உண்மையும், மூன்றாம் சூத்திரம் உயிர் உண்மையும், ஐந்தாம் சூத்திரம் தளை இலக்கணம்" கூறுகிறது.
12. "ஒன்றென்ற தொன்றே கா ணொன்றே பதிபசுவா
மொன்றென்ற நீபாசத் தோடுளைகா . . . ." சிவஞானபோதம்
13. "பதி பசுவும் பாசமெனப் பகர்ந்த மூன்றின்"சிவஞானபோதம்.
14. "பாசத்தைப் பசுக்கள் விட்டு பதியினை யடையமுத்தி
சி.சித்தியார் 25.
15. "பதிபசுபாசந் தெரித்தல் பதிபாரமே யதுதான் ..."
சிவப்பிரகாசம்.
16. "பார் கொளும் பதிபசு பாசந் தன்மையே" சிவப்பிரகாசம்.
17. "பதி பசு பாச விதிமுறை கிளக்கும் சங்கற்ப நிராகரணம்.
18. "பதி பசு பாச விதிமுறை கிளக்கும்" "

19. "நாசமில் பதிபசுபாச மென்றுரைத்த . . ." "
20. "பாசமும் பசுவும் ஈசனு மென்றிம்" "
21. "பகர்வது பதி பசு பாசத்தவர்க்கே" "
22. "பதி பாசத்தோடு பதியாய் பெற்றி" ஞானாமிர்தம்.
23. "செம்மையினன் பதி பாசம் விளக்கி னோ னாம்
சிவனே பதி யென்றல் தெளிவு காணே" சிவ.விகாசம்.
24. "அப்பசு பாசம் வேறாக நின்றவன் . . ." "
25. "இயங்கியற் பொருளும் நிலையியற் பொருளும்
படைத்துடன் விராய்ப் பசு பாசமாற்றிய"
சித்தாந்தப்பிரகாசிகை.
26. "சைவத்தில் எல்லாப் பொருளும் அனாதித்தகைமையென்று"
சித்தாந்தநிச்சயம்.

27. "எய்து பொருளொடு மூன்றும் பதிபசு பாசமென்றே"
தத்துவவிளக்கம்.

28. "நேயத்தை ஞானத்தை ஞாதுரு வத்தினை
மாயத்தை மாமாயை தன்னில் வரும்பரை
யாயத்தை யச்சிவன் தன்னை யகோசர
வியத்தை முற்றும் விளக்கிட் டேனே திருமந்திரம் 90.

29. பதி பசு பாசம் எனப் பகர் மூன்றிற் . . ." திருமந்திரம்

30. "பாசம் பசுவான தாகும்இச் சாலோகம் . . ." "

31. "அறிவறி வென்ற அறிவும் அனாதி
அறிவுக் கறிவாம் பதியும் அனாதி
அறிவினைக் கட்டிய பாசம் அனாதி" "

32. நாடும் பதியுடன் நற் பசு பாசமாம்" "

33. "ஆய பதிதான் அருட்சிவ லிங்கமாம்
ஆய பசுவும் அடலே றென நிற்கும்" "

34. "பதி பசு பாசம் பயில நிலாவே" "

35. "பதியும பசு வொடு பாசமும் மேலைக்" "

36. "பரம்பரமான பதி பாசம் பற்றாப்" "

37. "பசு, பாசம் பதி என்னும் முப்பொருள் ஞானத்தைச்
சிந்திப் பதற்குத் துணையாவது . . ." "
- பசுபடலம் ஞானபாதம் 13. கிரணாகமம்.

## 4. முப்பொருளில் ஒன்று இறை 1-4
## அடிக்குறிப்புக்கள்

1. "உள்ளத்தும் உள்ளன் புறத்துள்ளன் என்பவர்க்
குள்ளத்தும் உள்ளன் புறத்துள்ளன் எம்மிறை
உள்ளத்தும் இல்லை புறத்தில்லை என்பவர்க்
குள்ளத்தும் இல்லை புறத்தில்லை தானே" திருமந்திரம் 10.

2. "கோளில் பொறியிற் குணமிலமே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை" திருக்குறள் 8.

3. "பரன்உபா தாளம் என்னப் பட்டஅவ் விந்துவின் கண்
புரைதவிர் கலைசி வாதி புவனம்அப் புவனம் வாழிநர்
கருவுடல் வருண மாதி காருகா திகள் வந்தெய்தல்
உரவிய பொதுச்சிறப்பாம் உடம்புயிர்க் குறல்ப டைப்பாம்"
சிவஞானபிரகாசம் 8.

4. "பிரமரரி யுருத்திர ரோடீசர் நான்கும்
பெரு குறதில் நிலை மருவும் உருவ மாகும்
பரவரிய புந்துவுடன் நாதம் மீதிற்
பரைபரம சிவமெனவே பகர்ந்த நான்கும்

அருவநிலை யாருமுய கூட்டந் தானே
அருணிலவு லிங்க சதாசிவம் தாகும்
உருவ மதிற் சிருட்டி திதிஉபயந் தன்னில்
ஒடுக்கிடுவ னருபத்த லனைத்தும் ஏகன்"
சிவஞானதீபம் 27.

## 5. முப்பொருளில் ஒன்று உயிர் 5-28

5. "புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல் விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனித ராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுரலாகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாவு நின்றஇத் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்"
திருவாசகம்

6. "அன்னியனிவ் வுடம்புதனக் கழிவிலன்சிற் றறிவாளன்
பின்னைமல மொடுபுணர்வோன் பெரியவியா பகனசடன்
துன்னுறுதன் வினை நுகர்வோன் சொல்லியவவ்
வினைமுதல்வன்
தன்னைநிகர் வுறுமிறைவன் றடையுடையன் பகவென் பான்
தசமணி மாலை"

7. "ஆசில் புருடாதி யான்மா வீராறே" திருமந்திரம் 2191.
8. "மாயையில் வந்தபுருடன் துரியத்தில்" திருமந்திரம் 2198.
9. "உடம்புக்கு நாலுக்கும் உயிராகிய சீவன்" திருமந்திரம் 2128.
10. "பொய் கண்டி லாத புருடனித யஞ்சுழுனை"
திருமந்திரம் 2142.
11. "புருடானாகிய உயிர்" திருமந்திரம் 2172.
12. "நாலா றுடன்புருட னற்றத் தவமுடன் . . ." திருமந்திரம் 2172.
13. "அதீதத் துரியத் தறிவரை மான்மா . . ." திருமந்திரம் 2199.
14. "குணம்நாடிக் குற்றமும் நாடி அவற்றுள்
மிகைநாடி மிக்க கொளல்" திருக்குறள் 504
15. "பேராண்மை என்ப தறுகண் ஒன்றுற்றங்கால்
ஊராண்மை மற்றதன் எஃகு" திருக்குறள் 773.
16. "விழுப்புண் படாதநாள் எல்லாம் வழுக்கினுள்
வைக்கும்தன் நாளை எடுத்து" திருக்குறள் 776.
17. "அறிந்திடும் ஆன் மாவொன்றை ஒன்றினால் அறித லானும்
அறிந்தவை மறத்தலானும் அறிவிக்க அறித லானும்

அறிந்திடும் தன்னை யுந்தான் அறியாமை யானும்
அறிந்திடும் அறிவின் அன்றாம் அறிவிக்க அறிவ னன்றே"
சிவஞானசித்தியார்.

18. "பேரறிவே யீசனுக்குப் பேராத சிற்றறிவு
சாரும் உயிர்க்குத் தருமலத்து - கோர் அறிவும்
இன்றாம் இவையே யியல் பாங் குணிகுணங்கள்
ஒன்றாம் பிரிப்பதல வோர்" அனுபோக வெண்பா 101.

19. "மதியோர் பசு மூவகை யென மதிப்பர்..."
"பன்னில் கேவலன் சகலன் இன்னியல்" ஞானாமிர்தம்

20. "ஓங்கி வரும் பல உயிர்கள் மூன்று அவத்தைப்பற்றி
உற்றிடும் கேவலசகல சுத்தம் என உணர்க்..."சிவ.விகாசம் 33.

21 "தனு கரண புவன போகங்கள் மாயை
தாமருவி வினை நுகர்தல் சகல மாகும்" சிவஞானதீபம் 67.

22. "புனிதருள் ஆல் அமலன் கமல பாதம்
பொருந்துமது சுத்தமெனப் புகழும் நூலே"சிவஞானதீபம் 67.

23. "மூன்று திறத்து உள்ளாரும் மூலமலத்து உள்ளார்கள்"
திருவருட்பயன்.

24. "மூவகை ஆர் உயிர் வர்க்கம் ..." சிவப்பிரகாசம்.

25. "உரைதரும்இப் பசுவர்க்கம் உணரின் மூன்றாம்"
சிவஞானசித்தியார்.

26. "மூன்றுதிறத் தார்க்குமலம் மூன்றிரண்டென்றால் மொழிந்தாய்"
சதமணிக்கோவை 37.

27. "சாற்றுமுயிர் விஞ்ஞான கலர் பிரள
யாகலரே சகலர் என்றா ..." சிவப்பிரகாசவிகாசம்

28. "ஆணவ மாகும் விஞ்ஞான கலருக்குப்
பேணிய மாயை பிரளயாகலருக்கே. . ." திருமந்திரம் 2241.

## 6. தளை (6.2)

1. "முப்பரஞ் செற்றனன் என்பர்கள் மூடர்கள்
முப்புர வாவது மும்மல காரியம்
அப்புரம் எய்தமை யாரறி வாரோ" திருமந்திரம் 343.
"ஆணவ மாயையுங் கன்மமும் மாமலங்
காண முளைக்குத் தவிடுமி யான்மாவுந் . ."
திருமந்திரம் 2192

"மத்தது மும்மலம் வாட்டுகை மாட்டாதார்
சத்தத் தமிழ்ந்து சகலத்து ளாயே" திருமந்திரம் 496.
"சகல அவத்தையிற் சார்ந்தோர் சகலர்
புகலு மலமூ வகையும் புணர்ந்தோர்" திருமந்திரம் 2230.
"பூணுஞ் சகலர்முப் பாசமுப் புக்கோரே" திருமந்திரம் 2241.
"மும்மலம்கூடி முயங்கி மயங்குவோர்" திருமந்திரம் 2244.
"பாசங்கள் மூன்று வைதாம்; பொதிதரும்
ஆணவம் போகஞ் செய்கன்மமும் மாயையுமாம்"
தத்துவவிளக்கம் 19.

"சாயா மும் மலச் சகலரே முய்ய
எம்முருக் கொண்டு மைம்மொடு பயின்றும்
மும்மலக் கிழங்கை முதலொடு மகிழ்ந்து"
மும்மணிக்கோவை 26.
"ஆணவத்தன்றே பட்டாய் அடுத்துறு மாயை பெட்டாய்
பூணுறு வினைக் கோட்பட்டாய் போக்கொடு
வரவும் பட்டாய்" தணிகைப்புராணம். நந்தி 139.
"திரிமலமலமும் அகல உயிர் அருள்சேர் முத்தி
திகழ் முத்தி இதுமுத்தித் திறத்தது ஆமே"சிவப்பிரகாசம் 50.
"மன்னியிடும்; மலம்மாயை கன்மங்கள் மாறி . ." சிவப். 36.
"உயிருனுக் குவமை செம் பாங்
களிம்பிருள மலமென றோதும்
செயிர்தரு தூற்றங் கன்மஞ்
சிவபாடல் மாயை யாரு . . வீராகமம் 91
". . . . . . . . . . . . திரிமலத்தார்
ஒன்றாக உள்ளார் உயர்மருதச் சம்பந் . ." வினாவெண்பா 9
"திரிமலத்தார் ஒன்று அதனில் சென்றார்கள் அன்று
ஒரு மலத்தா ராயும் உளர்" திருவருட்பயன் 12.
"எம்மலங்களுக்கு மேலா யிருக்குமிம் மலத்தை நீத்தார்
மும்மல அணுக்க ளாகார் முத்தராய்ப் பரமா வாரே"
பரபூரணாந்த போதம், பா.76.
"முன்னின்று மும்மலதிர்த் தாட்கொள்கை - அன்னவனுக்கு
ஆதி குணம் ஆதலினால்" போற்றிப் பஃறொடை, வரி.65,66.

"மும்மல மூன்றுமுதிக்கு முன்னமே முறைமையறி
முறையுமாணவமாய்கை மோக மதாகிய காமியம்"
ஞானவெட்டியான் 167.

"மும்மலத்தின் எனுமாட்டை முறுக்கிக்கட்டு கோனே"
சிவபோகசாரம்.

**தளைகள் ஐந்து**

"சிவமாகி ஐவகைத் திண்மலஞ்செற் றோர்" திருமந்திரம் 497.
"மன்னும் மலம் ஐந்தும் மாற்றும் வகையோரான்" " 1689
"தூவ மா மலமைந்து மாவ தறியா" " 2021
"ஆணவ மாதி மலமைந் தலரேனுக்" " 2183
"ஒத்துறு பாச மலமைந்தோ டாறாது" " 2211
"அனாதியில் வந்த மலங்கள் ஐந்தால் ஆட்டி" " 2236
"ஐம்மலத்தாரு மதித்த சகலத்தார்
ஐம்மலத் தாரு மருவினைப் பாசத்தார்
ஐம்மலத் தார் சுவர்க்கந் நெறி யாள்பவர்
ஐம்மலத் தாரர னார்க்கறி வோரே" " 2257
"மோகம்மிக உயிர்கள் தொறும் உடனாய் நிற்கும்
மூல ஆணவம் ஒன்று் முயங்கி நின்று
பாகம் மிகஉரவு திரோதாயி ஒன்று
பகர் மாயை ஒன்று் பகர் கன்மம் ஒன்று;
தேகம் உறு கரணமொடு புவனப் போகச்
செயல் ஆரும் மாமாயைத் திரட்சி ஒன்று என்று
ஆகமலம் ஐந்து என்பர்- அறிந்துள்ளோரே" சிவப். 32.
"ஆணவம் நற் றிரோதாயி மாயேயம் மாயை
அரியயிரு வினை கன்மம் அம்மலமைந் தவற்றின்"
சிவஞானதீபம் 40.
"பாசமுறை ஐவகையும் பகுத்துரைக்க"
"கட்டுரைக்கப் பட்டனவைந் தாவதென்ன
ஏலமுனம் உரைசெய் த திரோதசத்தி
இலக்கணம்ஆ கமம் உரைத்தாங் கினியு ரைப்பாம்"
சிவப்பிரகாச விகாசம்.
"படர்வுறு பாசம் நான்காம் பரசத்தியாகிப் பாச
தொடர்தனி னுப சரித்து மலமெனச் சொல்லும் வண்ணம்
அடைவுறு திரோத சத்தி அலாவிடத் தென்று கொள்ளே"
சிந்தாந்த பிரகாசிகை. பந்தப்பிரகரணம்.

## 6.4. தளை தோற்றமில் காலத்தது

"அறி வினைக் கட்டிய பாசம் அனாதி" திருமந்திரம் 2405.
"பதியினைப் போற் பசு பாசம் அனாதி" திருமந்திரம் 115.
"ஏகன் அநேகன் இருள்கருமம் மாயை இரண்டு
ஆக இவை ஆறு ஆதியில்" திருவருட்பயன்.

"முப்பொருட்கும் இன்றா மொழியுங்கால் தோற்றம்பின்
தப்பறவே நின்று தனிக்குமால். . ."அனுபோக வெண்பா, 48.
"உயிருறான் மும்முதலும் அநாதியென உணர்ரே"
சிவஞானதீபம் 101..

2. "தொன் முறை இயற்கையின் மதியொ . . .
. . . . . . . . . . . . . . . . மரபிற்றாக
பசும்பொ லுலமே மண்ணும் பாழ்பட
விசும்பில் ஊழி ஊழூழ் செல்லக்
கருவளர் வானத்திசையில் தோன்றி
உருவறி வாரா ஒன்றன் ஊழியும்
செந்தீச் சுடறிய ஊழியும் பனியொடு
தண் பெயல் தலைஇய ஊழியும் அளவயிற்
நுண்முறை வெள்ள மூழ்கி ஆர்தருபு
மீண்டும் பீடுயர் பிண்டி அவற்றிற்கும்
உள்ளீடாகிய இருநிலத் தூழியும்
நெய்தலும் குவளையும் ஆம்பலும் சங்கமும்
மையில் கமலமும் வெள்ளமு நுதலிய
செய்குறி யீட்டால் கழிப்பிய வழிமுறை . . ."
பரிபாடல் இரண்டாம் பாடல்.

# 7. தன்முனைப்பு - ஆணவம் : செருக்கு, அகங்காரம்

தளைக்காரணிகளில் முதன்மையானது தன்முனைப்பு. இது உயிரோடு கூடியது. இது தோன்றாது, எனவே அழியாதது. அதுபோன்று உயிரைவிட்டு என்றும் நீங்காதது. உலகம் ஒடுங்கும் (சர்வ சங்கார காலம்) காலத்தும் உயிரை விட்டு நீங்காதது. உயிர் உள்ளளவும் எண்ணற்ற இடையூறுகளைத் தோற்றுவித்துக் கொண்டே இருக்கும். இறைவன் திருவருளால் வறுத்தவித்து போலாகி விடும். வறுத்த வித்தானது முளைக்கும் ஆற்றலை இழந்து விடுவது போல தன் முனைப்பு செயல்படும் ஆற்றலை இழந்து விடும். எனவே தளை இருக்கும். ஆனால் ஆற்றல் இருக்காது. இதனைத் தோற்றமில் காலத்தது என்பர்.[1]

## 7.1. தன்முனைப்பு மலம் இடையில் வரவில்லை

உயிரும் தோற்றமில் காலத்தது. உயிரோடு கூடிய தன்முனைப்பும் உயிரோடு கூடியது. ஆகையால் தோற்றமில் காலத்தது என்பதால் இடையில் வந்து சேர்ந்தது அல்ல. இடையில் உயிருடன் வந்து சேர்ந்தது எனின் அதற்குரிய காரணம் கூற வேண்டும் (காரண

காரிய தத்துவத்தின்படி) இடையில் வந்து சேர்ந்திருக்கும். ஆனால் சேர்வதற்கு முன் உயிர் தூய்மையாய் இருந்திருக்க வேண்டும். காரணமின்றி உயிருடன் தன்முனைப்பு சேர்ந்து இருக்குமானால் அது போன்றே எக்காரணமுமின்றி நீங்கவும் கூடும். நீங்கினால் மீண்டும் கூடவும் கூடும். உலகம் போல் தோற்றமும் ஒடுக்கவும் இருத்தல் வேண்டும். அப்படி இல்லை. எனவே தன்முனைப்பு இடையில் வந்தது அல்ல. உயிருக்கு முதல் பிறப்பு நிகழ்வதற்கு முன்பே உயிரின் அறிவு, விருப்பம், செயல்களை எல்லாம் மறைத்து நிற்கிறது.

## 7.2. தன் முனைப்பு அறிவற்றது

முப்பொருள்களில் அறிவு அற்றது தளை. தளையில் ஒன்று தன்முனைப்பு. எனவே தன்முனைப்பு அறிவற்றது. அதனால் இறைவனை அறிந்து அனுபவிக்க இயலாது. இது அசத்து என வினாவெண்பா கூறுகிறது.[2] தன்முனைப்பிற்கு அறிவு சொல்லவும் இயலாது. சடசக்திகள் தமக்குப் பகையாகிய சத்தியால் மெலிவுற்று அடங்குதல் இயல்பு. தீ பொருள்களை எரிக்கும். தீயின் பகை நீர். நீர் தீயை அணைத்து விடும். அதுபோல தன்முனைப்பின் ஆற்றல்களை உயிரால் அழிக்க முடியும். அப்படி அழிக்க வேண்டுமாயின் உயிர் மலபரிபாகம் உற்று இறைவன் திருவருளை அடையவேண்டும். உயிருடன் என்றும் உள்ளது. அதனால் தன் முனைப்பு எப்படி அழியும் என்றால் அழித்தல் என்பது இங்கு ஆற்றலை அழித்தல் எனப்படும். இறைவன் திருவருள் தன்முனைப்பின் ஆற்றலை அழிக்கவல்லது.

## 7.3. தன்முனைப்பின் இயல்பு

தன்முனைப்பு அறியாமையைத் தரவல்லது. உயிர் தனித்து இருக்கும் போது பேரறியாமையைத் தரும்; மாயையோடு கூடிய போது ஓரளவு அறியாமையைத் தரும். ஞாயிற்று ஒளியில் இருள் இருக்காது. இறைவன் திருவருள் முன் தன்முனைப்பில் ஆற்றல் சிறிதும் இருக்காது. உயிருக்கு அறியாமையைத் தருவதுடனில்லாது இறப்பையும் பிறப்பையும் தரும். ஆயினும் உயிருக்குத் தன்னைக் காட்டாது. இதனைத் திருவருட் பயன் ஆசிரியர் கணவர்க்குத் தோன்றாத கற்பு[3] என்கிறார். கணவனைத் தன் முனைப்பாகவும், மனைவியின் கற்பைத் தன்முனைப்பின் ஆற்றலாகவும் உவமிக்கிறார். இதன் பொது இயல்பு : உயிர்கள் சகல நிலையில் நிற்கும் கருவிகளோடு கூடி ஐந்து அவத்தைபடுவதாகிய மயக்கவுணர்வைத் தோற்றுவிக்கும். தனி இயல்பு : உயிருக்கு அறியாமையைத் தருவது. வினையும், மாயையும் அறிவை மறைப்பன. தன்முனைப்பு உயிர்களைத் தன்வயப்படுத்தும் செயல் செய்யாதபடி தடை செய்யும்.

தன்னெறியிலேயே விருப்பத்தை மிகும்படி செய்யும். தன்னையும் காட்டாது. இறைவனையும் காட்டாது.

உயிர்க்கு முதல் குற்றம் தன் முனைப்பே. இதனால் உயிர்கள் உலகப்பயனை விரும்பும். அது நல்லனவும் செய்யும். தீயனவும் செய்யும். இதனால் உயிருக்கு நல்வினை, தீவினை ஆகிய இருவினையின் பயன் கிட்டும். இன்பம் துன்பம் வரும்.

உலக இயல்பு ஆசைப்பட்டவர்களையே ஆசைப்பட செய்வது. உற்றவர்களையே உறுவதும் இயல்பு. தளையுடையவர்களே தன் முனைப்பு பற்றுமே அன்றி வீடுபேறு பெற்றவர்களைப் பற்றாது.[4] தானே இயங்கும் தன்மையில்லாத சடப்பொருள்கள் தம்மைப் பிடித்தவர்களே பிடிக்கும். விட்டவர்களை விட்டு விடும். அதுபோல தொட்டவர்களைத் தொடும். தாமே வந்து கட்டிப் பிடிக்காது. மண் மரம் முதலான அறிவற்ற பொருள்கள் தம்மைப் பற்றியவர்களைத் தாமும் பற்றும், தொட்டவர்களைத் தொடும். தானாக வந்து பற்றாது.[5] உயிர் இறைவனை அறியாமைக்குத் தன்முனைப்பே காரணம்.[6]

உலகத்திலுள்ள பலவகைப்பட்ட பொருள்களும் அவற்றின் தன்மை தோன்றாமல், ஒருவகைப் பொருளாக மறைத்துத் தோற்றுவிக்கும் பொருள் இருள் உருவான பொருள் அன்றி வேறு பொருள் இல்லை. இருள் மிகுந்த இரவில், வழியில் சுவர் இருந்தால் அது சுவராகக் கண்ணுக்குத் தென்படாது. சுவரை மறைப்பது புற இருள். அது போலவே இறைவனை அறியமுடியாமல் தடுக்கிறது. தன்முனைப்பால் உயிர் ஒன்றையும் அறியாது. உடலும் தானாக ஒரு காலமும் ஒன்றையும் அறிய மாட்டா. இறைவன் ஆசிரியராக வந்து பக்குவம் உடையவர்க்கு உணர்த்தினால், உணர்த்தப்பட்டவர் உயிர், அறிவின் முன் நன்கு தோன்றும். அப்போது தன்முனைப்பின் ஆற்றல் அழிந்து விடும். அது வசப்பட்டவர்களேயே வசப்படுத்தும். இறைவனால் காணப்பட்டவர்களை வசப்படுத்தாது.[7]

தன்முனைப்பின் ஆற்றல் தானாகக் குறையாது. இறை திருவருளே குறைக்கும். எனவே மனிதர்கள் வாழ்வில் நலம்பெற துன்பங்களிலிருந்தும் இறப்பு பிறப்புக்களிடமிருந்தும் விடுபட திருவருள் பெறவேண்டும்.

## 7.4. தன்முனைப்பின் குணம்

தன்முனைப்பு உயிர்களுக்குக் குற்றமாக இருக்குமேயன்றி குணமாய் இருக்காது. இது செயல்தன்மையைக் குறிக்கும். அவை :

(1) தன்னைத்தான் மதித்தல், (2) தான் வேண்டும் ஒன்றை நினைத்தல், (3) அதனைப் பெற வேண்டும் என்ற ஆசை, (4) அதனைப் பெற முடியாமையால் வரும் சினம், (5) தன்னைத்தானே பெரிதாக நினைக்கும் செருக்கு, (7) தான் பெற்றது சிறிதேயாயினும் அதனைப் பெற்ற வழி பெருமகிழ்ச்சி அடைதல், (8) தான் துன்புறுதல், (9) அகப்பற்று, புறப்பற்று உண்டாக்கும், (10) தீமைகளையெல்லாம் பெருமையுடன் செய்யும் நிலைக்குத் தன்முனைப்பு ஆளாக்குவதால் உயிருக்குக் குற்றம்.

## 7.4.1. தன்முனைப்பின் குணக்குறி

குணக்குறிகள் : (1) விகற்பம், (2) கற்பம், (3) குரோதம், (4) மோகம், (5) அஞர், (6) மதம், (7) நகை, (8) அயர்வு.

### 7.4.1.1. விகற்பம்

வேறுபடுத்துதல் விகற்பம் எனப்படும். உறவு முறையிலோ, நட்பு முறையிலோ நெருங்கியுள்ளவர்களை அவர்களுக்கு இடையே நட்பும் உறவும் கெட்டுப் பிரியுமாறு ஆகாத கருத்துக்களைக் கூறிப் பிரித்தல்.

### 7.4.1.2. கற்பம்

கற்பம் தானாக ஒன்றைக் கற்பித்துக் கொள்ளல். தான் எண்ணும் எந்த எண்ணமும், தான் சொல்லும் எந்தச் சொல்லும் தான் செய்யும் எந்தச் செயலும் சரியானது என்று எண்ணிக் கொள்ளல். அதற்கான காரணங்களைத் தானே கற்பித்துக் கொள்ளல். தன்னைத்தானே பெரிதாக எண்ணி செயல்படுதல். பிறரைப் பெரிதாக எண்ணி அவரிடம் அடிமை வாழ்வு வாழ்தல். அதற்கான காரணங்களையும் தானே கற்பித்துக் கொள்ளல். பிறரைப் பெரிதாக எண்ணுவதுடன் நில்லாது அவர் இல்லையேல் நாடே இல்லை. மக்களுக்கு நன்மை செய்வார் இல்லை. பாதுகாப்பு, முன்னேற்றம் இன்ன பிறவெல்லாம் இல்லை என்று விளக்கம் தருவது. ஒருவரைப் போற்றுதல், புகழ்தல், வாழ்த்துதல், வணங்கல் தன்முனைப்பின் காரணமே. தன்னைப் பெரியோனாக எண்ணுவது போன்றதே பிறரையும் பெரியோனாக எண்ணல். சுருங்கக்கூறின் தீயோர் தாம் செய்வது அனைத்து நல்லது என்பர். அதற்குரிய விளக்கங்களைத் தன் சொல் திறமையால் வலியுறுத்தி உடன்பட வைப்பர். அந்த உண்மையை உணர்ந்த பின்னர் தன் முனைப்பு அறியாமையில் சிக்கிய அறிவிலிகள் அவ்வழியைப் பின்பற்றுகின்றனர். இவ்வாற்றல் இல்லாத அறிவிலிகள் பிறரைப் போற்றியே அடிமையாய் வாழ்ந்து

காலம் கழிக்கின்றனர். இவ்வாறாக ஒருவருடைய தன்முனைப்பு அவருடைய வாழ்வையும், அவரைச் சூழ்ந்துள்ளோர் வாழ்வையும், அவர் வாழும் நாட்டின் நன்மையையும் கெடுப்பதால், தன்முனைப்பு எவ்வளவு கொடிய ஆற்றல் மிக்கது என அறியலாம்.

### 7.4.1.3. சினம்

குரோதத்தால் வருவது சினம். 'சினம் சேர்ந்தாரைக் கொல்லி' என்றார் வள்ளுவர். மேலும் அவர் தன்னைக் காக்க சினத்தைக் காத்துக் கொள். இல்லையெனின் அது உன்னையே கொல்லும் என்றார்.[8] அற நூல்கள் சினத்தைப் பற்றி நிறைய கூறுகின்றன. 'ஆறுவது சினம்' என்றார் ஔவையார். சினம் பல்வேறு காரணங்களால் வரும். பல்வேறு சூழ்நிலையில் வரும். மானம் பறி போகும் போது, பொருள் பறி போகும்போது, நியாயமற்ற முறையில் பாதிக்கப்படும் போது, அதர்மம் தலைவிரித்தாடும் போது, மற்றும் தன்னுடைய அறியாமையாலும், பிணியாலும், ஆற்றாமையாலும் பாதிக்கப்படும் போதும் சினம் வரக்கூடும். எக்காரணம் பற்றி வரினும் காத்தல் அறிவுடைமை.

### 7.4.1.4. ஆசை (மோகம்)

ஆசையைப் பற்று என்பர். எல்லாத் துன்பங்களுக்கும் ஆசையே அடிப்படை காரணம். ஆசையை நிறைவேற்றுவதற்காக எல்லாவிதமான தீவினைகளையும் துணிந்து செய்கின்றனர். எனவே தான் திருமூலர் ஆசையை விட்டுவிட வேண்டும் என்கிறார்.[9]

### 7.4.1.5. துன்பம் (அளுர்)

மனிதன் விரும்புவது இன்பம். விரும்பாதது துன்பம். விரும்பிய இன்பமே துன்பத்தைத் தரும். ஆயினும் அறியாமையால் மனிதர்களே துன்பத்தைத் தேடிக் கொள்வர். பிறரைக் காரணம் கூறுவது பேதமை. துன்பம் வராதிருக்க வழி தேட வேண்டுமேயொழிய வந்த துன்பம் குறித்து வருந்துவதால் பயன் இல்லை. இஃது அறியாமையே, நன்மை பயக்கா. எனவே தான் துன்பத்திற்குத் துன்பம் செய்க என்றார் திருவள்ளுவர்.[10]

### 7.4.1.6. செருக்கு (மதம்)

தன் முனைப்பிற்குச் செருக்கு எனவும் பெயர் உண்டு. தன் முனைப்பால் வருவனவெல்லாம் செருக்கால் வரும். யான் எனது

என்பது எல்லாம் அகப்பற்றும் புறப்பற்றும் ஆகும். மதம் கொண்ட யானை காடு அழிக்கும். செருக்கு மிகுந்த மனிதன் வீடு நாடு காடு எல்லாம் அழிப்பான்.

### 7.4.1.7. நகை (மகிழ்ச்சி)

இன்பத்திற்கு இன்பம் படுதல். இன்பத்திற்கு ஏதுவானவைக் குறித்து இன்பம் படாமல் இருந்தால், துன்பத்திற்கு ஏதுவானவைக் குறித்தும் துன்பம் படாமல் இருத்தல் கூடும். இன்பத்திற்கு ஏதுவானவையே துன்பம் தருவதற்கும் காரணமாக அமைதல் கூடும். இன்பம் விழைவோர் இன்பம் பெற்றிட துய்த்திட நல்வழியையும் நாடுவர். சிலர் அது கூடாதவிடத்து தீய வழியையும் நாடுவர். சிலர் அது கூடாதவிடத்து தீய வழியையும் நாடி முடிப்பர். அதற்காகப் பிறருக்கு எவ்வளவு தீங்கு வேண்டுமானாலும் செய்வர். பெரும்பாலும் துன்பத்திற்கு அடிப்படையே இன்ப வேட்கையே.

### 7.4.1.8. அயர்வு (மறதி)

மறதி அறியாமைக்குரிய காரணங்களில் ஒன்று. வாழ்வில் முன்னேற்றம் பெறுதல், உண்மை நூல் கற்றதை நினைவு கூர்தல், கற்ற வழி நடத்தல், கடமையாற்றல் முதலியன மறதியால் தடைப்படும். துன்பங்களுக்கான காரணங்களில் மறதியும் ஒன்று. குடிப்பெருமையைக் கெடுக்கும். மறவாத மனத்தினால் எண்ணிச் செய்தார் முடியாத காரியம் என்று ஒன்றும் இல்லை என்கிறார் வள்ளுவர்.[11]

### 7.4.1.9. மோகம் என்பது இருவகை

மோகம் இருவகைப்படும். ஒன்று ஆசைப்படுதல், இரண்டு அவலித்தல். (1) ஆசைப்படுதல் : பொருள்களின் சிறப்பு, அழகு முதலியவைக் காரணமாக மனத்தை ஈர்க்கும். அப்போது மனவயப்பட்டு அதனைப் பெறவிரும்புதல், (2) அவலித்தல் : விரும்பிய பொருள் இழப்பினும், விரும்பாத பொருள் தானே வந்தாலும் அதற்காக மூர்ச்சித்து வருந்துதல்.

"நீரினில்முழு கும்போது பொருள்மே லாசை
நிலையான கரையில் வந்தால் நிலமே லாசை
கூர்ந்து நெற்றி தனிலும் வெண்ணீ றணியும் போது
குறிப்பான மக்கள் பெண்டிர் சுற்றத் தாசை
ஊர்தனிலு மந்திரங்க ளோதும் போது
உற்றபசி யாகுமனம தின்மே லாசை

பார்தனிலே தேவார மோதும் போது
பலவிதமாய் மனமோடிப் பார்த்த தாண்டே"
ஞானவெட்டியான் பாடல் 551.

### 7.4.1.10. விபரித ஞானம்

தன் முனைப்பு தடத்த நிலையில் வழியைக் குழி என்றும், குழியை வழி என்றும் எண்ணும். அப்படி எண்ணுவது திரிபுணர்வு. குழியைக் குழி என்று எண்ணாமல் வழி என்று எண்ணுவது போல ஒன்றை மற்றொன்றாக எண்ணுவது திரிபுணர்வு. இதுவே விபரித ஞானம் எனப்படும்.

### 7.4.1.11. மயக்க ஞானம் (பிராந்தி ஞானம்)

மயங்கிய அறிவு எனப்படும். வழியை வழியா என்றும், குழியைக் குழியா என்றும் ஐயப்படுவது. இந்த ஐயம் மயக்கத்தின் காரணமாக வரும். மயக்கத்தின் போது எது? என்ன? என்ற தெளிவு பிறக்காது. மயக்கத்தைப் பிராந்தி என்பர். மயக்கம் தரும் பானம் ஒன்றிற்குப் பிராந்தி எனப் பெயர் உண்டு.

### 7.4.1.12. மறைப்பாற்றல் (ஆவாரக சக்தி)

தன் முனைப்பு மலம் தனி நிலையில் மறைத்தலைச் செய்யும் போது அதன் சக்தி ஆவாரக சக்தி எனப்படும்.

### 7.4.1.13. கீழ் இருத்துதல் (அதோநியா மிகாசக்தி)

தன்முனைப்பு பிற தளைகளோடு கூடிய பொது நிலையில் திரிபுணர்வைத் (ஒன்றை மற்றொன்றாக எண்ணும் உணர்வை) தரும். இந்த உணர்வைத் தரும் ஆற்றல், செயல்புரிபவரை அவரின் செயல் கீழ்மைப்படுத்தும். கீழ்மைப்படுத்தும் ஆற்றலால் மனிதர்களின் மானம் பறி போகும். உடைமைகள் போகும். நல்லவர்கள் உறவு, நட்பு விலகும். அவமானம் துன்பம், இவையே மிஞ்சும். இச்சத்தி அதோ-நியாமிகா சத்தி என்பர் வடமொழியில்.

### 7.4.1.14. தன்முனைப்பு சடம்

உயிர் அறிவுடையது. உணர்த்த உணரும் தன்மையுள்ளதால் அறிவு உடையது என்று சொல்லலாம். ஆனால் தன்முனைப்பு மலம் அறிவற்றது சடம். எனவே அறிவு உள்ளது என்று சொல்ல இயலாது என்பர்.[12]

### 7.4.1.15. கிரணாகம கருத்து

"அந்த சகச மலம் இருப்பதனால் ஆன்ம பாசத்தோடு கூடியதாயும், தூய்மை செய்யத் தக்கதாயும், அறிவிக்கப்படுவதாயும் உள்ளது என்று சொல்வது சைவ மதம், சகச மலத்தின் வேறு பாட்டினாலேயே ஆன்மாக்களில் வகைகள் சொல்லப்படுகின்றன."

"சகச மலம் இருப்பதனாலே ஆன்மாவிற்கு ஐம்புலனை அனுபவிக்கும் தன்மை உண்டாகின்றது. அஃது இல்லையேல் அவ்வனுபவிக்கும் தன்மை இல்லை. ஆன்மாவின் குணம் மலம் உடைமை."

'ஆன்மாவின் தன்மை அதன் இயற்கையில் பரிணாமம் அமைவதன்று. தருமமாகாது (ஏனெனில்) அறிவையே இயல்பாக உடையவனிடத்தில் அறியாமையாகிய குணம் இருக்க மாட்டாது. பரிணாமம் என்று சொல்லப்படுகின்ற தன்மை அறிவுடையதற்குப் பொருந்தாது. இருப்பின் அவன் பரிமாணத்தை உடையவனாகி விடுவான். ஆயின் ஆன்மா அறிவுடையதாதல் எவ்வாறெனின் ஆன்மாவிற்கு அறிவு ஒரு காலத்தில் விளக்கப்படுகிறது. மற்றொரு காலத்தில் மறைக்கப்படுகிறது. மாயா படலம் : 18-21½ - 23 - 24 - 25 ½."

"சகச மலம் வியாபகமாயிருப்பினும் அதன் சத்திக்கே அழிவு செய்யப்படுகிறது. இங்கு மலத்தின் சத்தியை அழிவு செய்தல் என்பது உபாயத்தால் மலத்தின் சத்தியைத் தடை செய்வது ஆகும். எப்படி அக்கினியில் சுடும் சத்தி மந்திரத்தினால் தடுக்கப் படுகிறதோ அப்படி மலத்தின் மறைக்கும் சத்தி உபாயத்தால் தடுக்கப்படுகிறது (27-28)."

"மலம் அநாதியே ஆன்மாவோடு கூடியிருப்பதால் ஆன்மாவிற்குக் குணம் என்று உபசரித்துச் சொல்லப்படுகிறது. மாயாபடலம் : 23."

### 7.4.1.16. பெருந்திரட்டு கூறும் குணம்

(1) பொருள் விருப்பம், (2) எனக்கு எவர் எதிரி என்று வெறியுணர்வையுடைய கோபம், (3) விகற்பம், (4) நிச்சயமற்ற ஆசை, (5) பொய்வழி இன்பம் துய்த்தல், (6) உவகை எனக் கூறுகிறது.[13]

### 7.4.1.17. பௌட்கர ஆகமம் கூறுவது

ஆன்ம சேதனம், மலம், சடம், சேதனமாகிய ஆன்மாவைச் சடமாகிய மலம் மறைப்பது உடம்படத்தக்கது பௌட்கர ஆகமம் *4.154.*

### 7.4.1.18. தன்முனைப்பு மலம் உண்டு சான்று

விளக்கு, விளக்குத்தண்டு, தகழி, நெய், திரி முதலிய பகுதிகள் எல்லாவற்றுடனும் கூடி ஒளிவிட்டு எரிவது போல உயிரின் அறிவு சொல் கலை முதலியவற்றால் விளக்கம் பெறும். ஆனால் மலம் அதை மறைக்கிறது. உயிரோடு கலந்து நின்று உயிரின் விருப்பம் செயல்களை மறைப்பதால் தன்முனைப்பு மலம் உண்டு என உணர்க.[14]

### 7.4.1.19. தன்முனைப்பு அருள் பெற்றோரை விட்டு விலகும்

மலம் ஒன்றாயினும் அனைத்து உயிரை மறைக்கும் ஆற்றல் உடையது. அந்த உயிர் மலபரிபாகம் உற்று மல ஆற்றல் நீங்குகிறதோ அந்த உயிர் மட்டும் வீடுபேறு பெறும். ஏனைய உயிர்கள் மலபரிபாகம் பெறாமையால் மலத்தின் ஆற்றலுக்கு ஆளாகும். எல்லா உயிரும் ஒரே காலத்தில் வீடு பேறு பெறாது. வீடு பேறு பெற முயன்று வெற்றி பெற்ற உயிரை விட்டு மலம் நீங்குவதால் அவ்வுயிர் வீடு பேறு பெறும் என்பது மிருகேந்திர ஆகமம் பாச லட்சண பிரகணத்தில் கூறப்பட்டுள்ள விளக்கம்.

## 7.5. தன்முனைப்பின் செயல்பாடுகளும் விளைவுகளும்

அரிசியிலும், செம்பிலும் தொன்மை காலம் தொட்டு உமியும் காளிதமும் (களிம்பும்) இருப்பது பாகத்தினாலும், இரச சக்தியாலும் எப்படி நிவர்த்தி அடைகின்றனவோ, அது போல அநாதியே மறைத்துக் கொண்டிருக்கிற ஆணவ மலமானது தீட்சையினால் நிவர்த்திக்கப்படுகிறது. தத்துவப் பிரகாசிகை சூத்திரம் பதினெட்டின் கருத்து.

ஏனைய இருமலங்களுக்கும் இதுவே அடிப்படையாய் இருப்பதால் இதனை மூலமலம் என்பர்.[15]

தன்முனைப்பிற்கும் உயிருக்கும் தொன்றுதொட்டே தொடர்பு உள்ளது என்பது தான் ஈசுவரனுக்கும் ஈசுவரத் தன்மைக்கும் ஏற்புடைத்து என்பதைப் போத காரிகை 134.5இல் கூறியவுள்ளது என்னவெனில் "ஆன்மாவிற்கும் மலத்திற்கும் உள்ள சம்பந்தத்தை இடையில் உண்டானதாகக் கொள்ளின் அவ்வாறு உண்டானதற்கு ஒரு

காரணம் சொல்ல வேண்டும். அதனால் அது மேலும் சென்று முடிவின்மை என்னும் குற்றத்திற்கிடனாம் என்றும் ஆன்மாக்களுக்கு முத்தியே இல்லாமல் போய்விடும். ஈசுவரனுக்கும் ஈசுவரத்தன்மை இல்லாமை நேரிடும்."

ஒவ்வொரு உயிரின் அதன் பக்குவத்திற்கு ஏற்பவே வன்மையாகவோ, மென்மையாகவோ பற்றி இருக்கும். எல்லோருக்கும் ஒரே மாதிரி இருக்காது. பட்டறிவாலும் பல உண்மை நூல்களாலும் பெரும்பான்மையாக விளக்கப்படுவது வினை தடையே. அவ்வினை தடைக்குத் தடையாய் உள்ளது அறிவின் தடையே. அறிவுக்குத் தடை அறியாமை. அறியாமை தருவது தன்முனைப்பு. விறகு அக்னியைத் தனக்குள் மறைத்து வைத்திருப்பது போல, பெரிய பாம்பு ஒளியையுடைய மாணிக்கத்தின் நச்சுபைக்குள் அடக்கி வைத்திருப்பது போல அருவமாயிருக்கும் தன்முனைப்பு மறைத்து வைத்து இருக்கிறது.

பிறவிக்கு முதற்காரணம் உயிரே. உயிருக்கு உதவ பிறவியைக் கொடுப்பது இறைவன். இறைவன் உயிரைத் தரவில்லை. ஏன் எனில் உயிர் எப்போதும் உள்ளது. இறைவன் கொடுப்பது உயிருக்கு ஏற்ற உடல். அதாவது அதன் தன்முனைப்பு, வினை ஆகியவற்றின் வலிமைக்கேற்ப உடலைத் தான் இறைவன் தருகிறான். கண் தெரியாத குருடன் நடக்க வேண்டி உதவும் வகையில் ஊன்றுகோல் கொடுப்பது போல இரக்க உணர்வோடு இறைவன் பிறவி தருகிறான். கண் குருடு நீங்கின் ஊன்றுகோல் தேவை இல்லை. அதுபோல் தன்முனைப்பு நீங்கின் பிறவி இல்லை.

வறுத்த வித்து முளைக்காது. அதுபோல திருவருள் பெற்ற உயிரிடம் தன்முனைப்பு செயல்படாது. எனவே உயிரிடம் தன்முனைப்பு மலமும் பரம்பொருளும் பொருந்தியுள்ளன. எப்படியெனின் குளிர்ச்சியும் சூடும் ஓரிடத்தே இருப்பது போல, மரத்தில் ஈரமும் இருக்கிறது. வெப்பமும் இருக்கிறது. ஈரம் நீங்கியதும் மரம் பற்றி எரியும் என்கிறது சிவதருமோத்திரம் ஆகமம்.

வன்குணம் (இராசம்), மென்குணம் (சத்துவம்), மடிகுணம் (தாமசம்) ஆகிய மூன்று குணங்களின் வேறுபாடு காமம், வெகுளி, மயக்கம். இம்மூன்றும் தன்முனைப்பு மல சார்பால் உயிருக்குள்ள செயற்கை குணம். எனவே முக்குணங்களின் செயற்பாடு ஒழிந்தால் அன்றி தன் முனைப்பு மலம் செயலற்று போகாது.

புல்லறிவாளன் தனக்கு நன்மை தருவனவற்றை அறிவுடையவர் சொன்னாலும் அதை அறிந்து செய்ய மாட்டான்.

தானாகவும் இவை இவை நல்லவை எனவும் தெரிந்து கொள்ள மாட்டான். எனவே இறக்கும் வரை அவன் உயிர் நோயே என்றார் திருவள்ளுவர். ஏனெனில் தன்முனைப்பு பற்ற அறியாமையில் இருப்பதால் நோய் என்றார். பல நோய்க்கு இந்நோயே காரணமாக அமையும். நஞ்சு உண்டால் உயிர் போகும் என்பது உண்மை. இந்த உண்மையை அறியாதவன் அறியாமை உடையவன். அது அறியாமை நோயின் விளைவு. ஆனால் தான்படும் அல்லல்களினாலும், அவதிகளினாலும், வறுமை, பிணி, அவமானம் நேர்ந்தமை குடும்பத்தைக் காக்க முடியாமை, இப்படி பல்வேறு வகையால் பாதிக்கப்பட்டவனும் நஞ்சு உண்டு உயிர் விடுகிறான். இவைகளுக்கு அஞ்சி உயிர் விட்டால் உலகில் எவரும் வாழ முடியாது. அவற்றை முயற்சியாலும், பொறுமையாலும் வென்றே வாழ வேண்டும் என்ற அறிவு இல்லாமையே.

ஆற்றல்மிக்க தன் முனைப்பை, மனத்தினால் நினைப்பதற்கு அரிய திருவருளினால் அறியலாம். வேறு வழியால் அறிய இயலாது என்கிறது சிவப்பிரகாசம்.[16]

படலம் படர்ந்த கண்ணுக்கு மருத்துவம் பண்ணும் மருத்துவன் படலம் உரிக்கப்படும் போது அந்த நோயாளியின் கூடவே இருப்பான். ஆயினும் அந்த நோயாளி அந்த மருத்துவனைக் காண மாட்டான். அதுபோல அந்தந்தப் பொருளுக்கு அந்தந்தப் பொருளாய் நிற்கும் இறைவன் தன்முனைப்பு மலம் உயிரை மறைத்து நின்ற நிலையிலும் தன்முனைப்பு மலத்திற்குத் தன்முனைப்பு மலமாயும், உயிருக்கு உயிராயும் நிற்கிறான். தன் முனைப்பு மலத்திற்கு உட்பட்டு நின்றமையால் அந்நிலையில் உயிர் இறைவனின் இருப்பை அறியாமையால் இருந்திருக்கிறது.

இயல்பாக உள்ள செம்பிலுள்ள களிம்பைப் புளி கொண்டு தேய்த்தால் நீங்கும். பின்னர் மீண்டும் தானாக உண்டாகிவிடும். தேய்ப்பதின் மூலம் நீக்குவதும், நீங்கியது, பின்னர் திரும்பவும் கூடுவதுமாகத் தொடர் நிகழ்ச்சியாக இருக்கும். நிலையாக நீக்க வேண்டுமானால் செம்பை குளிகையில் போட்டு எடுத்தால் செம்பு தங்கமாக மாறிவிடும். தங்கத்திற்குக் களிம்பு இல்லை. அதுபோலவே உயிருக்கு இறைவன் திருவருள் கிட்டுமானால் தன்முனைப்பு மலம் ஆற்றல் அற்றதாகிவிடும். பின்னர் எக்காலத்தும் செயற்படாது. எப்படி எனின் செம்பு குளிகையால் பொன்னாக மாறுமே தவிர மீண்டும் குளிகை கொண்டு பொன்னைச் செம்பாக மாற்ற இயலாது. அதுபோன்றே. உயிருக்கு இறைவன் திருவருள் கிட்டின் தன்முனைப்பு வறுத்த வித்தாகிவிடும். வறுத்த வித்து எக்காலத்தும் முளைக்காது.

இதனால் அறிவது தன்முனைப்பிலிருந்து விடுபெற, வீடுபேறு பெற ஒரே வழி இறைவன் திருவருள் பெறுவதே ஆகும்.

உயிர் தன் முனைப்பு மலத்தினின்றும் விடுபட, வீடுபேறு பெற அருள் உள்ளத்தோடு மாயையைத் தருகிறான். உடல் பெற்ற உயிர் வினைபுரிகிறது. நல்வினை, தீவினை என இருவினையையும் புரிகிறது. வினையின் காரணமாக மீண்டும் உயிர் பிறந்து துய்த்து தீர்க்க வேண்டியுள்ளது. வினை தீர்க்கப் பிறவியும், பிறவியில் வினைபுரிதலுமாகச் சுழற்சக்கரம் போல் ஆகிவிடுகிறது. மலத்தைப் போக்க வந்த மாயையும் வினையும் மலமாகவே ஆகிவிடுகிறது. தன்முனைப்பு மலத்தைப் போக்கவந்த மாயை தீவினைக்குக் காரணமாய் அமைகிறது. எப்படியெனின் மாயையால் வந்த உடல், கருவிகள், உலகம், நுகர்ப்பொருள்கள். உடலானது கருவிகளின் துணை கொண்டு உலகையும், உலகிலுள்ள நுகர்ப்பொருள்களையும் தானே அடைய வேண்டும். தன் குடும்பமே அடைய வேண்டும் என்று தன்முனைப்பால் எண்ணுகிறது. திட்டமிடுகிறது. செயல்பாடு தீவினையாகி விடுகிறது. சான்றாக வளமையும் அழகும், விளைவும் கூடிய நிலத்தையோ தோட்டத்தையோ காணின் அதன் சிறப்பைக் கண்டுகளித்து மறந்து விடுவதை விட்டுவிட்டு அதனைத் தனக்கு உரிமையாக்கிக் கொள்ள முயல்கிறான். அறவழியில் கிட்டாமையால் மறவழியில் தீய வழியில் அடைகிறான். அதனை அடைய இடையூறாய் உள்ளவர்களுக்குத் தாங்கொண்ணா துன்பம் தருகிறான். இப்படியாகத் தீவினை வழி நடக்கத் தொடங்கி தொடர்ந்து தீவினையே செய்கிறான். இதனால் அவனுக்கு மீண்டும் பிறவி ஏற்படுகிறது. இதனால் மாயை, வினை இரண்டும் தன்முனைப்பிற்கு பின் வந்த மலமாக (ஆகந்துகமலம்) ஆகிறது. மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை (பொருள் ஆசை) தற்காலத்தில் பதவி ஆசை இப்படியாகக் காலந்தோறும் இடம்தோறும் ஆசையின் எண்ணிக்கையும் அளவும் கூடுவதால் தீவினை செய்து அவற்றை அடைவதிலே முனைந்து நின்று அடைந்து, மகிழ்ந்து இறுதியில் குளிக்கப் போய் சேற்றைப் பூசிக்கொண்டது போல தீவினைக்கு ஆட்பட்டு அவற்றைப் பல பிறவிகளில் அனுபவித்து தீர்க்க நேருகிறது. பாவம் ஒரு பிறவியில் செய்துவிட்டு பல பிறவிகளில் அவற்றை அனுபவித்துத் தீர்க்கிறான் என்பதை ஏனோ அறியவில்லை. ஏன் அதுவும் தன் முனைப்பின் ஆற்றல்தான் எனலாம்.

மாயை (படைப்புத் தோற்றுவாய்) உடல், கருவி, உலகம், நுகர்ப்பொருள் என்ற நான்கினைத் தந்ததால் அவன் அவள் என்னும் உயர்திணைப் பொருளாயும், அது என்னும் அஃறிணைப் பொருளாயும் பிரிந்து விழுந்தோர் ஏறுதற்கரிய சுவர்க்கம், நிரையம் என்னும் இன்ப

துன்பங்களை அறியாமை பொருந்தி நின்று நுகர்ந்து இறப்பு பிறப்பிலே சுழன்று திரியுமாறு செய்வது தன்முனைப்பே.[17]

தன்முனைப்பு மயக்கம் தந்து மயக்கத்தால் செயல்கெட்டுப் போகப் புத்தியையும் தரும். காமமும் கள்ளும் கீழ் மக்களுக்கே உரித்தானது. தன்முனைப்பால் மயக்கமுற்று புத்தியும் கெட்டு போவார்கள்.

"காமமுங் கள்ளும் கலாதிகட் கேயாம்
மாமலை முஞ்சமயத்துள் மயலுறும்
போமதி யாகும் புனிதன் இணையடி"

மாயை, மாயேயம், மறைப்பாற்றல் என்னும் திரோதானம் ஆகிய மூன்றும் மலன் என்று கூறப்பெறுகிறது.[18] அறியாமை உயிருக்கு எப்படி வந்தது என ஆராய்ச்சி செய்து என்ன பயன். உண்மையில் அது தன்முனைப்பால் வந்தது என அறிக.[19]

உயிர்கள் உலக இன்பத்தை நுகர்வதிலேயே காலம் கழிக்கின்றன. ஞான ஒளி பெற முயல்வதில்லை. அறிவு மயமான அருளையும் அவ்வருள் நிலைகளமாகச் செலுத்து குரு வடிவையும் அறியமாட்டார்கள். அருளின் இயற்கையான அகண்ட வடிவையும் உணர மாட்டார்.[20] உயிர் இறைவன் முன்னிலையில் நிற்கினும் படிமுறையே அறிவித்தால் அன்றி அறியாத தன்மை உடையது. இதற்குக் காரணம் தன் முனைப்பே. நுண்ணுணர்வு இல்லாமைக்கும், எடுத்த உடலைத் தானே என்று எண்ணிச் செய்வதும், உலக வாசனையில் மனத்தை ஈடுபடச் செய்வதும், இறைவனை மறைக்கச் செய்வதும், பெண்ணாசையை மிகுவிப்பதும் இதுவே.[21] ஈழையில் அகப்பட்ட ஈபோலச் சிக்கி நெஞ்சினைத் தவிக்கச் செய்யும்.

"பெரியோர் எனப் புகழ்தலும் இலமே
சிறியோர் என இகழ்தலும் இலமே" புறநானூறு பாடல்.

இப்பாடலின் நோக்கம் புகழ்தலும் இகழ்தலும் தன்முனைப்பால் வருவன. தன் முனைப்பை உண்டாக்கும் என்பதே ஆகும். எப்படி எனில் ஒருவர் புகழ்ந்தால் அவருக்கு அதனால் பெருமையுணர்வும் அதனால் மயக்கம் (போதை) உண்டாகிறது. அதனால் மேன்மேலும் புகழ் பெற வேண்டிய செயல்களில் ஈடுபடுகின்றனர். செயல் நல்வினையாக அமைவதுண்டு. ஆனால் எப்படியாவது புகழ் பெற வேண்டும் என்ற உணர்வால் உந்தப்பட்டவர்கள் மறைமுகமாகத் தீவினையும் புரிகிறார்கள். இதனால் மற்றவர்கள் பாதிக்கப்படுகிறார்கள். ஒருவர் புகழ் பெற பலர் பாதிக்கப்பட வேண்டிய நிலை உண்டாகிறது. சான்றாக எளிய ஏழை மக்களுக்கு

உணவு, உடை, இதர தேவையான பொருள்களை வாரி வழங்கினால் வள்ளல் பட்டம் கிடைக்கும். புண்ணியமும் கிடைக்கும். அது நல்வினையும் கூட. ஆனால் அந்த வள்ளல் பட்டம் பெற மறைமுகமாகத் தீய வழியில் பொருள் ஈட்டுவது முறையன்று. தானம் செய்வது புண்ணியம். முறைகேடாகப் பொருள் ஈட்டுவது பாவம். புண்ணியத்தால் பாவத்தைப் போக்கி விடலாம் என்று எண்ணுதல் கூடாது. பாவத்தை அனுபவித்து தீர்க்க வேண்டுமேயொழிய புண்ணியத்தால் போக்கிவிட முடியாது. இந்தப் புண்ணியத்திற்கு உரிய பலன் கிட்டும். இகழ்வதின் மூலம் அறியாமையும் அடக்கவுணர்வும் உடையவர் மனம் தளர்ந்து துணிவற்று தன்னம்பிக்கையை இழந்து இயல்பாகத் தன்னால் செய்யக்கூடிய செயலைக்கூட செய்ய முடியாதவர்களாகி விடுவர். எனவே இது ஒருவரின் தன்னம்பிக்கையைப் போக்கி முன்னேற முடியாததாக்கி விடும். தன்முனைப்பு பிறரின் வீழ்ச்சிக்குக் காரணமாகிறது. தன்முனைப்பு வினை மலத்தை இயக்குவதே. அவ்வினையோ வினையாளனின் இயல்பிற்கும் நல்லறிவுக்கும் ஏற்ப நல்வினையாகவோ தீவினையாகவோ ஆகிறது.

## 7.6. நெஞ்சகத்தில் தன்முனைப்பு இருந்து எழும்

யான், எனது என்று தன்முனைப்போடு பேசுவோர் பேசும் போது தன் கையினைத் தன் நெஞ்சின் மீது வைத்து பேசுவர். அந்தப் பேச்சுக்கும், கை குறிப்பிட்டு காட்டும் நெஞ்சிற்கும் தொடர்பிருத்தல் வேண்டும் என எண்ணக்கூடும். இதுபற்றி பாம்பன் சுவாமிகள் 'தகராலய ரகசியம்' என்னும் நூலில் கூறுவது : "ஆணவ மலம் - மூலமலம் - மும்மலங்களில் மூலமாய் உள்ளது. எல்லா உயிர்களையும் பற்றியுள்ளது. விஞ்ஞான கலர், பிரளயா கலர், சகலர் ஆகிய மூன்று உயிர்களுக்குமுண்டு (விஞ்ஞான கலர் ஆகிய நான்முகன் அகந்தையால் முருகனிடம் குட்டுப்பட்ட வரலாறு உண்டு). நான், எனது, நான் செய்தேன், நான் சொல்கிறேன், சுட்டிக்காட்டுமிடம் நெஞ்சு. எனவே நான் எனது என்னும் தன்முனைப்பு அகங்கரித்து எழுவதும் நெஞ்சகத்திலிருந்துதான்."

## 7.7. தன்முனைப்பின் செயல் ஏழு

(1) அரிஷம், (2) சோஷம், (3) இராகம், (4) விஷாதம், (5) மகம், (6) மோகம், (7) வைசித்திரியம். (1) அரிஷம் : மனை முதலிய வளங்களைக் கண்டால் எமக்கு இனியாது குறை என புளகாங்கிதத்துக்கு ஏதுவாதல். (2) சோஷம் : மனக்கவலையால்

உணவையும் ஒழித்து உடம்பு உலர நிற்றற்கு ஏதுவாதல். (3) இராகம் : அறநூல் உணராத் தன்மையால் சிவன் சொத்தையும் அபகரிக்கும் எண்ணம் பிறத்தற்கு ஏதுவாதல். (4) விஷாதம் : புல்லிய மகளிரைப் பிரிந்த போது அழுது உளம் புண்படற்கு ஏதுவாதல். (5) மகம் : விலைமகளிரைப் புவியரசியரென மதித்து நிற்றற்கு ஏதுவாதல். (6) மோகம் : குருநெறி நீத்து அதிபாதகம் புரிதற்கு ஏதுவாதல். (7) வைசித்திரியம் : இருவினை வழியே இறைவனது ஆணை பலன் அளிக்கும் என்னும் மதி மறந்து நான் செய்தேன், பிறர் செய்தார் என்னும் இழிமதிக்கு ஏதுவாதல் (தகராலய ரகசியம்). நான் என்பது அடங்கின் ஆணவமலம் அடங்கும். "நண்ணிய பாசத்தில் நானெனல் ஆணவம்" திருமந்திரம் 2426.

## 7.8. நான் என்னும் முனைப்பு மூவகை

(1) தைச்சம், (2) வைகிருதம், (3) பூதாதி ஆங்காரங்கள். (1) தைச்சத்திலிருந்து மனமும் ஐந்து அறிவு பொறிகளும் வெளிவருகின்றன. (2) வைகிருதத்திலிருந்து ஐந்து தொழிற் பொறிகள் வெளிவருகின்றன. (3) பூதாதியிலிருந்து ஐந்து தன் மாத்திரைகள் தோன்றுகின்றன. பிரித்தறிகின்ற அறிவிலிருந்து (புத்தி) மனம், அகங்காரம், சித்தம் என்னும் மூன்று உட்கருவிகள் (அந்தக்கரணம்) தோன்றுகின்றன என்பர். அகக்கருவிகள் : மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என நான்கென்பர்.

## 7.9. அகங்காரத் தத்துவம்

அகங்காரத் தத்துவம் என்னை எனின் வினைக்கீடாக உண்டான உடம்பில் பொருந்தி இருக்கும் உயிர்வளி முதலிய வளிகளை இயங்கச் செய்து, என்றும் விட்டு நீங்காத 'நான்' என்னும் செருக்குக்கு மூலமாய், 'என்னை ஒப்பவர் பூவுலகில் என்னையல்லாது பிறர் ஒருவருமில்லை' என்னும் இயல்புடையதாய், பொறிகளைப் பொருள்களை நுகரும் பொழுது அந்த செயல்களில் முற்பட்டுப் பொருந்தும்.

## 7.10. தன்முனைப்பு வகை ஏழு

(1) மோகம், (2) மதம், (3) அராகம், (4) கவலை, (5) தாபம், (6) வாட்டம், (7) விசித்திரம் என ஏழு வகை என்பர். (1) மோகம் : தன்முனைப்பின் முதற்காரியம் ஏனைய ஆறு காரியங்களுக்கு அடிப்படையாய் விளங்குவது. தளை பிணிப்பு நீங்கும் வரையும் மோகம் உயிர்களைப் பற்றிக் கொண்டிருக்கும். இது இல்லாத போது இதன் பின்னர் கூறப்பட்ட மதம் முதலிய ஆறு காரியங்களும் நிகழமாட்டா. எனவே தன்முனைப்புக் காரியங்களுள் இதுவே

முதலாவது. அற நூல்களை ஓதியுணர்ந்தும் அதன் வழி கொள்ளத்தக்கது இது. தள்ளத்தகாதது இது என்று பகுத்தறிந்தும், மகளிர் முதலிய உலகப்பொருள்களில் மயங்குவதற்குக் காரணமாவது மோகம். (2) மதம் : தான் எய்திய பெண்ணைத் தானே பாராட்டிப் புகழ்ந்து, இவளுக்கு ஈடான பெண் உலகத்தில் யாருமில்லை என்று மதித்ததற்கு காரணமாவது. (3) அராகம் : பெண் மீது மேலும் மேலும் ஆசை மிகுந்து வருதல். (4) கவலை : ஊழ் வலியால் பெண்ணைப் பிரிய நேர்ந்த போது கண்ணீர்விட்டு அரற்றி மிகு துன்பம் உறல். (5) தாபம் : பெண்ணின் பிரிவாற்றாமையால் உள்ளம் வெதும்பி தவித்தலை உடையது. (6) வாட்டம் : பெண்ணின் பிரிவாற்றாமையால் அலறியும் உள்ளம் வெதும்பியும், மயக்கமுற்று உள்ளமும் உடலும் வாடுதல். இதுவரை பெண்ணை எடுத்துக்காட்டாகக் கூறப்பட்டது. ஆயினும் வெவ்வேறு பொருள்கள் மீதும் இவ்வாறே இவ்வாறும் தோன்றும். (7) விசித்திரம் : தான் அடைந்த உலக வாழ்க்கையை நினைத்து பெருமிதம் கொள்ளுதல். கற்றதால் உயர்ந்தேன், இவள் என் மனைவி, எனக்குக் குறைவற்ற செல்வம் உளது. எனக்கு இனிப் பெற வேண்டியது எதுவுமில்லை என்ற பெருமிதம் என்னால்தான் என் குடும்பம் இன்பமாக வாழ்கிறது. நான் இறந்த பிறகு என் குடும்பத்தை யார் காப்பார்? என்பது போன்ற பல வகையாகச் சிந்தித்தல் விசித்திரம். இதுபோன்று சிலர் பிறவற்றிலும் எண்ணுவதும், பிறர் இறந்து விட்டால் என்ன ஆகும் என்று வருந்துவதும் இதனுள் அடங்கும். இவர் இன்றி முன்னும், இவர் இன்றி பின்னும் குடும்பமோ, நகரமோ நாடோ இயங்கும். தன்னைப் பெரிதுபடுத்திக் கொள்வதும், சிலர் பிறரைப் பெரிதுபடுத்திப் பேசுவது இயற்கையல்ல, எனவே விசித்திரம்.

## 7.11. தன்முனைப்பு - உவமைகள்

தன்முனைப்பு (ஆணவம்) பற்றி மெய்கண்ட சாத்திரங்கள் (உண்மை நூல்கள்) பண்டார சாத்திரங்கள் (அனுபவ நூல்கள்) தமிழ் மறையாகிய திருக்குறள், தமிழ் மந்திரமாகிய திருமந்திரம், சைவ சித்தாந்த கருத்துக்களைக் கூறும் ஞான நூல்கள் ஆகியவைகள் விளக்கிக் கூறும் போது உவமைகளையும் பயன்படுத்தியும், அடைமொழிகளைப் பயன்படுத்தியும், உருவகமாகவும், பல்வேறு சொற்கள் வாயிலாக விளக்கியுள்ளன. அவை தன்முனைப்பினைப் பற்றி விளக்கமாகவும், தெளிவாகவும், முழுமையாகவும் அறிய உதவுகின்றன. இவற்றை அறிவதின் மூலம் தன்முனைப்பினைப் பற்றி நன்கறியலாம்.

### 7.11.1. உவமைகள்

தன்முனைப்பினை விளக்குவதற்கு (1) இருள், (2) காளிதம், (3) உமி, (4) நோய், (5) உப்பு, (6) திரை, (7) விலங்கு, (8) பஞ்சு, (9) அணு, (10) பாசி மற்றும் பல.

### 7.11.2. விளக்கங்கள்

#### 7.11.2.1. இருள்

இருளை அந்தகாரம் என்பர். இருளின் தன்மை யாதெனின் : உலகிலுள்ள புற இருளானது தன்னுடைய உருவைக் காட்டும். அஃதாவது பார்ப்பவர் கண்களில' இருள் மட்டும் தெரியும். அந்த இருளால் இருள் சூழ்ந்துள்ள இடத்திலுள்ள எந்தப் பொருளும் தெரியாது. ஏன் எனில் ஒளிபடாத எந்தப் பொருளும், இருள் சூழ்ந்துள்ள எந்தப் பொருளும் கண்பொறியால் காணமுடியாது. எனவே இருள் உள்ளபோது இருள் உள்ள இடத்திலுள்ள எப்பொருளையும் காண இயலாது. இருள் தன்னைக் காட்டும். பொருளைக் காட்டாது.

இருள் தன்முனைப்பை விளக்கும் போது இருளை உவமையாகக் கூறுவதுடன் இருளினும் கொடிது தன்முனைப்பு என்பர். எவ்வாறெனில், இருள் தன் உருவத்தைக் காட்டும் இயல்புடையது. ஆனால் தன்முனைப்போ தன்னையும் காட்டாது. தானுள்ள இடத்தில் உள்ள பொருள்களையும் காட்டாது. இருள் காட்டும் தன்மையில் தன்முனைப்பைவிட கொடுமை குறைவு. ஆனால் தன்முனைப்பு இருளைவிட இரு மடங்கு கொடியது. எப்படியெனில் இருள் இருபொருள்களில் ஒன்றைக்காட்டும், ஒன்றைக்காட்டாது. தன் முனைப்பு இருபொருள்களையுமே காட்டாமையால் இருளினும் கொடிது என்பர். மேலும் இருளை இருள் என்றால் தன்முனைப்பை பேரிருள் என்பர். ஒளி வந்தால் இருள் மறையும். இறைவன் அருள்கிட்டின் தன்முனைப்பின் ஆற்றல் மறையும். ஆனால் தன்முனைப்பே மறையாது. காரணம் தன்முனைப்பு தோற்றமும் அழிவும் இல்லாதது.

### 7.11.2.2. காளிதம் (களிம்பு)

செம்பும் களிம்பும் நெருங்கிய தொடர்புடையது. எவ்வளவு தான் முயன்று செம்பினைத் தேய்த்து அலம்பி அகற்றி தூய்மைப்படுத்தினாலும் மீண்டும் செம்பில் களிம்பு தோன்றி விடும். களிம்பு தற்காலிகமாக நீங்கும். நிரந்தரமாக நீங்காது. இரண்டும் ஒன்றைவிட்டு ஒன்று நீங்கா தன்மையுடையது. தன்முனைப்பும் அத்தகைய தன்மையுடைத்ததே. ஒருகாலத்து நல்லறிவினால் உணர்ந்து செயல்படும் போது தன்முனைப்பின் ஆற்றல் குறையும். ஆனால் அது மீண்டும் தலைதூக்கும். அதிலிருந்து நிலையாக விடுபட இறைவன் அருளே உதவும். ஈண்டு செம்பிற்கு உவமையாக உயிரையும், களிம்பிற்கு உவமையாக தன்முனைப்பு பலத்தையும் கூறப்பெறும். செம்பும் களிம்பும் தொன்மையானது. உயிரும் தன்முனைப்பு மலமும் தொன்மையானது. செம்பும் உயிரும் அழியாது. களிம்பின் ஆற்றலையும் தன்முனைப்பின் ஆற்றலையும் குறைக்க முடியும்.

### 7.11.2.3. உமி

அரிசியை மறைத்து இருப்பது உமி. உயிரை மறைத்து இருப்பது தன்முனைப்பு மலம். நெல்லில் அரிசியும் உமியும் ஒன்றோடு ஒன்று தொடர்புடையது. உயிரும் தன்முனைப்பும் ஒன்றோடு ஒன்று தொடர்புடையது. இரண்டும் தொன்மை காலம் தொட்டு இருப்பது. உமியை நீக்கின் அரிசி வெளிப்படும். உமியில்லா அரிசி முளைக்காது. அதுபோல தன்முனைப்பு இல்லா உயிர் மீண்டும் தோன்றாது. நெல் முளைப்பதற்கும் உயிர் பிறப்பதற்கும் உமியும் தன்முனைப்புமே உதவுகிறது.

"பண்டு முளைப்ப தரிசியே யானாலும்
விண்டுமி போனால் முளையாதாம் - கொண்டபேர்
ஆற்ற லுடையார்க்கு மாகா தள வின்றி
ஏற்ற கருமம் செயல்"

ஔவையார் இயற்றிய வாக்குண்டாம் பாடல் 11.

### 7.11.2.4. நோய் : பிணி

நோய் வந்தால் நோய் வந்தவர் வீட்டிலுள்ளவர்கள் அறிவார்கள். அந்த வீட்டிற்கு வெகு தூரத்தில் உள்ளவர்கள் நோயைப் பற்றி அறிய மாட்டார்கள். காரணம் அறிய இயலாது. அதுபோன்றே உயிரிலுள்ள தன்முனைப்பு மலத்தை உயிரோடு கலந்திருக்கும் 'அருள்' தான் அறியும். வேறொன்றும் அறியாது. அறியவும் இயலாது. இங்கு உயிர் நோயாளியாகவும் தன்முனைப்பு நோயாகவும் உவமைப்படுத்திக் கூறப்பெறுகிறது. நோய் நீக்க மருந்து உண்டு. மருந்து கொடுக்கும் மருத்துவனும் உண்டு. தன்முனைப்பின் ஆற்றலைக் குறைக்க வழியுண்டு. நீக்கும் திருவருளாகிய குருவும் உண்டு.

### 7.11.2.5. திரை

பார்ப்பவர் பார்க்கப்படும் பொருள் இவற்றிற்கு இடையில் திரை இருக்குமானால் பார்க்கும் கண்ணிற்குப் பார்க்கப்படும் பொருள் தெரியாமல் தடுத்து விடும். கண்ணிலுள்ள படலமும் அவ்வாறே காணமுடியாது தடுத்துவிடும். அஃதொப்ப தன்முனைப்பு உயிரின் அறிவை மறைத்துவிடும். திரையும், படலமும் மறைப்பது போலவே தன்4முனைப்பும் மறைக்கும் தன்மையுடைத்து. ஒரே தன்மையன.

### 7.11.2.6. விலங்கு : நிகளம்

கால்கள் இயங்காமலிருக்க காலில் விலங்கும், கைகள் இயங்காமலிருக்க கைகளில் விலங்கும் போட்டு பூட்டி விடுவர். விலங்கால் பிணிக்கப்பட்ட கால்களும் கைகளும் இயல்பாக இயங்க இயலாது. உயிரைப் பிணித்துள்ள தன்முனைப்பு மலம் அறிவை முடக்கி அறிவு இயங்காதபடி செய்து அறியாமையினால் வாடிடச் செய்து விடும். உயிர் கைகால் ஆகியன விலங்கால் விளங்காமை பெறுகின்றன.

### 7.11.2.7. பஞ்சு

சூரிய காந்த கல் சூரியனது ஒளியில் பஞ்சினைச் சுட்டு எரிக்கும். உயிர் சிவகுருவின் திருவருளால் தன்முனைப்பு ஆற்றல் அழிக்கப்பெறும். பஞ்சு எரிக்கப்படுவது போலவே தன்முனைப்பு ஆற்றல் அழிக்கப் பெறுகிறது.

### 7.11.2.8. உப்பு

தொன்மையான கடல் விரிந்து இருக்கும் போது அக்கடல் நீரில் உப்பு தோன்றி இருக்கும். அதுபோல தன்முனைப்பு உயிரில் தோற்றமில் காலந்தொட்டே பற்றியுள்ளது. உப்பு தன்முனைப்பு மலமாகவும், கடல் உயிராகவும் கூறப்பெறுகிறது.

### 7.11.2.9. பாசி

நீரின் மீது படர்ந்துள்ள பாசியை அகற்றலாம். அகற்றும் போது விலகும். பின்னர் விலகிய பாசி படர்ந்து நீரை மறைத்துவிடும். அதுபோன்று தன்முனைப்பு மலமும் உயிரை மறைக்கும். பாசியும் தன்முனைப்பும் முயலும் போது விலகும் தன்மையுடையது.

### 7.11.2.10. அணு

அணு சிறுபொருள். தன்முனைப்பு சிறுமைப்படுத்தும் பொருள். இறைவனை அடுத்து பெரும்பொருளாயும் அறிவு உடையதாகவும் விளங்குவது உயிரே. இந்த உயிரை தன்முனைப்பு தன்னுடைய அளப்பரிய ஆற்றலால் உள்ள அறிவையும் மறைத்து அறியாமையில் ஆழ்த்தி சிற்றறிவையும் மறைந்து சிறுமைபடுத்திவிடும். தன்முனைப்பு அணு தன்மையைத் தருவது. எனவே தன்முனைப்பினை அணு என்று அழைப்பர். இதுபோன்று இன்னும் பல உள.

## 7.12. தன்முனைப்பு - பல சொற்கள்

தன்முனைப்பு என்னும் பொருளினைத் தரும் சொற்கள் பல. அடைமொழியோடு கூடிய சொற்கள் பல. உருவகமாகக் கூறிய சொற்கள் பல. அவையாவனயெனின் :

| | | | |
|---|---|---|---|
| (1) | மலம் | (26) | விலங்கு |
| (2) | மூலமலம் | (27) | கிழங்கு |
| (3) | முன்மலம் | (28) | கொடி |
| (4) | சகசமலம் | (29) | மோகக்கொடி |
| (5) | சங்கமலம் | (30) | ஆணவக்கொடி |
| (6) | வெய்யமலம் | (31) | காடு |
| (7) | விடமானமலம் | (32) | அக்கினி |
| (8) | காழேமலம் | (33) | அணு |
| (9) | தீமலம் | (34) | உப்பு |
| (10) | மலத்தீ | (35) | பஞ்சு |
| (11) | நின்றமலம் | (36) | பாசி |
| (12) | ஒட்டுமலம் | (37) | பொய் |
| (13) | செறிவு மலம் | (38) | அழுக்கு |
| (14) | இருள்மலம் | (39) | ஆசு |
| (15) | தொல்லை மலம் | (40) | இரவு |
| (16) | நாட்டு மலம் | (41) | அஞ்சனம் |
| (17) | அறிவற்ற மலம் | (42) | அகந்தை |
| (18) | மைம் மலம் | (43) | இருட்பாவை |
| (19) | திண்மை மலம் | (44) | பசுத்துவம் |
| (20) | மன்னுகின்ற மலம் | (45) | பசுநீகாரம் |
| (21) | களிம்பு | (46) | பிருத்தியு |
| (22) | உமி | (47) | மூர்ச்சை |
| (23) | நோய் | (48) | அவித்தை |
| (24) | பிணி | (49) | ஆவிருதி |
| (25) | கட்டு | (50) | நச்சுப்பையிலுள்ள மாணிக்கக்கல் முதலியன. |

## 7.13. உவமை, உருவகம், அடைமொழி, வேறுசொற்கள் சான்று

### 7.13.1. திருவருட்பயன், பாடல்கள்

*7.13.1.1.* "ஆக்கி எவையும் அளித்துஆ கடன்அடங்க
போக்கும் அவன் போகாப் புனல்"

*7.13.1.2.* "உன்னும்உளது, ஐயம்இலது, உணர்வாய் ஓவாது,
மன்னும்பவம் தீர்க்கும் மருந்து"

*7.13.1.3.* "இருள் ஆனது அன்றிஇலது எவையும் ஏகப்
பொருள்ஆகி நிற்கும் பொருள்"

*7.13.1.4.* "ஒருபொருளும் காட்டாதுஇருள்; உருவம் காட்டும்
இருபொருளும் காட்டாது இருள்"

*7.13.1.5.* "அன்றுஅளவி உள்ஒளியோடு ஆவியிடை, அடங்கி
இன்று அளவும் நின்றது இருள்"

*7.13.1.6.* "பலரைப் புணர்ந்தும்இருட் பாவைக்கு உண்டு என்றும்
கணவர்க்கும் தோன்றாத கற்பு"

*7.13.1.7.* "பன்மொழிகள் என்? உணரும் பான்மை தெரியாத
தன்மை,இருளார்தந் தது"

*7.13.1.8.* "இருள் இன்றேல் துன்புஏன்? உயிர்இயற்பேல் போக்கும்
பொருள் உண்டேல் ஒன்றாகப் போம்"

*7.13.1.9.* "ஆசு, ஆதி யேல், அளவை காரணம் என்? முத்திநிலை
பேசாது அகவும் பிணி"

*7.13.1.10.* "ஒன்று மிகினும் ஒளிகவரா தேல், உள்ளம்
என்றும் அகலாது இருள்"

*7.13.1.11.* "அகத்துஉறு நோய்க்கு உள்ளினர்அன்றி அதனைச்
சகத்தவரும் காண்பரோ தான்."

*7.13.1.12.* "பொய் இருண்ட சிந்தைப் பொறியிலார், போதமாம்
மெய் இரண்டும் காணார் மிக."

*7.13.1.13.* "ஒளியும் இருளும் ஒருமைத்துப் பான்மை
தெளிவு தெளியார் செயல்."

*7.13.1.14.* "இன்புறுவார் துன்பார்இருளின் எழும் சுடரின்
பின்புகுவார் முன்புகுவார் பின்."

*7.13.1.15.* "மூன்று திறத்து உள்ளாரும் மூலமலத்து உள்ளார்கள்
தோன்றலர் தொகுத்து உள்ளார் துணை."

*7.13.1.16.* "ஏகன் அநேகன் இருள் கருமம் மாயை இரண்டு
ஆக இவை ஆறு ஆதி யில்"

## 7.13.2. சிவப்பிரகாசம்

7.13.2.1. "எண் அரிதாய், நித்தமாய் இருள் மலத்தில் அழுத்தி" 19

7.13.2.2. "எண்ணரிய சத்தியதாய் இருள்ஒளிர இருண்ட
மோகமாய்ச் செம்பில்உறு களிம்புஏய்ந்து, நித்த
மூலமாய் அறிவு முழுதினையும் மறைக்கும்" 20

7.13.2.3. "நெல்லின் முளைதவிடு உமிபோல் அநாதியாக
நிறுத்திடுவார்; இதுசைவம் நிகழ்த்துமாறே." 25

7.13.2.4. "மூல ஆணவம் ஒன்று, முயங்கி நின்று" 32

7.13.2.5. "ஆங்கு அறிவை அறிவரிதாய் அறிகருவி அணையா
ஆதலினால் இருள் மருவும் அலர் விழிபோல் அதுவாய்" 33

7.13.2.6. "இகலி வரும் இவை உணரின் இருள்வெளியாம் தன்மை"37

7.13.2.7. "இருள் நனி இரவிதான் வந்து
இரித்தலும் இரவில் எண்ணும்
பொருள்நிலை கண்டு மாந்தர்
பொருந்திடு மாறு போல" 66

7.13.2.8. "ஆயஆர் உயிரின் மேவும்
மருளினில் இருளாய் நிற்கும்." 70

## 7.13.3. திருவாசகம்

7.13.3.1. "என்னுடைய இருளை ஏறத் துரத்தும்" கீர்த்தித் திருவகவல் :6.

7.13.3.2. "இருள்கடிந் தருளிய இன்ப ஊர்தி" கீர்த்தித் திருவகவல் : 123.

7.13.3.3. "இருள்கெட அருளும் இறைவா போற்றி"
போற்றித் திருவகவல்:169.

7.13.3.4. "திணித்ததோர் இருளில் தெளிந்தது வெளியே"
கோயில் திருப்பதிகம் : 4

7.13.3.5. "இன்றெனக் கருளி இருள்கடிந் துள்ளத்து"
கோயில் திருப்பதிகம் : 7.

7.13.3.6. "இருள்திணிந் தெழுந்திட்ட தோர்" அதிசயபத்து : 10.

7.13.3.7. "இருளார் ஆக்கை இது பொறுத்தே" பிராத்தனை பத்து : 3

7.13.3.8. "இன்பம் பெருக்கி இருள் அகற்றி எஞ்ஞான்றும்"
திருவெண்பா : 16.

## 7.13.4. திருக்குறள்

7.13.4.1. "இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு."

7.13.4.2. "இருள் நீங்கி இன்பம் பயக்கும் மருள் நீங்கி 352
மாசுஅறு காட்சி யவர்க்கு"
7.13.4.3. "காமம் வெகுளி மயக்கம் இவை மூன்றன் 360
நாமம் கெடக்கெடும் நோய்."
7.13.4.4. "பொருள் கருவி காலம் வினைஇடனொடு ஐந்தும் 675
இருள்தீர எண்ணிச் செயல்."

## 7.13.5. திருமந்திரம்

7.13.5.1. "சூரிய காந்தமுஞ் சூழ் பஞ்சும் போலவே 1117
சூரிய காந்தஞ் சூழ் பஞ்சைச் சுட்டிடா"
7.13.5.2. "இருள் நீக்கி எண்ணில் பிறவி கடத்தி 1516
அருள் நீங்கா வண்ணம் யாதி யருளும்"
7.13.5.3. "பதமுத்தி மூன்றும் பழுதென்று கைவிட்
டிதமுற்ற பாச இருளைத் துரந்து" 2525

## 7.13.6. உபதேசப் பஃறொடை

7.13.6.1. "கள்ளமலக் கட்டகலக் காதலுடன் வல்வினைகள்
உள்ளியருந்தி யுவர்ப்புறவே" 9
7.13.6.2. "பொல்லா 17
"மலமறுப்ப தாமால் வருநரக சொர்க்க"
7.13.6.3. "மலமே அறியாமை மற்றுயிரைத் தீண்டு" 19
7.13.6.4. "நின்மலமா யாவி நிகழ் மலத்தைப் பற்றுதற்கு 20
முன் மலமொன் றுண்டாய் மொழிவதாம்"
7.13.6.5. "தீய 21
செயிருக் குரைப்பதில் லைத் தேர்"
7.13.6.6. "மலமே தென்வேண்டா மற்றுயிர்மே னின்ற
புலமே லெழுந்த நெடும் பொய்யாம்" 23

## 7.13.7. அனுபோக வெண்பா

7.13.7.1. "ஆவி மலப் பிணியா லானதுட லாலரற்கு" 103
7.13.7.2. "சித்தமலம் 138
ஓட்டுதற்கே யாமா லுறுங்கன்ம மீசனுக்கங்"
7.13.7.3. "மலநோய் கரும மருந்தா லுயிர்க்கு 147
நலமா யிருந்துதலே நன்றா - மலநோய்"

7.13.7.4. "அருத்து மருந்தீசற் கருத்து மதனாலே 153
வருத்து மலப்பிணியை மாய்த்தோம்"
7.13.7.5. "மையலே தானாய் மருவுமல நோய்க்குப்" 154
7.13.7. 6. "இருளி லிசையா திசைந்த கருவி 158
மருளி லிசையா வருமா-"
7.13.7.7. "உயிர்க்கோ பிணிமற் றுறுமுடற்கோ வென்னின் 159
மயக்க மிருவகைக்கு மன்னு-"

## 7.13.8. போற்றிப் பஃறொடை

7.13.8.1 "நெல்லுக்கு உமிதவிடு நீடு செம்பில் காளிதமும் 7
தொல்லைக் கடல் தோன்றத் தோன்று உவரும்-"
7.13.8.2. "கண்ணை மறைத்த கடிய தொழில் ஆணவத்தால்" 10
7.13.8.3. "முன்னை மலத்துஇருள் மூடாவகை அகத்துள் 34
துன்னும் இருள் நீக்கும் சுடரே போல்-"

## 7.13.9. சிவப்புண்ணியத் தெளிவு

7.13.9.1. அகத்தியர் துதி
"சகத்துயி ரிருண்மலத் தனுவின் நீங்கியே
உலக உயிர்களின் உள்மலங்கள் ஒழித்து"
7.13.9.2. திருத்தொண்டர் துதி
நீக்கியார் இருண்மலம் நிறைந்த பேரொளி
இருண் மலங்களை நீக்கிய இறைவனின்"
7.13.9.3. சிவகாமியம்மை துதி
"ஒற்கமில் இருண் மலத் தொளியின் நீங்கிய
நற்கதி பெறவருள் நயந்து போந்துவாம்"

## 7.13.10. சிவஞானபோதம்

7.13.10.1. "மோகமாய்ச் செம்பில் உறுகளிம் பேய்ந்து நித்த
மூல மலம் ஆய்அறிவு முழுதினையும் மறைக்கும்"
7.13.10.2.'நெல்லிற்கு உமியும் நிகழ்செம் பினில் களிம்பும்'

## 7.13.11. கந்தர் கலிவெண்பா

7.13.11.1. "ஆணவமான கடலம் கிழித்(து) அறிவில்" 26
7.13.11.2. "பாச இருள் துரந்து பல்கதிரிற் சோதிவிடும்" 45
7.13.11.3. "அகந்தை உரைப்பமறை ஆதி எழுத்தென்" 91

## 7.13.12. சிவஞான தீபம்

7.13.12.1. "செறிதரும்ஆ ணவயிருளால் அனாதிமறைப் புளதாய்த்" 139
7.13.12.2. "ஆணவம்அஞ் ஞானவிருள்; குடிலை சிவம் முதலாம்" 40
7.13.12.3. "மாணவிருள் மலங்கருமம் ஒழித்துயிர்கட் கின்பம்" 41
7.13.12.4. "விரிதரும்ஆ ணவமகன்ற தென்று காணே" 42
7.13.12.5. "சாருமலஞ் செம்பி லுறு களிம்பே போலக்" 130

## 7.13.13. நமச்சிவாய மாலை

7.13.13.1. "இருளே மலங்கருவி யீயாக்கா ணீயும்" 117
7.13.13.2. "காமமே யுற்ற கடும் இருளையும் மேனி" 124
7.13.13.3. "மலமாலே நோக்கி வருமுயிரை நீயாங்" 129

## 7.13.14. வினா வெண்பா

7.13.14.1. "இருளில் ஒளிபுரையும் எய்தும் கலாதி
மருளில் நிலைஅருளும் மானும்-" 2

## 7.13.15. கொடிக்கவி

7.13.15.1."ஒளிக்கும் இருளுக்கும் ஒன்றே இடம்; ஒன்று மேவிடில் ஒன்று
ஒளிக்கும்; எனினும் இருள் அடராது உள் உயிர்க்கு உயிராய்"
11

## 7.13.16. உண்மை நெறி விளக்கம்

7.13.16.1. "பாய் இருள் நீங்கி ஞானம்
தனைக் காண்டல் ஆன்ம ரூபம்" 12

## 7.13.17. சங்கற்ப நிராகரணம்

7.13.17.1. "நன்று நன்று இருள் ஒன்றிய மலத்தாம்"
7.13.17.2. "மன்வயின் நிகழா மலம் இருள் இறைஒளி" 18

## 7.13.18. உண்மை விளக்கம்

7.13.18.1. "அருளானது சிவத்தே யாக்கும் அணுவை
இருளானது தீர இன்று" 43

## 7.13.19. இருபா இருபஃது

*7.13.19.1. "என்னது யானெனும் அகந்தையும் கண்டு*
*யாவர் யாவையும் யாங்கணும் சென்று"* 17

## 7.13.20. சித்தாந்தப் பிரகாசிகை

*7.13.20.1."மலபந்த மாவது : ஆன்மாக்களுடைய ஞானக்கிரியை களை*
*மறைப்பதாய் ஆன்மாக்கள் தோறும் வெவ்வேறாய்த் தத்தம்*
*காலவரையில் நீங்கும். அநேக சத்திகளை உடைத்தாய்*
*நித்தமாய் வியாபகமாய்ச் சட மாயிருக்கும்.* 1

## 7.13.21. நிட்டை விளக்கம்

*7.13.21.1. "செருக்க வுருக்கும் தென்றால்*
*தனுமையல் சேருமெனப்"* 7

## 7.13.22. சதமணிக்கோவை

*7.13.22.1. "சுடரால் இருள்தேடச் சொல்லார்கள் எந்தாச்*
*சுடரால் இருள் தேடச் சொன்னாய்-"* 61
*7.13.22.2."மூல மலம் என்றும் அழியா முதலாம் என்*
*நால நிழற் கடவுள் அன்றறைய-"* 62

## 7.13.23. ஞானாமிர்தம்

*7.13.23.1. "ஆணவம் மாயை கருமம் ஆங்கவை*
*பேணின் செம்பிற் பெருகுஇருந் துகள் என"* 18

## 7.13.24. மதுரைச் சிவப்பிரகாசர் கூறியது

*7.13.24.1. "செம்பினுடன் கூடி இருக்கப்பட்ட காளிதமும், அந்தச்*
*செம்புள்ள வன்றே அதனை மறைத்து உள்ளும் புறமும்*
*கலந்து வெட்டுவாய் தோறும்"*

## 7.13.25. தத்துவப்பிரகாசிகை

*7.13.25.1."அரிசியிலும் செம்பிலும் அநாதியே கூடி இருக்கிற*
*உமியும் களிம்பும் பாகத்தினாலும், ரசத்தினாலும்*
*எப்படி நிவர்த்தி அடைகின்றனவோ அதுபோல-"*

## 7.13.26. தத்துவ விளக்கம்

*7.13.26.1.* "பெருந்திடச் செம்பினிற் காளிதம் போலப் பிணைந்துளதே"
*20:02*

## 7.13.27. திருக்களிற்றுப்படியார்

*7.13.27.1.* "நிகளத்தை ஸ்ரீ போக்குவதும் செய்தான் பொன்னடி
என்புன்தலையே" *94*

## 7.13.28. திருவானைக்காப்புராணம் - ஞானோப =- 23

*7.13.28.1.* அல்லதூ உம் இருளாணவ மயக்குவ ததனால்
நல்ல மாயையுங் கருமமும் நாடிய வுயிரை"

## 7.13.29. திருஞானசம்பந்தர் தேவாரம் : 38.3.

*7.13.29.1.* "ஊனத்திருள் நீங்கிட வேண்டில்
ஞானப்பொருள் கொண்டடி பேணும்"

## 7.13.30. திருவுந்தியார்

*7.13.30.1.* "இரவு பகல் இல்லா இன்ப வெளியூடே
விரவி விரவி நின்று உந்தீபற" *20:02*

## 7.13.31. சிவநெறிப்பிரகாசம் : 54

*7.13.31.1.* "ஞானேச்சாக் கிரியையினைத் தடுக்கும் தீவெம்மை
தடுத்திடும் மந்திர சக்தி செயலில்"

## 7.13.32. வீராகமம் : 91

*7.13.32.1.*"உயிரினுக்குவமை செம் பாங் களிம்பிருள் மலமென் றோதும்"

## 7.13.33. கிரணாகமம் : மாயா படலம் : 2

*7.13.33.1.* "ஆன்மாவிற்கு அநாதியே ஆணவ மலசம்பந்தத்தால் மாசு
உடைய தன்மை உளது. படிகம் தூய்மையாய் இருப்பதற்கும்
செம்பு

களிம்பு உடையதாய் இருப்பதற்கும் எப்படி
காரணம் இல்லையோ.
அப்படியே சிவத்தினது தூய்மைக்கும், ஆன்மாவினுடைய
மாசுடைக்கும் காரணம் இல்லை."

## 7.14. யான், எனது என்னும் தன்முனைப்பு

தன்முனைப்பு என்னும் தளை தனது பொது நிலையில் உண்டாகும் ஒன்றை மற்றொன்றாக எண்ணும் திரிபு உணர்ச்சியால் உயிரானது எந்த வினைக்கும் முதன்மையாகாத தன்னைத் தானாகவே முதன்மையானவன், யான், எனது என்று எண்ணும். தன்னை முதல்வனாகக் கருதியது போலவே பிறரையும் முதல்வராகவே கருதும். தன்னை முதல்வனாகக் கருதுதலும், பிறரை முதல்வராகக் கருதுதலும் ஒன்றே. உயிருக்கு எந்தப் பொருளும் சொந்தம் இல்லை. கொண்டு வந்ததுமில்லை. கொண்டு போவதுமில்லை. இறைவன் உயிர்கள் வினைகள் தீர கொடுத்த கருவி, கரண, புவன போகங்களை எனது என்று எண்ணுவதும் மயக்க உணர்ச்சியே. அது அப்பொருள்களை பிறருடையது என்று எண்ணுதலும் மயக்கவுணர்ச்சியே. தன்முனைப்பு தந்தது இது.

உலகில் மாந்தர்க்கு இன்பமும் துன்பமும் மாறிமாறி வருதல் உயிரின் பண்பென்பர். அந்த இன்பமும் துன்பமும் தானே, வினைப்பயனால், அறியாமையால் தேடிக்கொள்வதும் உண்டு. அடங்காமை, தன்முனைப்பு, புல்லறிவாண்மை உடையவர்களுக்கும் வரும். அவர்களால் பிறருக்கும் வரும். பெரும்பாலும், துன்பம் தனக்குத்தானே தேடிக் கொள்வதற்கும், பிறருக்குச் செய்வதற்கும் அடிப்படைக் காரணம் தன்முனைப்பே. தன்முனைப்பு இரு வகையாகக் கருதப்படும். அகப்பற்றும், புறப்பற்றும் ஆகும். இப்பற்றினால் மனம் மொழி மெய்களால் தீயன புரிந்து தீமைக்கு ஆளாகின்றனர். பிறரை ஆளாக்குகின்றனர்.

### தீக்குணங்கள் மூவகை

மனம், சொல், மெய் என்னும் மூன்றால் தீயன செய்வதால் மூவகை என்பர். (1) மனத்தின் தீக்குணம் : கொலை விரும்பல், காமப்பற்று, பிற ஆசைகள். (2) மொழியின் தீக்குணம் : பொய்க்கூறல், கோள் சொல்லுதல், கோபித்துக்கூறல், பயனில பகர்தல், மெய்யின் (உடம்பின்) தீக்குணம் : களவாடல், வரிதே தொழில் செய்தல், கொலை புரிதல்.

இத்தீக்குணத்தால் ஏற்படும் பாவங்களைப் போக்க பாம்பன் சுவாமிகள் கூறியவை (தகராலய ரகசியம் எனும் நூல்) (1) மனத்தால் வந்த பாவம் நீங்க : கடவுளைத் தியானித்து இருத்தல், தவப்பற்றுடைமை முதலிய நற்செயல்கள். (2) மொழியால் வந்த பாவம் நீங்க : இறைவனை வணங்கல். இறைவன் திருப்பெயரை இடைவிடாது கூறுதல். (3) மெய்யால் (உடம்பால்) வந்த பாவம் நீங்க : கடவுளையும் கடவுட்பேறு உடையாரையும் தொழுது நிற்றல். அவர்களுக்குரிய செயல்களைச் செய்தல்.

யாக்கை நிலையாமை, செல்வம் நிலையாமை, இளமை நிலையாமை உடையது. உலகில் என்றுமுள்ள முப்பொருளைத் தவிர ஏனையவெல்லாம் நிலையாமை உடைத்து என்பதை உணராமையால், 'நான்' என்னும் அகப்பற்றும், எனது என்னும் புறப்பற்றும் கொண்டு புல்லறிவாண்மையால் மற்றவர்களுக்குத் தீமை செய்தும், பிறகு தாமும் தீமைக்கு ஆளாகுகின்றனர். இது தன்முனைப்பின் விளைவு என்பதை நன்குணர்தல் வேண்டும். தன்முனைப்பு என்னும் பொருள் ஒன்றே. ஆயினும் ஆற்றல் அளப்பரியனவாம். தன்முனைப்பினை அதிகமாக உடையவர்கள் நிலையில்லா உடல், வலிமை, செல்வம், இளமை, பதவி, படைபலம் ஆகியவற்றை வலியாகக் கொண்டும் துணையாகக் கொண்டும் நல்லறிவாண்மை இல்லாமையாலும் மற்றும் பலவிதமான காரணங்களாலும் அகப்பற்று என்னும் அகங்காரம், புறப்பற்று என்னும் மமகாரம் பெற்று அல்லலுறுகின்றனர்.

யான் என்னும், எனது என்னும் செருக்கினை அடைவதற்குக் காரணம் தன்முனைப்பின் கூறுகளேயாகும். தெளிவற்ற, அறியாமையுடன் கூடிய மனத்தின் வேறுபாடும் (விகாரம்) தீயனவாகிய நிலையற்ற பொருள்களை விரும்புதலும், பொய்ச்சொல் கூறுதலும், இகழத்தக்கப் பொருள்களை விருப்பத்துடன் நுகர்தலும், என்னைப் போன்றவர் இவ்வுலகில் எவருமில்லை என்று அகந்தை கூறலும், விரும்பி அறிந்தவற்றை மீளவும் மறந்து விடுதலும், மடிந்து இருத்தலும் (சோம்பல்) பொருந்திய உயிரினங்களைக் கூடிப் பிரியாதிருத்தலும், எப்பொழுதும் அச்ச உணர்வு மிகுதற்குக் காரணமாக மிக்க காம விருப்பமும் ஆகியவையெல்லாம் தன்முனைப்பின் கூறுகளாகும்.

### 7.14.1. யான் (நான்) என்பது

யான் (நான்) அறிவுடையவன்; ஆற்றல் மிக்கவன்; என்னால் எதையும் செய்ய முடியும் எவரையும் என்னால் வெல்லவும், அடக்கவும் முடியும் நான் நினைத்தால், அதைச் செய்வேன், இதைச் செய்வேன். இப்படி செய்வேன், அப்படி செய்வேன், என்னை எதிர்பார் இவ்வுலகில் எவருமில்லை. எதிர்த்தவர்ளெல்லாம் போன இடம் தெரியவில்லை, எதிர்த்தால் வாழ முடியாது, வாழாமல் செய்து விட்டேன், என்னை எதிர்க்க இனியொருவன் பிறந்து வரவேண்டும், நான் ஆள பிறந்தவன், அடக்கியாள பிறந்தவன், இது போன்றும், இதற்கு மேலாகவும் செருக்கு மொழிகளை பேசுமாறு செய்வது தன்முனைப்பே. அறியாமையும், மயக்க உணர்வும், செருக்கும் தான் என்ன பேசுகிறோம், என்ன செய்கிறோம் என்பதைப் பற்றி சிந்திக்க விடுவதில்லை. நல்ல நூலறிவும் நல்லோர் வாழ்ந்த பட்டறிவு மிக்க நிகழ்வுகளும் நினைவிற்கு வருவதில்லை.

### 7.14.2. தன்னை அறிதல்

தன்னை அறிதல் என்பது மிகமிக இன்றியமையாத கருத்து. தன்னை அறியாதவன் பிறரை அறிவது எங்ஙனம்? பிறரை அறியாதவன் பிறரை வெல்வது எங்ஙனம்? திருமூலர் தன்னை அறிந்தால் தனக்குக் கேடில்லை. தன்னை அறியாமல் தான் தானே கெடுகின்றான் என்கிறார்.[1] மேலும் அறிவும் இறந்தபின்னரும் கூடவரும். விரதமும் கூடவரும். வேறு எதுவும் வராது என்கிறார்.[2]

உலகிலுள்ள அனைத்துப் பொருள்களும் இறைவனின் உடைமை. அதாவது பொதுச் சொத்து. அதை அறத்தின் வழி பெற்று அறத்தின் வழி செலவிட்டு அறவழி நுகரவேண்டும். அறநூல்கள் இதனையே வலியுறுத்துகின்றன. இதனை அறியாமலும், உணராமலும், அறிந்தாலும், உணர்ந்தாலும், அறிந்த வழி, உணர்ந்த வழி நடக்க முயலாமலும், தடுப்பதே தன்முனைப்பின் ஆற்றல். தன்முனைப்பின் ஒரு பகுதியாகச் செயல்படும் புறப்பற்று எனது என்னும் எண்ணத்தைத் தோற்றுவிக்கின்றது. உலகில் உள்ள எல்லாப் பொருள்களும் தனக்கே உரியதாகக் கருதுவதும் அப்பொருள்கள் மீது பற்றுக் கொள்வதும், அப்பொருள்கள் மீது உள்ள பெருவிருப்பினாலும் அவற்றின் உண்மை தன்மையை அறியாமலும் ஆகும் இது 'எனது' என்பதாகும்.[3]

செருக்குடன் சேர்ந்து கானல் நீர் எனத்தகும் சுற்றத்தாருடன் மகிழ்ந்து வினை வயப்பட்டு வாழ்வதே என் வாழ்வு.[4]

மெய்கண்ட தேவர் "தன்முனைப்பின் இலக்கணம் யாது" என்று தன்னைச் செருக்குடன் கேட்ட சகலாகம பண்டிதருக்கு, அவரையே விரலால் சுட்டிக்காட்டி அதற்குரிய விடையைக் கூறியது போல, திருஞானசம்பந்தரும் தன்முனைப்பின் இயல்பை விளக்கிக் கூறாமல் இராவணனையே அதற்கோர் உருவமாகக் கூறியுள்ளார்.

தன்முனைப்பின் கூறாக சிவஞான தீபம் நூல் கூறுவது : நிச்சயம், அஞ்ஞானம், விகற்பம், தீமை, நிலையில்லாதப் பொருளை விரும்பல், பொய் கூறல், விரும்பி இழிவான நுகர்வு நுகர்தல், தனக்கு நிகர் எவரும் இல்லையென அகந்தை கூறல், விரும்பி பெற்றதை மறைத்தல், விரும்பிய உயிரைப் பிரியாதிருத்தல், துஞ்சல், அச்சம், அதிகமான காம உணர்வு, எல்லாம் தன்முனைப்பின் கூறாகும்.[5]

உயிர்தான் தான் என்பதை அறியாமல் தன்னுடலைத் தான் என்பான். உயிர் உடலை விட்டு பிரியின் அவ்வுடலைச் செத்த பிணம் என்பான். அழியாத உயிரைத் தான் என்று எண்ணாது அழியும் உடலைத் தான் என்றும், பின்னர் பிணம் என்றும் கூறும் பேதமை தன்முனைப்பின் விளைவாகும்.[6]

காண்டலும் கேட்டலும் முதலிய அறி செயல்களும் உண்ணல், உடுத்தல் முதலிய புறச்செயல்களும் உடலின் புடைப்பெயர்ச்சி. இப்புடைப்பெயர்ச்சியைப் பெரிதாக எண்ணியதால் உயிராகிய தன்னைத்தான் என்று அறியாமல் தனக்குக் கிடைத்த உடலைத் தான் என்று சொன்னதால் தீமைகள் அனைத்தும் தோன்றுகின்றன.[7]

தன்முனைப்பு உள்ளவர்கள் இறைவனை அறிய மாட்டார்கள். யான், எனது என்னும் செருக்கு அற்றவரே அறிவர்.[8]

நான்முகன் 'நான்' என்னும் தன்முனைப்பால் சிலவற்றை உரைக்க, பழம் முறையின் முதல் எழுத்து என மகிழ்வோடு கூறும் பிரணவத்தின் பொருளை முருகன் கேட்க, நான்முகன் விழிக்க "மெய்ப்பொருள் உணராத நீ படைப்புத் தொழிலை மேற்கொள்ளல் எங்ஙனம்" எனக்குட்டினார்.[9]

விரும்பு தவவொழுக்கமும், நல்நோன்பும், நல்லொழுக்கமும் ஆகிய இவையெல்லாம் முன்பிறவியில் செய்த நல்வினைகளின் விளைவு என அறிந்து, எல்லாச் செயல்களை உணர்ந்து இரும்பு போல இருந்து வந்த மனம் அழல்பட்ட மெழுகினைப் போல உருக,

இலையா லெவர்க்கு மிலை யாம்" அனுபோக வெண்பா 39 எப்பொழுதும், யான் செய்தேன், பிறர் செய்தார் என்று உயிர்கள் மேல் வைத்துக் கருதும் பற்றுப் பொருள்களில் அவா ஏற்படுகின்ற புறப்பற்று அகப்பற்றான பெரிய பற்றினை விட்டால் திருவருள் கிட்டும்.[10]

இதுகாறும் கண்டவற்றால் தன்முனைப்பு உயிரை மறைத்து, அறிவை மறைத்து, இறைவனைக் காண ஒட்டாமல் மறைத்து தீவினைகள் செய்யத் தூண்டி துன்பத்திற்கு ஆளாக்கி தன்னைக் காட்டிக் கொள்ளாமல் மறைத்துக் கொண்டுள்ளது என்பதை அறிய முடிகிறது.

## 7.15. தன்முனைப்பு பிறவிக்குக் காரணம்

உண்பதற்குப் பயன்பெறும் அரிசி அரிசியாகவே பயிரிடப்படுவதில்லை. நெல்லாகவே பயிரிடப்படுகிறது. நெல்லிலுள்ள உமி முளை தவிடு ஆகிய மூன்று பொருள்களை நீக்கினால்தான் உண்ணப்பயன்படும். அரிசி கிடைக்கும். அரிசி பயன்பட வேண்டுமானால் அரிசியுடன் இணைந்து உள்ள உமி முளை தவிடு ஆகிய முப்பொருள்கள் நீக்கப்பட வேண்டும். அது போலவே உயிர்களும் தன்னுடன் இணைந்து உள்ள ஆணவம் என்னும் தன்முனைப்பு நீக்கப்பட வேண்டும். தன்முனைப்பு உள்ளவரை உயிர்கள் இறைவனின் திருவருளைப் பெறவும், திருவடியைச் சேரவும் இயலாது. ஆக உமியை நீக்கி அரிசியை உண்போர் போல தன்முனைப்பை நீக்கி உயிரைக் காப்பவர் இறைவன்.

இறைவன் தன்முனைப்பு இருளிலிருந்து மீண்டுவர மாயையை அளிக்கிறார். மாயை சேர்க்கையால் உயிர் பிறவி எடுக்கிறது. முதல் பிறவி இறைவனால் அளிக்கப்பெறுகிறது. அடுத்தடுத்து பிறவிகள் வரக்காரணம் உயிர்கள் தன்முனைப்பு என்னும் மலத்தில் ஆழ்ந்திருப்பதும், இருக்கும் காலத்தில் வினைகள் புரிவதும், அவை சமநிலை அடையும்வரை பிறவி எடுக்க நேர்கிறது. எனவே பிறவிக்குக் காரணம் தன்முனைப்பே.

அவன் என்றும் அவள் என்றும் அது என்றும் தனித்தனியாக உணரப்படுகின்ற தொகுதிகளை உடையது இவ்வுலகம். இவ்வுலகம் தோன்றுதலும், நிலைபெறுதலும் ஒடுக்குதலும் என்ற மூன்று தொழில்களுக்கு உட்படுவதாகும். ஆதலால் இது பேரறிவுடைய ஒருவனால் தோற்றுவிக்கப்பட்டு, நிலைபெற்று விளங்குகின்றது. உயிர்களோடு உடனுள்ள தன்முனைப்பு என்னும் குற்றம் உயிர்களை விட்டு நீங்காமையால் உயிர் பிறவி எடுக்கின்றது.

## 7.16. தளையே பிறவிக்குக் காரணம்

தளை உயிர்களின் அறிவை மறைத்து இருளில் ஆழ்த்துகின்றது என்பது அறியப்பட்ட உண்மை. அரிசியை விதைத்தால் அரிசி விளையாது. ஏனெனில் முளைக்கும் தன்மையுள்ள முளை அரிசியில் இல்லை. முளைக்கும் தன்மையுள்ள முளையை மூடி இருப்பது உமி. அரிசியை உமி மூடியிருந்தால் தான் நெல்லெனப்படும். நெல் தான், விதைத்தான் முளைக்கும். நெல்லில்தான் முளைக்க முளை உமி தவிடு என்ற மூன்றும் உளது. அதுபோலத்தான் தன்முனைப்பு, வினை உள்ள உயிரினம் தான் பிறக்கும். இந்தப் பிறவிக்கு முதற்காரணம் தன் முனைப்பே. நெல்லை வறுத்து விட்டால் நெல் முளை கருகிவிடும். பின்னர் நெல் முளைக்காது. நெல்லிற்குப் பிறவி இல்லை. அதுபோலவே தான் தன்முனைப்பு திருவருளால் ஆற்றல் அழிக்கப்பட்டுவிட்டால் மீண்டும் பிறப்பு இல்லை என்பதை உணரலாம். எனவே தளை உள்ளவரை பிறவி உண்டு.[1]

உயிர்கள் இறப்பையும் பிறப்பையும் பொருந்தாது. எப்போது எனின் உடலும் தளையும் ஒன்றாகக் கூடாது போது உயிர்கட்கு தளையும் உடலும் ஒத்துப் போகக் கூடிய போதுதான் பிறவி பொருந்தும். அவை பொருந்தாத போது பிறவி இல்லை.[2]

வீடுபேறு அடைதற்குரிய உயிர் என்னும் கொடி கால பழமைக்கும் எட்டாது இணைந்து விளங்கும். தன்முனைப்பால் தளைக்கப்பட்டுள்ளது. அதன் விளைவாகிய அறியாமை என்னும் கொடி இருப்பதால் உயிர் இருவினைக்காக உடல் எடுக்கும்.[3] தன்முனைப்பே பிறவிக்குக் காரணம் என்கிறது திருக்களிற்றுப்படியார்.[4]

தன்முனைப்பின்றி பிறவி இல்லை என்பது அனுமானக் காட்சி. சுடர் என்பது ஞானம். இருள் என்பது தன்முனைப்பு. ஞானம் உள்ள இடத்தில் தன்முனைப்பு இருக்காது. தன்முனைப்பே பிறவிக்குக் காரணம் என்று உணர்வது அனுமானக் காட்சி.[5]

வினை சடமானதால் தானாக வந்து கூடாது. உயிருக்குள்ள இயல்பு தளையினால் உடல்வரும்.[6]

உலகம் ஓர் இயல்பு உடையதாக இல்லாமல் ஆண், பெண் சட வடிவமாகத் தோன்றி அழிகின்றது. தன்முனைப்பு உயிர்களின் அறிவையும் செயலையும் மறைத்து நீங்காமல் இருப்பதால் இவ்வுலகம் மீண்டும் தோன்றுகிறது. தோன்றும் போது தன்வினைக்கேற்ப உடல் எடுக்கிறது உயிர்கள்.[7]

தன்முனைப்பு சேர்க்கையால் மாயையின் செயலால் இவ்வுடல் தோன்றும்.[8] பிறவி எடுத்ததின் மூலம் தளையைப் போக்கலாம்.[9] உடல் எடுத்து வினைப்பயனை அனுபவிப்பதால் தன்முனைப்பு என்னும் தளைப் பிணியைப் போக்கும்.[10]

தன்முனைப்பால் உயிர் விருப்பப்படி பிறவியும் உடலும் எடுக்கும். கையில் கொடுக்கப்பட்ட ஊன்றுகோல் போலும் இறைவன் தன்முனைப்பிற்கு உட்பட்டு கிடந்த உயிர்களுக்குப் பிறப்பை வழங்குகின்றான். அறிவும் செயலும் ஒழிந்த எல்லா உயிர்களுக்கும் அவ்வுயிர்களின் விருப்பத்தை நுணுகி நோக்கி இறைவன் பேருதவி புரிகிறான்.

எனவே தளையால் தன் முனைப்பால் வினையால் பிறவி உண்டு.

## 7. தன்முனைப்பு குறிப்பு

### 7.1-7.5. தன்முனைப்பு - அடிக்குறிப்புக்கள்

7.1. "ஏகன் அநேகன் இருள் கருமம் மாயை இரண்டு
ஆக இவை ஆறு ஆதியில்" திருவருட்பயன் 52

7.2. "அறிவு அறிந்தது எல்லாம் அசத்து ஆகும் ஆயின்
குறிசிறந்த நின் உணர்வில் கூடா . . ." வினாவெண்பா 5

7.3. "பலரைப் புணர்ந்தும் இருட்பாவைக்கு உண்டு என்றும்
கணவர்க்கும் தோன்றாத கற்பு" திருவருட்பயன் 25

7.4. "ஆசைப் படுவாரை யாசைப் படுத்துவித்தல்
பேசுமுல கியல்பின் பெற்றியான் - மாசுமலம்
உற்றாரைப் பற்றியுறுவதல்லா தொவ்வாமல்
அற்றார் மேற்செல்லாதறி" சித்தாந்த சிகாமணி

7.5. "தொட்ட பேர் தம்மைத் தொடுவதல்லாற் றெல்லுயிரைக்
கட்டிப் பிடிப்பதில்லைக் காண்" சித்தாந்த சிகாமணி

7.6. "ஊமன்கண் போல ஒளியும் மிக இருளே
யாமன்கண் காணா தவை" திருவருட்பயன் 18

7.7. "வசிப்புண்டார் தம்மை வசிக்கு மலந்தேவால
தெகிப்புண்டா லாங்கவனைத் தீண்டா" சித்தாந்த சிகாமணி

7.8. "தன்னைத் தான் காக்க சினம் காக்க; காவாக்கால்
தன்னையே கொல்லும் சினம்" திருக்குறள்

7.9. ஆசை யறுமின் ஆசை யறுமின்
ஈசனோடு ஆயினும் ஆசை அறுமின்" திருமந்திரம்

7.10. "இடும்பைக்கு இடும்பை படுப்பர் இடும்பைக்கு
இடும்பை படாஅ தவர்" திருக்குறள்

7.11. "அரிய என்று ஆகாதஇல்லை பொச்சாவாக்
கருவியான் போற்றிச் செயின்" திருக்குறள் 537

7.12. "தண்டி மலமுயிரைத் தாவுமே லாவிக்குத்
தெண்டிப்பே யில்லை யெனச் செப்புவரோ - மண்டி
உயிரைக்கே புத்தியுரைப்பதல் லாற்றீய
செயிருக் குரைப்பதில்லைத் தேர்" சித்தாந்த சிகாமணி 21

7.13. "எறிந்திடும் பொருண்மே லிச்சை எனக்கெதி ரியாவ ரென்ன
வெறிந்திடும் கோபத்தோடு விகற்ப நிச்சயமற் றாசை
செறிந்திடும் பொறியுட் போகஞ் சிறந்தபே ருவகை யோடு
குறித்திடும் குணங்க ளெல்லாங் குறுகலா ணவமதன்றே"
பெருந்திரட்டு

7.14. "புகழும் மலம் ஒழிதற்குக் கலாதி முதல் மாயை
பொருந்திடும் அரன் அருளால்; போதம்; தீபம்
சகலம்எலாம் உடனாய ஆறு போலும்;
தரும் அருளைமலம் உயிர்கள் சாராமல் மறைக்கும்"
சிவப்பிரகாசம்

7.15. மூலமலம் என்றும் அழியா முதலாம் என்
றால நிழற் கடவுள் அன்றைய . . ." ஞானாமிர்தம் 19

7.16. அந்நியம் ஆனவை உணர்த்தி அநந்திய மாய் நிறைந்த
அறிவு அறியாமையி னாலும் அருள்நிலவும் காலம்
தன்னில் அவனே யாயு மாய் நின்ற தொன்மை
தாம் உணர்தலாலும் உயிர்தான் என ஒன்று இலதாய்
மன்னியிடும்; மலம் மாயைகன் மங்கள் மாறி
வந்திடும்; இது இங்கு வழுவாது ஆதலின் மனத்தால்
உன்னரிய திருவருளை ஒழியமலம் உளது என்று
உணர்வு அரிதாம் அதன் உண்மை தெரிவதாம் உனக்கே"
சிவப்பிரகாசம் 36

7.17. செப்பருமா ருயிர்வர்க்கம் அளப்பரிதா மென்றும்
செறிதருமா ணவவிருளால் அனாதி மறைப்புள தாய்த்
தப்பரிய இருவினையின் துய்ப்பதனுக் கிசைந்த
தனுவாதி விதம் மாயை தரவதனைப் பொருந்த

அப்பரிசே உயர்திணையோ டஃறிணையாய் விரிந்த
அருநிரயஞ் சுவர்க்கநில் மிசையிதமோட கிதம்
எய்ப்புறநின் றருந்திய மருவி நிறைவ னருளால்
இருவினை யொத் திடிவரிய பரபதமுற் றிடுமே"

7.18. "ஆணவமுன் மாயைமுடி வாம்மலமைந் தவற்றின்
ஆணவமுங் கன்மமுமா ருயிர்க்கலா மலமாம்
பூணுயிரு மாயையிருந் திரோனதயிவை மூன்றும்
புனிதன் மாம் மலங்கள் புனிதனுக்கே னென்னில்
மாணவிருள் மலங்கருமம் ஒழித்துயிட்கட் கின்பம்
மகிழ்ந்துதவுங் கருணையினால் வைத்துவா முலகில்
பேணுமரு மருந்துபல வகை தொடரும் பிணிநோய்
பெருகுமருத் துவனகற்றுந் திறமதுபோற் குறியே."

7.19. "பன்மொழிகள் என்? உணரும் பான்மை தெரியாத
தன்மை இருளார் தந்தது" திருவருட் பயன் 26

7.20. "பொய் இருண்ட சிந்தைப் பொறியிலார் போதமாம்
மெய் இரண்டும் காணார்மிக" திருவருட் பயன் 44

7.21. "காயமே தானாய்க் கருதுவிக்கும் வஞ்சத்தைத்
தோயவே நெஞ்சைத் துணிவிக்கும் - நேயமா
மீசனையே நெஞ்ச விழப்பிக்கும் மங்கையர்பால்
வாசமே யாக்கும் மலம்" அனுபோக வெண்பா 130

7.14.2. தன்னை அறிதல்

7.14.2.1. "தன்னை யறியத் தனக்கொரு கேடில்லை
தன்னை யறிமால் தானே கெடுகின்றார்" திருமந்திரம் 2355

7.14.2.2. "பண்டம்பெய் கூரை பழகி விழுந்தக்கால்
உண்டஅப் பெண்டிரும் மக்களும் பின்செலார்
கொண்ட விரதமும் ஞானமும் அல்லது
மண்டி அவருடன் வழிநட வாதே" திருமந்திரம் 144

7.14.2.3. "யான் எனது என்பது தன்முனைப்பு
யான் எனது என்றற்ற இடமே திருவடியா"
கந்தர் கலிவெண்பா 34

7.14.2.4. "பண்டு தொடர்பற் றொடுசூற் றமெனும்
வெண்டே ரைமகிழ்ந் துவிழித் திடவோ" கந்தர் அனுபூதி 91

7.14.2.5. "நிச்சய மஞ் ஞானமன விகற்பந் தீமை
நிலையில்லாப் பொருள்விரும்பல் பொய்ம்மை கூறல்
இச்சையுடன் இகழ்வான போகந் துய்த்தல்
என்னை நிகர் இல்லையென அகந்தை கூறல்
நச்சியறிந் ததைமீள மறைத்தல் துஞ்சல்
நண்ணுமுயி ரினைப்பிரியா திருத்த லென்னும்

## 7.16. தளையே பிறவிக்குக் காரணம்
## அடிக்குறிப்புக்கள்

7.16.1. . . .   . . .   மறைப்பாம்
மலமே சட முயிர்க்கு மாறப் பிறப்பாம்

7.16.2. மலமே கருவி மருவா பசுவின்
குலமே பிறப்பிறப்பைக் கூடாச் - சொலுமிரண்டும்
ஒத்தபோ தன்றோ வுறும்பிறவி யெவ்வாமல்
வைத்திருபோ தின்றாக மன்"   அனுபோக வெண்பா 4

7.16.3. "ஆணவம் என்னும் மோகக்கொடி உடல் எடுக்கும்
முத்தி முதற் கொடிக்கே மோகக்கொடி படர்ந்(து)
அத்தி பழுத்த(து) அருளெ ன்னும் - கத்தியினால்
மோகக் கொடியறுக்க முத்திப்பழம் பழுக்கும்
ஏகக்கொடீ எழுங் காண் இன்று" திருக்களிற்றுப்படியார் 93

7.16.4. "ஆணவம் என்னும் மூலமலம் அகல இறைவன் அருள்
அகளமய மாய்நின்ற அம்பலத்துளம் - கூத்தன்
சகள மயம் போல் உலகில் தங்கி - நிகள மாம்
ஆணவ மூலமலம் அகல ஆண்டனன் காண"
திருக்களிற்றுப்படியார் 4

7.16.5. சுடரால் இருள்தேடச் சொல்லார்கள். எந்தாய்
சுடரால் இருள்தேடச் சொன்னாய் - சுடர்கின்ற
ஞானத்தால் ஆணவத்தை நாடரிது நாடுவதென
ஞானத்தால் ஆணவத்தை நான்"
சிவஞான பாடியம் மேற்கோள் பாடல் 6

7.16.6. "கன்மம் சடமலங்கள் கூடும் கருத்தில்லை
நின்மலனும் கூட்ட நினைத்திடான் - மன்னுயிர்கள்
தாமாய் உடம் பெடுக்கும் தன்மையிலை எவ்வாறு
கோனே உடம் பெடுத்தல் கூடும்" சதமணிக்கோவை 34

7.16.7. "உலகம் எலாம் ஒருவனோடு ஒருத்தி ஒன்று என்று
உளதாகி நின்று அளவில் ஒடுங்கும் பின்னும்
மலம் அதனால் உளது ஆகும் உருவம் மாற
வருவது போவது செல்வது ஆதலானும்"
சிவப்பிரகாசம் 16

7.16.8. "மலமடைய மாயா தனுவினையும் அந்த
மலமிடையக் காய மனுவாம்" உபாயநிட்டை 39

7.16.9. மலப்பிணியைத் தீர்க்கும் மருந்தா லதற்கிங்
கிலைப்பிணி மற்றென்னாம் இயம்பு" அனுபோக வெண்பா 41

7.16.10. "ஆணவம் - வெம்பந்தம்
மண்வடிவால்
வெம்பந்தம் நீக்கும் விமலநீ மெய்ஞ்ஞான
பண்டாரமும் மணிக்கோவை 21

# 8. மாயை - படைப்புத் தோற்றுவாய்

## 8.1. மாயை

'மாயை' என்னும் சொல் பல்வேறு பொருள்களில் பயன்படுத்தப்படுகிறது. எனவே இச்சொல்லின் பொருள் சொல்லப்படும் இடத்திற்கு ஏற்ப பொருள் கொள்ள வேண்டும்.

### 8.1.1. மாயை : தமிழ்

மா - பெரிது. ஐ - வியப்பு. 'ஐ' என்பது வியப்பாகும் என்பது தொல்காப்பிய நூற்பா. மா + ஐ ; மாயை. இது புணர்ச்சி விதிப்படி அமைகிறது. எனவே மாயை என்பது 'பெரும் வியப்பு' எனும் பொருள் தரும். எப்படியெனில் விரிந்த உலகில் (பிரபஞ்சம் - பேரண்டம்) உலகங்களும் உயிரினங்களும் தோன்றுவதற்குக் காரணமானது ஒரு பொருள். எனவே அப்பொருளைப் 'பெரும் வியப்பிற்கு' உரியது என்றனர் போலும்.

### 8.1.2. மாயை : வடமொழி

மா + ஒடுங்குதல். யா - தோன்றுதல். மாயா உலகம் தோன்றுவதற்கும் ஒடுங்குவதற்கும் காரணமாய் இருக்கிறது. மாயா என்ற சொல் தமிழில் மாயை எனப்பட்டது என்பர். வடமொழி சொற்கள் தமிழுக்கு வந்து பயன்படுத்தப்பட்டால் தமிழுக்கு ஏற்றவாறு மாற்றம் செய்யப்பெறும். அதன்படி மாயா மாயை ஆயிற்று என்பர். வடமொழியின் ஈற்று ஒலி மாயா மாயை ஆயிற்று. சான்றாக, கலா-கலை, சிலா-சிலை, மாலா-மாலை போன்றவைக் கருத்தில் கொள்ளத்தக்கது. தமிழ்ச்சொல் வடமொழி ஆயிற்று என்பதும் உண்டு. மொழிகள் கலப்புறும் போது ஒருமொழி பிறமொழிக்குக் கொடுப்பதும் உண்டு. வாங்குவதும் உண்டு.

### 8.1.3. மாய்

'மாய்' என்னும் பகுதியிலிருந்து மாயை வந்தது என்பர். மாய்தல் - மறைதல் (மாய்ந்தான், மறைந்தான்) தோன்றுவதற்கும் மறைவதற்கும் காரணமான பொருள் மாயை எனப்படும்.

**8.1.4. ஒரு (பொருள்) கொள்கையினர்** எனப்படும் ஏகான்மாவாதிகள் - யா-எது. மா - ஆராய்ந்தால் இல்லையாகின்றதோ அதுவே 'யாமா'. யாமா மாயா ஆனது என்பர்.

### 8.1.5. மாயை - படைப்புத் தோற்றுவாய் : விளக்கம்

படைப்புக்கள் அனைத்திற்கும் தோற்றுவாயாக இருப்பது படைப்புத் தோற்றுவாய் எனப்படும்.[16] மாயையும் படைப்புக்கள் அனைத்திற்கும் காரணமாய் உள்ளது. எனவே மாயையைப் படைப்புத் தோற்றுவாய் என்பர். மேலும் மாயை - திரிசொல். படைப்புத் தோற்றுவாய் இயற்சொல். திரிசொல் கற்றவர்க்கு மட்டும் புரியும். இயற்சொல் எல்லோருக்கும் புரியும். செய்யுளில் இயற்சொல், திரிசொல், திசைசொல், வடசொல் ஆகிய நான்கும் பயன்படுத்தப்படும் என்பது தொல்காப்பிய நெறி. வீட்டினுள் நுழையவும், வீட்டிலிருந்து வெளியே வரவும் உள்ள இடம் இல்வாய் எனப்படும். இல்வாய் முன்பின்னாக மாறி வாயில் ஆயிற்று. எனவே உலகமும், உலகப் பொருள்களும் படைக்கப்பட்டு வெளியே வருவதற்கும், அவை மீண்டும் உள்ளே சென்று ஒடுங்குவதற்கும் காரணமான பொருளே படைப்புத் தோற்றுவாய்.

### 8.1.6. மாயை : பொய்த் தோற்றம்

மாயையைப் பொய்த்தோற்றம் (illusion) என்றும், எண்ணங்களின் பொய்த்தோற்றம் (Delusion) என்றும் கூறுவர். வேதாந்தத்தில் மாயையை அநிருவசனம் என்றும், அது உள்ளதும் அன்று, இல்லதும் அன்று இன்னதென சொல்ல இயலாதது என்று கூறப்படும். மேலும் மதி மயக்கம் என்னும் பொருளிலும் வழங்கப்படுகிறது. மாயையைப் பற்றிய உண்மையான கருத்து சொல்ல இயலவில்லை. சான்றாக, இந்திரன் தன் மாயையின் மூலம் பல உருவம் எடுத்தான் என்பது போன்ற செய்தி உள. ஈண்டு மாயை என்னும் சொல் மந்திரம், தந்திரம் என்ற பொருளைத் தரக்கூடும். சுவேதாசுவதர உபநிடதத்தில் மாயை இயற்கை, இயற்கையை ஆட்டிப்படைப்பவன் பரம்பொருள் என்று கூறப்படுகிறது. சருவஞ்ஞனோத்தர ஆகமத்தில் (1:2) மாயை உலகம் தோன்றுவதற்கும் ஒடுங்குவதற்கும் இடம் என்கிறது. புத்தமதத்தினர் வெளி உலகம் பொய் என்னும் கருத்தினை உடையவர். உலகம் மாயை அது பொய்த் தோற்றம் என்னும் பொருளில் வழங்குவதாயிற்று.

## 8.2. மாயை : இலக்கணம்

உலகம் தோன்ற முதற்காரணம் மாயை. மாயை அநிருவசனமோ, பொய்த் தோற்றமோ அன்று. ஆக்கல் அழித்தலைச் செய்ய வல்லது. மிக நுண்ணியது. கண்ணிற்குத் தெரியாது. எனவே அருவம் அறிவற்றது. எனவே சடப்பொருள் பலவும் தோன்ற வித்தாக உள்ளது. உண்மைப்பொருள். என்றும் உள்ளது. எனவே நிலையான பொருள். இது தொன்மையானது. தோற்றம் இல்லாதது. எனவே அநாதி எனப்படும். உயிர்களுக்கு உடல், உடற்கருவிகள், உலகம், உயிர்கள் நுகர வேண்டிய உலகப் பொருள்கள் கொடுக்கும். வினையை நீக்க உதவும். எனவே தன் செயலின் விரிவு உடையது. எங்கும் பரந்துள்ளது (வியாபகமானது). ஆயினும் இறைவனின் பரப்பிற்குள் (வியாபகத்துள்) அடங்கியது. இறைவனின் வைப்பு ஆற்றல் எனப்படும். இது ஒரு தளை (பாசம்-மலம்). ஏனெனில் உயிர்க்கும் மயக்கம் தருவதாய் உள்ளது. எப்படியெனின் உலகப் பொருள்கள் உயிரின் கவனத்தைக் கவர்ந்து தன் மீது ஆசை கொள்ளும்படி செய்து அறிவை மயக்குகின்றது.[5]

## 8.3. மாயை : உலகம் தோன்ற முதற்காரணம்

சைவ சித்தாந்தம் உலகம் தோன்ற முதற்காரணம் மாயை என்று கூறும். ஆனால் வேதாந்திகளில் சிலர் இக்கொள்கை ஏற்றுக் கொள்ள மாட்டார்கள். உலகம் தோன்ற முதற்காரணம் கடவுள். எப்படி எனின் பிரமத்தில் எல்லாம் தோன்றி, பிரமத்தில் ஒடுங்கும் என்பர். ஆனால் சித்தாந்திகள் உலகம் தோன்ற முதற்காரணம் மாயை.[6,7,8] நிமித்த காரணம் கடவுள், துணைக்காரணம் சிற்சக்தி என்பர்.

எப்படியெனின் ஒரு மண் பானை செய்ய வேண்டுமானால் மூன்று காரணங்கள் தேவை. முதல்காரணம் மண். மண் இருந்தால் தான் பானை செய்ய முடியும். இரண்டாவது காரணம் குயவன். இது நிமித்த காரணம் எனப்படும். குயவன் இல்லாவிடில் மண் பானை ஆகாது. மூன்றாவது காரணம் துணை காரணம் குயவன் பானையைச் செய்யும் முன் அவன் உள்ளத்தில் செய்தல் அறிவுருத் தோன்ற வேண்டும். இதுபோன்றே கடவுள் உள்ளத்தில் அறிவுரு தோன்ற, அதிலுள்ள உருவங்களை மாயையின் மூலம் பல உருவங்களாகப் படைக்கின்றான் என்றும், இதனைச் சங்கல்ப மாத்திரையால் படைப்பான் என்றும் கூறுவர். சேற்றில் செந்தாமரை முளைத்தது என்றால், செந்தாமரை முளைப்பது செந்தாமரை கிழங்கில் இருந்துதான் என்பது கண்கூடு. ஆனால் கிழங்கிலிருந்து செந்தாமரை முளைக்க சேறு ஆதாரமாக இருக்கிறது. அதனால் சேறு இல்லையானால் கிழங்கிலிருந்து செந்தாமரை முளைக்காது என்ற

கருத்தில் சேற்றில் செந்தாமரை முளைத்தது என்பர். அது போன்றே உலகமும்.

மாயை ஆற்றலின் தொகுப்பு. காரண நிலையில் உள்ளது. இதன் காரிய நிலை தத்துவம் எனப்படும். அணுக்கள் உலகம் தோன்ற முதல் காரணம் என்பர். அஃது உண்மை அல்ல. எப்படியெனின் அணுக்களின் தன்மை தோன்றுதலும் அழிதலும் ஆம். மாயை அழியாதது.[9]

## 8.4. மாயை : தளைகளில் ஒன்று

பாசம், மலம், கட்டு, சூற்றம், அழுக்கு, தளை என்பது ஒரு பொருள் குறித்து வரும் சொற்கள். உயிர் தன்முனைப்பு (ஆணவ) மலத்தை இயல்பாகக் கொண்டுள்ளது. மாயை உயிருக்கு இடையில் வந்து சேரும் மலம். இடையில் வந்த மலம். ஆதலின் 'ஆகந்துகமலம்' எனப்படும். மயக்கம் தரும் மாயை என்றும் குறிப்பிடப்படும். உடல், உடற்கருவிகள், உலகம், நுகர்வு பொருள்கள் (தனு கரண புவன போகங்கள்) ஆகியவை உயிரிடைத் தோன்றி உயிர் வீடு பேறு பெறும் வரையில் தன்முனைப்பு மலத்தின் ஆற்றலைக் கெடுக்கக் கூடிய அறிவைக் கொடுக்கும் கருவிகளாக இருக்கின்றது.[1]

## 8.5. மாயை : வியப்பிற்குரியது

தோன்றுவதும், ஒடுங்குவதும் வினை. வினை என்பது செயல். செயல் ஒரு பொருளைப் பற்றி நிற்குமேயன்றி தனித்து நிற்காது.[2] தோன்றுதலும் ஒடுங்குதலும் பற்றி நிற்கும் பொருளே மாயை. மாயையிலிருந்தே விரிந்த உலகம், ஞாயிறு மண்டலம், கோள்கள், விண்மீன்கள், உயிரினங்கள் தோன்றுகின்றன. ஒடுங்குகின்றன. இத்தகைய செயல்களுக்குக் காரணமாதலால் மாயை வியப்புக்குரியது.

## 8.6. மாயை : நுண்மையின் நுண்மை

திண்மையான நிலம் முதலியனவற்றைக் காட்டிலும் தன் மாத்திரை நுண்பொருள். தன் மாத்திரையை விட அகங்கார தத்துவம் நுண்மை. அதைவிட புத்தி தத்துவம் நுண்மை. அதை விட மூலபிரகிருதி நுண்மை. அதைவிட கலை வருக்கம் நுண்மை. இவற்றைக் காட்டிலும் மாயை நுண்மையாம் என சிவப்பிரகாசம் கூறுகிறது.[3]

## 8.7. மாயை ஒளிமலம்

மாயை வினைமலத்தைப் போக்கவல்லது. எப்படியெனின் ஆடையில் செம்மண், களிமண் படிந்து அழுக்கு ஏற்படும். உவர் மண்ணும் அழுக்குதான். ஆயினும் முன்னுள்ள அழுக்கினைப் போக்க உவர்மண் என்னும் அழுக்கினைக் கொண்டு போக்கப்படுகிறது. உவர்மண் அழுக்காயினும் அழுக்கினைப் போக்கும் உயர்பொருள் ஆகிறது. அதுபோன்றே மாயை ஒருமலம் ஆயினும் வினைமலத்தைப் போக்கவல்ல தன்முனைப்பு இருளைப் போக்கவல்ல ஒளியாக விளங்குகிறது.[4]

உயிர் உடல் எடுத்து உலகப் பொருள்களை நுகரும் போது, நுகர்ந்து இன்பம் பெற்றபின், இளமை, யாக்கை, செல்வம், பதவி போன்றவை எல்லாம் நிலையில்லாதது என்பதை அறியும். நிலையில்லாத பொருள்களை முறையில்லாத முறையில் துய்த்து அதற்காக மீதி வினைகளைப் புரிந்து மீண்டும் மீண்டும் பிறக்க வேண்டியுள்ளது. மீண்டும் பிறவாமை வேண்டின் இறைவன் திருவருள் பெற்று அவனடி சேர வேண்டும். இதனை உணர்வதுதான் ஒளி. இந்த ஒளிபெற மாயை அனுபவபூர்வமாக உதவுகின்றது? வீடுபேறு பெறும்போது மாயையும் நீக்கப்பட வேண்டியதுதான். எனவே மாயை உயிருக்குத் தளையாகவும், ஏனைய தளைகளைப் போக்க உதவும் ஒளியாகவும் உள்ளது.

## 8.8. மாயை : சடப்பொருள்

சடப்பொருளுக்கு அறிவு கிடையாது. மாயைக்கும் அறிவு கிடையாது.[14] எனவே மாயையும் ஒரு சடப்பொருளே ஆகும்.[13] சடப்பொருள்கள் அறிவு இல்லாமையால் தம்மைத்தாமே அறியாது. மாயையும் தன்னை அறியாது. உயிர்அறிவு உள்ளது. எனவே உயிர் தத்துவங்களை அறியும். உயிர்கள் வாயால் சுவைக்கும் சுவை ஆறு வகைப்படும். இந்தச் சுவைகள் தம்மைத்தாமே அறியாது. அறியவும் இயலாது. ஏனெனில் இவை அறிவற்றவை. மனிதனே ஆறு சுவைகளைச் சுவைத்து இன்னது இன்ன சுவை என்று விளக்கிக் கூறுவான். விளக்கிக் கூறுவதற்குக் காரணம் அறிவு இருப்பதே. எனவே அறிவற்ற சுவையான பொருள் போன்ற மாயையும் அறிவற்ற சடப்பொருள் ஆகும்.

## 8.9. மாயை : அழிவில்லாதது

பொருள்களில் அழியக் கூடியனவும் அழியாதனவும் உண்டு. குடம் ஆடை முதலியன அழியக்கூடியன. இவைதாமே தொழில்படாது. ஏனெனில் இவை அறிவற்ற சடப்பொருள் ஆதலால்

தாமே இயங்காது. அழியக்கூடியது. நஞ்சு ஒருவகைப் பொருள். இது உண்டவரை அழிக்கும். பின் தானும் அழியும். நஞ்சு தன் விளைவைக் காட்டிய பின்னர் அழிகிறது. மாயை மட்டும் தன் விளைவைக் காட்டும். காட்டிய பின்னர் அழிவது இல்லை. அறிவற்ற பொருள் ஆனாலும் அழியாதப் பொருள் மாயை ஆகும் என்பது இதனால் தெரிகிறது. மேலும் மாயை தானே உலகைப் படைக்கவில்லை. இறைவனே நிமித்த காரணனாய் இருந்து உலகைப் படைக்கிறான். இதனால் மாயை அறிவற்றது என்பது தெரிகிறது.[14]

## 8.10. மாயையின் விளைவு

மாயையின் விளைவாக ஏழு குணங்கள் ஏற்படுகின்றன. அவை: 1. விருப்பம் கொள்ளல், 2. கொண்ட விருப்பத்தால் அதை நிறைவேற்ற அறியாமையாமல் தீவினை புரிதல். 3. பொய்க்கூறல், 4. ஒன்றின்மீது பற்றுக்கொண்டு மூர்ச்சித்தல், 5. அழுக்காறு கொள்ளல், 6. பிறருக்குக் கேடு நினைத்தல், 7. அச்சப்படுதல் ஆகியனவாம்.[15] தன்முனைப்பு மலத்தைப் போக்க மாயை என்னும் ஒளிமலம், மயக்க உணர்வால் மலப்பிணியிலிருந்து விடுபடாமல் மேலும் மலப்பிணிக்கு ஆளாகின்றது. மாயைக்கு மயக்க உணர்வு உண்டானபடியால் மேலும் மலப்பிணியாகிறது என்பது தெரிகிறது. எப்படி எனின்.

## 8.11. மாயை மயக்கம் தரும்

மனிதர்கள் மற்றவர்களின் அழகைப் பார்த்து அதாவது இளம்பெண்ணின் அழகைப் பார்த்து மயங்கி அவரையடைய வேண்டுமென விருப்பம் கொள்கின்றனர். இளமையும் அழகும் அழியக்கூடாது. நிலையானது அல்ல. அவற்றை நற்பயன் ஏதுமில்லை என்பதை அறிவு அறிய முடியாமல் மாயை மயக்கம் தருகிறது. அறியாமையால் மயக்கம் வருகிறது. அந்த மயக்கத்தால் அப்பெண்ணை அடைய வேண்டி தீவினை புரிகின்றனர். பொய்க் கூறுகின்றனர். நல்வினையை அறவுணர்வை மறக்கின்றனர். அந்த விருப்பம் நிறைவேறாமையால் மூர்ச்சித்து விழுகின்றனர். அந்தப் பெண்ணை அடைந்தவர் மீது அழுக்காறு கொள்கின்றனர். அவர்களுக்குக் கேடு செய்ய நினைக்கின்றனர். இப்படியாக பெண் மீது கொண்ட விருப்பம் போல், பொன், பொருள், பதவி, செல்வாக்கு முதலியனவற்றின் மீதும் பற்றுக்கொண்டு தீ வினை புரிந்து, தீவினையின் பயனால் மீண்டும் பிறந்து, தீவினை புரிகின்றனர். இறப்பும் பிறப்பும் சக்கரம் போல சுழன்று வரக்காரணம் மாயை தரும் மயக்கமே ஆகும்.

## 8.12. மாயை குணமா? குற்றமா?

ஒரு பொருளின் குணம் வேறு. குற்றம் வேறு. குணம் சிறந்தது. குற்றம் இழிந்தது. குணம் என்பது பொதுச்சொல். அது இருவகையாய்ச் செயல்படும். நல்வழி செயல்படும்போது நற்குணம் என்றும், தீய வழியில் செயற்படும்போது தீக்குணம் என்றும் கூறப்படும். தீக்குணம் குற்றம். மாயை உயிருக்கு நன்மை பயக்கும் போது குணம் ஆகவும், தீமை பயக்கும் போது குற்றம் ஆகவும் கருதப்படும்.[11] இது இரண்டையும் தரும் தன்மையுடையது எப்படியெனின், உயிருக்கு உலகமும் உலகப்பொருளாகிய நுகர்வு பொருள்களும் இன்பம் தருவன. இன்பம் தருகின்ற அவற்றை நல்வழி பெற முடியாத போதும் எப்படியாவது அடைய வேண்டும் என்ற விருப்பத்தால் தீவினை புரிந்து பெறுகின்றனர். அந்த; தீவினை குற்றமானதால் உயிருக்குப் பிறப்பைத் தருகிறது. எந்த மாயை முதலில் இன்பம் தந்ததோ அதுவே பின்னர் துன்பம் தருகிறது. குணமாக இருந்தது குற்றமாக ஆகிவிட்டது. உடல் எப்போதும் ஒரேமாதிரி இயங்காது. வயது ஆகஆக வளரும், பின் தளரும். இளமையில் மிக்க இன்பம் தந்தன முதுமையில் இன்பம் பெற முடியாமல் துன்பம் தருவனவாகும். இதனையுணர்ந்து மயக்கதிலிருந்து விடுபட்டு இருவினை ஒப்பு ஏற்படுமானால் பிறவாமை வரும். பிறவாமையைத் தருவதால் குணம் ஆகும். பிறப்பு தரும்போது குற்றம் ஆகும்.

## 8.13. மாயையின் செயல்

மாயையின் செயல் இரண்டு. ஒன்று தோற்றம். உடல், உருக்கம், கருவிகள், உலகப்பொருள்கள் (நுகர்வு பொருள்கள்) ஒன்றிலிருந்து ஒன்றாகத் தோற்றுவிக்கின்றது. தன்முனைப்பு என்னும் மலஇருளைப் போக்கும் ஒளியாய் விளங்கும். நுண்பொருளிலிருந்து பருப்பொருளாய்த் தோன்றியவை அனைத்தும் மீண்டும் நுண்பொருளாய் ஒடுங்கும். ஒளிமலமாய் இருந்த மாயை வினைபுரிய செய்து அறியாமையைத் தந்து மலமாகும். இப்படியாக மாயை தோற்றம், ஒடுக்கம் என்ற இரு செயல் புரிகின்றது.[10] ஒருகாலத்து மலத்;தைப் போக்கும் ஒளியாயும், மற்றொரு காலத்து அறியாமையைத் தரும் இருள் மலமாகவும் செயல்படுகிறது.

## 8.14. மாயையின் வகைகள்

மாயை இருவகைப்படும். (1) சுத்த மாயை, (2) அசுத்த மாயை. சுத்த மாயை சிவதத்துவம் என்றும், செலுத்தும் தொகுதி (பிரேர காண்டம்) எனப்படும். அசுத்த மாயை பிரகிருதி மாயை, உயிர்

தத்துவங்கள், நுகர்வு தொகுதி போக காண்டம் எனப்படும். நுகர்வோன் தொகுதி ஏழும் நுகர்வு தொகுதி இரு பத்து நான்கும், செலுத்தும் தொகுதி ஐந்தும் சேர்ந்து முப்பத்தாறு கருவிகள் (தத்துவம்) ஆகும்.

## 8.15. காரண காரிய தத்துவம்

செயல் ஒன்று செயல்பட வேண்டுமாயின் அது செயல்பட ஒரு பொருள் தேவை. அந்தச் செயல் செயல்படுவதற்கு ஏதேனும் ஒரு காரணம் இருத்தல் வேண்டும். காரணமின்றி செயல் எதுவும் செயல்படாது. இதனை இயல்பியல் அறிவியலின்படி கூறவேண்டுமாயின் தூண்டல் இல்லையாயின் துலங்கல் இல்லை. ஒரு பொருள் துலங்க வேண்டுமாயின் தூண்டல் தேவை. மாயை காரணம். உடல், கருவிகள், உலகம், நுகர்பொருள் காரியம்.

### 8.15.1. காரணப் பொருள்

யாதொன்று காரியத்துக்கு முன்னே உண்டானதுமாய், வேறேயும் உண்டாக்குதுமாய் இருக்குமோ அது காரணம். காரண நிலை ஆற்றல் வடிவாய்ப் புலப்படாது நிற்கும் நிலை.

### 8.15.2. காரியப் பொருள்

காரிய நிலை ஆற்றல் புலப்படத் தோன்றும் நிலை. காரியப் பொருள்கள் என்பன காரணப்பொருள்கள் முற்றிலும் மாறுபாடு அடைந்து தோன்றுவன அல்ல. அவற்றின் ஒரு பகுதியே காரியப்பட்டுத் தோன்றும்.

### 8.15.3. காரண காரிய நிலை

காரணம் என்பது ஒன்றாய்த் தோன்றி நிலை பெற்றிருக்கும். காரியம் என்பது பலவாய் தோன்றி அழியும். மாயை காரண நிலை. உடல், கருவி, உலகம் நுகர்பொருள் காரிய நிலை இவைகள் தோன்றும், ஒடுங்கும். மாயை அழியாதது. எனவே உலகிற்கு முதற்காரணம் மாயை. உயிர் காரணங்களுக்கு உட்பட்டது அன்று.[11,12]

### 8.15.4. காரிய பாட்டின் வகைகள்

ஒரு காரணத்திலிருந்து ஒரு காரியம் தோன்றும். அந்தக் காரியத்திலிருந்து இன்னொரு காரியம் தோன்றும். இந்தக் காரியம்

முந்தைய காரியத்திலிருந்து தோன்றியதால் முந்தையக் காரியம் காரணம் ஆகிவிடும். எனவே காரணத்திலிருந்து தோன்றும் காரியம் வேறு ஒரு காரியம் தோன்றியவுடன் காரணம் ஆகிவிடுகிறது. முதல் காரணம் காரணமாகவே இருக்கும். மாயை முதற்காரணம். முதல்காரணத்திலிருந்து தோன்றிய காரியம். அதிலிருந்து வேறொரு காரியப்பொருள் தோன்றும் போது காரணமாகிவிடும். எனவே காரியப்பொருள் இருநிலைப்படும். முதற்காரணத்திலிருந்து தோன்றிய போது காரிய நிலை என்று இதிலிருந்து ஒரு காரியப்பொருள் தோன்றும் போது இதுவே காரண நிலையாக இருக்கும். எனவே காரண நிலை காரிய நிலை என இரண்டாகும். சான்று : தன்னைப் பெற்றெடுத்தத் தந்தைக்கு மகனாகவும், தான் பெற்றெடுத்த மகனுக்குத் தந்தையாகவும் இருக்கிறான். ஒரு நிலையில் தந்தை, மற்றொரு நிலையில் மகன் ஆக இருநிலை உண்டு.

காரியப்பொருளாக மாறுவது ஒரே வகையாக இருக்காது. பலவகையாக இருக்கும். அவை : (1) சமூகம், (2) ஆரம்பம், (3) விவர்த்தனம், (4) விருத்தி, (5) பரிணாமம். தூய விரிந்த உலகம் (சுத்தப்பிரபஞ்சம்) சுத்த மாயையில் இருந்து காரியப்பட்டுத் தோன்றும்.

## 8.15.5. சமூகம்

சமூகம் என்பது காரணப் பொருள். பல கூடிக் காரியப்பொருள் தோன்றும் என்பது குவித்து வைத்து இருக்கும் எள் குப்பை, நெல் குவியல் போன்றதாகும். பல்லாயிரக்கணக்கான மயிர்க்கற்றைகளைத் தொகுத்து செய்யப்பட்ட சாமரம் சமூகம் என்பர் சமணர்.

## 8.15.6. ஆரம்பம்

ஆரம்பம் என்பது ஊடும் பாவுமாகிய நூல் இழைகளால் நெய்யப்படும் ஆடைக்குப் பொருந்தும். நூல் ஒரு பொருள். ஆடை வேறு பொருள். நூல் முதற்பொருள் ஆடையில் நூலின் வடிவம் சிதையவில்லை. இதற்கு ஆரம்பம் எனப்பெயர். ஆயினும் இது மாற்றமே தருக்க மதத்தவர் ஏற்பர். ஆயினும் சமூகம், ஆரம்பம் ஆகியவை எல்லாவற்றிற்கும் பொருந்தாது.

## 8.15.7. விவர்த்தனம்

கானல் அலையில் நீர் தோன்றவது மங்கிய ஒளியில் கயிறு பாம்பாகத் தோன்றுவது விவர்த்தனம் எனப்படும். இது ஒன்று

மற்றொன்றாகத் தோற்றம் தருவதாகும். இது திரிபுணர்ச்சி. திரிபுணர்ச்சி என்றால் ஒன்று (கயிறு) மற்றொன்றாக (பாம்பாக) உணர வைப்பது. கயிறு வேறு பாம்பு வேறு. போதிய ஒளியும், உணர்வில் தெளிவும் இல்லாமையால் கயிறு பாம்பாகத் தோற்றம் தருகிறது. இது தோற்றப் பிழையால் ஏற்பட்ட திரிபுணர்ச்சி இங்குக் காரணமும் இல்லை. காரியமும் இல்லை.

## 8.15.8. பரிணாமம்

பரிணாமம் என்பது கூர்தல் அறம் என்பர். பால் தயிராக மாறுகிறது. பாலில் தயிர் சேர்த்தால் பால் தயிராக மாறும். அதுபோன்று அசுத்த மாயை பரிணாம மாற்றம் அடைய வேண்டுமானால் தளை சேர வேண்டும். சேராவிடில் பரிணாமம் ஏற்படாது

## 8.15.9. விருத்தி

சுத்த மாயை செயல்பட்டு தூய உலகம் தோன்றும். இது விருத்தி எனப்படும். விருத்தி என்பது மடித்து வைக்கப்பட்டிருக்கும் துணியை விரித்துக் கட்டினால் கூடாரம் ஆகும். இது நுண்ணிய பரிணாமம் ஆகும். சுத்த மாயையின் காரியங்கள் அனைத்தும் பரிணாமமே.

## 8.16. சுத்த மாயை - தூய படைப்புத் தோற்றுவாய் தோற்றம்

இறைவன் திருவருள் ஆற்றலால் சுத்தமாயை ஞான ஆற்றல் வடிவான ஒலி (நாதம்) தத்துவமும் செயல் ஆற்றல் வடிவான விந்து தத்துவமும், ஞான ஆற்றலும், செயல் ஆற்றலும் ஒரே அளவாய்க் கூடிய சாதாக்கியத் தத்துவமும் ஞான ஆற்றல் குறைந்து செயல் ஆற்றல் மிகுந்து மகேசுவர தத்துவமும், ஞான ஆற்றல் மிகுந்து செயல் ஆற்றல் குறைந்து சுத்த வித்தை தத்துவமும் தோன்றும். சுத்த மாயை காரண நிலை. சுத்த உலகம் காரிய நிலை.

இறைவன், உருவம், பெயர், தொழில் ஆகியவை இல்லாதவன். பொது நிலையிலும், சிறப்பு நிலையிலும் அளவற்ற பெயர் உருவம் உடையவன். சிறப்பு நிலையில் இலயம், போகம், அதிகாரம் என மூன்று கூறப்படும். இடம் காலம் தேவை. அந்த இடமே சுத்த உலகம். இதற்குக் காரணம் மாயை. சுத்த மாயை (1)

நாதம், (2) விந்து, (3) சதாசிவம், (4) மகேசுவரம், (5) சாதாக்கியம் என ஐந்தாகும்.

தத்துவம் என்றால் உடல் போல உடனே அழிவது இன்றி உலகம் ஒடுங்கும் காலம் வரை நிலைத்து நிற்பது. தேவர்கட்கு இறப்பு உண்டு. ஆயினும் அவர்களை அமரர் என்று அழைப்பது போன்று காரிய கேடுகள் உரிய கருவிகளுக்குத் தத்துவம் எனப் பெயர் ஏற்பட்டது. எனவே அகக் கருவிகள் புறக்கருவிகள் தத்துவம் எனப்படும்.

ஒரு பொருளைப் பற்றி அறிய வேண்டுமானால் அப்பொருளின் பெயர், இனம் ஆகியவற்றின் அடிப்படையில் வேறுபடுத்தலாம். இதனால் இன்ன பொருள் என உணரலாம். அந்த உணர்வு சொல்லாய் கிடைக்கும். சொல் எழுத்தால் ஆனது. எழுத்து ஒலியால் உண்டானது. சுத்த மாயையின் செயலே காரியமே ஒலி. காரணம் சுத்த மாயை.

## 8.16.1. சுத்த மாயையின் பெயர்கள்

சுத்த மாயை, அவத்தை, சத்தி, குண்டலி, குடிலை, மாமாயை, சத்தப்பிரமம், வாக்கிறைவி, சிவம் ஆகிய பெயர் உடையது. அத்துவித வெண்பாவில் முப்பத்தொரு பெயர் கூறப்படும்.

## 8.16.2. சுத்த மாயையின் செயல்

இதன் காரியம் இரண்டு. ஒன்று சொல் உலகம். இரண்டு பொருள் உலகம். சுத்த மாயையே சொல் உலகிற்கும் பொருள் உலகிற்கும் முதற்காரணமாகும்.

## 8.16.3. எழுத்து

எழுத்து ஓசைக்குக் காரணம் சுத்த மாயை. எழுத்தோசை உருவம் உடைய பொருள்களைப் போல்வன. நா, இதழ், அண்ணம் முதலியவற்றால் ஒலிக்கப்படும் இசை ஓசைகள் அந்த உருவப் பொருள்களைப் புலப்படச் செய்யும் ஒளி போன்றது. பொருள் உணர்வைத் தோற்றுவிக்கும் ஆற்றல்தான் எழுத்தோசை. அந்த ஆற்றலே நினைவு ஆற்றல் (ஞாபக சக்தி) எனப்படும். இதன் பொருள் என்னவெனின் உணர்வைத் தோற்றுவிக்கும் ஆற்றல். இந்த ஆற்றலே நாதம்.

தன்னை உணர்த்தின் எழுத்து. இதுவே முறை. ஆயின் "எழுதப்படுதலின் எழுத்து என்பர். இது குன்றக்கூறல் என்னும் குற்றமாகும். காரணம் எழுத்திற்குரிய விளக்கம் முழுமை பெறவில்லை. குறைவாய் உள்ளது. எனவே குன்றக்கூறல். இதில் வரிவடிவம் காட்டும். ஒலி வடிவம் காட்டாது. இரண்டையும் காட்டினால்தான் முழு விளக்கமாகும். "மொழி முதற்காரணமாம் அணுத்திரள் ஒலி எழுத்து" இதுவும் குன்றக்கூறல் ஆகும். எவ்வாறு எனின் இதில் ஒலி வடிவம் காட்டப்படுகிறது. ஆனால் வரிவடிவம் காட்டப்படவில்லை. எனவே முழு விளக்கம் தரவில்லை. எனவே குன்றக் கூறல் ஆகிறது. குன்றக்கூறல். குறைவாகக் கூறல்.

எழுத்து உந்தி முதல் தோன்றும் வளி தலைமுதல் எண்வகை உறுப்புக்கள் உற்று விண்ணின் மாத்திரையாகிய ஒலியோடு எழுந்து செவிக்குப் புலனாகி மொழிக்கு முதற்காரணமாய்த் திகழ்வது. இக்குறியீடு வடிவத்திற்குப் பொருந்த வேண்டி எழவு எண்ணாது எழுத்து எனக் குறியீடு செய்தனர். "மெய் தெரிவளி இசை" தொல்காப்பியம் பிறப்பியல் 20.

## 8.16.4. எழுத்து மாத்திரை அளவு

மா + திரம் = மாத்திரம். மா - அளவு திரம் - நிலை (திறம்). எழுத்துக்களின் அளவையும் நிலையையும் காட்டுவது.

"கண்ணிமை நொடியென அவ்வே மாத்திரை
நுண்ணிதின் உணர்ந்தோர் கண்டவாறே"[18]

ஈண்டு கண்ணிமை என்பது கண் இமைக்கும் கால எல்லையைக் குறிக்கும். நொடி என்பது இருவிரல் இணைத்து அசைத்து அதன் மூலம் தோன்றும் ஓசையின் அளவைக் குறிக்கும். கண்ணிமை இயற்கை செயல். இது கால அளவைக் காட்டும். இரண்டும் கூடியதே மாத்திரையின் அளவு என இலக்கணம் கூறுகிறது.

## 8.16.5. சொல்

நாவால் ஒலிபெறும் தொடர் இசைக்குச் 'சொல்' எனப்பொருள். ச் + ஒல் ; சொல் ச் ; நா. ஒல் ; ஒலி ; நாவொலி. எனவே நாவால் ஒலி பெறும் தொடர் இசை எனப்படும். சொல், மொழி, கிளவி என்பன வெவ்வேறு சிறப்புப் பொருள் தருவன. ஆயினும் யாப்பில் (செய்யுள், பாட்டு) ஒரு பொருள் கிளவிபோல் பயன்படுத்தப்பெறும்.

### 8.16.6. கிளவி

கிளவி என்பது நாவின்றும் கிளத்தலை உடையது. 'கிள்' என்னும் முதனிலைத் தொழிற்பெயர் ஏவல்பொருள் உணர்த்தும். அகரத்தோடு கூடி கிள என ஆயிற்று. இ என்னும் இறுதிச்சொல் பெற்று கிளவி ஆயிற்று. செவிக்குப் புலனாகிப் பொருள் உணர்த்தி நிற்பதே சொல். வரி வடி அடையாளங்களும், மெய்ப்பாடுகளும் பொருள் உணர்த்தும். ஆயினும் சொல் ஆகாது.

"எழுத்தே தனித்தும் தொடர்ந்தும் பொருள் தரின் பதமாம்"[17] நன்னூல் நூற்பா. எழுத்துக்கள் தனித்தோ, இணைந்தோ தொடர்ந்தோ, உயர்திணை, அஃறிணை ஆகிய பொருளையும், பொருளின் தன்மையையும் அல்லது செயலையும் குறைவு இன்றி உணர்த்துவது ஆகும். "பிறபொருள் சுட்டுதற் கண்ணே யாம் சொல்" இதன்மூலம் சொல்லைப் பற்றி அறியலாம்.

### 8.16.7. சொல்லும் பொருளும்

சுத்த மாயையின் காரியம் சுத்த உலகம். மொழிகள் யாவும் சொல்லுலகம் (சொற்பிரபஞ்சம்) சொல் உலகைச் சுத்த பிரபஞ்சம் என்று கூறுவர். பொருள் உலகை அர்த்த பிரபஞ்சம் என்பர். சுத்த மாயையின் வழி (அத்துவா) எழுத்து, சொல், மந்திரம் என மூன்றாகும். ஓசைகள் பொருளைத் தருவனவும் உண்டு. தராதனவும் உண்டு. இசை ஓசை பொருளைத் தராது. கடல் ஓசை போல வெறும் ஒலியாய் இருப்பது இசை ஓசை. இசையில் இனிமை இருக்கும் பொருள் இருக்காது. இசை ஓசை உரத்தும், மெலிந்தும் எழுகின்ற புற முயற்சியால் பிறப்பது எழுத்தோசை பொருளைத் தரும்.

### 8.16.8. நான்கு வகை சொல் (சொல் - வாக்கு)

சொல் நான்கு வகைப்படும். அவை : (1) மிக நுண்ணியது (சூக்குமம்) (2) நுண்ணியது (பை சந்தி) (3) பருமையானது (மத்திமம்) (4) மிக பருமை-வைகரி. நான்கு சொற்களும் ஐந்து கலைகளும் பற்றுக்கோடாகச் சார்ந்து ஐவகையாகி சிவம், சத்தி, சாதாக்கியம், மகேசுவரம், சுத்தவித்தை என்னும் ஐந்து தத்துவங்களில் இருக்கும்.

| | சொல் | கலை | தத்துவம் |
|---|---|---|---|
| 1. | சூக்குமம் | சாந்திய தீதை | சிவம் |
| 2. | பை சந்தி | சாந்தி | சத்தி |
| 3. | சூக்குமவைகரி | பிரதிட்டை | மகேசுவரம் |
| 4. | தூல வைகரி | நிவிர்த்தி | சுத்த வித்தை |

### 8.16.9. மிகு நுண்சொல் - சூக்கும வாக்கு : இலக்கணம்

மிகு நுண்சொல் மற்ற சொற்களைப் போலத் தோன்றி ஒடுங்குவது இல்லை. மற்ற மூன்று சொற்கள் தோன்றக் காரணமானது இச்சொல். காரண உடலின் உள்ளாக ஒலி மாத்திரையாய் விளங்கும். அதற்குரிய இலக்கணம் உடையது. கேடின்றி நிலைபெறும். தவத்தின் சிறப்பால் மிகு நுண்சொல்லினை உள்ளபடி காண்பவர்க்கு நீங்காத பேரறிவும் மகிழ்வும் தன்னுரிமையும் (சுதந்திரம்) நிலையான தன்மையும் (நித்தியத்துவம்) உடையதாய்ச் சுத்த மாயையின் உலகில் உள்ள அபரமுத்திப் பெரும் நுகர்வு உண்டாகும். இச்சொல்லிற்கு வேறாய் உயிர் தன்னைக் காணும் காலத்து அதுவே பரமுத்தி பேறு பெறும்.

### 8.16.9.1. நுண்சொல் (பைசந்தி வாக்கு) இலக்கணம்

பேசுபவரின் சிந்தையில் நுண்வடிவாய் இருக்கும். சித்தத்தில் ஓர் உணர்வு மட்டும் தோன்றும் (நிருவிகற்பமாய்) வேறுபாடின்றி உணரும் ஒலி. எதுபோலவெனின் மயிலின் முட்டைக்குள் இருக்கும் நீரிலே மயில் தோகையின் ஐந்து நிறங்களும் கலந்து தோன்றுவது போல இருக்கும்.

### 8.16.10. பருமை சொல் (மத்திமை வாக்கு) இலக்கணம்

இச்சொல் நுண்சொல்லிற்கும், மிகு பருமை சொல்லிற்கும் இடையில் (மத்தியில்) இருக்கும். சொல்பவன் தன் உள்ளே உணரும் சவிகற்ப உணர்விற்குக் காரணமாய் இருப்பது. செவியில் கேட்காது. மெல்லிய ஓசை கழுத்தில் இருக்கும். உள்ளே உணரும் ஓசை. உயிர் வளியின் தொழிற்பாடு இன்றி உதான வளியின் தொழிற்பாடு மட்டும் உடையது. பல், நா, இதழ், அண்ணங்களில் பட்டு வெளியே சிதறிப் போகாது. உள்ளே நுண்வடிவாய் இருக்கும். எழுத்துக்களின் வடிவு பிரிந்து விளங்கும். சுருங்கக் கூறின் தன்னுள்ளே உணரும் ஓசை. எழுத்துக்களின் வடிவு பிரிந்து தோன்றும் ஒலியாம். இது நடுநிலை சொல் (மத்திமை) ஆகும்.

### 8.16.11. மிகு பருமை சொல் - வைகரி வாக்கு : இலக்கணம்

மிகு பருமையான சொல் ஆனதால் தன் காதிற்கும் பிறர் காதிற்கும் நன்கு கேட்கும். நினைத்த பொருளைச் சொல்லும் சொல். சொல்பவனுக்கும், சொல்வதைக் கேட்பவனுக்கும், பகுத்து உணர்வு உண்டாவதற்குக் காரணமாய் இருக்கும். உடம்பில் எழும் உதானன் என்னும் காற்றினால் தள்ளப்பட்டு மத்திமை இடத்து நுண்ணிய

வடிவாய்ப் பிரிந்து தோன்றும். உயிர்க்காற்றால் தள்ளப்பட்டு எழுந்து ஐயத்திற்கு இடம் இல்லாத வகையில் சிக்கல் இன்றி புறத்தில் பருமை வடிவில் வரும். வாயின் வழியாய் வெளிவரும்.

## 8.17. மொழி

பொருள் உணர்த்த வரும் ஒலியும், அந்த ஒலியின் தொடர்ச்சியும் மொழி எனப்படும். முழுமையுற்றது மொழி எனப்படும். அஃதாவது கருதுகின்ற பொருளையோ, பொருள் தன்மையையோ, அல்லது செயலையோ குறைவின்றி உணர்த்துவதே மொழியாகும். இயற்கை ஆகிய ஓசை ஒலிகளைக் கொண்டு செயற்கையாகச் சொற்களையும் தொடர்களையும் (வாக்கியம்) ஆக்கிக் கொண்டது மொழி. இது மக்களின் ஆக்கப்பொருள்.

### 8.17.1. மொழியின் தோற்றம்

காட்சிக்கும், கருத்திற்குரிய பொருள் உணர்வு, ஐம்பொறி வாயிலாக உயிர்கள் எய்தும். அவ்வுணர்வுகளை உடல் உறுப்புக்களின் அசைவுகளாலும், குறிப்பு ஒலிகளாலும் மட்டுமின்றி ஓசை ஒலிகளை மொழியாக்கி உணர்த்தும் அறிவையும், அதற்கேற்ற வாய் அமைப்பையும் மக்கள் உயிர் பெற்றுள்ளது. அவ்வறிவு ஐம்பொறிகளுக்கும் அப்பால் அவற்றோடு தொடர்புடைய ஒரு புலனுக்கு உரியதாகும். தத்துவ நூலார் அதனை அகக்கருவி (அந்தகரணம்) என்பர். தொல்காப்பிய இலக்கண நூல் ஆறாவது அறிவு என்று கூறும். அதன் குறியீடு மனம். மன உணர்வை வேறு சில உயிரினங்களும் பெற்றிருந்தாலும் தம் உணர்வை வாயால் வெளியிடும் ஆற்றல் இல்லை. எனவே பேசாத வாய், உண்ண மட்டும் உடைய உயிரினங்களை 'வாயில்லாப் பிராணி' என்கின்றனர். எனவே வாயின் பயன் பேசுதல் எனவாகிறது. மொழியால் உயர்ந்தோர் உயர்திணை எனவும், உயராதவர் அஃறிணை எனவும் சொல் இலக்கணம் கூறுகிறது.[19]

### 8.17.2. மந்திரம்

"அறிய வேண்டிய உண்மைப் பொருளை உணர்த்துவதும், பிறவிப் பெருங்கடலைத் தாண்டுவதற்கு உதவுவதும் 'மந்திரம்' என்னும் பொருளாகும்" என காமிகாகமம், தந்திராவதார படலம்-2 கூறுகிறது. மந்திரங்களில் பாகுபாடு முறைகளையும், ஐந்தெழுத்து, ஆறெழுத்து, எட்டெழுத்து, ஒன்பது எழுத்து, பத்து எழுத்து எனக் கூறப்படும் எழுத்துக்களின் உண்மையைப் பற்றி வாதுளாகமம் கூறுகிறது. கூறப்படும் எழுத்துக்களின் உண்மையைப் பற்றி வாதுளாகமம் கூறுகிறது.

## 8.17.2.1. காமிகாகமம் : அர்ச்சன விதிப்படலம் கூறுவது

### 1. சத்தியோசாத மந்திரத்தை நியசிக்கும் முறை :

சத்தியோசாதம் பிரபத்யாமி என்று சித்தி கலையை வலக்காலிலும் சத்யோசாதாயவை நம: என்று இருத்தி கலா சத்தியை இடக்காலிலும், பவே நம: என்று தியுதி சத்தியை வலக்கையிலும், அபவே நம: என்று இலக்குமியை இடக்கையிலும், அநாதிபவே நம: என்று மேதா சத்தியை மூக்கின் நுனியிலும், பஜஸ்வமாம் நம: என்று காந்தி சத்தியை சிரத்தினும், பவ நம: என்று ஸ்வதா சத்தியை வலத்தோளிலும், உத்பவாய நம: என்று திருதி சத்தியை இடத்தோளிலும் நியசிக்க வேண்டும்.

## 8.17.2.2. வாமதேவ மந்திரத்தை நியசிக்க வேண்டிய முறை

வாமதேவாய நம: என்று ரஜா சத்தியை குஹ்யத்திலும், ஜ்யேஷ்டாய நம: என்று ரட்சா சத்தியை இலிங்கத்திலும், ருத்ராய நம: என்று ரதி சத்தியை வலத்துடையிலும், காலாய நம: என்று பால்ய சத்தியை இடத்துடையிலும், கல நம: என்று காமா சத்தியை வல முழங்காலிலும், விகரணாய நம: என்று சமியமீ சத்தியை இட முழங்காலிலும், பல நம: என்று கிரியா சத்தியை வலக்கணைக் காலிலும், விகரணாய நம: என்று புத்தி சத்தியை இடக்கணைக் காலிலும், பல நம: என்று காரிய சத்தியை வல இடுப்பு முட்டியிலும், பிரமதாய நம: என்று தாத்ரி சத்தியை இட இடுப்பு முட்டியிலும், ஓம் நம: என்று பிராம்மணீ சத்தியை இடுப்பிலும் (கடிதடம்), ஸர்வபூத தமனாய நம: என்று கூறிக் கொண்டு மனோ நம: என்று மோகினி சத்தியை வலப்பக்கத்திலும், உந்மநாய நம: என்று பவ சத்தியை இடப்பாரிசத்திலும் நியசிக்க வேண்டும்.

## 8.17.2.3. அகோர மந்திரத்தை நியசிக்க வேண்டிய முறை

அகோரேப்யோ நம: என்று இருதயத்தில் தமை என்னும் சத்தியையும், அதகோரேப்யே மோக நம: என்று சத்தியைக் கண்டத்திலும், கோர நம: என்று ரட்சா சத்தியை வலத்தோளிலும், கோரத ரேப்யோ நம: என்று நிஷ்டா சத்தியை இடத்தோளிலும், சர்வதஸ் சர்வ நம: என்று மிருத்யுவை நாபியிலும், சர்வேப்யோ நம: என்று மாயையை வயிற்றிலும், நமஸ்த்தேருத்ர நம: என்று அபயா

சத்தியை பிருஷ்டத்திலும், ரூபேப்யோ நம: என்று ஜரா சத்தியை மார்பிலும் நியசிக்க வேண்டும்.

### 8.17.2.4. தத்புருஷ மந்திரம் நியசிக்கும் முறை

தத்புருஷாய வித் மகே என்று சாந்தி கலையை கிழக்கு முகத்திலும், மகாதேவாய தீமஹி : என்று வித்யா கலையைத் தட்சிண முகத்திலும், தந்நோ ருத்ர: என்று பிரதிஷ்டா சத்தியை வடக்கு முகத்திலும், பிரசோதயாத் என்று நிவிர்த்தி கலையை மேற்கு முகத்திலும் நியசிக்க வேண்டும்.

### 8.17.2.5. ஈசான மந்திரத்தை நியசிக்க வேண்டிய முறை

ஈசான சர்வ சித்யானாம் என்று சசிநீ கலையை மேல் நோக்கிய மஸ்தகத்திலும், ஈஸ்வர சர்வ பூதானாம் என்று அங்கதா கலையை கிழக்கு மஸ்தகத்திலும், பிரம்மாதிபதி பிரம்மணோதிபதி பிரம்மா என்று இஷ்டா கலையை தட்சிண மஸ்தகத்திலும், சிவோமே என்று மரீசி கலையை உத்தர மஸ்தகத்திலும், சதாசிவோம் என்று ஜ்வாலினி கலையை மேற்கு மஸ்தகத்திலும் நியசிக்க வேண்டும்.

**சதாசிவ மூர்த்தியின் திருமுகங்கள் ஐந்து**

1. ஈசானமுகம் கலை ஐந்து, 2. தத்புருட முகம் கலை நான்கு, 3. அகோர முகம் கலை எட்டு, 4. வாம தேவ முகம் கலை பதிமூன்று, 5. சத்தியே சாதமுகம் கலை எட்டு. மொத்தம் முப்பதெட்டு கலைகள்.

### 8.17.3. ஐந்து எழுத்து மந்திரம்

எல்லா மந்திரங்களுக்கும் மூல மந்திரம் ஐந்தெழுத்து மந்திரம். ஏழு சொற்களை ஈற்றிலே உள்ள மந்திரங்களுள் ஐந்து எழுத்து மந்திரமே மிக உயர்ந்தது. சிவனுக்கு ஒப்பாக ஒரு பொருள் உண்டாயின் ஐந்து எழுத்து மந்திரமே. ஐந்தெழுத்து மந்திரம் மற்ற மந்திரங்களுக்குக் காரணமானது. இது பஞ்சாட்சர மந்திரம் மூலமந்திரம், வித்தை, சிவம், சைவசூத்திரம், ஐந்து எழுத்து எனவும் கூறப்படும்.

### 8.17.4. ஏழுகோடி மகாமந்திரம்

ஏழு கோடி, சத்தக்கோடி, மகா மந்திரம் என்பதெல்லாம் ஒன்றே. ஏழு கோடி என்றால் எண்ணிக்கையில் ஏழு கோடியைக் குறிக்காது. கோடி என்பது சொற்றொடரின் இறுதி (கோடி) என்பதைக்

குறிக்கும். எனவே ஏழு சொற்களை சொற்றொடரின் இறுதியில் கொண்ட மந்திரம் எனப் பொருள்படும். அந்த ஏழு சொற்களாவன : (1) நம : (2) சுவாகா (3) வஷட் (4) ஹூம் (5) வௌஷட் (6) பட் (7) ஸ்வதா. இவைகளில் ஏதேனும் ஒன்றுமட்டும் மந்திரச் சொற்றொடரின் இறுதியில் வரும். மேலும் இச்சொற்களை எல்லாவிடத்தும் பயன்படுத்துதல் கூடாது. அதற்கும் உரிய வழி கூறப்பட்டுள்ளது.

### 8.17.5. பதினொரு மந்திரம்

பதினொரு மந்திரங்கள் யாவை எனின் (1) சிவ (2) ஈசான (3) தற்புருட (4) அகோர (5) வாமதேவ (6) சத்தியோசாத (7) அத்திர (8) கவச (9) சிரோ (10) சிகா (11) இருதயம். பயன்படும் எழுத்து ஐம்பத்து ஒன்று. சொல் எண்பத்தொன்று.

### 8.17.6. புவனம் : உலகம்

மண் தத்துவம்-108, நீர்த்தத்துவம்-8, தீதத்துவம்-8, காற்று தத்துவம்-8, விண் தத்துவம்-8, அகங்காரம்-8, புத்தி-8, சித்தம்-8, புருடன்-15, வித்தை-2, கலை-2, நியதி-2, காலம்-2, மாயை-8, சுத்த வித்தை-9, ஈசுரம்;8, சாதாக்கியம்-1, விந்து-1, நாதம்-10 ஆக 224 உலகம்.

### 8.17.7. வழி : அத்துவா

(1) மந்திரம், (2) சொல், (3) எழுத்து, (4) உலகம், (5) தத்துவம், (6) ஐங்கலை ஆகிய ஆறு வழிகள்.

## 8.18. அசுத்த மாயை : தூய்மையிலாப் படைப்புத் தோற்றுவாய் அசுத்த மாயை : இலக்கணம்

அசுத்த மாயை உலகம் தோன்றக் காரணமானது. படைத்தல், காத்தல், அழித்தல் ஆகியவற்றிற்குக் காரணம் ஆனது. நிலையானது. தன் செயலில் விரிந்து உயிரின் வினைமலம் கெடும் வரை உயிருக்கு மலமாக இருக்கும். ஒடுக்கக் காலத்தில் ஒடுங்கும். இது நிலையாமை, தூய்மையின்மை, துக்கம், உயிரற்றது என்பவற்றிற்கு முரணாக நிலைத்தல், தூய்மை, சுகம், உயிர் என்று எண்ணும் புத்தியை நிகழ்த்தும். மோகம் செய்யும். பல ஆற்றல் உடையது. இதன் தத்துவம் ஏழு. அவை (1) காலம், (2) நியதி, (3) கலை, (4) வித்தை, (5) அராகம், (6) புருடன், (7) மாயை.

### 8.18.1. தத்துவ வகை

தத்துவங்கள் முப்பத்தாறு. தத்துவம் என்றால் கருவி எனப் பொருள். அவை (1) தூய்மை (சுத்தம்), (2) கலப்பு (சுத்தாசுத்தம்) (3) தூய்மையின்மை (அசுத்தம்) என மூவகைப்படும்.

### 8.18.2. தூய தத்துவம்

தூய தத்துவம் ஐந்து. இது அறிவு உடையது. கலை முதலிய தத்துவங்களைப் போகத்தில் (நுகர்வில்) செலுத்துவதற்குக் காரணமானது. எனவே செலுத்துதல் தொகுதி (பிரேரகாண்டம்) எனப்படும்.

### 8.18.3. கலப்பு தத்துவம்

காலம், முறை, கலை, வித்யை, பற்று, புருடன், மாயை ஆகிய ஏழு தத்துவமும் உயிருக்கு நுகர்வுகளைத் தோற்றுவிக்கும். எனவே நுகர்வோன் தொகுதி (போகசயித்திரு காண்டம்) எனப்படும். போகம் - நுகர்வு. சயித்திரு - உண்டு பண்ணுதல் எனப்பொருள்படும்.

### 8.18.4. தூய்மையற்ற தத்துவம்

இருபத்து நான்கு தத்துவங்கள் உயிர்கள் நுகர்வுகளை அனுபவிப்பதற்கு ஏதுவாய் இருக்கும். எனவே போக்கிய காண்டம் எனப்படும். உயிரோடு தொடர்புடையதால் உயிர்த்தத்துவம் (ஆன்மதத்துவம்) எனப்படும்.

குணதத்துவத்திலிருந்து புத்தி தத்துவமும், புத்தி தத்துவத்திலிருந்து முனைப்பு (அகங்கார) தத்துவமும், முனைப்பு தத்துவத்திலிருந்து ஒளி முனைப்பு (தைச அகங்காரம்), வேறுபடு முனைப்பு (வைகரி அகங்காரம்), இயல்பியல் முனைப்பு (பூதாதி அகங்காரம்) தோன்றும்.

ஒளிமுனைப்பில் (தைசஅகங்காரத்திலிருந்து) இருந்து மனம், மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் அறிவுக்கருவிகள் (ஞானேந்திரியங்கள்) தோன்றும்.

வேறுபடு முனைப்பிலிருந்து (வைகரி அகங்காரம்) கை, கால், வாய், எருவாய், கருவாய் முதலிய தொழில் கருவிகள் தோன்றும்.

இயல்பியல் முனைப்பிலிருந்து (பூதாதி அகங்காரம்) சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் நுண்பொருள் (தன்மாத்திரை) தோன்றும்.

தன் மாத்திரையிலிருந்து விண், வளி, தீ, நீர், நிலம் என்னும் ஐந்து பருப்பொருள்கள் (ஐம்பூதம்) தோன்றும். தோற்ற வகை : ஓசை-விண், ஊறு-வளி (காற்று), ஒளி-தீ, சுவை-நீர், நாற்றம்-நிலம் முதலியனவாம்.

## 8.19. மாயையின் படிமுறை வளர்ச்சி (பரிணாமம்)

### 8.19.1. சிவதத்துவம் : சிவம் - நாதம் - ஒலி

சைவ சித்தாந்தத்தின்படி உலகம் ஒடுங்கிய காலத்தில் (முற்றும் அழிந்த காலத்தில்) இறைவன் மேலோங்கி எல்லாவற்றையும் கடந்த நிலையில் (கடவுள் நிலை) பரசிவன் என்னும் தோற்றத்தில் இருப்பான். செயலின்றி வாளா இருப்பான். இதுவே இறைவனின் உண்மை நிலை (சொரூப லட்சணம்). வாளா இரு என்பதைச் சும்மா இரு என்றும், சும்மா இருப்பதை சிவனே என்று இரு என்று சொல்வார்கள். சிவனே என்று இருப்பது வாளா இருப்பதைக் குறிக்கிறது. இந்நிலையில் இறைவனுக்குப் பரசிவம், பரமசிவன், சொரூப சிவன், சுத்தசிவன் எனப் பெயர். இதன் பொருள் மேலானவன், உண்மையானவன், நிலையுடையவன், தூய்மையானவன் என்பதாகும்.

இக்காலத்தில் மாயை அருவமாய்க் காரண நிலையில், நுண்பொருளாய், ஆற்றல் மட்டும் உடையதாய் இருக்கும். உயிர் தன்முனைப்பு மலத்தால் மறைப்புண்டு. தனி நிலையில் இருக்கும். பரசிவமும் அதன் ஆற்றலாகிய பராசக்தியும் ஞாயிறும் ஞாயிற்றின் ஒளியும்போல பிரிக்க இயலாத நிலையில் தொடர்புபட்டிருக்கும் பராசக்தி தூய அறிவு அல்லது அருள் ஆற்றல் எனப்படும். அருளாற்றல் செயல்படும் போது இறைவனுக்குச் சிவன் எனப்பெயர்.

பரமசிவன் உலகை மீண்டும் தோற்றுவிக்க விரும்புவான். அந்த விருப்பத்தின் எழுச்சியே அவனுடைய விழைவு ஆற்றல் (இச்சா சக்தி, விருப்பாற்றல்) எனப்படும். உலகைப் படைக்கும் வழியை அறியும் இடத்து அவனுடைய ஆற்றல் அறிவு ஆற்றல் (ஞான சத்தி) எனப்படும். படைத்தல் முதலிய தொழில் புரியுமிடத்து அவனுடைய ஆற்றல் செயல் ஆற்றல் (கிரியா சத்தி) எனப்படும். இம்மூன்றிற்கும் முதன்மையாய் இருப்பது ஆதி சத்தியே ஆகும். ஆதிசத்தி என்பது மறைப்பாற்றல் (திரோதான சத்தி) ஆகும்.

ஒரு பெயரும் ஒரு வடிவமும் இல்லாத இறைவன் உலகைத் தோற்றுவிக்க விரும்பி சுத்த மாயையை நோக்குவான், தன்னுடைய அறிவாற்றலால். இறைவன் அறிவாற்றலால் நோக்கிய போது சுத்த மாயை காரண நிலையிலிருந்து காரியப்படும் நிலையைப் பெறும். அறிவாற்றல் மட்டும் செயல்படும் போது இறைவன் சிவன் எனப்படுவான். இறைவனால் நோக்கப்பட்டுப் பக்குவப்பட்ட பகுதி இறைவனுக்கு நிலைகளனாய் இருப்பதால் அது சிவம் எனப்படுகின்றது. இதுதான் சுத்த மாயையின் முதல் படிமுறை வளர்ச்சியாகும்.

இறைவன் உயிர்களின் மலநோயைத் தீர்க்கும் பொருட்டு தோன்றும் தோற்றம் சிவம். உயிர்களின் துன்பம் நீக்க எடுத்த தோற்றமானதால் மேலான ஒலி (பாநாதம்) எனப்படும். இறைவன் தான் எண்ணியவாறே செய்வதற்கு முதற்காரணமாய்த் தன்னுள் அடங்கி இருந்த சுத்த மாயையோடு சேராத தோற்றத்தில் உண்டானதால் மேலான ஒலி எனப்படும். சுத்த மாயையோடு கூடியதோற்றம் அபரநாதம் எனப்படும்.

ஒலி எல்லா உயிர்க்கும் அறிவை உண்டாக்கி நிற்கும் அறிவு என்பர். இரண்டு எதிர்மறையான மின் ஆற்றலே ஒலி என்பர். பாயும் ஆற்றலும், தாங்கும் ஆற்றலும் ஒன்றோடு ஒன்று சேரும் போது ஒலி ஒளி தோன்றும். சான்று : இடியும் மின்னலும்.

### 8.19.1.1. பெயர்கள்

சிவனுக்குரிய இடமாதலால் சிவதத்துவம். தத்துவம் - இருப்புநிலை - கருவி ஒருபொருள் பன்மொழியாகும். ஒடுக்க நிலையை உடையது இலயதத்துவம். (3) அருவ நிலையை உடையது நிட்கள தத்துவம். (4) காரியத்தின் முதலாய் நிற்றலால் சத்திமான் (5) நாதத்திற்குப் பற்றுக்கோடாய் இருத்தலால் நாத தத்துவம். இறைவனின் அறிவு ஆற்றல் கூறுகள் (கலை) பத்து.

### 8.19.1.2. அறிவு ஆற்றலின் கூறுகள் (கலை)

அவை (1) இந்திகை, (2) தீபிகை, (3) இரோசிகை, (4) மோசிகை, (5) ஊர்த்துவ காமளி, (6) வியாபினி, (7) வியோமரூபை, (8) அனந்தை, (9) அனாதை, (10) அனாசிருதை. இறைவன் பெயரும் தொழிலும் உடையவன் ஆகின்றான். உணரப்படுபவன் ஆகின்றான். தலைவன் ஆகின்றான். அவனது நோக்கம் உயிர்களிடமிருந்து தன்முனைப்பை நீக்குவது.

## 8.19.2. சத்தி-விந்து

இறைவன் அறிவாற்றல் கொண்ட பொழுது சிவன் எனப்பட்டான். செயலாற்றலைக் கொண்ட பொழுது 'சத்தி' எனப்படுவான். இறைவன் சுத்த மாயையை நோக்கி இஃது இவ்வாறு ஆகுக எனச் செயலாற்றலால் கருதுவான். அந்நிலை சத்தி எனப்பெயர். பக்குவப்பட்ட சுத்த மாயை இரண்டாம் படிமுறை வளர்ச்சியாக வளர்ச்சியடையும்.

### 8.19.2.1. பெயர்கள்

இறைவனுக்குச் சத்தி செயல்படும் போது 'சத்தி தத்துவம்' எனப்படும். இது பருப்பொருள் (தூலம்) ஆதலின் பருமை தத்துவம் என்றும், பருமை அருவ தத்துவம் (தூல நிட்கள தத்துவம்) என்றும் பெயர். நுண் சொல்லிற்குப் பற்றுக்கோடாய் இருப்பதால் விந்து தத்துவம் என்றும் பெயர். இறைவன் விந்து எனப்படுவான். சத்தி அடங்கி கிடக்கும் ஆற்றலைக் குறிக்கும். சுத்த மாயையோடு கூடாத தோற்றத்தில் 'பரவிந்து' எனவும், கூடிய தோற்றத்தில் 'அபரவிந்து' எனவும் பெயர்பெறும்.

தீயின் ஆற்றல் ஒன்றே. ஆயினும் தீ பொருள்களை எரிக்கும் போது 'சுடும் ஆற்றல்' என்றும், உணவைச் சமைக்கும் போது 'அடும் ஆற்றல்' என்றும் பெயர் பெறும். ஆற்றல் ஒன்றாயினும் தொழிலின் அடிப்படையில் பெயர் வேறுபாடு பெறுகிறது. பொருள் வேறுபாட்டால் அல்ல. இறைவன் ஒருவனே. 'ஒருவனே தேவன்' என்பார் திருமூலர். அறிவாற்றல் கொண்டு இயங்கிய போது பல பெயர் பெற்றான். சத்தியாக இயங்கும் போது இறைவியானான். ஆற்றலின் வேறுபாடு காரணமாக ஆற்றலும் பல பெயர் பெற்றன.

சத்திகள் பலவாயினும் முதன்மை உடைய சத்தி ஐந்தாகும். அவை: (1) மேலான ஆற்றல் (பராசத்தி), (2) மறைப்பாற்றல் (திரோதான சத்தி), (3) விருப்பாற்றல் (இச்சாசத்தி), (4) அறிவு ஆற்றல் (ஞானசத்தி), (5) முதன்மை ஆற்றல் (ஆதிசத்தி).

### 8.19.2.2. பராசத்தி

(1) சிவன் தன்னளவில் அறிவு வடிவாய் நிற்கும் போது அவன் சத்தியாகும். (2) மறைப்பாற்றல். தளைகளைச் செயல்படச் செய்து உயிர்களின் அறிவை மறைப்பது (திரோபவம்) ஆதிசத்தி என்றும்

வழங்கப் பெறும். (3) விருப்பாற்றல் (இச்சாசத்தி) உயிர்களுக்கு அருள் பாலிக்க வேண்டும் என்பதே இறைவனின் விருப்பு. எனவே விருப்பாற்றல் எனவும் அருள் ஆற்றல் எனவும் கூறுவர். (4) அறிவாற்றல் (ஞானசத்தி) உயிர்களைத் தளைகளிலிருந்து மீட்பதற்காக அறிவாற்றல் வழி நின்று நிகழ்த்தும் செயலாற்றலாகும்.

### 8.19.2.3. வேறு ஆற்றல்கள்

சதாசிவ மூர்த்திக்கு ஐந்து உறுப்பு கூறப்படுகிறது. சத்தியோடு கூடிய சிவம் சதாசிவம். சதாசிவத்தின் ஆற்றல்கள் (1) ஈசானி சத்தி, (2) பூரணி சத்தி, (3) ஆர்த்தி சத்தி (4) வாமை சத்தி, (5) மூர்த்தி சத்தி என ஐந்து சத்திகள் உள. இந்த ஐந்து சத்திகளும் முப்பத்தெட்டு கூறுகளை உடையன. ஈசானி சத்திக்கு ஐந்து கூறுகளும் (கலைகளும்) பூரணி சத்திக்கு நான்கு கூறுகளும், ஆர்த்தி சத்திக்கு எட்டு கூறுகளும், வாமை சத்திக்கும் பதிமூன்று கூறுகளும் மூர்த்தி சக்திக்கு எட்டு கூறுகளும் சேர்த்து முப்பத்தெட்டுக் கூறுகளும் கூறப்பெறும். ஒவ்வொரு சத்திக்கும் பெயர் உண்டு. இதை அட்டத் ரீம் (சத்கலை) என்பர்.

### 8.19.2.4. இலயம்

சிவம் சத்தி என்னும் இரண்டும் ஒடுங்குமிடம் 'லயம்'. லயசிவத்திற்கு அநாகத சிவன், சிவன், சாந்தம், நாதம், வாகீசுவரன், சத்தன், நிட்களன் என்னும் பெயர் உண்டு. சிவசத்திக்கு செயலாற்றல் ஐந்து கூறுகளுக்கும் இடமாயிருக்கும்.

### 8.19.3. சதாசிவன் : சாதாக்கியம்

இறைவன் அறிவாற்றலால் சுத்த மாயையை நோக்கினான்; செயலாற்றலால் பொதுவாகக் கருதினான்; இதனால் இருபடிமுறை வளர்ச்சி ஏற்பட்டது. இறைவன் சுத்த மாயையின் ஒரு பகுதியைத் தன் அறிவாற்றலால் சிறப்பாக நோக்கினான். செயலாற்றலால் சிறப்பாகக் கருதினான். அப்போது முன்னர் தோன்றிய இரண்டாம்படி முறை வளர்ச்சி மூன்றாம் படி முறை வளர்ச்சி அடைந்தது. முதல் படிமுறையில் சிவனாகவும், இரண்டாம் படி முறையில் சத்தியாகவும் இருந்தவன் மூன்றாம் படிமுறை வளர்ச்சியில் சதாசிவம் ஆனான்.

சதாசிவ நிலை உலகத்தை உண்டாக்குவதற்கு முயலும் நிலை போகதத்துவம் (உத்தியுத்தன்) எனப்படும். இது நுகர்வு நிலை (போகநிலை) எனப்படும். இறைவனுக்குப் பல வடிவங்களைத் (மூர்த்தம்) தோற்றுவிப்பதால் நுகர்வு நிலை ஆகும். சதாசிவம் அருவுருவ மூர்த்தியாகையால் செயல் செய்தல் செயலை விடுத்து

ஒழிவு பெறுதல் என்றும் இரண்டிற்குமிடையில் பொதுவாய் நிற்றலால் அவனுக்கு இடமாகின்ற இத்தத்துவம் சகள நிட்கள தத்துவம் எனப்படும்.

சிவம், சத்தி, நாதம், விந்து ஆகிய நான்கும் இறைவனுக்கு அருவத்திருமேனி. மகேசன், உருத்திரன், திருமால், நான்முகன் ஆகிய நான்கும் உருவத்திருமேனி. சதாசிவம் அருவுருவத் திருமேனி. திருமேனி வேறுபடினும் வேற்றுமை இன்றி நின்று இறைவன் அந்தந்தத் தொழில்களைச் செய்வான்.

### 8.19.4. ஈசுவரம்

சுத்த மாயையின் நான்காம் படிமுறை வளர்ச்சியில் இறைவன் ஈசுவரனாய் நின்று ஈசுவர தத்துவம் எனப்படுகிறான். ஈசுவர நிலை அதிகார நிலை எனப்படும். அடுத்து வரும் சுத்த வித்தை நிலையை நோக்க இந்நிலை நுண்நிலை. எனவே இது நுண் அதிகார தத்துவம் எனப்படும். சூக்கும பிரவிருத்தி தத்துவம். சூக்கும சகளதத்துவம் என்றும் சொல்லப்படும்.

### 8.19.5. சுத்த வித்தை

இறைவன் அறிவாற்றலை மிக செலுத்தி வித்தியேசுவரன் எனப்படுவான். இறைவனுக்கு இடமாதலால் வித்தை எனப்பெயர் பெறுகிறது. அசுத்த மாயையில் ஒரு வித்தை தத்துவம் உள்ளது. அதிலிருந்து இதை வேறுபடுத்திக் காட்ட சுத்தவித்தை எனப்பட்டது. சுத்தமாயையில் இந்த ஐந்து தத்துவத்தைத் தவிர முப்பத்தொரு தத்துவம் உள்ளது. அசுத்த மாயையிலும் முப்பத்தொரு தத்துவம் உள்ளது என பௌட்கர ஆகமம் கூறுகிறது. சுத்த தத்துவ உலகில் உள்ளவர்க்கு நுகர்வுக்கு இடமுண்டு.

இராவணன் வேடம் தாங்கி நடிப்பவனின் தோற்றம் இராவணன் போல் இருக்குமேயொழிய அவன் இயல்பில் மாறுபட மாட்டான். அதுபோன்று இறைவனும் ஐந்து தொழிலுக்கு உரியவனாய் மேற்கூறிய தூய வித்தை முதலிய வேறு வடிவம் எல்லாம் எய்தினான். உருவ வேறுபாடுகள் எல்லாம் சத்தியும் தானும் மரமும் வைரமும் போல நிலை பெற்று பிரிவின்றி இருக்கும். தன் ஆற்றலினால் வடிவ வேறுபாடும் உடையவன். ஆனால் தன்மை வேறுபட்டவன் (விகாரி) அல்லன் இறைவன் மரம் ஆற்றல் வடிவத்திற்கு உவமையாகவும் காழ்ப்பு (வைரம்) சிவத்திற்கு உவமையாகவும் கொள்ள வேண்டும்.

சுத்த மாயை (தூய படைப்புத் தோற்றுவாய்)
அறிவாற்றல்
நாதம்
செயலாற்றல்
விந்து
அறிவாற்றலும் செயலாற்றலும் இணை அளவில்
சதாசிவம்
அறிவாற்றலும் மிக்க செயலாற்றலும்
ஈசுவரன்
மிக்க அறிவாற்றலும் செயலாற்றலும்
சுத்தவித்தை

## நுகர்வோன் தொகுதி : போகத்திரு காண்டம்

*வித்தியா தத்துவம் - புருட தத்துவம்*

நுகர்வோன் தொகுதி ஏழு ஆகும். அவை : (1) அசுத்த மாயை, (2) காலம், (3) விதி (நியதி), (4) கல்வி (வித்யை), (5) பற்று (அராகம்), (6) புருடன், (7) கலை முதலியன. அசுத்த மாயையின் செயலனைத்தும் பொருள் உலகம் ஆகும். பொருள் உலகம் தத்துவமே (கருவியே).

### 8.19.6. அசுத்த மாயை

இறைவனின் ஆணை வழி நிற்கும் அநந்த தேவர் அசுத்த மாயையைச் செயல்படுத்துவார். இவர் எட்டு வித்தியேசுவரர்களில் முதல்வர். அசுத்த மாயை பக்குவப்படுத்தப்பட்ட பகுதி என்பதால் இது ஏனைய கருவிகளுக்கு (தத்துவம்) எல்லாம் காரணமாய் நிற்கும்.

### 8.19.7. கால தத்துவம்

கால தத்துவம் அசுத்த மாயையிலிருந்து தோன்றும். இது இறந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் என முத்திறப்படும். காலதத்துவம் தோன்றல், நிற்றல், அழிதல் என முத்தொழிலை அடைவதாகும். உடலுக்குச் செயல் உலகம் அனைத்தையும் காலவரையறைக்கு உட்படுத்தி செயல் அளவில் நடத்தும் தோற்றத்திற்கு மட்டும் தூய காலம் காரணமாய் நிற்கும். காரியங்களுக்கு எல்லாம் காலம் காரணம். இறைவன் காலம் கடந்தவன். அவன் செயல்களுக்குக் காலம் வேண்டாம். சுத்ததத்துவம் சிவனால் சுத்த மாயையிலிருந்து தோற்றுவிக்கப்படுகின்றன. சுத்த தத்துவம் சிவனின் உரிமை வடிவம் என்கிறது சிவஞான சித்தியார் சுபக்கம் 166.[20]

காலமும் பல பொருள்களை ஒன்றாய் வைத்துப் பார்க்கும் போது ஒரு பொருளின் நிகழ்காலம், மற்றொரு பொருளின் இறந்த காலம் ஆகவும், எதிர்காலம் ஆகவும் அமையும். ஒரு பொருள் தானே மூன்று காலத்தில் வைத்து உணரப்பெறும். எனவே காலம் பலவாகும்.

## 8.19.7.1. காலம் பல வகை

பலவகை காலங்களின் கால அளவை : (1) துடி, (2) இலவம், (3) நிமிடம், (4) காட்டை, (5) கலை, (6) கணம், (7) மூர்த்தம், (8) கடிகை, (9) சாமம், (10) நாள், (11) பட்சம், (12) திங்கள், (13) இருது, (14) அயனம், (15) ஆண்டு என ஆகமம் கூறுகிறது. கற்பம், யுகம், சதுர்யுகம், தெய்வ யுகம், தெய்வ ஆண்டு, எனவும் கால அளவு உண்டு. கிரேதாயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம் என யுகம் நான்காகும். கால பாகுபாடுகள் இயற்கையாயும், செயற்கையாயும் அமைகின்றன.

### கால அளவை

சிவப்பிரகாச விகாசம் பாடல் 281, 282, 283, 284, 285, 286.

1. இமைக்கும் காலத்தில் நான்கில் ஒரு கூறு ஒரு துடி.
2. இலவம் : துடி இரண்டு கொண்டது இலவம்.
3. நிமிடம் : இலவம் இரண்டு கொண்டது.
4. காட்டை : பதினைந்து நிமிடம் கொண்டது.
5. கலை : காட்டை முப்பது கொண்டது.
6. கணம் : கலை பதினைந்து கொண்டது.
7. மூர்த்தம் : இரண்டு கணம் கொண்டது.
8. கடிகை : நான்கு முகூர்த்தம் கொண்டது.
9. சாமம் : எட்டு கடிகை கொண்டது.
10. நாள் : எட்டு சாமம் கொண்டது ஒரு நாள்.
11. பட்சம் : பதினைந்து நாள் கொண்டது.
12. திங்கள் (மாதம்) : இரண்டு பட்சம் கொண்டது.
13. இருது : இரண்டு மாதம் கொண்டது.
14. அயனம் : மூன்று இருது கொண்டது.
15. ஆண்டு (வருடம்) இரண்டு அயனம் கொண்டது

எனச் சிவ ஆகமம் கூறுகிறது.

### தேவர்களுக்கு

மானிட ஆண்டின் தெக்ஷிணாயனம் தேவர்களுக்கு இரவு, உத்தராயனம், பகல்.

**தெய்வங்களுக்கு**

தேவர்களுக்குரிய இரவு பகல் அளவினால் தெய்வ ஆண்டு. தெய்வ ஆண்டால் நான்கு யுகமும் நடக்கும். கிரேதாயுகத்தின் தெய்வ ஆண்டு நான்காயிரத்து எண்ணூறு. திரேதாயுகத்தின் தெய்வ ஆண்டு மூவாயிரத்து அறுநூறு. துவாபரயுகத்தின் தெய்வ ஆண்டு நானூறு தெய்வ ஆண்டு. கலியுகம் : ஆயிரத்து இருநூறு தெய்வ ஆண்டு. யுகம் நான்கும் தொடர்வுற்று முதல் யுகத்தின் அந்தமும், அடுத்த யுகத்தின் ஆதியும் இயைந்து, தம்முள் திரேதாயுகத்திற்கு அறுநூறு தெய்வ ஆண்டுகள். துவாபரயுகத்திற்கு நானூறு தெய்வ ஆண்டுகள், கலியுகத்திற்கு இருநூறு தெய்வ ஆண்டுகள். யுக சந்திகளும் யுகங்கள் நான்கும் சேரின் தெய்வ யுகம். தெய்வ யுகம் எழுபத்தொன்று நிகழின் ஒரு மனுவின் காலம். மனுக்கள் பதினான்கு. முடிவு எய்தின் ஆயிரசதுரயுகம் முடியும். ஆயிரம் சதுர்யுகமும் சிருட்டிகற்பம் எனப்படும். அது பிரமனுக்குப் பகற்காலம். அப்பகற்காலத்தில் இந்திரர்கள் பிறந்து இறப்பர். ஆயிரம் சதுர யுகம் நிகழின் அது பிரமதேவனுக்குச் சங்காரகற்பம். சிருட்டி கற்பம் ஆயிரம் சதுர்யுகமும் சங்கார கற்பம் ஆயிரம் சதுர் யுகமும் சேர்ந்து பிரமதேவனுக்கு ஒரு நாளாகும்.

சங்கார கற்பமாகிய ஒருநாள் முந்நூற்று அறுபது ஆயின் அது நான்முகனுக்கு ஒரு ஆண்டு. நான்முகன் ஆண்டு ஒரு நூறு நிகழின் அது நான்முகனுக்குத் திதிக்காலம். நான்முகனுக்குரிய ஆயுட்காலம் ஆனது திருமாலுக்கு ஒரு திங்கள். திங்கள் பன்னிரண்டு நிகழ்ந்து ஒரு ஆண்டாகும். ஆண்டு நூறு நிகழின் அரனுக்கு ஒரு திங்கள். திங்கள் பன்னிரண்டு நிகழின் ஓர் ஆண்டு. நூறு ஆண்டு நிகழின் மகேசனுக்கு ஒரு நாள். மகேசனின் திதிக்காலம் சதாசிவனுக்கு நிமிடம். சதாசிவனின் திதிக்காலம் பரமசிவனுக்குத் துடி என்னும் கால அளவையால் ஒடுங்குதல் தோன்றுதல் நிகழும்.

நான்குயுகம் சேர்ந்த அவை ஒன்றாக இரண்டாயிரம் அளவுள்ள காலம் சென்றால் அக்காலம் நான்முகனுக்கு ஒரு நாளாகும். காலமுறைப்படி நூறு ஆண்டுகள் வாழ்ந்த பிரமதேவர்கள் ஒருகோடி பேர் அழியின் திருமாலுக்கு ஒரு பகற்காலம் முடிந்து உறக்கங் கொள்ளும். அவ்வாறு கால அளவு கருதப்பெற்ற திருமாலுக்கு நூறு ஆண்டுகள் நிகழ்ந்து முடிந்தால் அவர் இறப்பார். அவ்வாறு ஒரு கோடி திருமால்கள் இறக்கும் காலமானது உமாதேவியார் மலர் அணிந்த கூந்தலை அவிழ்த்து முடிக்கும் காலத்திற்குச் சமம், சிவஞானதீபம், 32.

"காலமு மூன்றாய் மூன்றுங் கழிதரு காலம் பின்னர்
ஏலவே நிகழும் காலம் எதிர்வரு கால மென்பர்"
ஞானசாரம் 28.

### 8.19.7.2. நிகழ்காலம்

நிகழ்காலம் இரண்டு வகை. ஒன்று நுண். மற்றொன்று பருமன். நுண்ம நிகழ்காலத்தின் அளவு ஒரு கணமே. அதனால் அது புலனாதல் அரிது. எனவே பரும நிகழ்காலமே தெரியும். பரும நிகழ்காலம் காரியப் பொருள்களின் தோற்றம், நிலை, இறுதி என்னும் மூன்று தொழில்களில் தெரியும் தொழில் நிகழ்காலமாகும். சான்று : குடம் காரிய நிலையில் மண் உருண்டையாய் நின்ற காலம். அதன் இறந்த காலம். குடம் உடைந்து ஓடாகும் காலம் அதன் எதிர்காலம். குடம் பயன்படுங்காலம் நிகழ்காலம். இவை பரும நிகழ்காலம். எனவே பருமநிலையில் காலம், இறப்பு, எதிர்வு என இரண்டு போல் தோன்றினும் உண்மையில் நிகழ்காலத்தைச் சேர்க்க மூன்றாகும்.

### 8.19.7.3. காலத்தால் அறிவன

காரியப் பொருள்கள் யாவும் தோற்றல், நிகழ்தல், அழிதல் என்னும் மூன்று நிலை உடையது. இந்நிலைக்குக் காரணம் ஆவது காலமே. மூன்று காலங்களும் பொருள்கள் தோறும் வேறு வேறாய்ப் பொருந்தி நிற்கும் என்கிறது பெருந்திரட்டு.[21] காலம் சடம். அறிவற்றது.

## 8.19.8. நியதி தத்துவம்

இந்த நியதி தத்துவம் கால தத்துவத்திற்குப் பின் தோன்றும். நியதி, பால், ஊழி, தெய்வம், விதி என்பன ஒருபொருட் பன்மொழியாகும். உயிர்கள் இன்பத்தில் விருப்பும், துன்பத்தில் வெறுப்பும் உடையன. கலை முதலிய தத்துவங்களால் செயல், அறிவு, விருப்புகள் விளங்கப்பெற்று நுகர்வுகளை நுகரும். அதனால் வரும் துன்பங்களை விலக்கிட விரும்பும். பிறருக்கு வரும் இன்பங்களைக் கைக்கொள்ளவும் விரும்பும். அவைகள் அவ்வாறு செய்யாமல் தடுப்பதும், அவை அவை செய்த வினைப் பயன்களை அவை அவையே அனுபவிக்குமாறு வரையறை செய்து நிறுத்துவதுதான் நியதி தத்துவம்.

வினைப்பயன் நுகர்ச்சிக்கு நியதிதத்துவம் இன்றியமையாதது. இறைவன் வினைப்பயனை ஊட்டுவது எது போல் எனின் அரசனின் செயலுக்கு இன்றியமையாதது அரசனின் ஆணை. இறைவன் தான்

செய்யும் செயல்களை எல்லாம் ஏதேனும் ஒரு வழியாய்ச் செய்வாரே அன்றி நேரே செய்ய மாட்டார். அதனால் இவ்வரையறையைச் செய்வதற்கு நியதி தத்துவம் தேவைப்படுகிறது. உயிர்கள் தான் செய்த நல்வினைப் பயனை விரும்பும். தீவினைப் பயனை வெறுக்கும். நியதி தத்துவம் அவரவர் செய்த நல்வினைப் பயன் தீவினைப் பயன் ஆகியவற்றை விரும்பினாலும் வெறுத்தாலும் அனுபவிக்கச் செய்யும். அவரவர் வினைப்பயனைத் துய்த்தே தீரவேண்டும் என்பதே நியதி. இது ஒரு விதி. இந்த விதி இல்லையாயின் ஒருவர் தேடிய பொருளை இன்னொருவர் அனுபவிப்பது போல் ஒருவர் செய்த வினையின் பயனை இன்னொருவர் அனுபவிக்க நேரிடும். இது அறநெறிக்குப் புறம்பாகும்.

## 8.19.9. கலை தத்துவம்

நியதி தத்துவத்திற்குப் பின்னர் கலை தத்துவம் தோன்றும். உயிர்கள் தன்முனைப்பு மலமறைப்பினால் செயல், அறிவு, விருப்பம் என்னும் ஆற்றல்கள் மறைக்கப்பட்டு சடம் போல கிடக்கும். கலை தத்துவம் இந்நிலையை மாற்றும். தன்முனைப்பு மலத்தை நீக்கும். செயலாற்றலைத் தோற்றுவிக்கும். கலித்தல் எனின் நீக்குதல், செலுத்துதல் என்னும் பொருள் தரும். மலத்தை நீக்கச் செயலைத் தோற்றுவிக்கின்ற இந்தத் தத்துவம் கலை தத்துவம் எனப்பட்டது. இது எது போல் எனின் தீயின் சுடும் ஆற்றலைத் தடை மந்திரம் தடுப்பது போல் எனலாம். உயிருக்குத் தேவையான ஆற்றலைச் செலுத்த நியதி தத்துவம் உதவுகிறது. மாயையின் காரியங்கள் எல்லாம் உயிருக்குக் கருவிகளாகத் தரப்படுகின்றன. அந்தக் கருவிகளை உயிர்களே பயன்படுத்த வேண்டும். அக்கருவிகளை இறைவனின் ஆற்றல் பயன்படுத்தாது என்று துகளறு போதம் கூறுகிறது.[22] தன்முனைப்பு என்னும் தளையால் மறைக்கப்பட்ட உயிர்க்கு வினைநுகர்ச்சி ஏற்படாது. அந்த வினைநுகர்ச்சிக்காக அந்த உயிர்க்கு வினை அடையும் தன்மையால் அந்தத் தன்முனைப்பு தளை மறைப்பைப் போக்கும். அறிவாற்றல் செயலாற்றலை விளங்கச் செய்வது கலைதத்துவம்.

## 8.19.10. கல்வி தத்துவம் (வித்யா தத்துவம்)

கலை தத்துவத்திலிருந்து கல்வி தத்துவம் தோன்றும். அறியாமையை நீக்குவது கலை. அறிவைத் தோற்றுவிப்பது கல்வி. கல்+வி ; கல்வி. கல் என்றால் தோண்டுதல். வி - விகுதி அறிவைப் பெறுதல் எனப்பொருள்படும். எனவே கலையைப் போல தன்முனைப்பு மலத்தைச் சிறிதே நீக்கி உயிரின் அறிவாற்றலை எழுப்பும். புத்தியால் நிச்சயப்பட்ட வெளிப்பொருள்களை உள் நின்று அறியும் அறிவோடு சேராமல் புலன்களோடு கூடிப் புலன்களை

அநிருவிகற்ப காட்சியால் அறியும். அறிவிக்கும் மனம் புத்தி முனைப்பு என்னும் அகக்கருவிகளோடு கூடும். அவற்றின் செயலை அறியும்.

அறிவை விளக்குவதற்குக் கல்வி தேவை. அறிவில் உள்ள கலக்கத்தை நீக்குதல் அறிய முயலாமையை நீக்குதல் ஆகும். ஒரு கருவி ஒரு தொழிலைச் செவ்வனே செய்யும். இரு தொழிலைச் செவ்வனே செய்யாது. கலை தத்துவம் அறியாமையை நீக்கும். கல்வி தத்துவம் அறிவைத் தரும். கல்வி தத்துவம் அசுத்த மாயையிலிருந்து நேரே தோன்றாமல் கலை தத்துவத்திலிருந்து தோன்றுமெனக் கூறப்பட்டது. ஏனெனின் கலையும் கல்வியும் இரண்டு தத்துவமாயினும் தம்முள் வேறுபட்டன அல்ல. கலை தத்துவத்திலிருந்து ஒரு கூறு கல்வி தத்துவம் கூர்தல் அறமாகும். கலை விளக்கும் அறிவுத் தொழில்களைப் பெறும் உயிர்கள். அப்போது அறிவுக் கருவிகள் கவரும் பொருள்களைப் புத்தி தத்துவம் கொள்ளும் முறையில் கொண்டு உறுதி செய்யும். அந்தப் புத்தியைக் கொள்வதற்கு வரும் கருவியே கல்வியாகும்.

கல்வி தத்துவத்தின் வாயிலாக உயிர் அறிந்த நுகர்வில் பற்று (அராகம்) விருப்பத்தை (இச்சையை) மிகுவிக்கும். இறைவன் விருப்ப ஆற்றல் ஈசுவர தத்துவ நிலையை எழுப்ப ஈசுவர தத்துவம் பற்றை எழுப்பும். பற்று தத்துவம் உயிருக்கு விருப்பம் தரும். கல்வி தத்துவம் தன் வேதனைக் காட்சிக்குக் கருவி.

## 8.19.10.1. தன்வேதனைக் காட்சி

உயிர் தனக்குப் புலனாகும் பொருளை நேரே பற்றி, அதனால் உண்டாகும் இன்ப துன்பங்களை அறியும். உயிரின் அறிவிற்கு வெளிப் பொருள்கள் நேரே புலனாகாது. எனவே உயிர் எந்தப் பொருளையும் நேரே அறியாது. ஐம்பொறி வாயிலாகத்தான் அறியும். ஐம்பொறிகள் நிருவிகற்பமாய் அறிதலை வாயிற் காட்சி என்பர். வாயில் காட்சியால் தோன்றிய பொருள்களை மனம் பற்றும். பற்றியவுடன் அந்தப் பொருளை அந்தப் பொருளா அல்லது இந்தப் பொருளா என எந்தப் பொருள் என ஐயப்படும். இந்தப் பொருள் என்னவெனச் சித்தம் சிந்திக்கும். முனைப்பு தத்துவம் என்ன பொருள் என உறுதிபடுத்துவேன் என எழுப்பும். புத்தி அதனை இன்னதென உறுதிபடுத்தும். அந்த நிச்சயத்தால் அஃது அந்தப் பொருளாகவே பரிணமித்து நிற்கும். அங்ஙனம் பரிணமித்து நிற்கின்ற புத்தியை உயிர் அறியும். இதுவே தன் வேதனைக் காட்சி எனப்படும். எனவே உயிர் அனுபவிப்பது புத்தியை அன்றி வெளிப்பொருளை அன்று.

### 8.19.10.2. மானத காட்சி

தன் வேதனைக் காட்சிக்கு முன் புத்தி உறுதிபடுத்தி அறிதலே மானத காட்சியாகும்.[23] கல்வி தத்துவம் வேறுபட்ட தன்வேதனைக் காட்சிகளை அடைவதற்கு வேண்டப்படுகிறது. எந்த வகையான அறிவும் உயிரில் தோன்றுவதற்குக் கல்வியே கருவியாகும். உயிருக்கு நுகர்வு அறிவுகளிடையே கல்வி கருவியாய் இருக்கும்.

### 8.19.11. பற்று (அராகம்)

கல்வியிலிருந்து பற்று தோன்றும். பற்று, கலை, கல்விகளைப் போல தன்முனைப்பு ஆற்றலைச் சிறிது நீக்கும். நீக்கியதும் உயிரின் விருப்ப ஆற்றலை எழுப்பும். விருப்பம் அறிவின் வேறுபாடு. கல்வி பெற்றவர்களிடம் உள்ள பற்றைவிட கல்லாதவர்களிடம் உள்ள பற்று மிகமிக குறைவு என்பதை அறியலாம். கல்வி அறிவைத் தருவதுடன் பொருள்கள் மீது பற்றினையும் தருகிறது. அறிவு கொண்டு விரும்பிய பொருள்களைப் பெறலாம் என்ற நம்பிக்கை ஏற்பட்டதால், அந்த அறிவின் துணைகொண்டு மேலும் மேலும் பொருள் பற்றும் அதனைப் பெறும் முயற்சியும் மிகுதியாகக் கொள்வர். பற்றின் விளைவைப் பற்றி சிந்தியாது பகுத்தறியாது நேரே அறிவைச் செலுத்துவர்.

பற்றிற்குக் காரணம் கல்வியாக இருப்பதால் தான் கல்விக்கு அடுத்ததாகப் பற்று வருகிறது.[24] கற்றவர்கள் எல்லாவற்றையும் பெறவேண்டும். அனுபவிக்க வேண்டும். எல்லோரையும் அடக்கி ஆள வேண்டும், தன் அறிவால் எதையும் பெறலாம். எதையும், எவரையும் அடக்கி ஆளலாம் என்று எண்ணுகின்றனர். அவ்வழியே செயல்படுகின்றனர். எனவே உலகில் போட்டி, பொறாமை, போர், பகைமை, பழி வாங்குதல், அழிவு வேலைகள் நாளுக்கு நாள் அதிகமாகி வருகிறது. தன் முனைப்பு என்னும் மலத்திலிருந்து தன்னை விடுவித்துக் கொள்ள வேண்டிய கல்வியைக் கல்வியால் மேலும் தன்முனைப்பைப் பெற்று முன்னிலும் மேலாக மலத்தில் சிக்குண்டு துன்புறுகின்றனர். உண்மை அறிவைப் பற்றி வள்ளுவர் கூறியதை நினைவில் கொள்ள வேண்டும். எல்லாம் உடையவர் அறிவுடையார். அறிவிலார் எதனையும் உடையவர் இலர். மற்றும் கற்றதலால் உண்டாகும் பயன் வாலறிவன் நற்றாள் தொழுதல் என்பதையும் திருவள்ளுவர் கூறுகிறார்.[25] எனவே கல்வியால் பெறும் பயன் இறைவன் திருவடி வணங்கி தன்னிடமுள்ள தளைகளிலிருந்து விடுபட்டு இறைவன் திருவருளைப் பெறுதலே ஆம்.

கல்வியால் பற்று பெறுவதை விட பற்றினால் வரும் துன்பங்களின் கொடுமைகளை அறிந்து பற்றினைவிட்டு விலக

வேண்டும். அப்படியாயின் பற்று இல்லாதவனாகிய இறைவன் திருவடி மீதே பற்றுக் கொள்ள வேண்டுமென திருக்குறள் கூறுகிறது.[26]

"விச்சையின் அராகம் தோன்றி . . ." சிவஞான சித்தியார் சுபக்கம் பௌட்கர ஆகமம் முதலியன கலைகளிலிருந்து தோற்றம் கூறியது. சார்பு நூலில் அதாவது சிவப்பிரகாசத்தில் கலை, காலம், நியதிகளைப் போல கல்வி, பற்று ஆகியவை அசுத்த மாயையிலிருந்து நேரே தோன்றும் எனக் கூறுகிறது. அசுத்த மாயை பரம்பரையால் காரணம் ஆதல் பற்றியே ஆகும்.

உயிர் புத்தியைப் பயன்படுத்தினால் அன்றி பாவம் எதுவும் தோன்றாது. உயிர் விரும்பும் போது கருவிகளைப் பயன்படுத்தும். உயிர் விரும்புவதற்கு விரும்பப்படும் பொருள் மீது பற்று ஏற்பட வேண்டும். எனவே விருப்பம் ஏற்பட வேண்டுமானால் பற்று தேவை. புத்தி தத்துவம் உள்ள போது பற்று தத்துவம் தேவை இல்லை என்றால், உயிருடைய விருப்ப ஆற்றல் உயிரை விருப்பம் அடையவே செய்யும். இது பொதுவாக நிகழும். சிறப்பாக, சிலவற்றில் விருப்பமும், சிலவற்றில் வெறுப்பும் அடைய உயிர் செய்யாது. அப்படியாயின் விருப்பத்தையும் வெறுப்பையும் தரவல்ல ஆற்றல் புத்தி தத்தவத்தில் உள்ள பற்று தத்துவமே.

உயிர்கள் பொருள்களில் விருப்பத்திற்குரிய விருப்பத்தையும், வெறுக்கக் கூடியதை வெறுத்தலையும் உண்டாக்கக் காரணம் உயிரின் விருப்பு வெறுப்பு தன்மையே. உயிரிடத்து விருப்பு வெறுப்பு இல்லையென்றால் பொருள்கள் மீது விருப்பு வெறுப்பு ஏற்படாது. எனவே உயிருக்கு விருப்பு வெறுப்பு இயல்பாக இல்லை. பற்றுதான் உயிருக்கு விருப்பு வெறுப்புகளைத் தருகின்றது. உயிருக்கு நுகர்வு ஆற்றலைத் தருவது பற்றே. பற்று புத்திக்கு வேறானது. ஏன்னெனில் புத்தி பற்றால் ஏற்படக்கூடிய நன்மை தீமைகளை நன்கறியும். உயிரை நல்வழி இயக்கும்.

### 8.19.11.1. பற்று விளக்கம்

உலகப் பொருள்கள் சில அறிவினுக்குப் புலன் ஆகும். சில கண்களுக்குப் புலன் ஆகும். இவற்றை கல்வியால் உயிர் அறியும். அப்போது அகங்கார மமகாரங்களாகின்ற யான் எனது என்னும் தன்முனைப்பு மலம் மனதை நெகிழச் செய்யும். அதனால் அகப்பற்றும் புறப்பற்றும் மிகும். தன்னுடைய பொருள்கள் மீது பற்றுக் கொள்வது போலவே பிறருடைய பொருள்கள் மீதும் பற்றுக் கொள்ளும். ஆசையை குறிப்பிட்ட அளவில் கொள்ளாது. மேலும் கொள்ளுமாறு செய்வது பற்று. இந்தப் பற்று மிகுந்தவர்கள் தான் உலகில் பிறர்

பொருளையும் தன் பொருள் மாதிரி எண்ணி அனுபவிக்க முயல்கின்றனர். அதனால் பகைமை, வெறுப்பு, எதிர்ப்பு, கொலை, கொள்ளை முதலிய தீவினை செயல் நடைபெறுகின்றன. பற்று மிக்கவர்கள் தாமும் அமைதியிழந்து துன்புறுவர். பிறரையும் அமைதி இழந்து துன்புறச் செய்வர். வீட்டு எல்லை தகராறு தொடங்கி நாட்டு எல்லை தகராறு வரை வளர்ந்து, சிறு மோதல் தொடங்கி பெரும் போர் வரை உலகில் நடைபெறுவதை வரலாறு காட்டும்.

ஒரு பொருள் மீது பொதுவாகவும், சிறப்பாகவும் பற்று வைப்பது இயற்கை. ஈண்டு பொதுமையில் தோன்றுவது. காலம், நியதி, கலை, பற்று என்பன ஒன்றுகூடி அமைந்தது. ஐந்து கஞ்சுகம் தீமை பொருந்திய பற்று, காமமும், குரோதமும், உலோபமும், மோகமும், மதமும், மாச்சரியமும், இடும்பையும், அகங்காரமும் என எட்டாகும். திருந்தும் உயிரின் செயல்களும் எட்டாகும். அவற்றிற்குப் பெயர் விழைதல், அறிவு, செயல், விருப்பு, வெறுப்பு, இன்பம், துன்பம், மயக்கம் என்பனவாகும். இவற்றுள் குரோதம், உலோபம், மோகம், மதம், மாச்சரியம் என்ற ஐந்தும் விண்ணின் கூறாகும் என பெருந்திரட்டு பஞ்சவிம்சதி, வீட்டு நெறியில் கூறப்பட்டுள்ளது.[27] பிங்கலநிகண்டு, காமம், குரோதம், மோகம், உலோபம், மதம், மாச்சரியம் என்பன ஆறு உட்பகை என்கிறது.[28] திவாகர நிகண்டு காமம், வெகுளி, உலோபம், மோகம், மதம், மாச்சரியம் என்ற ஆறும் பகையெனக் கூறுகிறது.[29]

உயிருக்குக் கல்வி நுகர்வில் பற்று விருப்பம் அதிகப்படுத்தும். சிவப்பிரகாசம் என்னும் நூல் பற்று வினைக்கு ஈடாகப் பெற்று அதில் ஆசையை அதிகப்படுத்தும் என்கிறது.[30]

### 8.19.11.2. பற்று வகை

அறிவு வடிவ பற்று (ஞான ரூப அராகம்) பழக்கவடிவ பற்று (வாசனை ரூப அராகம்) என இருவகைப்படும். இப்பற்று உள்ளபோது பொருள்கள் மேல் சிறப்பாகப் பற்றுக் கொள்ளும். இது இல்லாத போது பற்று இருக்காது. பற்று பழக்கத்தின் வடிவம். இப்பற்று இருந்தாலும் பொருள்கள் மேல் சிறப்பாகப் பற்று ஏற்பட்டால்தான் பொருள்கள்மேல் விருப்போ வெறுப்போ உண்டாகாது. அதனால் பழக்க வடிவ பற்று உள்ளதுதான். புத்தியிலுள்ள பற்று இன்பம் தருவன எது துன்பம் தருவன எது என உணர்ந்தால் அன்றி நிகழாது. இது புத்தியின் பகுத்தறிவின் விளைவு. உயிருடைய விருப்பாற்றல் புத்தியின் செயல் புத்தியில் பதிந்தால் தான் நிகழும். விருப்பத்தை விளக்குவது பற்று. உயிரின் விருப்பாற்றல் தான் புத்தியால் எல்லா வகையாலும் தொழிற்படும். வெறுப்பு என்னும் ஆற்றல் உயிருக்கு

உள்ளது எனக் கூற இடமில்லை. வெறுப்பு என்னும் ஆற்றல் உயிரிடம் இல்லாவிட்டால் அதனை வெறுத்தேன் என்னும் அனுபவம் எப்படி நிகழ்கிறது என்றால் அது புத்தியால் நிகழ்வது. புத்தி தான் நான் செய்தேன் நான் உறுதிபடுத்தினேன் என்று நிகழ காரணமாகும்.

## 8.19.12. புருட தத்துவம்

கலை, கல்வி, பற்று என்னும் ஐந்து தத்துவங்களின் உதவியால், உயிர் தன்னிடம் வந்து சேரும் அனுபவங்களை அனுபவிக்கக் கருதும் நிலை புருட தத்துவம் ஆகும்.

### 8.19.12.1. புருடனின் பெயர்கள்

மூலப்பகுதி, பிரகிருதி, பூமான், புலன் நுகரும் காலத்தில் உதிப்பவன். பொது நிலையன். அதீதன், சகல வியாபிருதிகரணி, பசுஞானமுதல்வன், சடத்துவன், அவ்வியத்தன், ஆங்கார விருத்திகரன், ஆன்மா என்பதுடன் இன்னும் பல பெயருண்டு. அவ்வியத்தம் என்பது வெளிப்படாமல் இருப்பது. பிரிந்து தெரியாமல் இருப்பது. பொன்னில் அணிகலன்கள் அடங்கி இருப்பது போல முக்குணமும் பிரகிருதியில் அடங்கி இருக்கின்றன. புருடாதி எனில் கலை, காலம், நியதி, கல்வி, பற்று, புருடன், மூலபிரகிருதி என்னும் ஏழுமாம்.

புருடதத்துவம் என்பது தனித்தத்துவம் இல்லை. முன்னர் தோன்றிய ஆறு தத்துவங்களின் சேர்க்கை. உயிர் ஐந்து கஞ்சுகத்துடன் கூடி நுகர்வுகளை நுகரும் தன்மை பெறும். இது பொதுவகை. சிறப்பு வகையில் உயிர் நுகர்வுகளை எய்தாத போது நுகர்வுகளை நுகர இயலாது. அதனால் மூல பிரகிருதியிலுள்ள பஞ்ச கிலேசங்களைப் பொருந்தும். இதுவே புருடதத்துவம். பஞ்சகிலேசம் பற்றி சித்தாந்தம் எதுவும் கூறவில்லை.

"ஐவகையால் உறுபயன்கள் நுகர வருங் காலம்
அது புருடதத்துவம் என்று அறைந்திடுவர் அறிந்தோர்"

என்று சிவப்பிரகாசத்தில் கூறப்படுகிறது.

ஐம்புலனும் ஆரவரும் காலம் எனவும் கூறியன அனைத்து வருக்கத்தினரையும் நோக்கிக் கூறியனவாகக் கொள்ளப்படும் என உண்மை விளக்கத்தில் கூறப்படுகிறது. சிவஞான சித்தியார் சுபக்கத்தில்,

"தொழிலறிவு இச்சை மூன்றும்
வைச்ச போ(து) இச்சாஞானக்

கிரியை முன் மருவி ஆன்மா
நிச்சயம் புருடனாகிப்
பொதுமை யில் நிற்பன் அன்றே"

என்று கூறப்படுகிறது. தீக்கையில் தத்துவ சுத்தி ஒடுக்க முறையில் வைத்துச் செய்யப்படும். அம்முறையில் மூல பிரகிருதியில் பஞ்சகிலேசத்தை நீக்குதலே புருடதத்துவ சுத்தியாதலின் அம்முறை அமைதற் பொருட்டு புருடதத்துவம் மூலபிரகிருதிக்கு முன் வைத்து எண்ணப்படும். மூலப்பகுதியின் காரியங்களை அனுபவிப்பன புருடதத்துவமாகிய உயிர்களே. ஆதலானும் புருடதத்துவம் மூலப்பிரகிருதிக்கு முன்னர் வைக்கப்பட்டது.

## 8.19.12.2. மூலப்பிரகிருதியின் காரியங்கள்

கலை தத்துவத்திலிருந்து மூலப்பிரகிருதி தத்துவம் தோன்றும். மூன்று குணங்கள் சிறிதும் வெளிப்படாது. நுட்பமாய் நிற்கும் நிலையுடையது. இனிவரும் தத்துவங்களுக்கு மூலமாய் இருப்பதால் மூலப்பிரகிருதி எனப்படும். காரியப் பொருள்கள் யாவும் முன்னர் காரணத்தில் நுட்பமாய் இருக்கும். பின்னார் காரிய நிலையில் பருப்பொருளாய் வரும். அதனால் மூன்று குணங்களும் மறைந்து இருந்து பின் வெளிவரும். இம்முறையை நிருவிகற்பம், சவிகற்பம் என்னும் காட்சிகளில் காணலாம். நுண்பொருள் பருப்பொருள் ஆவது என்பவற்றாலும் அறியலாம். அதனால் முதலில் அவ்வியத்தம் தோன்றும் இதை ஆகம அளவையாலும் அருத்தாப்பத்தி அளவையாலும் அறியலாம்.

கலை தத்துவத்திலிருந்து குணங்கள் அடங்கி இருக்கின்ற மூலப்பிரகிருதி இறைவன் ஆணையால் தோன்றும். குண தத்துவத்தில் நுகர்விற்கு உதவியாகிய புத்தி முதலிய தத்துவம் தோன்றும். அவை குண வடிவாகவே இருக்கும்.

## 8.19.13. இதன் விளக்கம் 5.6இல் உள்ளது

## 8.19.14. புத்தி இருப்பு நிலை - புத்தி தத்துவம்

மூன்று குணங்களும் சமமாய் நின்ற குண தத்துவ நிலையில் அமைதி குணம் மிகுந்தும், மற்றைய வெகுளி குணம், மடிகுணம் குறைந்தும் இருக்க, அவ்வாற்றல் கூர்தல் அறத்தில் (பரிணாமத்தில்) தோன்றுவது புத்தி (தத்துவம்) இருப்பு நிலை. இஃது தூய்மையற்ற படைப்புத் தோற்றுவாய் (அசுத்த மாயை) இருப்பு நிலைகளில் ஒன்று (வித்தை) கல்வி இருப்பு நிலை. கல்வியால் விளங்கும் அறிவாற்றல்

பொருள் தோறும் உள்ள செயற்பாடுகளை விளங்கச் செய்யும். அப்பொருள்கள் பெயர் இனம் முதலியவற்றால் சிறப்பாக உறுதி செய்து உணரும் சவிகற்ப உணர்விற்கும் கருவியாம்.

புத்தி இருப்பு நிலையே உயிர்கள் செய்யும் வினைகள் புண்ணியமும் பாவமுமாய்த் தங்கி இருப்பதற்குப் பற்றுக்கோடு. மேலும் இந்தப் புத்தியே, புண்ணிய பாவங்களாய் விளங்கும் தருமம் முதலிய எட்டு பாவங்களும் அவற்றால் விளங்கும் சித்தி முதலிய ஐம்பது பிரத்தியட்சங்களும் (பின் விளைவுகளும்), அவற்றின் விரிவுகளும் ஆகிய எல்லாவற்றிற்கும் இடமாய் நிற்கும். பொருள் உறுதியாய் உணர்வதற்குப் புத்திதான் உள்ளது. வேறு கருவி இல்லை. உயிர் கஞ்சுக உடலோடு கூடும். உட்கருவிகளோடு கூடாது. புருடன் என்னும் அளவிலே நிற்க, அந்நிலையில் ஐந்து கஞ்சுகங்களில் ஒன்று ஆகிய கல்வி மட்டும் கருவியாகக் கொண்டு கண் முதலிய பொருள்களைச் செலுத்தி வெளியே உண்டாவது. இஃது ஓர் உருவம். இஃது ஓர் ஓசை என்றாற் போல நிகழும் நிருவிகற்ப காட்சி ஆகும். இஃது இன்னது என்று சிறப்பு வகையால் துணியும். இவ்வாறு துணிதலே உறுதிப்படுத்துதல் ஆகும். இதுவே சவிகற்ப காட்சி. ஆகவே உயிர் மனம் சித்தம் அகங்காரம் புத்தி என்னும் உட்கருவிகள் கருவியாகவே சவிகற்பக் காட்சியறிவைப் பெறும்.

சவிகற்பக் காட்சி புத்திக் காட்சியே. ஆயினும் முதலில் நிகழ்வது மனத்தின் தொழிற்பாடு. ஆகையால் மானதக் காட்சி எனப்படுகின்றது. மானதம் என்பது ஆகுபெயர். ஆகுபெயரால் புத்தியை மனம் என்பது உண்டு.

> "புத்தியை மனமதென்றும் மனமது புத்தி என்றும்
> . . . . . . வந்திடும்" சிவஞான சித்தியார் சுபக்கம் 48

மனம் ஐயுறும். ஐயுறும் மனமே அதற்கு மறுதலையாகிய உறுதி செய்தலைச் செய்ய இயலாது. இயலும் என்றால் ஒவ்வொன்றிற்கும் ஒரு கருவி வேண்டும். ஒரு கருவியே போதும் என்றால் ஏனையவற்றிற்கும் ஒரு கருவியே போதும். ஏனைய வேண்டாதவையாகும். இஃது இன்னது ஆகலாம் என நினைத்தல் சங்கற்பம். சங்கற்பம் நிகழ்ந்தால் தான் ஐயம் நிகழும்.

புத்தியே உயிருக்கு இன்பம் துன்பம் மோகம் இவற்றைத் தந்து நுகர்வு பொருளாய் நிற்கும். ஆகையால் அவ்வாறு நிற்பது உறுதி செய்தல் தொழிலின் வழி நிகழ்வது. மனமே உறுதி செய்யும் என்றால் அதுவே உயிர்க்கு நுகர்வுப் பொருளாகும். அவ்வாறு கொள்வது கருத்து அன்று. இருவினைக்கும் பற்றுக்கோடு புத்தியே. அறம்

(தருமம்-தன்மம்) அறிவு (ஞானம்) முதலிய பாவங்கள் புத்தி இருப்பு நிலையில் தான் உள்ளன. எனவே உறுதி செய்வது புத்தியே.

புத்தி இருப்பு நிலை சடம். அதனிடம் அறிவு எப்படி உண்டு என்றால் புத்தி சடம் ஆயினும் முக்குணங்களில் அமைதி குணம் மிகுந்த ஒன்றாய் இருத்தலின் கண்ணாடியில் பிற பொருள்களின் நிழல் தோன்றுவது போல உயிரின் முன்னிலையில் அறிவு உண்டாகும்.

### 8.19.14.1. புத்தி குண பாவங்கள்

புத்தி இருப்பு நிலையில் குணங்கள் எட்டு. அவை : (1) அறம் (தருமம்-தன்மம்), (2) மெய்யறிவு (ஞானம்), (3) விரும்பாமை (வைராக்கியம்), (4) செல்வம் (ஐசுவர்யம்), (5) மறம் (அதருமம்-அதன்மம்), (6) அறியாமை (அஞ்ஞானம்), (7) விரும்புதல் (அவைராக்கியம்), (8) வறுமை (அநைசுவர்யம்). முதல் நான்கு அமைதி குணம் பற்றி வருவது விரும்புதல் (அவைராக்கியம்), பற்று (அராகம்) எனப்படும். பற்று ஒன்றே வெகுளி குணத்தால் (இராசச குணத்தால்) வரும். ஏனைய மூன்று மடி குணத்தால் (தாமச குணத்தால்) வரும். மோகத்திற்கு ஏதுவாதல் பற்றி செல்வம் மடி குணத்தால் வரும் என சில ஆகமங்களில் கூறப்படுகிறது.

### 8.19.14.1.1. அறம் (தருமம்)

அறம் இயமம், நியமம் என இருவகைப்படும். இயமம் : கொல்லாமை, மெய்ம்மை, கள்ளாமை, களவு செய்யாமை, பிரமச்சரியம் என ஐந்து. நியமம் வெகுளாமை, வழிபாடு, புறந்தூய்மை, உவகை, நேர்மை என ஐந்து. இவையே அறம், கண்ணோட்டம், அறிமடம் (அறிந்தும் அறியாதது போல் இருத்தல்). ஒப்புரவு, நடுவு நிலைமை முதலிய பலவும் இங்குக் கூறிய பத்தினுள் அடங்கும். இவற்றின் இயல்பு எல்லாம் அறநூல் கூறும்.

### 8.19.14.1.2. மெய்யறிவு (ஞானம்)

மெய்யறிவு உணர்வு புத்தியில் தோன்றும். மெய்யறிவு எட்டு.

1. முற்பிறப்பில் கற்ற கல்வி, கேட்ட கேள்வி முதலியவற்றின் தொடர்பால் பொருள்களின் இயல்பைத் தமது புத்தியாலே ஆராய்ந்து உய்த்துணரும் மெய் அறிவு ஒன்று.

2. ஆத்தியான்மிகம் முதலிய மூவகை துன்பங்களின் சோம்பல் வர, அச்சோம்பலின் வழி நிகழும் அறிவு மூன்று.

3. நண்பர்கள் கூறும் அறிவுரை பற்றி உணரும் அறிவு.
சித்தி அறிவால் அடையும் பேறு. இதற்குரிய இடங்கள் பத்து.

சித்தி ஏற்படும் இடங்கள் : (1) ஐம்பொருள் (பஞ்சபூதம்), (2) ஐந்து தன் மாத்திரை, (3) ஐம்புலன், (4) சித்தம், (5) மனம், (6) முனைப்பு (அகங்காரம்), (7) புத்தி, (8) குணம், (9) பிரகிருதி, (10) புருடன்.

4. தானே கற்று உணர்தல்

5. ஆசிரியரிடம் கேட்டு உணர்தல்

6, 7. உண்மை, நூல் வழியாக வரும் அறிவு இரண்டு.

8. கொடை, அறம் முதலிய நற்செயல்களின் வழி இயல்பாக உதிக்கின்ற அறிவு.

### 8.19.14.1.3. விரும்பாமை - வெறுப்பு - வைராக்கியம்

விரும்பாமை என்பது வைராக்கியம், பிணி முதலியவற்றால் வருந்துவோரைக் கண்டபோது உடல் பல்வித துன்பங்களுக்கு ஆளாகின்றது. என்ன இன்பம் இருக்கின்றது. இப்படிப்பட்ட நிலையில் ஓடிஓடி உழைப்பதால் என்ன பயன்? ஒன்றும் இல்லை என உண்டாகும் வெறுப்பு ஒன்று. ஆத்தியான்மிகம் முதலிய மூவகையால் வரும் துன்பம் மூன்று. பொருளை ஈட்ட எடுக்கும் முயற்சி, ஈட்டிய பொருளைக் காத்தலுக்கு எடுக்கும் முயற்சி. அரும்பாடுபட்டு ஈட்டிய பொருளை அரும்பாடுபட்டு காத்த போதும் மீறி இழக்க நேர்ந்தமை இப்படி பொருள் வாயிலாக வரும் துன்பத்தைக் கருதி அந்தப் பொருள் மேல் ஏற்படும் வெறுப்பு ஒன்று. கட்டிய மனையாளிடம் தனக்கு ஒத்து வராத உடன்படாத, இழிவு, துன்பம் முதலிய செயல்களைக் கண்ட (ஒன்றையோ, பலவற்றையோ) மனைவிமேல் வரும் வெறுப்பு.

பசி நோய். ஒரு நாள் உணவை ஒழிக்க முடியாது. இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட நாட்களுக்குச் சேர்த்து உண்ண முடியாது. நாள்தோறும் வேளை தோறும் தவறாது பசி வர, வருகின்ற பசிக்கு தீராத நோய்க்கு உணவு தேடுதலால் வரும் வெறுப்பு ஒன்று.

வறுமை வந்த போது வறுமையிலிருந்து தன்னைக் காத்தல் பொருட்டு பிறரிடம் கையேந்தி, வணங்கி, தாழ்ந்து, இயலாமையை எடுத்துக் கூறி இரத்தல் முதலியவை செய்ய வேண்டியபோது அதனால் ஏற்படும் தன்மான இழப்பு வரும். அதனால் வரும் வெறுப்பு.

முற்பிறப்பில் செய்த தவத்தின் காரணமான உலகத்தின் மேல் வரும் வெறுப்பு, விரும்பாமை. இதுபோல் மேலும் பல்வகையிலும் விரும்பாமை வரும். அது அவரவர் அனுபவத்தைப் பொருத்தது.

விரும்பாமை எவ்வகையில் வந்தாலும் அதனால் ஏற்படும் விளைவு ஒன்றுதான். விரும்பாமையால் துறவும், துறவால் மகிழ்ச்சியும் உண்டாகும். மகிழ்ச்சி (துட்டி, துஷ்டி, சந்துஷ்டி)

எனப்படும். அதுவும் மேற்கண்ட முத்தி நிலை பத்திற்கும் ஏதுவாகின்ற முறையில் ஒன்று பத்தாகப் பத்துப்பத்து நூறாக விரியும்.

4. செல்வம் : ஐசுவர்யம் : அணிமா, மகிமா, இலகிமா, பிராத்தி, காமியம், ஈசத்துவம், வசித்துவம், கரிமா முதலியனவாகும். அணிமா : தன்னை அணுவினும் மிக நுண்ணிய வடிவாக ஆக்கிக் கொள்ளும் வன்மை. மகிமா : மேற்கண்டதற்கு எதிராகத் தன்னை எவ்வளவு பெரிய உருவமாக ஆக்கிக் கொள்ள விருப்பமோ அப்படி ஆக்கிக் கொள்ளல். (வீரவாகு தேவர், அனுமன்). இலகிமா : சேற்று நிலத்திலும் நீரின் மேலும் கூட உள்அழுந்தாமல் இலேசாகச் செல்லும் தன்மை. பிராத்தி : தான் விரும்பிய பொருள்களை எவ்விடத்தில் இருந்தாலும் தன்னிடத்தில் வரச்செய்யும் வன்மை. பிறகாமியம் : ஆயிரம் மகளிரைத் தானே படைத்து அவர்கள் அனைவரோடும் ஆயிரம் வடிவாய்க் கூடிக களிக்கும் வன்மை (கண்ணன்). ஈசத்துவம் : பிரமன் முதலிய தேவர்களையும் தன் ஆணைக்கு உட்பட்டு நடக்கச் செய்யும் வன்மை (சூரபதுமன், இரணியன், இராவணன்). வசித்துவம் : உலகில் உள்ளோர் அனைவரும் தன்வசப்பட்டு இருக்கச் செய்தலும், புதிய உலகங்களைப் படைத்தலும் ஆகிய வன்மை (விசுவாமித்திரர்). கரிமா : ஐம்புலன்களை நன்கு நுகர்ந்தாலும் அவற்றில் கட்டுப்படாமல் இருக்கும் வன்மை. தன்னை எத்தனைப் பேர் தூக்கினாலும் தூக்க முடியாமலும், அசைப்பினும் அசைக்க முடியாமல் அத்தனை கனமாக இருக்கும் வன்மை. அணிமா, மகிமா, இலகிமா மூன்றும் உடலால் அடையப்படுவது. பிறகாமியம், ஈசத்துவம், வசித்துவம், கரிமா, பிராத்தி ஆகியவைகள் மனத்தால் அடையப்படுவன. ஈண்டு கவனிக்கத்தக்கது என்னவெனின் உடலை விட மனமே மிக்க ஆற்றல் உடைத்து என உணர்த்துகின்றது.

பாவங்களை அனுபவிப்பதால் அறிவும், அறிவால் விரும்பாமையும் விரும்பாமையால் செல்வமும் உண்டாகும். ஆகவே இவை ஒன்றிற்கு ஒன்று காரணமும் பயனுமாய்த் தொடர்ந்து நிகழும்.

5. மறம் : எண்வகைச் சித்திகளைப் பெற்றவர்கள் வந்தச் சித்தியால் செருக்கு எய்துவார்கள். மயங்கி யோகத்தைக் கைவிட்டுச் சித்திகளிலேயே இன்புறுவர். இதனால் மறம் என்னும் பாவகம் தோன்றும். இது முன்பு கொண்ட அறத்திற்கு மறுதலையான மறம் ஆனதால், அறத்தின் வகையாகக் கூறப்பட்டதற்கு எதிரானது. இதுவும் பத்து இயல்புடையது. அவை: (1) கொலை, (2) களவு, (3) பிறன்மனை நயத்தல், (4) அழுக்காறு, (5) வெகுளி, (6) உயர்ந்தோரை வழிபடாமை, (7) மனம் மாசுபடுதல், (8) பகைமை, (9) ஒருபாற் கோடல் என்பவை. இவற்றைப் பற்றி திருக்குறள் மிகவும் தெளிவாகவும் விரிவாகவும் விளக்கியுள்ளமை அறியத்தக்கது.

6. அறியாமை : அஞ்ஞானம் : மறத்தால் (அதருமத்தால்) அறியாமை உண்டாகும். அஃது ஐவகையாகும். அவை : தமம், மோகம், மாமோகம், தாமிசிரம், அந்ததாமிசிரம் என்பன. தமம் : உயிர் அல்லாதவற்றை உயிர் என மயங்குதல். அதுவும் இருப்பு நிலை கோட்பாடு அறிவிற்குக் கூறப்பெற்ற பத்து வகை உடையது. மோகம் : அணிமா முதலிய எட்டு சித்திகளே சிறந்த முடிவாகிய பயன் என மயங்குதல். அந்த மயக்கம் அந்தச் சித்திகளைப் பற்றி எட்டு வகையால் நிகழும். மாமோகம் : ஓசை முதலிய ஐம்புலன்களும் விருப்பு வெறுப்பு என்பவற்றால் பத்தாக உணரப்படும். ஆதலின் அங்ஙனம் உணரப்படும் அப்புலன்களே பொருள் என மயங்கும். தாமிசிரம் : பத்து வகை புலன்களையும் அணிமா முதலிய எட்டு சித்திகளையும் பெற முயன்று பெற முடியாமல் வருந்துவதும், பெற்ற பின்னர் இழந்ததாலும் வருந்துதல். இது பதினெட்டு வகை. அந்ததாமிசிரம் : மேற்கூறிய பதினெட்டு வகைப்பேறுகளையும் பெற்ற ஒரு யோகி. அவற்றை அவனை விட மிகுதியாக மற்றொரு யோகி பெற்றால் அதைக்கண்டு முன்னவராகிய யோகி வருந்துதல். இதுவும் மேற்கூறியவற்றால் பதினெட்டு வகையாகும்.

தமத்தின் வகை பத்து, மோகத்தின் வகை எட்டு, மாமோகத்தில் வகை பத்து, தாமிசிரத்தின் வகை பதினெட்டு. அந்த தாமிசிரத்தின் வகை பதினெட்டு. அறியாமையின் விரிவு அறுபத்து நான்காகும்.

7. விருப்பம் : அவைராக்கியம் : அறியாமையால் விருப்பம் தோன்றும். இது நூறு வகையாகும். அறுபத்து நான்கு அறியாமை, நூறு விருப்பம், மனம், தன்முனைப்பு, தொழிற்கருவி ஐந்து, அறிவுக்கருவிகள் ஐந்து மொத்தம் நூற்று எழுபத்தாறு பாவங்களால் ஆற்றலின்மை (அசத்தி) தோன்றும். அந்த ஆற்றலின்மையால் வறுமை தோன்றும்.

8. வறுமை அநைசுவரியம் : அநைசுவர்யம் என்றால் வறுமை. அஃது எண்பேராற்றலை (அட்டமாசித்தி) நோக்க அவ்வொன்றிற்கும் மறுதலையாய் நிற்கும். அது எட்டுவகை. செல்வம் அறுபத்து நான்கு மறம் பத்து, அறியாமை அறுபத்து நான்கு விருப்பம் நூறு வறுமை எட்டு முதலியன பாவகம். இதன் விரிவு நானூற்று முப்பத்தாறு. ஆற்றலின்மை நூற்று எழுபத்தாறு. மொத்தம் புத்தி இருப்பு நிலையில் தோன்றும் பாவகங்களின் விரிவு அறுநூற்று பன்னிரண்டாம்.

அறம் முதலிய பாவகங்கள் ஒன்றற்கொன்று காரியமாய் ஒன்றன்பின் ஒன்றாய் முறையே தோன்றுவதில் இறுதியில்

தோன்றுவது வறுமை. வறுமை தோன்றிய பின் மீண்டும் அறத்தில் புத்தி செல்லுதலால் முன்போலவே அறம் முதலிய பாவகங்கள் முறையே தோன்றும். அதனால் உயிர் அப்பாவகங்களில் அழுந்தும்.

"அறவிலா பாவகத்தால் அமுக்குண்டு" திருவாசகம்.

புத்தி இருப்பு நிலையின் வளர்ச்சி பாவான்மிகம், விவசாயான்மிகம் என இருவகை. பாவான்மிகம் - அறம். தருமம், தன்மம். (ஞானம்), அறிவு, மறம் (அதன்மம்), அறியாமை (அஞ்ஞானம்) (அவைராக்கியம்) விருப்பம், வறுமை (அநைசுவர்யம்) என்னும் மறவளர்ச்சி என இருவகைப்படும்.

அறம், அறிவு, விரும்பாமை, செல்வம் என்னும் நான்கும் அமைதி குணத்தில் தோன்றும். மறம் முதலிய நான்கில் விருப்பம் மட்டும் வெகுளி குணத்தில் தோன்றும். ஏனைய மூன்றும் மடிகுணத்தில் தோன்றும். ஒவ்வொன்றும் பலவகை வேறுபாடு பெற்றதால் அவை பலவாகும். அவைபற்றி பௌட்கர ஆகமம் கூறுகிறது.

தடாகம் முதலிய இயற்றும் வினை விவசாயான்மிகம் என்பர். அவை செய்த அக்காலத்திலேயே தனக்குரிய இன்பம் துன்பம் முதலியவற்றிற்கு உதவாது. அறிவு பெற்று பூர்வம் என்னும் துன்ப உருவாய்ப் புத்தி இருப்பு நிலையில் இருந்து உலகம், காலம், உடல் ஆகியவை வேறுபடவே (வேறு உலகத்தில், வேறு காலத்தில், வேறு உடலில்) பயன் கொடுக்கும். செயலால் வருவன போலவே அறிவால் வரும். இது புத்தி இருப்பு நிலை தன்மை.

## 8.19.15. முனைப்பு இருப்பு நிலை - அகங்கார தத்துவம்

புத்தி இருப்பு நிலையிலிருந்து அமைதி குணம் மிகுந்தும் வெகுளி குணம், மடிகுணம் குறைந்தும் இருக்க முனைப்பு தோன்றும். சித்தம் சிந்தித்ததை இதனை நான் உறுதிப்படுத்துவேன் என்று ஒன்றுபட்டு எழுதற்குரிய கருவி.

உறுதி செய்வேன் என்று எழுதலும் ஒருவகை துணிவே. ஆகையால் அதனையும் புத்தியே செய்யும். வேறு இருப்பு நிலை வேண்டாம் என்றால், இது குடம். இஃது ஆடை என்பது போல உறுதி செய்தல் தொழில் பொருளைப் பற்றி நிகழ்வது. உறுதி செய்வேன் என்னும் தொழில் உயிரினிடத்தில் தானே நிகழ்வது. இவ்வாறு உறுதி செய்தலுக்கும் ஒன்றுபட்டு எழுதலுக்கும் இடையே உள்ள வேறுபாடு பெரிதாகையால் இரண்டிற்கும் ஒரு கருவியே அமையாது. அதனால் உறுதி செய்வதைச் செய்கின்ற புத்திக்கு கருவி அமையாது. உறுதி

செய்வதற்கு ஒரு கருவியும் ஒன்றுபட்டு எழுதலுக்கு ஒரு கருவியும் இன்றியமையாதது தத்துவம் - இருப்புநிலை - கருவி ஒரு பொருள்.

உறுதி செய்தல் அமைதி குணத்தில் உண்டாகும். ஒன்றுபட்டு எழுதல் வெகுளி குணத்தால் ஏற்படும். ஆகையால் அவற்றிற்கு வேறு வேறு குணங்களையுடைய வேறு வேறு கருவிகள் வேண்டும் என்க. இந்த முனைப்பு இதர இருப்பு நிலை போல உயிர்க்குக் கருவியாம். நிற்பினும் யாம் என்னும் உணர்ச்சியால் கலைபோல உயிரே எனக் கருதப்படும் நிலையில் நிற்கும். அவ்வகையாலும் முனைப்பு புத்தியின் வேறு என உணரப்படும்.

### 8.19.15.1. முனைப்பின் வகைகள்

இது மூன்று வகைப்படும். அமைதி முனைப்பு, வெகுளி முனைப்பு, மடி முனைப்பு என மூவகைப்படும். அம்மூன்றும் முறையே சைதம், வைகாரியம், பூதாதி எனப்படும் (தைசத அகங்காரத்தில்) அமைதி முனைப்பில் மனமும் அறிவு கருவிகளும் வரும். வெகுளி முனைப்பில் (வைகரிய அகங்காரத்தில்) தொழில் கருவி வரும். மடி குணத்தில் (பூதாதி அகங்காரம்) தன் மாத்திரை அவற்றின் ஐம்பெரு பொருள் முறைப்படி வரும்.

முனைப்பு இருப்பு நிலை சாம்பவம், சீவனம், கருவம் என மூன்றாகும். விருத்தியினை உடையது. சாம்பவம் : இடைவிடாத முயற்சி வடிவு. சாம்பசிவம் சீவனம் (உயிர் வாழ்தல்) காற்றுக்களின் பிரவிருத்தி. கருவம் : நான் என்னும் எண்ணம் கொள்வது, புத்தியின் செய்கைக்கு வேறானது. பௌட்கர ஆகமம் முனைப்பு இருப்பு நிலையுள் கருவம் வளர்ச்சியினோடும், புத்தி வளர்ச்சியினோடும் வேறுபாட்டைக் கூறும்.

வினைக்கு ஈடான உடம்பில் முனைப்பு இருப்பு நிலை பொருந்தி இருக்கும். உயிர்க்காற்று முதலிய காற்றுக்களை இயங்கச் செய்து விட்டு நான் என்னும் செருக்குக்கு மூலமாய் என்னை ஒப்பவர் பூவுலகில் என்னையல்லாது பிறர் ஒருவரும் இல்லை என்னும் இயல்பு உடையதாய் புலன்கள் பொருள்களை நுகரும் பொழுது அந்தப் பொருள்களில் முற்பட்டு பொருந்தும்.

### 8.19.16. மனம்

அமைதி முனைப்பிலிருந்து (தைசத அகங்காரம்) மனம் தோன்றும். ஐம்பொறிகளால் கவர்ந்து தரப்பட்ட பொருள்களைப் பற்றுதல், இது இன்னப் பொருளா இல்லையா என ஐயப்படுதல் மனம் சங்கற்பித்தல். மனம் பொருளைப் பற்றுதல் என்பது சிந்தித்தலும் நினைத்தலும் ஆகும். மனம் ஐயுறும். ஐயுறுதல் விகற்பித்தல்

எனப்படும். ஐயத்திற்குப் பிறகுதான் உறுதிபடும். சங்கற்பமாகிய நினைவு மாத்திரையில் (நிச்சயம்) உறுதி தோன்றாது. அதன் பின் விகற்பமாகும்.

சங்கற்பம் விகற்பம் என்னும் முன்னே நடைபெறுவதும் பின்னே நடைபெறுவதுமாக வேறுபாட்டைத் தவிர வேறு வேறுபாடு இல்லை. எனவே மனம் என்னும் கருவி தேவை. எனினும் சங்கற்பிக்கின்ற காலத்தில் மனம் விருத்தியாகி நிற்கும். அந்த விருத்தியே சித்தம்.

சங்கற்பித்தல் நிர்விகற்பக் காட்சி பற்றி அதற்குப் பின்னே நிகழும். விகற்ப நினைவு சங்கற்பத்திற்குப் பின் முந்தைய பயிற்சி வாசனைப் பற்றி நிகழும். இரண்டிற்கும் காரணம் வேறு வேறு. ஆகையால் மனம் ஒன்றே இரண்டையும் செய்தல் இயலாது. எனின் அங்ஙனம் ஆயினும் இரு தொழிலுக்குப் பயன் உறுதியாய் பிறக்கும். எனவே அஃது இயலும். மனத்தின் விருத்தி சித்தம். சித்தம் ஒன்றன் பரிணாமம் ஆகாது. எனவே சித்தம் மனத்தில் அடங்கும்.

> ''சிந்தை நினைவு ஐயம் வந்து தரும் மனம் ஒழிய
> வகுப்பொணாதே'' சிவப்பிரகாசம் 43.

சிந்தை நினைவு ஐயம் வந்து தரும் என்பதை, சிந்தை, நினைவு வந்து ஐயம் தரும் என மாற்றிப் பொருள் கொள்ளல் வேண்டும்.

சித்தம் மனம் இரண்டின் தொழிலும் பொருள்களின் மேலான ஆதலின் அவை இரண்டிற்கும் கருவி ஒன்று. முனைப்பு தொழில் உயிரின் மேலாகும். புத்தியின் தொழில் பொருள்களின் மேல். மனம் புத்தி இவை இரண்டிற்கு வேற்றுமை அதிகம். எனவே வேறு வேறு கருவி இருத்தல் வேண்டும். ஒரு புத்தகத்தைப் புதிதாகக் கண்டு இது புத்தகம் என உணர்ந்தவன் வேறு புத்தகத்தைக் காணும் போது இதுவும் ஒரு புத்தகம் என உணர்வான். அதுபோல முன்னர் பயின்ற பயிற்சித் தொடர்பினால் சில பொருள்கள் பற்றி நிகழும். சங்கற்ப விகற்பங்கள் மனத்தின் தொழில். ஆதலின் ஒரு பொருளைப் புதிதாக அறிந்தவன். பின்னர் அப்பொருளை முன்னர் அறிந்த பொருளே முடிவு செய்தல் மனத்தினால் ஆகும்.

### 8.19.16.1. மனத்தின் பரிமாணம்

மனம் பொறிகள் சடம். உயிர் அறிவின் சேர்க்கையால் தான் ஐம்பொறிகள் தத்தம் புலன்களை அறியும். உயிரின் அறிவாற்றல் எல்லாப் பொறிகளையும் ஒன்றாய் இயக்காது. ஒரு நேரத்தில் ஒன்றை மட்டும் இயக்கும். மனம் அணுவினது அல்ல.

## 8.19.16.2. மனத்தின் தன்மை நான்கு

*(1) அதிசயமானது (வியப்பு) ஆனது. (2) சூட்சமமானது (நுண்ணியது), (3) மகத்தானது (நிகரற்றது), (4) இரகசியமானது (மறைவானது) என்பர் மெய்ஞ்ஞானிகள்.*

## 8.19.16.2.1. மனம் வியப்பானது

*உடலிலுள்ள உறுப்புக்கள் ஒரு குறிப்பிட்ட இடத்தில் குறிப்பிட்ட வடிவத்தில் இருக்கும். ஆனால் மனத்தை ஒரு குறிப்பிட்ட இடத்தில் குறிப்பிட்ட வடிவத்தில் காண இயலாது. மனம் மூளையோடு தொடர்பு உடையது. சான்று மனிதன் எண்ணும் எண்ணம் அனைத்தும் மூளையில் பதிவாகிறது. மனத்தின் விருப்பப்படியே மூளையும் இயங்கத் தொடங்கி புலன்களுக்குக் கட்டளை இட புலன்கள் பொறிகளுக்கு இயக்கம் அளிக்கிறது. இவை ஒன்றோடு ஒன்று தொடர்பு உடையது. எங்கேனும் ஒன்று பழுதுபட்டாலும் மற்றவைகள் பாதிக்கும். மனக்கோளாறு உடையவனை மூளைக் கோளாறு உடையவன் என்றும், மூளைக் கோளாறு புலன்களையும் புலன் வழி இயங்கும் பொறிகளையும் கோளாறு உடையதாக ஆக்கிவிடும்.*

*மனம் உடலோடு நெருங்கிய தொடர்புடையது. மனம் உணர்ச்சி வசப்படும் போதும் பாதிக்கப்படும் போதும் அது உடலையும் பாதிக்கிறது. மனச்சோர்பு உடல் சோர்வைத் தருகிறது. உடல் சோர்வால், மனச்சோர்வு உண்டாகிறது. உடலால் மனமும் மனத்தால் உடலும் பாதிக்கப்படுகிறது. இது வியப்பிற்குரியது.*

## 8.19.16.2.2. மனம் நிகரற்றது மகத்தானது

*புற உலகு வாழ்க்கையும் புற உலகின் கிட்டிய பொருளின் அளவற்ற ஆற்றலின் தன்மையும் தராத இன்பம் அமைதி தருவது மனம் ஒன்றாலேயாம். மனத்தின் மகத்துவம் அறிந்து அதனை நன்குப் பயன்படுத்தினால் புறப்பொருளாலும், புற உலகாலும் கிட்டி மறையும் இன்பத்தை விட பேரின்பமும், துன்பம் என்பதை என்னவென்றே அறியாமலும் அமைதியான நிறைவான வாழ்வைப் பெறலாம். இதற்கு ஈடானது எப்பொழுதும் உலகில் இல்லாததால் இது மகத்தானது எனலாம். மனத்தில் மாசற்ற கொள்கை அமைந்தால் உடல் ஆலயம்.*

### 8.19.16.2.3. மனம் நுண்மையானது

உருவம் இல்லாதது. ஒரு குறிப்பிட்ட இடத்தைத் தனக்கு உரியதாகக் கொள்ளாததாலும் நுண்மையானது. கண்ணாலும் கருவிகளாலும் காணல் இயலாது. மனத்தை மனதாலேயே அறியமுடியும்.

### 8.19.16.2.4. மனம் மறைவானது

மனம் ஆழமானது. பல பிரிவுகளை உடையது. உள்மனம் சிலவற்றையும், ஆழ்மனம் சிலவற்றையும் சேர்த்து வைத்துக் கொள்கிறது. அதன் வெளிப்பாடு மறைவானது. இதை மனத்தைக் கொண்டு அறியலாமேயொழிய வேறு வகையால் முடியாது. மனம் நிலையான பொருள் அல்ல. முனைப்பு இருப்பு நிலை காரணத்திலிருந்து தோன்றும் காரியம் மனம். காரண இருப்பு நிலையை நோக்க காரிய இருப்பு நிலையாகிய மனம் பருப்பொருள் ஆகும். மனம் உட்கருவி. மனம் ஐம்பொறிகள் வெளியே சென்று அறிந்த புலன்களை இடையே நின்று பற்றி உயிரினத்தில் சேர்ப்பிக்கின்ற உட்கருவி மனம். மனத்தை காகத்தின் கண்மணி என்பர். அது அகத்தும் புறத்தும் இடைவிடாது உலாவும்.

> "மருவிய பொறியில் ஒன்றும் மாபூதம் ஐந்தில் ஒன்றும்
> கருவிகள் நான்கும் நீங்காக்கலாதிகள் ஐந்தும் கூட
> ஒருபுலன் நுகரும்" சிவப்பிரகாசம் 63

புறத்தே உள்ள ஐம்புலன்களை கண் முதலிய புறக்கருவிகள் பொதுவாக முதலில் உணர அதன்பின் அப்புலனை உட்கருவியாகிய மனம் பற்றும். பற்றியபின் முனைப்பு ஒருப்பட்டு எழும். புத்தி உறுதிப்படுத்தும். அவ்வாறு இன்றி எல்லாக் கருவிகளில் ஒரே நேரத்தில் ஒன்றாய்த் தொழில்படுவது இல்லை.

### 8.19.16.3. மன உணர்ச்சி

மனத்தில் இருக்கும் ஓர் உணர்ச்சி "செய்" என்கிறது. அதற்குப் பின்னால் எழும் மற்றொரு குரல் செய்யாதே என்கிறது. புலன்களின் மூலமாக வெளியேறுவதற்காகப் போராடும் ஒரு கருத்துக் குவியல் மனத்தில் இருக்கிறது. அதற்குப் பின்னால் மிக மெல்லியதான சன்னமான நரிக்குரல் இருந்து கொண்டு அக்கருத்துக் குவியலைச் செயல்படாமல் தடுக்கிறது. இந்நிகழ்ச்சியே வளர்ச்சி (பிரவிருத்தி) எனவும், நீக்கல் (நிவிருத்தி) எனவும் அழைப்பர். இது முன்னே தள்ளும் சுழல், உள்ளே இழுக்கும் சுழல் எனப்படும்.

### 8.19.16.4. மனமும் மூளையும்

கடந்த பிறவியில் இருந்த மூளை உடல் அழியும் போது அழிந்து விட்டது. இந்தப் பிறவியில் இருப்பது புதிய மூளையே. முற்பிறவியில் மனத்தில் பதிந்து இருந்த நினைவுகளின் மொத்த உருவமே இந்தப் பிறவியில் புதிய மூளையுடன்தான் இந்தப் பிறவியில் பெற்றிருக்கும். உடலை இருப்பிடமாகக் கொண்டு இருக்கிறது. அறிவியலின்படி மூளையில் எவ்வளவு சுருக்கம் அதிகம் உள்ளதோ அவ்வளவிற்கு அறிவு அதிகம் என்பர்.

### 8.19.16.5. மனமும் காட்சியும்

பொதுவாகக் கண்ட புலன்களை மனம் முதலிய உட்கருவிகளே ஆராய்ந்து இஃது இன்ன உருவம் இஃது இன்ன ஓசை என அறுதியிட்டு உணரும். அறுதியிட்டு உணரும் உணர்வு துணிபு உணர்வு என்பர். எதுவென்று அறியாமல் ஐயப்படுவது ஐய உணர்வு. ஐய உணர்வும் துணிபுணர்வு இரண்டும் மனம் முதலிய உட்கருவிகளால் ஆவன அல்ல. ஐய உணர்விற்குப் பின் நிகழ்வது ஆகிய துணிபு உணர்வே வேற்றுமையுள்ள காட்சி (சவிகற்பக்காட்சி) என்பர்.

புறமனச் செயல்கள் ஒடுங்கிப் பக்குவப்பட்டுத் தூய்மையடையும் போது அது நடுமனமாகிறது. நடுமனம் ஆகிய சிந்தையே அடிமனம் ஆகும் போது சித்தம் எனப்படுகிறது. இறைவனைப் பற்றிய உள்ளுணர்வுகள் இங்கு தான் உண்டாகிறது. இறைவனை உணர்ந்து அவன் திருவருள் பெற துணை செய்யும் கருவியே சித்தம். சிந்தைக்கும் சித்தத்துக்கும் உள்ள தொடர்பு கருதி இரண்டு மன நிலைகளையும் ஒன்றெனக் கருதுவாரும் உளர். நடுமனம் பக்குவம் அடையும் போது அடிமனமாகிறது. அந்நிலையிலேயே இறையருளாகிய உள்ளொளி பெற முடிகிறது. அவ்வொளியைப் பெற்றவர்க்குப் பிறவித் துயர் தீர்வதுடன் இறைவனுடன் ஒன்றிவிடும் நிலையும் வாய்க்கும் என்பது சித்தர் வாக்கு.

### 8.19.16.6. மனம் தங்குமிடம்

புறமனம் மூளையிலும், நடுமனம் நெற்றியிலும், அடிமனம் இதயத்திலும் தங்குகின்றது. இதயத்தில் மனத்தைத் தங்க வைப்பது பெரும் சாதனை. மின்மினிப் பூச்சியின் உடலை அப்பூச்சியின் ஒளி காட்டுகிறது. அதுபோல மனித உடல் மெய்யொளி பெற்று உயர்வு பெறும் எனின் அதன் பயனாய் அதனைச் சார்ந்து இயங்கும். மனமும்

ஒடுங்கித் தூய்மை பெறும். உடல் ஒளி பெற்றது போல மனமும் உள்ளொளி பெறும். அவ்வுள்ளொளி காணும் நிலை ஏற்பட்டால் பிறவிப் பணி நீங்கி இறைவனுடன் உயிர் கலக்கும் நிலை ஏற்படும்.

மனம் மூளையில் தங்கும் போது வெளியுலகை அறிய முடிகிறது. இதயத்தில் தங்கும் போது அக உலகை ஆன்மிக உலகை அறியமுடிகிறது. பெரும் மூளை, சிறு மூளை ஆகிய இரண்டு இடமும் மனம் தங்குமிடம். விழிப்பு, கனவு ஆகிய இருநிலைகளில் மனம் தொழில்படுகிறது. அப்போது பெரும் மூளை, சிறுமூளை ஆகிய இடங்களில் அது தங்கும். உறக்கத்தின் போது மனம் தொழில்படுவதில்லை. அப்போது இதயத்தை அடைகிறது. விழிப்பின் போதும் மனத்தைத் தொழில்படாது செய்து இதயத்திற்குக் கொண்டு செல்வது ஒருநிலை. இது மெய்ஞ்ஞானிக்கே முடியும்.

### 8.19.16.7. மனதால் உடலும் உடலால் மனமும் பாதிக்கும்

உடலால் மனம் பாதிக்கும். மனத்தால் உடல் பாதிக்கும். உடல் கட்டுப்பாடே மனக்கட்டுப்பாடு. உடல் கட்டுப்பாடு உணவுக் கட்டுப்பாட்டால் வருவது. உணவுக் கட்டுப்பாடு மனக்கட்டுப்பாட்டால் வருவது. உடல் சோர்ந்தால் மனம் சோரும். மனம் சோர்ந்தால் உடல் சோரும். மனப்பயிற்சி பெரும்பாலும் உடல் பயிற்சியாய் உள்ளன. உடலும் மனமும் பண்பட வேண்டும். "உள்ள மெலிவோடு உடல் மெலிவும் கண்டு எள்ளளவும் இரங்கவில்லையே" என இறைவனை வினவுகிறார் வள்ளலார். 'உடலும் மனமும் கண்ணும் ஆவியும் கலக்கலுற்றான்' என்கிறார் கம்பர். "குற்றமில்லாக் கொள்கை மனத்தில் அடைந்தால் உடம்பு ஈசனைக் காட்டும்" என்கிறார் ஔவையார்.[31]

### 8.19.16.8. உணரும் மனத்தின் இயல்பு

நனவில் உள்ளபோது முன்னர் படித்த கருத்து நினைவிற்கு வரவில்லை. அது ஆழ்மனத்தில் பதிந்து கிடக்கிறது. மேல் மட்டத்தில் இயங்கும் நம் அறியும் மனத்தால் அதனை நினைவு நிலைக்குக் கொண்டு வர இயலவில்லை. ஆனால் தூக்கத்திலும் ஆழ்மனம் இயங்கிக் கொண்டு இருக்கிறது. அதில் புதைந்து கிடந்த அந்தக் கருத்து ஆழ்மனம் மேல் மனத்தின் நினைவிற்கு உந்தித் தள்ளுகிறது. எனவே விழித்து எழுந்தவுடன் அந்தக் கருத்து நினைவுக்கு வருகிறது. அறியும் மனம் ஐம்புலன்கள் வழியாக உலகத்தை அனுபவித்துப் பெறும் அனுபவங்கள் அனைத்தும் ஆழ்மனமான உணரும் மனத்தில் உறைந்து படிகின்றன. அனுபவங்களில் படிவு கனமான அனுபவங்களின் களஞ்சியமாக ஆழ்மனம் அமைகிறது.

அறியும் மனத்தின் வழியாகப் பெற்ற அனுபவங்களின் பயனாகப் பக்குவம் பெறும் ஆழ்மனம் அமைதியான இயக்கத்தில் உண்மைகள் தோன்றுகின்றன. உண்மைகள் தோன்றுவது உணர்வு எனப்படும். உள்மனத்தில் தோன்றும் இவ்வுணர்வு உள்ளுணர்வு (Institution) எனப்படும். அறிவியல் துறையில் புதிய கண்டுபிடிப்புக்கள் முதலில் உள்ளுணர்வாகத் தோன்றி பின்னர் சோதனை மூலம் (Experiment) அறிவியல் உண்மைகளாக (Scientific Discoveries) கொள்ளப்படுகின்றன என்கின்றனர் உளவியல் அறிஞர்கள். இத்தகையவர்களின் உள்உணர்வாகத் தோன்றுவது தான் மெய்யுணர்வு என்ற இறையுணர்வு.

## 8.19.16.9. அறியும் மனம்

மனிதன் ஐந்து அறிவுக் கருவிகளின் மூலமாக உலகை அனுபவிக்கிறான். இந்த அனுபவங்கள் ஆழ்மனத்தில் பதியும். பலமுறை இப்படி அனுபவங்கள் ஆழ்மனத்தில் பதிந்து பதிந்து ஒரு கிளர்ச்சியைத் தோற்றுவிக்கின்றன. இத்தகைய அனுபவ கிளர்ச்சியால் உள்மனம் பக்குவம் பெறுகிறது. பக்குவப்பட்ட மனம் இயற்கை அனைத்தையும் இயக்கி நிற்கும் ஏதோ ஓர் ஆற்றல் உள்ளது என்ற உணர்வு தான் மெய்யுணர்வு என்கிறார் திருவள்ளுவர். அறிகின்ற மனத்தால் ஆராய்ந்து காண்கின்ற முடிவல்ல இது. எனவே இதை அறிவு என்று அழைக்காமல் உணர்வு என்று உரைக்கின்றனர்.

எண்ணற்ற இயற்கைப் பொருள்கள் எப்படி இருந்தாலும் அந்தப் பொருளின் உட்பொருளாக உள்ளது இந்த ஆற்றல். இந்த ஆற்றல்களின் தோற்றமே இயற்கைப் பொருள்கள். இவ்வாற்றலே மெய்ப்பொருள். இதை அறிகிறது அறியும் மனம். எனவே மெய்யுணர்வே மெய்யறிவாகிறது.

ஐம்புலன்களால் ஐந்து உணர்வுகளைப் பெற்று இயற்கையினை மனிதன் அனுபவிப்பதன் பயன் மெய்யுணர்வு பெறுவதாகும். இத்தகைய மெய்யுணர்வு பெறாதவர்கள் ஐந்து உணர்வால் பயன் அடையாதவராவர்.

அறிதல் என்பது வேறு, உணர்தல் என்பது வேறு. நன்னூல்களைப் படித்தோ, நல்லோரிடம் கேட்டோ (கற்றல் கேட்டல்) பற்றித் தெரிந்து கொள்வதுதான் அறிதல். ஒரு பொருளை நேரிடையாக அனுபவிப்பது உணர்வு எனப்படும். புலன்களின் உதவியில்லாமல் உள்ளமே நேரடியாக உணர்வதுதான் உணர்வு எனப்படுகிறது.

எண்ணத்திற்கேற்ற நுண்ணுடல் மனிதனுக்கு அமைகிறது. மனிதன் எண்ணும் எண்ணத்துக்கு நிலைகளனாக உள்ள மனம் மனிதனது பருவுடல் நீங்கியதும் அவன் மனம் என்னும் நுண்ணுடலுடன் மேல் எழும்புகின்றன (திரு.வி.கலியாணசுந்தரனார்).

மனம் ஒன்றே. செயல்படும் நிலைக்கேற்ற மனம், புத்தி, சித்தம், முனைப்பு என்னும் பெயர்களைப் பெறுகின்றன. எண்ணங்களின் திரண்ட நிலையே மனம் என்பர். மனம் உயிருக்குக் கட்டுப்பட்டு அதனிடம் அறிவு பெற்றே இயங்குகின்றது. காரணம் அகக்கருவிகள் சடம். மனிதனின் பருவுடல் நீங்கியதும் அவனுடைய மனம் நுண்ணுடலுடன் மேல் எழும்புகிறது என்பர். உயிருக்கும் அகக்கருவிக்கும் உள்ள தொடர்பு அரசனுக்கும் அமைச்சர்களுக்கும் உள்ள தொடர்பு போன்றது என்கிறது சைவ சித்தாந்தம்.

## 8.19.17. ஐம்புலனும் ஐம்பொறியும் : அறிவுக்கருவிகள் ஐம்புலன்கள்

(1) ஓசை, (2) ஊறு, (3) உரு, (4) சுவை, (5) நாற்றம் ஆகிய ஐந்தும் ஐம்புலனாகும். இதனையே வடமொழியில், ஓசை - சப்தம், ஊறு - பரிசம், உரு - ஒளி - ரூபம், சுவை - ரசம், நாற்றம் - கந்தம் என்று அழைக்கப்படுகிறது. இந்த ஐம்புலனும் ஆசையைத் தரும் என உண்மை விளக்க நூல் உரைக்கின்றது. இப்புலன்கள் இயங்குமிடம் கருவி என்றும், பொறி என்றும் அழைக்கப்படும். ஐம்பொறிகள் மனத்தைத் துன்புறுத்துகின்றன.[32]

உயிர், மடிகுணம் (தாமசகுணம்) நிறைந்த தன் மாத்திரைகளை இடமாகக் கொண்டு ஐம்புலன்களை அறியும். அவை தொழில்படும் இடங்கள். அதாவது இயங்குமிடம் முறையே காது (செவி), மெய் (தோல்), கண், நா (வாய்), மூக்கு (நாசி) என்பனவாகும் என உண்மை விளக்க நூல் உரைக்கின்றது.

அமைதி முனைப்பிலிருந்து (சாத்வீக அகங்காரம்) மனம் தோன்றிய பின்னர் அறிவுக்கருவிகள் தோன்றும். ஐந்து கருவிகள் பெயர்கள் ஆகுபெயர்கள். ஏனென்றால் அவை இடத்தின் பெயரால் நின்று தம்மிடத்தில் நிற்கும் ஆற்றலை உணர்ந்து நிற்பதால் ஆகும். இந்திரியம் என்பது வெளியில் தோன்றும் கண், காது முதலிய அறிவுப்பொறிகள் அல்ல. அங்குள்ள நுண்பொருளான ஆற்றலேயாகும். புலன் என்றால் தன் மாத்திரையைக் குறிக்கும். இந்த ஐந்து பொறிகளையும் தத்தம் புலன்களில் சென்ற விடத்தால் செலவிடாது தடுத்தவரே பேரின்ப பெருவாழ்வு பெறுவர்.[33]

பொறிகளைச் சென்றவிடத்தால் செலவிடாது நல்லவற்றின் மீதுள்ள செலுத்துவதே அறிவு, வள்ளுவர் கூறியது. இயற்கையாக அமைந்துள்ள நுண் பொருள்கள் (தன் மாத்திரை) ஒலி, ஊறு, உருவம், சுவை, நாற்றம் ஆகிய இவையே காரணம்.

### 8.19.7.1. அறிவுக்கருவிகளின் அறிவு விபரம்

*(1) காது விண்ணை இடமாகக் கொண்டு ஒலியை அறியும், (2) மெய் காற்றை இடமாகக் கொண்டு இழிவான ஊறு இன்பம் அறியும், (3) கண் தீயை இடமாகக் கொண்டு உருவம் அறியும், (4) நாக்கு நீரை இடமாகக் கொண்டு சுவையை அறியும், (5) மூக்கு மண்ணை இடமாகக் கொண்டு நாற்றம் அறியும். காது - செவி - சுரோத்திரம், தோல்-மெய்-துவக்கு, நா-நாக்கு, சிங்குவை,. கண்-சட்சு, மூக்கு-நாசி. அக்கிராணம் ஒரு பொருள் பன்மொழிகள்.*

### 8.19.17.2. தத்துவத்தின் கூறு : கருவியின் கூறு

*(1) விண்ணின் கூறு காது, (2) மெய் காற்றின் கூறு, (3) கண் தீயின் கூறு, (4) நாக்கு நீரின் கூறு, (5) மூக்கு மண்ணின் கூறு. கூறு என்றால் ஒரு பகுதி எனப் பொருள்படும்.*

### 8.19.17.3. பொருள்கள் பொறிகள் இயல்பு
#### 8.19.17.3.1. விண் (ஆகாயம்)

*விண்ணின் குணம் கெடாது காதிற்கு இடம் கொடுப்பது. காது என்னும் பொறியின் இயல்பு விண்ணிடமாக நின்று. ஓசையை அறியும். இக்காதிற்குத் தொழில் கருவி வாக்கு. விண்ணை இடமாகக் கொண்டு உரையாடுவது சொல்லின் பொருள்.*

#### 8.19.17.3.2. காற்று (வாயு) (வளி)

*காற்றின் இயல்பு ஊறு. மெய்யிற்கு இடமாக இருத்தல். ஊறு புலனின் குணம். காற்று இடமாக நின்று ஊற்று உணர்ச்சியை அறிதல். ஊறு புலனுக்குப் பொருந்திய தொழில் கருவி கால். கால் காற்றின் இடமாக நின்று நடத்தல் தொழில் செய்யும்.*

#### 8.19.17.3.3. தீ (தேயு)

*தீயின் இயல்பு கண் என்னும் அறிவுக்கு இடமாய் இருத்தல். கண்ணின் பண்பு தீயின் இடமாக நின்று அறிவுப்பொறிக்குப்*

பொருந்திய தொழில் கருவி கை ஆகும். கையின் தொழில் பிறருக்குக் கொடுத்தல், வாங்கல் முதலியன.

### 8.19.17.3.4. நீர் (அப்பு)

நீரின் இயல்பு நாக்கு என்னும் அறிவுப் பொறிக்கு இடமாய் இருத்தல். நாக்கின் பண்பு நீர் என்னும் பொருள் இடமாக நின்று சுவை அறிதல். நாக்கின் தொழில் மலங்கழி கருவி. மலங்கழி கருவி நீர். தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டு மலம் கழித்தல், மலங்கழி கருவி - எருவாய்.

### 8.19.17.3.5. மண் (பிருதிவி)

மண்ணின் இயல்பு மூக்கு என்னும் அறிவுப் பொறிக்கு இடமாய் இருத்தல். மூக்கின் பண்பு மண்ணை இடமாகக் கொண்டு நாற்றம் அறிதல். மூக்கிற்குப் பொருந்திய தொழில் கருவி நீர்கழி கருவி (கருவாய்). கருவாய் மண்ணை அடிப்படையாகக் கொண்டு இயங்கி இன்பம் அளிப்பது.

### 8.19.17.4. பொருளும் குணமும்

(1) விண்ணிற்கு ஒலியும், (2) காற்றிற்கு ஊறும், ஒலியுமாகிய இரண்டும், (3) தீயிற்கு ஒளி, ஒலி, ஊறும், (4) நீருக்கு சுவை, ஒளி, ஒலி, ஊறும் ஆகிய நான்கும். (5) மண்ணிற்கு நாற்றம், சுவை, ஒளி, ஒலி, ஊறு, ஆகிய ஐந்தும் குணமாகும்.

### 8.19.17.5. பொருள்களின் இயல்பு இடம் தொழில் கருவி தொழில் : விபரம்

| பொருள் | இடம் கொடுத்தல் | இடம் | குணம் அறிதல் | தொழில் கருவி | தொழில் |
|---|---|---|---|---|---|
| 1. விண் | இடம் | காது | ஒலியறிதல் | வாய் | உரையாடல் |
| 2. காற்று | ஊறு | மெய் | ஊறு அறிதல் | கால் | நடத்தல் |
| 3. தீ | உருவம் | கண் | உரு அறிதல் | கை | இடுதல் ஏற்றல் |
| 4. நீர் | சுவை | நாக்கு | சுவையறிதல் | எருவாய் | மலம் கழித்தல் |
| 5. மண் | நாற்றம் | மூக்கு | நாற்றமறிதல் | கருவாய் | இன்பமளித்தல் |

### 8.19.17.6. பொருள் - புலன் - பொறி - அதிதேவதை : தொழில்கருவி

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| விண் | காற்று | தீ | நீர் | மண் | பொருள் | 1 |
| ஒலி | ஊறு | ஒளி | சுவை | நாற்றம் | புலன் | 2 |
| காது | மெய் | கண் | நாக்கு | மூக்கு | அறிவுக்கருவி | 3 |
| உரையாடல் | நடத்தல் | கொடுத்தல் வாங்கல் | மலம் கழித்தல் | இன்பம் அளித்தல் | தொழில் | 4 |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| வாய் | கால் | கை | கருவாய் | எருவாய் | | 5 |
| அக்கினி | வாமன் சூரியன் | இந்திரன் | யமன் மிருத்தி | பிரமன் | தொழில்கருவி அதிதேவதை | 6 |
| ஒலி | ஒலி ஊறு | ஒலி ஊறு உருவம் | ஒலி ஊறு உருவம் சுவை | ஒலி ஊறு உருவம் சுவை நாற்றம் | குணம் | 7 |
| வெளி | ஊறு | வெப்பம் | நெகிழ்ச்சி | திண்மம் | தன்மம் | 8 |
| இடம் கொடுத்தல் | உலாவல் | பாகம் ஆக்கல் | திரட்டல் | பொறுத்தல் | தொழில் | 9 |
| சதாசிவன் | மகேசன் | உருத்திரன் | திருமால் | பிரமன் | அதிதேவதை | 10 |

## 8.19.17.7. பொறி உணர்வு

பொறி உணர்வுகளில் உடம்பு உணர்ச்சி மிகவும் பருமையானது. வாயின் உணர்ச்சி உடம்பினும் சிறிது நுட்பம். கண்ணின் உணர்ச்சி மூக்கினும் நுட்பம். காதின் உணர்ச்சி கண்ணிலும் நுட்பம். மண்ணை விட நீரும், நீரைவிட தீயும், தீயை விட காற்றும் நுட்பமானது.

உயிர்களுக்கு அறிவு மிகுதிபட மிகுதிபட அவைகளிலிருந்து உடம்பு வரவர மென்மை தன்மை உடையனவாகும். அறிவு கடைசியில் மிக நுண்ணியதாக வளர்ந்து முற்றிய பிறகு உடம்பானது காற்றினும் நொய்யதாய் இந்நிலவுகில் இயங்காமல் விண்ணில் இயங்க வல்லதாகும்.

உடம்பின் உணர்வானது மிக நுட்பம் உடையதாகும்படி செய்துக் கொள்வது மனத்தை ஒருவழிப்படுத்துவதற்கும் அறிவை மிகுதிப்படுத்துவதற்கும் உதவும். நுண்ணறிவு உடையார் அறுசுவை பண்டங்களையும் அளவாக ஒவ்வொன்றையும் நன்கு சுவைத்துப் பார்த்து இன்புற்றுச் சிறிதே அருந்துவர்.

இனிப்பு, துவர்ப்பு, கைப்பு சுவையுள்ள பொருள்களை விரும்புதல் போல அவர் புளிப்பு, கார்ப்பு, உவர்ப்பு சுவைகளை விரும்ப மாட்டார். அறிவில் குறைந்தவர்களே புளிப்பு, கார்ப்பு, உவர்ப்பு மிகவும் விரும்புவர் என்பர்.

## 8.19.18. (32-36.) ஐம்பொருள்கள்-பஞ்சபூதங்கள்

பூதாதி அகங்காரம் மடி குணத்திலிருந்து ஐந்து தன்மாத்திரைகளாகிய ஓசை, ஊறு, உருவம், சுவை நாற்றம் தோன்றும் தன்மாத்திரை என்பது தன் அளவில் உள்ளது. சான்று: ஒலி அகத்தில்

கேட்கும் தன்மையான அறிவாயும் புறத்தில் கேட்கும் தன்மையான ஒலியாயும் இருக்கும். கேட்பது தன் அளவு அற்றதாயும் கேட்கப்படும் பொருள் அளவற்றதாயும் இருக்கும். ஆகவே தன் அளவில் கேட்பது தன் மாத்திரை.

அறிவுக்கருவிகள் தொழில் கருவிகள் தோன்றிய பின்னர் இதர இயல்பு முனைப்பிலிருந்து (பூதாதி அகங்காரம்) ஒலி முதலிய ஐந்து தன்மாத்திரை தோன்றும் ஐந்து தன் மாத்திரைகள், விருப்ப வடிவாகிய மனம் புத்தி, முனைப்பு ஆக எட்டும் சேர்ந்தது புரியட்டக உடல்.

தன் மாத்திரையின் மூலகமாக மேகங்கள் உலாவும் விண்ணும் காற்றும், அழியுறுதல் இல்லாத தீயும் இவற்றோடு முரண் உறும் நீரும், மண்ணும் பரந்து விரியும் தன்மையுள்ள பருப்பொருளாகத் தோன்றின. பூதம் தோன்றியது எனப் பொருள்படும். பூதம்-பொருள். சூக்குமபூதம் எனின் நுண்பொருள் எனவும், தூல பூதம் எனின் பருப்பொருள் எனவும் பொருள்படும் பூதம். இத்துணைத்து இவ்வரையுடைத்து என அளந்து அறிய ஒண்ணாதது. இது பற்றிய புறநானூற்றுப் பாடலில் முரஞ்சியூர் முடிநாகராயர் பாடியுள்ளார்.

### 8.19.18.1. ஐம்பொருள்களின் இயல்புகள்

மண் (பிருதிவி) மண் திண்மையானது. பருமையானது. நறு நாற்றம், தீ நாற்றம் என்னும் இரு நாற்றம் உடையது. மண்ணிற்கு ஆறு சுவையும் உண்டு. வெண்மை, செம்மை, பொன்மை, கருமை என்னும் நிறம் உண்டு. பொருள்களைத் தாங்கும் தொழிலை உடையது நாற்றம், சுவை, உருவம், ஒலி, ஊறு என்னும் தன்மாத்திரை உடையது.

### 8.19.18.1.1. மண்ணின் கூறுகள்

தோல், எலும்பு, நரம்பு, தசை, மயிர் என ஐந்து. மண்ணிற்கு உரத்துத் தாங்கும். வடிவே உருவம், நாற்கோண வடிவம். கிடத்தல் இயல்பு. பொன்னிறம் உடையது. திண்மையாய்த் தாங்குதல் குணம், பொறுத்தல் தொழில். வச்சிரம் குறி, லகரம் எழுத்து, நான்முகன் தெய்வம், அதிதெய்வத்தின் தொழில் படைத்தல். நிவர்த்தி கலையுடையது. நுண் எழுத்து அகாரம். இதன் சிறப்பு கல், மணி, நவமணி முதலிய பலவடிவங்கள், இதன் வளர்ச்சி விண் அளவு. இதன் விரிவு நூறு கோடி யோசனை அளவும் விரிந்து நவமணி பொன் ஐந்து உலோகம் என்னும் இவற்றின் நிறமாகியும் உடலில் எலும்பு தோல், நரம்பு, தரை, மயிர் எனவும் விரியும். மேலே கூறியவற்றை நன்கு ஆராய்ந்து அறிவதே காட்சி. தூய்மை என்னவெனின் மண்தத்துவம்

உயிராகிய யான் அன்று அது எனக்குவேறு பட்டது எனத்தெரிந்து அதனிடம் பற்று விடல் அஃதாவது மண்ணாசையை விடல்.

## 8.19.18.1.2. (35) நீரின் இயல்புகள்

நீர் இளகும் தன்மை உடையது. பொருள்களை மென்மைபடுத்தும். நனைக்கும். வெம்மை சேரின் வெந்நீர் ஆகும். தண்மை சேரின் தண்ணீர் ஆகும். அதிக வைப்பம் சேரின் ஆவியாகும். அதிக தண்மை சேரின் பனிக்கட்டி ஆகும். ஆக ஆவியாக இருக்கும்போது காற்று (வளிமம்) உருவத்தையும், நீராக இருக்கும்போது நீர்மம் உருவத்தையும், பனிக்கட்டியாக இருக்கும்போது திண்மம் உருவத்தையும் பெறும். நீருக்கு ஆறு சுவையோடு உருவம் ஒலி, ஊறு ஆகிய நான்கு தன் மாத்திரை உண்டு.

## 8.19.18.2. நீரின் கூறுகள்

சிறுநீர், குருதி (இரத்தம்), மூளை, மஜ்சை, சுக்கிலம் ஆக ஐந்து கூறு உள எனக் கூறுகின்றன நூல்கள்.

அரை மதி வடிவம் உடையது. வெண்மை நிறம். வகர எழுத்து, தாமரை அடையாளம் உடையது. அதிதெய்வம் திருமால் . திருமால் தொழில் காத்தல். குணம் குளிமை. இயல்பு கீழ்நோக்கிச் செல்லல். சிறப்பு கனம் இல்லாமல் இருப்பது. பிரகிருதி அளவு வளர்ச்சியுடையது. விரிவின் எல்லை நிலம் தத்துவத்தைக் காட்டிலும் பத்து மடங்கு யோசனை அளவாய் விரிந்து ஏழ்கடல் நீரும், பிற நீர்நிலைகளின் நீருமாய் இருக்கும், சிறுநீர், வெண்ணீர், மூளை, நிணம், குருதி முதலியவாயும் இருக்கும். இதனைச் சிறை செய்யலாம். அதன் இயல்புகளை அறிதலே காட்சி. தூய்மை எனின் நீராகிய பொருள் பொய்ப் பொருள் என அறிந்து அதனிடம் பற்று விடுதல். கலை பிரதிட்டா கலை எனவும், நுண்எழுத்து உகரம் எனவும் கூறப்படும். நீரால் வருவது சிலேத்துமம் எனப்படும் ஐ (கோழை, கபம், சளி) ஆகும்.

## 8.19.18.3.(34) தீ-நெருப்பு-அக்கினி இயல்புகள்

தீ அடுதல், சுடுதல் என்னும் இருசெயல் செய்யும். இது அருவுருவம். பொருள்களைத் தன்னிலையாக்கும். சுடர்விட்டு ஒளியுடன் மேல்நோக்கிச் செல்லும். பொருள்களை (நீர்மம் ஆக்கி) உருக்கி ஒன்றுபடுத்தும்.

### 8.19.18.3.1 தீயின் கூறுகள்

பசி, உறக்கம், அச்சம், இணைவிழைச்சு, சோம்பல். மற்றைய இயல்புகள் வருமாறு :

வடிவு-முக்கோணம். நிறம்-செம்மை, அடையாளம்-சுவத்திகம், எழுத்து- ரகரம், அதி தெய்வம்-உருத்திரர். அவர் தொழில் அழித்தல். குணம் எரிப்பது. இயல்பு மேல்நோக்கி எழுதல் வளர்ச்சி. அசுத்தமாயை மோகினி என்னும் தத்துவ அளவாகும். விரிவு உதராக்கினி, பூதாக்கினி, விந்துவாக்கினி, காட்டாக்கினி, படிகாக்கினி என்னும் ஐந்து தழலாய் (நெருப்பாய்) பதினாயிரம் கோடி யோசனை அளவும் விரிந்து இருக்கும். பசி, சோம்பல், உறக்கம், மறதி, இணைவிழைச்சு ஆகவும் இருக்கும். காட்சி மேற்கூறிய அப்பொருளின் உருவம் முதலியவற்றைத் தெளிவாக அறிதல். தூய்மை-இத்தகைய வேறுபாட்டினை உடைய தீ சடப்பொருள் என்று அறிந்து அதன் மீது பற்று விடல். நுண் எழுத்து மகாரம். கலை வித்யா கலை.

### 8.19.18.4. (33) காற்று, வளி-வாயு, இயல்புகள்

காற்று கண்புலனுக்கு உட்படாது. அருவமானது. ஊறு வழி அறியலாம். வெம்மை சேரின் அனல் காற்றாகவும், தண்மை சேரின் குளிர் காற்றாகவும் வீசும். நறு நாற்றம், தீ நாற்றம் வெளிபடுத்தும். அடர்வு குறைந்த இடம் நோக்கி விரையும். பல்வகையானது. ஒவ்வொன்றிற்கும் தனித்தனி ஆற்றல் உண்டு. தனித்தும், பல ஒன்று சேர்ந்தும் இருக்கும் கலவை எனலாம். ஆனால் கலப்பு இல்லை. ஆவி (Gas) வளிமம் எனப்படும். ஓய்வு இன்றி பரவும். பொருள்களைத் திரட்டும். சலித்து திரட்டும். பொருள்களை இடம்பெயர்க்கும்.

### 8.19.18.4.1 காற்றின் கூறுகள்

ஓடல், நடத்தல், இருத்தல், கிடத்தல், தத்தல் ஏனைய இயல்புகள், வடிவு அறுகோணம். நிறம்-கருமை. எழுத்து யகரம். அடையாளம் ஆறுபுள்ளி. அதி தெய்வம் மகேசுவரர். அவர் தொழில் மறைத்தல். குணம் எங்கும் பரந்து இருப்பது. உருவம் சலித்து திரட்டல். சிறப்பு ஏனைய மூன்று பொருள்போல் அல்லாமல் கண்ணிற்குத் தெரியாமல் இருப்பது. அருவம் இயல்பு. எல்லாப் பொருளினும் திளைத்து நிறைந்து இருப்பது. வளர்ச்சி சதாசிவ தத்துவம் வரை விரிவு. நூறு ஆயிரம் கோடி யோசனை அளவும் விரிந்து உயிர்க்காற்று முதலிய முக்கிய பத்துக்காற்றாய் உடலில் இருத்தல். மொத்தம் பதிநான்கு

காற்று. ஓடல், நடத்தல், கிடத்தல், இருத்தல், தத்தல் என்னும் கூறு உடையது. காட்சி காற்றின் செயல்களை நன்கு அறிதல். தூய்மை இது சடம், இது அறிவு அற்றது என உணர்ந்து பற்று விடல். கலை சாந்தி கலை. நுண் எழுத்து விந்து. இது பற்றிய விபரங்கள் தத்துவப்பிரகாசம் விளக்குகின்றது.

| 8.19.18.4.2. | காற்று | இருப்பிடம் | நிறம் |
|---|---|---|---|
| 1. | உயிர்க்காற்று (பிராணன்) | நெஞ்சு | இந்திரநீல ஒளி |
| 2. | மலக்காற்று அபானன் | கருவாய் | இந்திர கோபத்து ஒளி |
| 3. | ஒலிக்காற்று உதானன் | கொப்பூழ் | மின்னல் ஒளி |
| 4. | தொழில் காற்று வியானன் | உடல் முழுதும் இருந்து ஊறு உணர்ச்சி காட்டும் | பால் நிறம் |
| 5. | நிரவு காற்று சமானன் | கழுத்து சந்து | காயா மலர் |
| 6. | விழிக்காற்று நாகன் | முடக்குதல், நீட்டுதல் கொட்டாவி விடுதல் | இளைய ஞாயிறு |
| 7. | இமைக்காற்று கூர்மன் | கண்ணில் நின்று இமைக்கும் | குருந்த மலர் |
| 8. | தும்மல் காற்று கிரிகரன் | மயிர்ச்கூச்செரிய செய்தல், முகத்தில் நின்று வெம்மை சினம் தும்மல் உண்டாக்கும். | கருமை |
| 9. | கொட்டாவிக் காற்று தேவதத்தன் | இளைத்தல், வியர்த்தல், ஓடல், நடத்தல் | பளிங்கு கல் |
| 10. | வீங்கற்காற்று தனஞ்சயன் | உயிர் உட ம்பை விட்டுப் போன பின் உடம்போடு இருந்து உடலை வீங்கச் செய்யும். தலையைப் பிளந்து வெளிவரும். | இந்திர நீலத்து ஒளி |

### 8.19.18.4.3 காற்றின் தொழில்கள்

உடல் உயிரோடு இருக்குங்காலத்து மூச்சு விடுதல், (சுவாசித்தல்), உண்ணுதல், வளர்தல், இனவிருத்தி செய்தல் எனப்படும் உயிரினத்திற்குரிய நான்கு செயல்களைச் செய்கிறது. மூச்சுவிடுதல் உயிரோடு இருத்தலுக்கு அடையாளம். மேலும் ஏனைய மூன்று செயல்களும் நடைபெறும். உணவு உடல் (அன்ன மய கோசம்) பிணியின்றி சுறுசுறுப்பாக இயங்க உயிர்க்காற்று தேவை. காற்றுத் தான் உடலையும் மனத்தையும் இணைத்து வாழ்க்கையை நடத்த வழி வகுக்கின்றது. உயிர்க்காற்று உடலில் இயங்கினால்தான் உயிரும் உடலும் சேர்ந்து இயங்கும். அது எப்போது உடலை விட்டு நீங்குகின்றதோ அப்போது உயிர்வேறு உடல்வேறாகிவிடும். உயிர்க்காற்று ஒன்றாகத்தான் உடலில் நுழைகிறது. ஐந்து முக்கிய காற்றாகப் பிரிந்து தத்தமக்குரிய பணி செய்கிறது மேலும் ஐந்து காற்றாகப் பிரிகிறது. மேலும் நான்காகிறது. பல பணிகளைச் செய்கிறது. இக்காற்றே நாடிகளில் இயங்குகின்றது. உயிர் இருப்பதை நாடித்துடிப்பே காட்டும்.

### 8.19.18.4.4. உயிர்க்காற்று

உயிர்க் காற்றை உள்ளே இழுத்து விடுவதைப் பொருத்துதான் வாழ்நாள் உறுதிசெய்யப்படுகிறது. முறையாக வாழ்ந்து கணக்காய் மூச்சுவிட்டால் 120 ஆண்டு உயிர்வாழலாம். வாழ்நாளை உறுதிப்படுத்தும் வேறு விதிகளும் உள. அது வினை தளையில் விளக்கம் கூறும். மூச்சு உள்ளே இழுக்கும் போது 10 அங்குலமும், வெளியே விடும் போது 12 அங்குலமும், நடக்கும்போது 24 அங்குலமும், ஓடும் போது 42 அங்குலமும், உண்ணும்போது 18 அங்குலமும், இணைவிழைச்சில் 60 அங்குலமும் நீள்கிறது.

### 8.19.18.4.5. மூச்சுக் காற்றைக் கட்டுப்படுத்தி வெளிவிடும் நீளத்தைக் குறைத்தால் விளையும் விளைவுகள்

ஒரு அங்குலம் குறைந்தால் இவ்வுலகத்து விருப்பத்தில் இருந்து விடுபட்டு தன்னுரிமை பெறுவான். இரண்டு அங்குலம் குறைந்தால் மனம் மகிழ்வுற்று ஞானச் செல்வம் உண்டாகும். மூன்று அங்குலம் குறைந்தால் அறிவில் மேம்படுவான். நான்கு அங்குலம் குறைந்தால் தூர நாடுகளில் நடைபெறும் செயல்களைச் கூறுவான். ஐந்து அங்குலம் குறைந்தால் விண்ணில் உள்ள அனைத்தையும் அறிவான். ஆறு அங்குலம் குறைந்தால் விண்ணில் உள்ள சகலமும் கண்டு உணர்வான். ஏழு அங்குலம் குறைந்தால் எண்பேராற்றல்

பெறுவான். ஒன்பது அங்குலம் குறைந்தால் ஒன்பது கண்டங்களில் சஞ்சரிப்பான். பத்து அங்குலம் குறைந்தால் கூடு விட்டு கூடு பாய்வான். பதினொரு அங்குலம் குறைந்தால் தன் உயிரைத்தானே காண்பான். கண்டு வசனிப்பான். பன்னிரெண்டு அங்குலம் குறைந்தால் அடங்கும் மூச்சாகும். தோன்றிய இடத்திலேயே சுழன்று கொண்ட இருப்பதால் அந்த மெய்ஞ்ஞானி நெடுங்காலம் உணவின்றி அவாஅற்றிருப்பான்.

**8.19.18.4.6.** உயிர்க்காற்றானது இருதயத்திலிருந்து மூக்கின் வழியாக மேல் நோக்கி உசுவாசமாக உலாவி பசிதாகங்களை உண்டாக்கி உணவைச் செரிக்கச் செய்யும். இது சுழுமுனையில் உண்டாகி சந்திர நாடியிலே விழுந்து, மூலாதாரத்திலே 'ஓம்' என்று உதித்து, கொப்பூழியிலுள்ள மணிப்பூரகச் சக்கரத்திலே 'ரீம்' என்று முட்டி, இடை கலை பிங்கலையாக ஓடி, கபாலத்தைச் சுற்றி, மூக்கு வழியாகப் புறப்பட்டு, நான்கு விரற்கடையளவு கழிந்து சென்று, எட்டு விரற்கடையளவு ஒழிந்து சென்று, எட்டு விரற்கடை பிரமாணம் ஈந்து தான் நின்ற இடத்திலேயே தாக்கும்.

### 8.19.18.4.8. மலக்காற்று: கீழ்க்காற்று, அபான வாயு

இது மலவாயையும் கருவாயையும் பற்றி நின்று இயங்கும். மலத்தையும் சிறுநீரையும் வெளியே தள்ளும். கருப்பையிலுள்ள சிசுவைக் கீழ் நோக்கித் தள்ளும். இன்ப சுரப்பி சுரந்து வெண்ணீரை வெளியேற்றும். முகத்திலிருந்து கீழ்நோக்கிச் செல்லும் இக்காற்றாலேயே உணவு உண்ணப்படுகிறது என்கிறது ஐதரேய உபநிடதம்.

### 8.19.18.4.9. தொழில் காற்று: வியானவாயு

இருதயத்தில் இருக்கும் தொழிற் காற்று மூலம் உணவு சத்தினை உடலிலுள்ள எல்லா அணுக்கூறுக்கும் (திசு அறை) எடுத்துச் செல்கிறது. ஒவ்வொரு அணுவிலும் உயிர்த்துளி உள்ளது. அதன் மையத்தில் உயிர்க்கரு உள்ளது. உயிர்த்துளியில் நீர் முக்கால் பங்கு உள்ளது. உப்புக் காற்று, உயிர்க்காற்று, கந்தகம், சுண்ணாம்பு பாஸ்பரஸ் பொட்டியல் உப்பு, சோடியம் முதலியவை கால்பங்கு இருக்கிறது. உடலின் அனைத்துப் பகுதிகளிலும் தொழில்படுகிறது. உண்டசோற்றைத் திப்பி வேறு சாறு வேறாகச் செய்கிறது.

### 8.19.18.4.10. ஒலிக்காற்று: உதான வாயு

ஒளிவடிவான ஒலிக்காற்று நெஞ்சுப் பகுதியிலிருந்து மேல் நோக்கியே இயங்கும். இது உதராக்கினியை எழுப்பி கழுத்திலிருந்து

உணவை விழுங்கி அதன் சாற்றை நாடிகளுக்குப் பரவ செய்து ஓசையோடு கலந்து குரல் ஒலி எழுப்பும். தூங்கும் போது கண், மூக்கு வாய், காது, மெய் முதலிய ஐம்பொறிகளையும் அறியாமை என்னும் இருளில் அழுந்தச் செய்யும். தூங்கி எழுந்தவுடன் ஐம்பொறிகளையும் இயங்கச் செய்யும்.

### 8.19.18.4.11. நீரவுக்காற்று: சமான வாயு

உண்ணும் உணவை எச்சிலுடன் கலந்து இரைப்பையில் செரிக்கச் செய்கிறது. இது கொப்பூழியிலிருந்து ஒலிக்காற்றினால் அனுப்பப்படும். உணவின் சாரத்தை நாடி நரம்புகளுக்குச் சமமாகப் பங்கிட்டு நிரவல் ஆக்கி உடலை வளர்க்கும். இவை ஐந்து காற்றும் இயங்கினால் உயிர் இயங்கும் என்பது முக்கியம்.

### 8.19.18.4.12. விழிக்காற்று-நாகன்

இது கழுத்திலிருந்து திறக்கவும் மூடவும் செய்யும். கண்களினால் பார்ககச் செய்யும். முக்கல், திமிரல் முதலியவற்றை உண்டாக்கும்.

### 8.19.18.4.13. இமைக் காற்று (கூர்மன்)

இது கண்களிலிருந்து திறக்கவும் மூடவும் செய்யும். மயிர்க்கூச்சல், புளகாங்கிதம், சிரிப்பு முதலிய முகக்குறியை உண்டாக்கும்.

### 8.19.18.4.14. தும்மற் காற்று (கிருகரன்)

இது மூக்கிலிருந்து குறுகுறுத்து தும்மலை உண்டாக்கும். அழ வைத்துத் திரியும்.

### 8.19.18.4.15. கொட்டாவிக் காற்று (தேவதத்தன்)

இது மார்பில் இருந்து கபத்தைச் சேர்த்துக் கட்டிக் கொட்டாவியையும் விக்கலையும் உண்டாக்கும்.

### 8.19.18.4.16. வீங்கற் காற்று (தனஞ்சயன்)

கருப்பத்திலுள்ள பிண்டத்தை வெளியேற்றும். இறந்த பின்னர் உடலை வீங்கச்செய்யும். எரிக்கும் வரையிலிருந்து இறுதியில் கபாலத்தைப் பிளந்துக் கொண்டு வெளியேறும்.

மேலும் நான்கு காற்று உண்டு. அவை பின்வருவன:

### 8.19.18.4.17. வைரவன்

கால் எலும்பும் கதிர் எலும்பும் கூடியிருக்கும் இடத்திலே நின்று உடலில் துன்பம் உண்டாக்கி ஈளை, இருமல் முதலான பிணிகளை உண்டாக்கும்.

### 8.19.18.4.18. முக்கியன்

கை எலும்புகள், கதிர் எலும்புகள் கூடிய இடத்தில் நின்று உடம்பைச் சிறக்கச் செய்யும்.

### 8.19.18.4.19. அந்தர்யாமி

உயிருக்கு வாகனமாக இருந்து உயிர்க் காற்றைத் தோற்றுவிக்கும்.

### 8.19.18.4.20. பிரவஞ்சனன்

பிரணவத்திற்கு இருப்பிடமாக இருக்கும். உடலுக்கு அச்சாணியாக இருக்கும்.

### 8.19.18.4.21. உயிர்க்காற்று : உயிர் ஆற்றல்

உயிர்காற்று உயிருள்ள உடலில் எங்கும் பரவியுள்ளது. உடலில் ஏதேனும் ஒரு பகுதியில் வலியில்லை என்றால் அங்கு உயிர்க்காற்று இல்லை எனலாம் ஆனால் உடலில் நகம், மயிர் இரண்டு இடத்துமட்டும் உயிர்க்காற்று இல்லை. எனவேதான் விரும்பிய போதெல்லாம் விரும்பிய வாறெல்லாம் நகத்தையும் முடியையும் வெட்டுகின்றனர். நாடி இல்லை. குருதி ஓட்டமும் இல்லை. உயிர்க்காற்றின் ஆற்றல் அளப்பரியது. இயல்பாக நாம் தூக்கக் கூடிய பளுவான பொருளைத் தூக்க நேரின் மூச்சை அடக்கித் தூக்கினால் எளிதாகிறது.

உடலில் இயங்கிக் கொண்டு இருக்கும் உயிர்காற்று ஏதேனும் ஒரு காரணம் பற்றி உடலில் நின்று விட்டால் வலி தோன்றுகிறது. மூச்சுப்பிடித்துக் கொண்டு விட்டது என்பர். உயிர்க்காற்று இயக்கம் செயல்பட தவறுதல் வாதநோய் உண்டாகின்றது. ருமேடிக் என்னும் காய்ச்சல் வருகிறது.

விஞ்ஞானிகள் (அறிவியலார்) இந்த உயிர் ஆற்றலில் ஆற்றலை அறிந்து வைட்டல் எனர்ஜி (Vital Energy) என்று அழைக்கின்றனர். இக்காற்றால் ஏற்படும் ஆற்றல் குறையுமானால் உயிர் ஆற்றலின் மருந்து (வைட்டமின் மாத்திரை Vitamin tablet) உண்ணுமாறு அறிவுறுத்துகின்றனர். எனவே உடலுக்கு மிகுந்த ஆற்றலைப்பயிற்சியாலும் மருந்தாலும் பெற முடியும். உயிக்காற்றால் வரும் ஆற்றலைச் சேர்க்க வேண்டுமே ஒழிய வீணாகச் செலவழித்தல் கூடாது.

நல்லறிவு உள்ளவர்கள் மன எண்ண ஓட்டங்களைக் கவனித்து அது தேவை அற்ற வழி செல்லாமல் ஒடுக்கி தேவைக்கு ஏற்ப பயன்படுத்துகிறார்கள். இவ்வாறு வீணாகாமல் சேர்க்கலாம்.

பேசுவதால் உயிர் ஆற்றல் அதிகம் செலவாகிறது. வீண் பொழுதுபோக்கு, வீண்பேச்சு, வெட்டிப்பேச்சு பேசுபவர்கள் காலத்தை மட்டும் வீணாக்காமல் தம் உயிர் ஆற்றலையும் வீணாக்குகிறார்கள். இவர்கள் வீணாகுவதுடன் இல்லாமல் தன்னுடன் பேசுபவர்களையும் வீணாக்குகிறார்கள். இதுதான் தானும் கெட்டுப் பிறரையும் கெடுப்பதாகும். இதனால் தான் வள்ளல் பெருமான் இராமலிங்க சுவாமிகள் "தனித்திரு" என்றார்.

பேச்சை மனத்தில் அடக்கி, மனத்தைப் புத்தியில் அடக்கி புத்தியை உயிரில் அடக்கவேண்டும். உபநிடதம் கூறுகிறது.

## 8.19.18.4.22. உயிர் ஆற்றல் இழப்பு ஏற்படக்காரணங்கள்

1. தானாகப் பாடிக்கொண்டு இருப்பது
2. தானாக முணுமுணுத்துக் கொண்டு இருப்பது
3. உட்கார்ந்து இருக்கும்போது கால்களை ஆட்டுவது.
4. சீழ்க்கை அடிப்பது.
5. நடக்கும்போது தேவையின்றி வழியில் உள்ளப் பொருள்களைக் காலால் எத்துவது.
6. எம்பிக் குதித்துக்கொண்டு இருப்பது.
7. தேவையின்றி சப்தம் போட்டு பேசுவது.
8. அரட்டை அடிப்பது.
9. பக்கத்தில் இருப்பவரைச் சீண்டுதல்
10. பிற உயிரினங்களைத் துன்புறுத்தல்.

இப்படி எண்ணற்ற செயல்கள் உயிர் ஆற்றலை வீண் அடிக்கின்றன

உடலுக்கும் மனதிற்கும் அதிக வேலைத் தராதவர்கள் அதிக நாள் உயிர் வாழ்கிறார்கள் என்பதின் மூலம் அறியலாம்.

### 8.19.18.4.23. உயிர் ஆற்றலை வீண் செய்வதின் விளைவுகள்

கைகள் நடுங்கும். நரம்புதளர்ச்சி உண்டாகும். குரல் நடுங்கும், தலை தானாக ஆடும், வெளிச்சத்தைக் கண்டால் கண்கள் கூசும். எதிரில் இருப்பவர் கண்களை நேருக்கு நேர் காண இயலாது. பெண்களிடம் வெட்கம் அடைதல், விரைவில் வேலையில் களைப்பு அடைதல், நம்பிக்கை இன்மை, எதிலும் வெறுப்பு, வாழ்க்கையில் சலிப்பு, படபடத்தல், எதிலும் அஞ்சுதல் காரணமின்றி எதையும் இழக்காமல் பறிகொடுத்தது போல் உணர்தல், எடுத்தக் காரியத்தைச் செவ்வனே செய்ய முடியாமை போன்ற நிலைக்கு ஆளாகுவர். எனவேதான் யோகிகள் மூச்சுக் காற்றை அடக்கி முறையாக விட்டு (பிராணயாமம்) உயிர் ஆற்றலைப் பெற்று மனத்தையும் ஒன்றில் ஒடுக்கி அளப்பரிய ஆற்றலைப் பெறுகின்றனர்.

### 8.19.18.4.24. உயிர்க்காற்றும் நாடியும்

மூல மெழு பத்தீரா யிரம் நாடி
முளைத்தெழுந்த விலைபோல முடிந்தோடே
கோலமாய்ப் பதின் மூவாயிரம் நரம்பு
கோர்வையாய் சூழ்ந்திருக்கும் கூட்டினுள்ளே
கால மாம் நாடி பத்து வாயு பத்து
கதித்ததெல்லா முக்கோர்வைப் பகையினாலே
நாலாயிரத்து நானூற் றோடு
நவில் நாற்பத் தெண்ணேயாய் நாட்டலாமே.

என்று ஈஸ்வர மெய்ஞ்ஞான நாடி நூல் கூறுகிறது.

மனித உடலில் எழுபத்தீராயிரம் (72000) குருதிக் குழாய்கள், பதிமூன்றாயிரம் (13000) நரம்புகள், பத்து (10) இன்றியமையாத தூய்மையான குருதிக் குழாய்கள், பத்து (10) உயிர்க் காற்று குழாய்கள் இருக்கின்றது எனக் கூறப்படுகிறது.

காற்று (வாதம்), தீ (பித்தம்), நீர் (சிலோத்துமம்) என்னும் முப்பொருள்களின் மாறுபாட்டால் முப்பிணிகள் எனும் (4448) நாலாயிரத்து நானூற்று நாற்பத்தெட்டு பிணிகள் உடலில் உண்டாகின்றன. காற்று 1 மாத்திரை, தீ ½ மாத்திரை நீர் ¼ மாத்திரை இருந்தால் நோய் வராது.

உயிர் ஆற்றலான குருதிக் குழாயின் துடிப்பை நாடி என்பர். தூய்மையான குருதிக்குழாயின் துடிப்பை வலக்கையின் மணிக்கட்டில் விரலின் நுனியால் அறியலாம். வலக்கை, வலப்பாதம் ஆகிய இரண்டும் ஒன்றிற்கு ஒன்று ஒத்த நிலையில் இயங்கக் கூடிய முக்கிய நாடியாகும். உடல் முழுவதும் உள்ள குருதிக் குழாய்களில் இருபத்து நான்கு குழாய்கள் மூலம் நாடியை நான்கு அறியலாம். அத்துடிப்பின் வேகத்தாலும், இயல்பாலும் உடல் நோய் பற்றி அறியலாம்.

பத்துக்காற்று (தசவாயு), இடகலை, பிங்கலை, சுழுமுனை (திரி நாடி) மூலாதாரம், சுவாதிட்டானம், மணி பூரகம், அனாகதம், விசுத்தி, ஆக்ஞை (ஆறாதாரம்), சூரியன், சந்திரன், அக்னி, (மூன்று மண்டலம்) ஆகியவைகள் உடலின் இன்றியாதவைகளாய் இருந்து நாடியைப்பற்றித் தெரிவித்து பணி ஆற்றுகின்றன என்று திருமூலர் கூறுகிறார்.

## 8.19.18.4.25. அறியும் வகை

| நாடி தாது | காற்று வாயு | தோன்றும் இடம் | நாடியின் நடை | விரல் அறிதல் | மாத்திரை அளவு |
|---|---|---|---|---|---|
| 1. வாதம் (காற்று) | அபானன் மலவாயு | உந்தி | கோழி | ஆள்காட்டி | 1 |
| 2. பித்தம் (தீ) | பிராணன் உயிர்க்காற்று | மார்பு | தவளை | நடுவிரல் | 1/2 |
| 3.சிலேத்துமம் (நீர்) | சமானன் | உச்சி | பாம்பு | மோதிரவிரல் | 1/4 |

இயற்கை விதிப்படி வாதம், பித்தம், சிலேத்தும் இருத்தல் உடல்நலம். மிகுந்தாலும் நோய், குறைந்தாலும் நோய்.

| | | |
|---|---|---|
| வாதம் | : | தீயும் காற்றும் மலத்தில் சார்வதால். |
| பித்தம் | : | தீயும் காற்றும் விண்ணில் சார்வதால் |
| சிலேத்துமம் | : | சகலமும் காற்றும் சுழியில் சார்வதால் |

## 8.19.18.4.26. நாடிகள் ஐந்துவகை

1. வாத நாடி காற்று தாது உணர்வை காண்பிப்பது. 2. பித்த நாடி பித்த தாது உணர்வைக் காண்பிக்கும். 3. சிலேத்தும நாடி சிலேத்துமம் உணர்வைக் காண்பிக்கும். 4. பூத நாடி கட்டை விரல் ஆள்காட்டி விரல்களுக்கிடையே காட்டும். 5. குருநாடி ஏனைய விரல் கூறுக்கிடையே காட்டும். நாடி நரம்பு கை நரம்பின்வழி

உள்நிகழ்வனவற்றை ஆராய்ந்து உணர்தலின் நரம்பிற்கு நாடி எனப் பெயர். குருதியானது பெருங்குழாய்களில் இருந்து சிறுகுழாய்களில் பாயும் போது அலைகளின் நிலையைத் தெரிவிக்கின்றது. இதுதான் நாடிகளுக்கு அடிப்படையாய் இருக்கிறது. மூன்று முக்கிய நாடிகளான இடகலை, பிங்கலை, சுழுமுனை இவைகளிலிருந்து ஏற்படும் மாறுதல்களின் காரணமாக கை நாடி துடிப்புக்கள் வேறுபடுகின்றன.

### 8.19.18.4.27. நாடி வகை பத்து

#### 1. இடைகலை

இடை நாடி-இடமூச்சு வலக்கால் பெருவிரலில் தொடங்கிக் கத்தரிக்கோல் போல மாறாக இட நாசியைப் (மூக்கின் இடப்பக்கத்துளை) பற்றி நிற்பது. சந்திர நாடி.

#### 2. பிங்கலை

வலநாடி-வல மூச்சு-சூரிய நாடி. இடக்கால் பெரும் விரலில் தொடங்கிக் கத்தரிக்கோல் போல மாறாக வல நாசியைப் (மூச்சின் வலப்பக்கத்துளை) பற்றி நிற்பது

#### 3. சுழுமுனை

நடுநரம்பு நாடி, நடு மூச்சு, அக்கினி நாடி மூலாதாரத்தைத் தொடர்ந்து எல்லா நாடிக்கும் அடிப்படையாய் நடுநாடியாய்த் தலையளவும் நிற்பது.

#### 4. உள்நாக்கு நரம்பு

சிங்குவை உண்ணாக்கிலே நின்று உணவு நீர் முதலியவைகளை விழுங்கச் செய்யும்.

#### 5. வலக்கண் நரம்பு

புருடன் : வலக்கண் அளவாய் நிற்பது.

#### 6. இடக்கண் நரம்பு

காந்தாரி : இடக்கண் அளவாய் நிற்பது.

#### 7. வலச்செவிநரம்பு

அத்தி : வலக்காது அளவாய் நிற்பது.

### 8. இடச்செவிநரம்பு

அலம்புடை : இடக்காது அளவாய் நிற்பது.

### 9. கருவாய் நரம்பு

சங்கினி குறியளவாய் நிற்பது.

### 10. மலவாய் நரம்பு

குரு: மலவாய் அளவாய் நிற்பது.

குரு நாடியும் சீநிவாலி என்னும் நாடியும் மலம் சிறுநீர் விடச்செய்து அநாகதச் சக்கரம் முதல் லிங்கஸ்தானம் வரை பரவியிருக்கும். மேலும் ரத்த வியானன் என்னும் நாடி இருதயம் முதல் லிங்கம் வளர பரவி இனக்குறி உள்ள இடத்திலுள்ள குருநாடியோடு கலந்து ஆண் பெண் இன்பச்சுரப்பிகளை இயக்கி வெண்ணீர்களாக (விந்து சுக்கிலம்) வெளியே தள்ளும்.

### 8.19.18.4.28. நாடி வகை இருபத்தைந்து

அசைவு குணம் அடிப்படையில்

1. தீவிர நாடி
2. துள்ளு நாடி
3. வன்னாடி
4. அபல நாடி
5. நெருங்கிய நாடி
6. நிறை நாடி
7. கதி நாடி
8. தடங்கு நாடி
9. இடைவிடு நாடி
10. தளம்பு நாடி
11. ஒழுங்கு நாடி
12. கூர் நாடி
13. மென்னாடி
14. நுன்னாடி
15. கம்பி நாடி
16. மரண நாடி
17. விகற்ப நாடி
18. சன்னி நாடி
19. பூத்த மங்கை நாடி
20. ஒடுங்கு நாடி
21. துடி நாடி
22. உதர நாடி
23. இரட்டை நாடி
24. குதிரை ஓட்ட நாடி
25. தெறிக்கு நாடி

### 8.19.18.4.29. உயிர்க் காற்று இயக்கம்

| ஆதாரம் | தெய்வம் | (உயிர்ப்பு 21600) | |
|---|---|---|---|
| 1. மூலாதாரம் | விநாயகர் | 600 | பூரித்தல் - அகரம் |
| 2. சுவாதிட்டானம் | பிரமன் | 6000 | கும்பகம் - உகரம் |
| 3. அனாகதம் | திருமால் | 6000 | இரேசித்தல்-மகரம் |
| 4. விசுத்தி | மகேசன் | 6000 | மொத்தம் 21600 |
| 5. ஆக்கினை | சதாசிவம் | 1000 | |
| 6. நாதாந்தம் | சிற்பரை | 1000 | |
| 7. ஸஹஸ்ரராம் | -- | 1000 | |

'ஈதர்' வேகம் பெற்று அதிலிருந்து காற்று உண்டாகிறது. Ether - ஈதர் விண்.

### 8.19.18.4.30. மூச்சு இயக்கம்

| ஐம்பொருள் | செல்லும் முறை | நிறம் | சுவை | மூச்சு நீளம் |
|---|---|---|---|---|
| 1. மண் | நேராகப் போனால் | மஞ்சள் | தித்திப்பு | 12 அங்குலம் |
| 2. நீர் | கீழாகப் போனால் | வெண்மை | துவர்ப்பு | 16 அங்குலம் |
| 3. தீ | மேலாகப் போனால் | சிவப்பு | புளிப்பு | 4 அங்குலம் |
| 4. காற்று | ஒழுங்கீனமாகப் போனால் | பச்சை | உவர்ப்பு | 8 அங்குலம் |
| 5. விண் | அடங்கிப் போனால் | கருப்பு | கார்ப்பு | மூக்கில் இருக்கும் |

### 8.19.18.4.31. சூரிய நாடி, சந்திர நாடி இயங்கும் நாளும் நேரமும்

| கிழமை | நாடி | பகல் நேரம் | இரவு நேரம் |
|---|---|---|---|
| ஞாயிறு | சூரியன் | 4-6, 8-10, 12-2, 4-6 | 8-10, 12-2 |
| செவ்வாய் | " | " | " |
| சனி | " | " | " |
| வியாழன் தேய்பிறை | " | " | " |
| திங்கள் | " | 6-8, 10-12, 2-4 | 6-8, 10-12, 2-4 |
| புதன் | " | " | " |
| வெள்ளி | " | " | " |
| வியாழன் வளர்பிறை | " | " | " |
| ஞாயிறு | சந்திரன் | 6-8, 10-12, 2-4 | 6-8, 10-12, 2-4 |
| செவ்வாய் | " | " | " |
| சனி | " | " | " |

| | | | |
|---|---|---|---|
| வியாழன் தேய்பிறை | ,, | ,, | ,, |
| திங்கள் | ,, | 4-6, 8-10, 12-2, 4-6 | 8-10, 12-2 |
| புதன் | ,, | ,, | ,, |
| வெள்ளி | ,, | ,, | ,, |
| வியாழன் தேய்பிறை | ,, | ,, | ,, |

சூரிய உதயம் காலை 6.00 மணி என்றால் இக்கணக்கு. உதயம் முன்பின் ஏற்படும். அதற்கேற்றால் போல முன்னால் இருப்பின் கூட்டவும் பின்னால் இருப்பின் கழிக்கவும். இது மாறினால் அதற்கென தனிப்பலன் உண்டு.

## 8.19.18.4.32. ஐம்பொருள் மூலம் உடல் உறுப்புக்கள் தோன்றும் விதம் நுண்பொருள் ஐந்தின் கரணங்கள்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. மண்ணில் | மண் | எலும்பு | 6. விண்ணும் | விண்ணும் | கண், அறிவு |
| மண்ணில் | நீர் | ஊன் | விண்ணும் | தீயும் | மார்பு |
| மண்ணில் | தீ | தோல் | விண்ணும் | நீரும் | நாசி, பித்தம் |
| மண்ணில் | காற்று | நரம்பு | விண்ணும் | மண்ணும் | இருதயம் அகங்காரம் |
| மண்ணில் | விண் | மயிர் | விண்ணும் | காற்றும் | கழுத்து |
| 2. நீரில் | நீர் | சிறுநீர் | 7. காற்றும் | மண்ணும் | இருதயம், உயி |
| நீரில் | மண் | உமிழ்நீர் | காற்றும் | நீரும் | குதம், அபானன் |
| நீரில் | தீ | வியர்வை | காற்றும் | தீயும் | கண்டம், உதான |
| நீரில் | காற்று | குருதி | காற்றும் | காற்றும் | முழு உடல் வியானன் சர்வசரீரி |
| நீரில் | விண் | வெண்ணீர் | காற்றும் | விண்ணும் | கொப்பூழ் |
| 3. தீயில் | தீ | பசி | 8. தீயும் | விண்ணும் | காது |
| தீயில் | மண் | தாகம் | தீயும் | காற்று | உடல் |
| தீயில் | நீர் | உறக்கம் | தீயும் | தீ | கண் |
| தீயில் | காற்று | ஆலிசம் | தீயும் | நீர் | சிங்நவை |
| தீயில் | விண் | சங்கமம் | தீயும் | மண் | மூக்கு |
| 4. காற்றில் | காற்று | ஓடல் | 9. நீரும் | விண்ணும் | ஒலி |
| காற்றில் | மண் | நடத்தல் | நீரும் | காற்று | உணர்தல் |
| காற்றில் | நீர் | இருத்தல் | நீரும் | தீ | பார்வை |
| காற்றில் | தீ | அச்சம் | நீரும் | நீர் | சாறு, சுவை |
| காற்றில் | விண் | கிடத்தல் | நீரும் | மண்ணும் | நாற்றம் |
| 5. விண்ணில் | விண் | மோகம் | 10. மண்ணும் | விண்ணும் | வாக்கு |
| விண்ணில் | மண் | ஆசை | மண்ணும் | காற்று | கால் |
| விண்ணில் | நீர் | வெறுப்பு | மண்ணும் | தீ | கை |
| விண்ணில் | தீ | அச்சம் | மண்ணும் | நீரும் | குய்யம் |
| விண்ணில் | காற்று | வெட்கம் | மண்ணும் | மண்ணும் | குதம் |

### 8.19.18.33. இவை பரு ஐந்து கரணங்கள்

1. மண்ணில் இருந்து வித்தின் காரணமாகப் புல், பூண்டு, மரம் செடி, கொடி முதலியனவும் தோன்றும்.
2. நீர்ப்பொருளிலிருந்து கருப்பையில் இருந்து மனிதர்கள் விலங்கினங்கள் தோன்றும்.
3. தீப்பொருளிலிருந்து சுவேதம், வியர்வை, வெப்பத்தால் ஈ, பேன் புழு, இடம், கம்பளிப்பூச்சி முதலியன தோன்றும்
4. காற்றிலிருந்து முட்டையிலிருந்து கோழி, வாத்து, பல்லி, ஓணான், பாம்பு, கோட்டான், கருடன் முதலியன தோன்றும்.

### 8.19.18.5.(34) விண்: குணம் தொழில் இயல்பு

விண்-வான்-விசும்பு-வானம்-ஆகாயம், ஆகாசம் எனப்படும்.

விண் நுண்பொருள் தன்னிடத்தில் அடைந்திருக்கும் பொருள்களில் தான் தோய்வற நிறைந்து நின்று அவற்றைத் தன்பால் நிறுத்திக் கொள்ளும் தன்மை உடையது.

### 8.19.18.5.1. விண்ணின் கூறு

குரோதம், உலோபம், மோகம், மதம், மாச்சரியம் என ஐந்து.

"குரோதம் உலோபம் இலச்சை பயமொடு
நிரோதமின் மோகம் நீள் வீசும் பாமே" பெருந்திரட்டு

எல்லாவற்றிற்கும் முதலாகித் தோன்றும் அளவும் ஏனைய பொருள்கள் விரிவதற்குக் காரணமாய் இடமளித்து நிற்கும். வடிவு வட்டம். நிறம் புகை. எழுத்து அகரம். அடையாளம் - அமுதத்துளி. அதி தெய்வம் சதாசிவர். அவர் தொழில் அருளல். குணம் எங்கும் நிறைந்து இருப்பது. உருவம் பொருட்கட்கும் இடம்தருதல் இயல்பு. அசையாமல் நிற்பது. சிறப்பு நான்குப்பொருள்களைக் காட்டிலும் நுண்மை வளர்ச்சி : சத்தி இருப்பு நிலை வரை. விரிவு : காற்றின் அளவைக் காட்டிலும் பத்து மடங்காய் விரிந்து மண் முதலான பொருள்களை எல்லாம் தன்னுள் அடக்கி இருக்கும். உடம்பில் குரோதம், உலோபம், மோகம், மதம் மாச்சரியம் என்னும் ஐங்கூறாய் இருக்கும். காட்சி மேற் கூறியவற்றை நன்கு அறிதல். விரிவு: முனைப்பு செயல் ஆற்றல் வரை. புத்தி அறிவாற்றல் வரை. மனம் விழைவு ஆற்றல் வரை. சித்தம் மறைப்பாற்றல் வரை. உள்ளம் பராசத்தி வரை.

### 8.19.18.5.2. ஐம்புலனும் ஒரேகாலத்தில் சேர்ந்து இயங்காது

ஐம்புலனும் சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் ஆகியவை ஒரே நேரத்தில் சேர்ந்து இயங்காது என்பது நுண்பொருள் ஆய்வாளர் கருத்து. சிலர் ஏற்கமாட்டார்கள். உணவினை உண்ணும் ஐம்புலனும் சேர்ந்து இயங்குகின்றது என்பர். எப்படியெனின் முறுக்கினை உண்ணும்போது சுவையும், மென்று உண்ணும் போது ஊறும், முறுக்கின் நாற்றமும், கடிக்கும்போது ஒலி கேட்கிறது. ஆராயின் உண்மை விளங்கும்.

மென்மையான மலர் இதழ்களை ஒன்றன் மீது ஒன்றாக அடுக்கி கூர்மையான மெல்லிய ஊசியால் அதிவிரைவில் குத்தி கோர்த்து விடலாம். பார்ப்பவர்க்கு ஒரே நேரத்தில் இதழ்கள் துளைக்கப்பட்டது என எண்ணுவர். ஆயின் அது உண்மை அல்ல. எவ்வாறெனின் ஊசி எவ்வளவுதான் கூர்மையாகவும் மெல்லிதாகவும் இருந்தாலும் அது ஒவ்வொரு இதழ்களாகத்தான் துளையிட்டுச் செல்லும்.

ஆயினும் மிகு விரைவில் நிகழ்ந்த காரணத்தால் நுட்பம் அறியாது ஒரே நேரத்தில் நிகழ்ந்தது என்பர். துல்லியமாகக் கணக்கிடின் ஒரு இதழுக்கும் இன்னொரு இதழுக்கும் மிகமிக குறைந்த கால அளவு இருக்கும்.

தசாவதாரம் அஷ்டாவதாரம் செய்வோர் ஒரு நேரத்தில் செய்வதாகத்தான் கூறுவார்கள். ஒரு புலன் அறிவிற்கும் மற்றொரு புலன் அறிவிற்கும் கால இடைவெளி உண்டு. உண்மை எப்படியெனின் ஒவ்வொரு புலன் அறியும் மூளையோடு நெருங்கிய தொடர்பு உடையது. நரம்பின் வழி உணர்வு பெறுகிறது. மூளையின் இயக்கமின்றி எவ்வுணர்வும் எப்பொழுதும்; யார்க்கும் ஏற்படாது. மூளையிலிருந்து புலன் உணர்ச்சிக்குக் காரணமான நரம்பு ஒரு மணித்துளிக்கு (நிமிடம்) நாற்பது கிலோமீட்டர் வேகத்தில் துடிக்கின்றதென அறிவியல் அறிஞர்கள் கண்டுபிடித்துள்ளனர். இதன் விரைவை உணர்ந்தால் புலன் உணர்ச்சி விரைவு ஏற்கக் கூடியதே என்பதை நன்கு அறியலாம்.

எனவே நரம்பு துடிப்பின் விரைவால் ஏற்படுகின்ற புலன் உணர்ச்சி ஒரே நேரத்தில் ஏற்படுவது போல தோன்றும். ஆனால் ஒரே நேரத்தில் இல்லை. நரம்பு துடிப்பு வேகம் நம்மால் சரியாகக் கணக்கிட முடியாமல் ஏற்படுவதாயிற்று எனலாம்.

## 8. மாயை தளைகளில் ஒன்று

### குறிப்பு

1. "ஓதிய வல்வினை யூட்டக் கருவி யுடம்புலக
மாதிமைப் போகமு மாய்நின்ற மாயை மயக்குவித்தே
போதந் தரும்பொரு ளாதிநிற் கும்புவ னாதிகளுக்
காதியு மாய்விரிந் தத்தமு மாகி யொடுங்கியதே"
தத்துவ விளக்கம் 22

2. "விடிவாம் அளவும் விளக்கனைய மாயை
வடிவாதி கன்மத்து வந்து . . ." திருவருட்பயன் 30

3. மாயை நுண்மையுள் நுண்மை
"திண்ணியமண் முதலாம்பூ தத்தில் தன்மாத்
திரைகளவற் றிற்கிளரராங் கார மென்ன
பண்ணதனின் இரும்புத்தி யதலின் மூலப்
பகுதியதற் கலாதிவருங் கங்கண் மற்றிவ்
கெண்ணுமவை தம்மின்மிகு மாயை சூக்கம்
எனப்படுமம் மாயைசிவ னாணை யுய்க்கும்
கண்ணரனந் தேசக் கிரக மாகிக்
கலாதிதரும் தன்னொரு பாற்பரிண மித்தே"
சிவப்பிரகாச விகாசம் 185

4. படைப்புத் தோற்றுவாய் மலம் ஒளிமலம்
எழும்உடல் கரணம் ஆதிஇவை மலம்மல மலத்தால்
கழுவுவன் என்று சொன்ன காரணம் என்னையெனின்
செழுநவை அறுவை சாணிஉவர் செறிவித்து அழுக்கை
முழுவதும் கழிப்பன் மாயை கொருமலம் ஒழிப்பன்
முன்னோன்" சிவஞான சித்தியார் 142

5. படைப்புத் தோற்றுவாய் இலக்கணம்
நித்தமாய் அருவாய் ஏகநிலையதாய் உலகிற்குஓர்
வித்துமாய் அசித்தாய் எங்கும் வியாபியாய் விமலனுக்கு ஓர்
சத்தியாய்ப் புவனபோகம் தனுகரணமும் உயிர்க்காய்
வைத்ததோர் மலமாய் மாயை மயக்கமும் செய்யும் அன்றே"
சிவஞான சித்தியார், 143.

6. மாயை உண்டு
மயக்கிடு மாயாகாரிய மிலையேல் வல்வினை
நுகர்ச்சியு மில்லை
துயக்குமவ் வினையின் கழிவுமாங் கெய்தா தொல்லையே
சூழ்ந்த வாணவத்தின்
முயக்கு மற்றொழிலரி தரிதாகும் மூதுயிர்
மாயை காரியத்தின்
இலக்குற லன்றியிரு வினை யீட்டாதிலையின்றி
யவையு மெய்வதால்"
தணிகைப்புராணம் நந்தி 110, கச்சிப்ப முனிவர்.

7. தோற்றமு நிலையும் ஈறும் மாயையின் தொழில் அதுஎன்றே
சாற்றிடும் உலகம் வித்துச் சாகாதி அணுக்களாக
ஏற்றதேல் ஈண்டு நிற்கும் இல்லதேல் இயைவது இன்றாம்
மாற்றம் நீ மறந்தாய் இத்தால் மாயையை மதித்திடாயே
சிவஞானசித்தியார் சுபக்கம் 34.

8. காரிய காரணங்கள் முதல்துணை நிமித்தம் கண்டாம்
பாரின் மண்திரிகை பண்ணும்அவன் முதல்துணை நிமித்தம்
தேரின் மண்மாயை ஆகத் திரிகைதன் சத்தி ஆக
ஆரியன் குலாலன் ஆய்நின்று ஆக்குவன் அகிலம் எல்லாம்
சிவஞான சித்தியார் சுபக்கம் 38.

9. படைப்புத் தோற்றுவாய் உலகிற்கு முதற்காரணம் அணு அல்ல
காரணம் அணுக்கள் கெட்டால்
காரிய உலகு இன்று என்னில்
காரணம் மாயை யாகக்
காரியம் காணல் ஆகும்
காரணம் மாயை என்னை
காண்பது இங்குஅணு வேஎன்னில்
காரணம் மாயையே காண்
காரியம் அணுவில் கண்டால்
சிவஞானசித்தியார் சுபக்கம் 32.

10. மாயையில் உள்ளது ஆகிய பிரபஞ்சமே தோன்றும்
சிவஞான சித்தியார் சுபக்கம் 48

11. மாயையில் உள்ள வஞ்சம் வருவது போவதாகும்
சிவஞானசித்தியார் சுபக்கம் 35

12. காரியம் சடமாய் இருப்பதும் பலவாய் இருப்பது உயிர்
காரணங்களுக்கு உட்பட்டது அன்று
காரிய உருவம் எல்லாம் அழிதரும் காரணத்தால்
காரிய உறுப்புஇல் மாயைதரும் எனக் கருதிடாயே!
சிவஞானசித்தியார் சுபக்கம் 33

13. படைப்புத் தோற்றுவாய் அறிவற்றது சடம்
ஆறு சுவையும் அருந்தி அவைதம்மை
வேறு ஒருவன் கூறியிடும் மேன்மைபோல் - ஆறானும்
ஒன்று ஒன்றா நாடியுணர்ந்தோதில் அதில் உற்றறிவாக
நின்ற பொருள்தானே காண்நீ
உண்மை விளக்கம் 26

14. படைப்புத் தோற்றுவாய்க்கு அறிவில்லை
உய்த்திடும் அதனால் மாயைக்கு
உணர்வு ஒன்றும் இல்லைஎன்றே
வைத்திடும் அதனால் எல்லாம்
வருவிப்பான் ஒருவன் வேண்டும்
சிவஞானசித்தியார் சுபக்கம் 37

15. படைப்புத் தோற்றுவாயின் விளைவு
அஞ்ஞானம் பொய் அயர்வே மோகம்
பைசா சூழியம் மாச்சர்ய பயம்
ஆயவேழ் குணனும் மாயைக் கருளிணை
இருபா இருபது 4

16. தூய படைப்புத் தோற்றுவாய் முதற்காரணம்
வளந்தரு பரசிவற்கு மலிபர சத்தி போல
விளங்குறு கின்ற தாதான் மியமெனப் படா(து), அசித்தாய்
துளங்குபா தானமாகச் சொல்பரிக் கிரக மாகும்
உளங்கொளும் ஒருகு லாலற் குற்றமண் போல விந்து
மன்னும் நற்சிவத்திற் சத்திமதித்திடி னிருவே கைத்தாம்
பின்னமற் றிருப்ப தொன்று பின்னமா யிருப்ப தொன்று
மன்னிய சிவந்த பின்னை மாசில்சிற் சத்தி யாகும்
பின்ன மாவது சடந்தான் பேர்சொலின் மாயை யன்றே
பெருந்திரட்டு நிகிலேற் பத்தி

17. எழுத்தே தனித்தும் தொடர்ந்தும் பொருள்தரின் பதமாம்
நன்னூல் பவணந்தி முனிவர்

18. கண்ணிமை நொடியென அவ்வே மாத்திரை
நுண்ணிதின் உணர்ந்தோர் கண்ட வாறே நன்னூல்

19. உயர்திணை என்மனார் மக்கள் சுட்டே
அஃறிணை என் மனார் அவரல பிறவே
ஆயிரு திணையின் இசைக்குமன் சொல்லே
தொல்காப்பியம் சொல்லதிகாரம் 1

20. சுத்ததத் துவம்சி வன்றன் சுதந்தர வடிவமாகும்
நித்தம் என்று உரைப்பர் காலம் நீங்கிய நிலைமையாலே
வைத்திலர் முற்பிற்பாடு; வருவித்தார் கருமத்தாலே
சிவஞானசித்தியார் சுபக்கம் 166

21. காலமெனும் கடவுளினைக் கழியஉள தேதுமிலை
ஆலநிழ லமர்ந்தவரும் அரிபிரமா திகளவரும்
சீலமுடைச் சிருட்டிமுதற் றிகழ்வளவா காச்சுழற்றித்
தூலமொடு சூக்கும மாய்த் தொடர்ந்து தொடர்ந்தே வருமால்
பெருந்திரட்டு

22. சுத்த வித்தை ஆதிமுதல் சொன்ன ஏழுதத்துவமும்
ஒத்து நடந்திடும் . . . துகளறுபோதம் 18

23. வாயில்களின் பயனைப் புத்திகர வித்தையிட
நின்று அறிவை உயிர்க்குப் பொருந்தியிடும்
வகையுணரும் . . . சிவப்பிரகாசம் 39

24. விச்சையின் அராகம் தோன்றி . . .
சிவஞான சித்தியார் சுபக்கம்
அருந்திமிகும் கலை காலம் நியதியுடன் வித்தை
அராகம் இவை அனந்தரால் மாயைதனில் ஆகும்
சிவப்பிரகாசம் 26

25. கற்றதனால் ஆய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழார்எனின் திருக்குறள் 2

26. பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு திருக்குறள் 35

27. குரோதம் உலோபம் இலச்சை பயமொடு
நிரோதமின் மோகம் நீள்விசும் பாமே
பெருந்திரட்டு - பஞ்சவிம்சதி - வீட்டுநெறி

28. காமங் குரோதம் மோக முலோபம் மதமாச்சரிய
முட்பகை யாறன்ப பிங்கல நிகண்டு

29. ஆறுட் பகைகாமம் வெகுளி யுலோபம்
மாறுகொண் மோகம் மத மாச்சரியம் . . . திவாகர நிகண்டு

30. பேச அரிய அராகம் தன்கன்மத்துக்கீடாகப்
பெற்றனில் ஆசைதனைப் பெருக்குவிக்கும்
சிவப்பிரகாசம் 40

31. மாசற்ற கொள்கை மனத்தில் அடைந்தக்கால்
ஈசனைக் காட்டும் உடம்பு ஔவையார்

32. மோகம் என்ற உரலுக்குள் மனம்தான் சிக்க
முசியாமல் இடிப்பதற் கைம் பொறியும் கோல்தான்
சட்டை முனி சித்தர்

# 9. வினை

## 1. வினை

வினை என்ற தமிழ்ச் சொல் வடமொழியில் கார்மம் எனப்படும். கார்மம் கர்மம் என்றும், கன்மம் என்றும், காமியம் என்றும், கருமம் என்றும் சொல்லப்படும். தமிழில் கருமம் என்ற சொல்லே கையாளப்பெறுகிறது. வடமொழியில் கர்மா என்பதும், (க்ரியா) கிரியை என்பதும் வேறு வேறு என்பர். தமிழில் வினை என்பதும், செயல் என்பதும் வேறு வேறு. செயல் என்பது தொழில் எனப்படும். உடலில் தொழில்படும் கருவிகள் ஐந்து உண்டு. அவை தொழில் கருவிகள் எனப்படும். இக்கருவிகள் தானாகவும் செயல்படும். அறிகருவிகளின் துணையாலும் செயல்படும். ஆனால் தொழில் கருவிகள்,அறிகருவிகள் செயல்பட துணையாய் இருப்பதில்லை. செயல்களின் பதிவு அல்லது செயல்களின் தொகுதி வினை ஆகிறது.

உயிர்கள் உலகப் பொருள்களோடு தொடர்பு கொண்டு இரண்டும் ஒன்றாய் இருக்கும் நிலை ஏற்படும். அந்நிலையே 'தாதாமின்யம்' எனப்படும். உயிர், உலகப் பொருளுடன் மனம் ஒன்று சேர்ந்து செயல்படும் செயலே வினை ஆகும். மனம் வேண்டாதப் பொருளைக் கண்டபோது, அறிகருவிகளின் துணைகொண்டு,

வேண்டாதப் பொருள் என்ற காரணத்தினால் அந்தப் பொருள்மீது வெறுப்பு தோற்றுவிக்கும். அதனால் அப்பொருளை எட்டி உதைத்துத் தள்ளினால், உதைப்பது ஒரு செயலாக இருந்தாலும், மனமும் எண்ணமும் கூடி செய்த செயல் வினையாகிறது. எனவே செயல் வேறு வினை வேறு. மனம், மொழி, மெய் ஆகிய மூன்றால் செய்வது வினை.[1]

## 9.1. செயலும் எதிர்ச்செயலும்

மனம், மொழி, மெய் ஆகிய மூன்றினுள் ஏதேனும் ஒரு தொழில் நடைபெற்றால் செயல் எனவும் (Action) அந்தச் செயலுக்கு எதிர்ச்செயல் நிகழும் அது எதிர்ச்செயல் (Reaction) எனவும் கூறப்பெறும்.

### 9.1.1. எதிர் விளைவு

ஒரு செயல் செய்தால் அந்தச் செயலால் எதிர்ச்செயல் ஏற்படும். இந்த இரண்டு செயலுக்குமே எதிர் விளைவு (Reflection) உண்டாகும். ஒருசெயல் அதனால் ஏற்படும் எதிர்ச்செயல் இவ்விரண்டாலும் ஏற்படும் எதிர்விளைவு ஆகியவை ஒன்றோடு ஒன்றாய், 'தொடர் உண்டாகும்.' சான்றாக ஓடுதல் ஒரு தொழில். நீண்ட தூரம் ஓடியதாலும், விரைவாக ஓடியதாலும் எதிர்செயலாக இருதயம், குருதி ஓட்டம் விரைவாகச் செயல்படும். கால்கள் வலிமை பெறுவதும், இருதயம் விரைவாக இயங்குவதால் மூச்சுத் திணறல் ஏற்படுவதும் எதிர்விளைவு ஆகும். இதுபோன்றே வினைக்கும், எதிர்வினைக்கும் எதிர்விளைவு உண்டு. எதிர் விளைவு உடன் நிகழும் அல்லது காலங்கழிந்து நிகழும். இந்நிகழ்வே வினைப்பயன். மேலும் ஒவ்வொரு செயலுக்கும் அதற்கான எதிர் செயல் (Reaction) எதிர்ஒலி (Reverberation) மற்றும் எதிர் ஒளியும் (Reflection) உண்டு என்று கண்டு கொள்க.

## 9.2. மூல வினை

மூல கன்மம்; மூல கருமம்; காரணமின்றி காரியம் இல்லை. காரணத்தின் விளைவே காரியம் அதாவது செயல். காரணவினை காரியத்திற்கு மூலமாக இருப்பதால் மூல வினை எனப்படும். மூல வினையில் நன்மை தீமை என்ற வேறுபாடு இல்லை. காரியவினையில் நன்மை தீமை உண்டு. புண்ணியம் பாவம் உண்டு. மூலம் என்பது கால பழைமைக்கும் எட்டாதது. உயிரோடு கூடியுள்ள

விருப்பு வெறுப்புகள். விருப்பு வெறுப்புகளால் நல்வினை தீவினை உண்டாகும். இதைக் காமியம் என்பர். நல்வினை என்ற புண்ணிய செயலால் இன்பம் வரும். தீவினை என்ற பாவத்தால் துன்பம் வரும். வினை தன்முனைப்பு, மாயையை ஒட்டியே இருக்கும். வினை செயல் வினை (காரியகன்மம்) என்பர். சஞ்சிதம் முன்வினை எனவும் நுகர்வினை (பிராரத்தம்) எனவும் எதிர்வினை (ஆகாமியம்) எனவும் மூன்று வகைப்படும்.

## 9.2.1. வினையின் இருநிலைகள்

மாயையைப் பற்றி நிற்கும் வினைக்கு இருநிலை உண்டு. ஒன்று காரண நிலை. இரண்டு காரிய நிலை. காரண நிலையாவது செயல் நிகழாத போதும் அது நிகழும் தன்மை பொருளிடத்தில் இருத்தல். இந்நிலையில் அச்செயல் என்ன தன்மை உடையதாக இருக்கும் எனச் சொல்ல இயலாது. யாதொரு செயலும் வெளிப்படாது, பொருள்களில் உள்ள நிலையே காரணநிலை. சான்று, நடப்பவனாகிய ஒருவனுக்கு அவன் நடப்பதற்கும் முன்பும் நடக்கும் தன்மை அவனிடமுண்டு. அவன் நடக்கும் போது அத்தன்மை வெளிப்படுகிறது. வெளிப்பட்டு நிகழும் நிலை காரிய நிலை இதுவே வினை.[2]

## 9.2.2. வினை தொன்மையானதா? இடையில் வந்ததா?

வினை தொன்மையானது. மூல வினையிலிருந்து அளவிலா வினைகள் தோன்றும். ஒரு ஆலம் விதையிலிருந்து மரம் உண்டாகி அதிலிருந்து அளவிலாக் கிளைகள், கொம்புகள், காய், கனி, விதைகள் உண்டாவது போல உண்டாகும். மாயை முந்தியதா வினை முந்தியதா என வினா எழும்பும். பனை மரம் முந்தியதா? பனை கொட்டை முந்தியதா என்ற வினா எழும்பும். பனைமரம் இல்லையாயின் பனங்கொட்டை இல்லை. பனங் கொட்டை இல்லாயின் பனை மரம் இல்லை. அதுபோன்றே வினை முந்தியதா மாயை முந்தியதா என வரையறுக்க இயலாது. இரண்டும் ஒன்று உள்ளபோதே உண்டு.

### 9.2.2.1. வினை இடையில் வந்தது

தன் முனைப்பு உயிரோடு இணைந்தது. மாயையும், வினையும் தன் முனைப்பை நீக்கும் பொருட்டு இடையில் வந்த மலம். எனவே ஆகந்துக மலம் - இடையில் வந்த மலம் என்பர். தன்முனைப்பு ஆடையில் அழுக்குப் போன்றது. அந்த அழுக்கைப் போக்க சாணி, உவர் மண் என்னும் இரண்டு அழுக்குகளைப்

பயன்படுத்திப் போக்குவர். அது போன்றே மாயையும் வினையும் மலமாயினும், மூலமலத்தைப் போக்க வந்த மலம்.

### 9.2.3. வினை மலமா?

ஒரு நிலையில் வினையை நோக்கினால் மலம் அல்ல. தன்மம் என்பர். தன்மம் தர்மம் எனவும், தருமம் எனவும் படும். இறைவனே தன்முனைப்பு மலத்தை நீக்க வினையைத் தர்மமாகக் கொடுத்து உதவுகிறான். தன்முனைப்பு நோய் என்றால் இறைவனாகிய மருத்தவன் வினையை மருந்தாகக் கொடுத்து உதவுகிறான். இது இறைவனின் திருவருளைக் காட்டும் செயல்.[3]

வினையை மற்றொரு நிலையில் நோக்கினால் மகாபாசம்; என்று சித்தாந்த இருதயக்காரர் கூறுகிறார். வினை ஒரு பெருந்தளை. உயிர் விடுபடுவது கடினம். காரணம் விலங்கைக் கயிற்றினால் பிணைத்து இங்கும் அங்கும் இழுத்துச் செல்வது போலவே தளை உயிர்களை இங்கும் அங்கும் இழுத்துச் செல்கிறது. வினைகளைக் கொண்டே உயிர்கள் பிறப்பு தீர்மானிக்கப்பெறுகிறது. குலம், பிறப்பு, உடல், புலன்கள், புலன் அனுபவங்கள் முதலியனவும் தீர்மானிக்கப் பெறுவதால், பிரளயத்திலும்கூட வினைகள் அழியாமல் இருந்து பிரளயத்துக்குப் பின்பு மீண்டும் உலகப் படைப்பில் அந்தந்த உயிருடன், அந்தந்த வினைகள் ஒட்டி வருகிறது. எனவே வினை தளையாகும்.

### 9.2.4. வினை ஒரு கருவி

தன்முனைப்பு மலத்தைப்போக்க வல்லது வினை. எனவே வினை ஒரு கருவி. இறைவன் திருவடியைக் காட்டும் கருவி.[4] வினை மருந்து, வினை வறுமையாலும், நோயாலும், பிணியாலும் அரசர் தரும் தண்டனை முதலிய சிறுமைகளாலும், செல்வத்தாலும் சேர்வனவாகும். மருந்தாக மதிக்கத் தக்கது. இறைவன் ஒரு தர்மமாகக் கொடுத்து உதவுகின்றான். இறைவனோடு சேர ஏற்ற துணை. இறைவன் மல நோயைப் போக்க வினை எனும் மருந்து தருவதாக அனுபோக வெண்பா கூறுகிறது.[5]

பிணிக்குக் கொடுக்கப்படும் மருந்து நோயோடு பொருந்தும். பின்னர் நோய் நீங்குதற்குரிய பரிபாகம் உற்ற காலத்து நோயோடு நோயாகப் புகுந்து நோய் நீங்கும் போது தானும் நீங்கிவிடும். அது போல வினைமலம் மருந்தாகி ஆன்மாவைப் பொருந்தி மலபரிபாகம் வரை இருக்கும்.

## 9.3. வினையின் இயல்புகள்

நெல்லின் முளையை ஒத்தது. தன்முனைப்பு மலம் நீக்கவந்த மருந்து. தருமம். நெல்லின் முளைத்தல் ஆற்றல் முளையைத் தோற்றுவிப்பது போல, வினை உயிரினிடத்து இன்ப துன்பங்களை முதற்காரணமாய் நின்று தோற்றுவிக்கும். உயிருக்குக் கேடு செய்யும். இன்பம் துன்பம் தரும். கேவல சுழுத்தியில் பொய்யான வினைகளைப் பிணித்து நிற்கும். பரந்து கிடக்கும் காடு போன்றது. காரண நிலை காரிய நிலை என இருநிலை உடையது. வினை என்பது காரிய வினையை முக்கியமாய்க் குறிக்கும். இறைவன் இயக்கினால் அன்றி தானாக இயங்காது. மூல வினைக்காரணமாக மாயையோடு சேர்த்து மாயையினின்றும் முதற்கண் காரண உடல், கஞ்சுக உடல், குணஉடல், நுண் உடல் உண்டாக்கும். தன்முனைப்பு மலத்துப் பயனைத் தந்து நிற்பதால் அனுபந்தம் எனப்படும். வினை ஏதேனும் ஒரு பொருளைப் பற்றி நிற்கும். தனித்து நிற்காது. வினைக்குப் பற்றுக்கோடு மாயை. செயல் தானாக நிகழ்வது இல்லை. ஒருபொருளைப் பற்றி நின்றே செயல் நிகழும். செயல்பட உதவும் பொருள் மாயையே. எனவே வினைக்குப் பற்றுக்கோடு மாயை.

### 9.3.1. வினையின் பெயர் மாறும்

உயிர் மலத்தால் பிணிக்கப்பட்டு இருக்கும்போது பசு எனப்படும். அப்போது மாயை மறைத்தல் (திரோதானம்) வினை, மாயேயம் ஆகிய யாவும் உயிரைப் பிணித்திருக்கின்ற மலம் (பாசம்) என்ற பெயரைப் பெற்று நிற்கும். திருவருளால் பக்குவப்பட்ட உயிர் மலப்பிணியிலிருந்து விடுப்பட்டு முத்தனாக இறைவன் திருவருளோடு கூடிநிற்கும். அப்போது பசு என்ற பெயர் நீங்கும். தளைகள் நீங்கி அருளாகவே நிற்கும். உயிரின் நிலை வேறுபாட்டிற்கு ஏற்ப வினை முதலியவற்றின் பெயரும் இயல்பும் வேறுபடும்.

### 9.3.2. பிரவாகாநாதி

பிரவாகம் - நீர்ப்பெருக்கு. அநாதி - தொடக்கம் அற்றது. ஆற்று நீர் ஓடும்போது ஒன்று போக ஒன்றாய்ப் பெருக்கு வந்து கொண்டிருக்கும். பார்ப்பவர்க்கு நீர் ஓடி கொண்டு இருப்பதுபோல் காட்சி அளிக்கும். ஆனால் நீர்த்துளிகள் ஓடஓட வேறு நீர்த்துளிகள் வந்து கொண்டே இருக்கும். நீர்த்துளிகள் தொடர்ந்து ஓடிவருவதே நீர்ப்பெருக்கு. இதனைப் பிரவாகாநாதி என்பர். அதுபோல உடம்பும் வினையும் ஒன்று போக ஒன்றாய்த் தொன்று தொட்டு வந்து கொண்டே இருக்கும். ஒரு பிறவி இல்லை. ஒரு வினை மட்டும்

அல்ல, பிறவியும் வினையும் தொடர்ந்து வந்து கொண்டே இருக்கும் பிரவாகாநாதிபோல என்பர்.

### 9.3.3. வினையை உணர்க

வினைகளைச் செய்பவன், அவன் செய்யும் இருவினைகள், அதன் பயனால் வரும் இன்பம் துன்பம், அவற்றை ஊட்டுவிக்கும் இறைவன், என்னும் இந்நான்கினையும் உய்யும் பொருட்டு உணர்க. இவற்றை உணராவிடில் தான் அல்லாதவற்றைத் தான் என்றும், தன்னுடையது அல்லாதவற்றைத் தன்னுடையது என்றும் கருதும் மனம், யான் எனது என்னும் செருக்கு வளரும். எனவே உயிர் உய்யும் பொருட்டு இந்நான்கினையும் உணர்க.

## 9.4. வினைக்குக் காரணம்

மனம் பல புலன்களில் சென்று பற்றுகிறது. அதனால் வினைகள் மிகுகின்றன. ஆகவே மனம் புறம் போகாமல் உடலில் சுழுமுனை மற்றும் இதயம் முதலிய இடங்களில் ஒன்றி நிற்குமாறு செய்தல் வேண்டும். அப்போது உயிர்கள் அகங்காரம் கொண்டு 'நான் செய்தேன்' எனச்செய்யாது. அதனால் வினை ஏறுவது குறையும். வினை குறைந்தால் அருள் தோன்றும். அலையும் மனத்தைப் புறத்தே அலையவிடாமல் ஓர் இடத்தில் நிலைக்கச் செய்தால் வினை சுருங்கி திருவருள் தாமே வரும்.[6] முன்பிறவித் தொடர்பால் உயிர்களுக்குப் பழைய வாசனை வருகிறது. வாசனை என்பது முன்பிறவியில் செய்த இருவினைகளின் தொடர்ச்சி, பழக்கம் எனலாம். வாசனையால் சங்கற்பம் உண்டாகிறது. அதாவது முன்பிறவியின் பழக்கத்தால் நினைவு உண்டாகிறது. அதனால் காமம் உண்டாகிறது. காமத்தினால் துணிவு உண்டாகிறது. துணிவால் செய்கை நிகழ்கிறது. சித்தத்தைத் தளர விடக்கூடாது. தளரின் சித்தம் நினைப்பதால் இருவினை உண்டாகிறது.

### 9.4.1. மனம், புத்தி விருத்தியால் ஏற்படுவன

(1) இராகம், (2) துவேசம், (3) காமம், (4) குரோதம், (5) உலோபம், (6) மோகம், (7) மதம், (8) மாச்சர்யம், (9) ஈர்ஷ்யா, (10) டம்பம், (11) தர்ப்பம், (12) அளியா, (13) அகங்காரம், (14) பத்தி, (15) இச்சை, (16) சிரத்தை. உயிர் புத்தி என்ன கட்டளை இடுகின்றதோ அதற்கேற்பவே நடக்கின்றது. உயிர் தான் செய்யும் வினைகளின் விளைவுகளுக்கு ஏற்பவே தானே துன்புறுகிறது. பற்று என்பதும் அகங்காரம் எனப்படும் செருக்கு ஆகியவையே முதன்மையான

காரணங்கள். பொறாமை துணை காரணம். "தீதும் நன்றும் பிறர் தர வாரா" என்றார் கணியன் பூங்குன்றனார் புறநானூற்றுப் பாடலில். மேலும் அவர் "நீர்வழியே செல்லும் படகு போல வினையின் விளைவான முறை வழி படும்" என்றார்.[7]

## 9.5. வினையின் குணம்

இருத்தல், கிடத்தல், நல்வினை செய்தல், தீவினை செய்தல் விடுத்தல், பிறரை இகழ்தல் ஆகிய ஆறு குணங்களும் வினையின் விளைவால் தோன்றியன. வினையின் குணம் உயிரைத் தானே கூடுவது அன்று. உயிரும் கூட்டிக் கொள்வது அன்று. இறைவனே உரியவர்க்கு உரியதை ஊட்டுவான்.[8]

### 9.5.1. வினை எப்போது செயல்படும்

முற்பிறப்பில் செய்யப்பட்ட வினைகளையும், இப்பிறப்பில் செய்யப்பட்ட வினைகளையும் ஒருசேர சேர்த்து துய்ப்பதுண்டு. இப்பிறப்பில் செய்த களவு, கொலை முதலியன காரணமாக இப்பிறப்பிலேயே அதற்குரிய பயனைத் துய்த்தலும் உண்டு. இப்பிறப்பில் செய்த வினைகளின் பயன்களை மறுபிறப்பில் துய்த்தலும் உண்டு. சென்ற பிறவி என்ற முறையின்றி எந்தப் பிறவியிலோ எப்பொழுதோ செய்த வினைகளின் பயனை ஏதேனும் ஒரு பிறவியில் துய்த்தலுமுண்டு. துய்த்தல் என்பது வினையின் வன்மை மென்மையைப் பொறுத்தது. மேலும் இறைவனின் ஆணையின் வண்ணமும் நிகழும்.[9]

"வினையின் வந்தது வினைக்கு விளைவாயது",
"இம்மை செய்து மறுமைப் பணித்தால் வாழ்ந்து போதிரோ"

என்பதும் நினைவுகூரத்தக்கன.

பல நாட்களுக்குமுன் நட்ட தென்னை நெற்று முளைக்காதிருக்கும்போது, சில நாட்களுக்கு முன் விதைத்த கீரை விதைகள் உடனே முளை தோன்றியதைக் காணலாம். விதைகள் பற்பல. அவை முளைவிடும் நாட்களின் எண்ணிக்கையும் பற்பல. அவை முளைவிட ஞாயிறு ஒளியும், நீரும் தேவை. அதுபோன்றே வினைகளின் வன்மை மென்மை பொறுத்தும், சூழ்நிலை பொறுத்தும் வினைப் பயன்வரும். அதற்குரிய ஆணையை அளிப்பவன் இறைவன் ஆவான்.

## 9.5.2. நனவிலும் கனவிலும் வினைப்பயன்

இதயத்தில் மனத்தை நிலை நிறுத்தி சுழுமுனையில் தேனித்தலாலும் (தியானித்தல்), உச்சிக்கு மேல் தேனித்தலாலும் நிலைத்த செயல் (நிட்டை) கைக்கூடும். தன்முனைப்பு இருளில் போகும்போது, திரும்ப மாயை ஒளியில் வரும்போதும் கருவிகள் குறைவதும், நிறைவதுமாய் இருக்கும். அக்கருவிகளின் செயல்கள் கீழ் அவத்தையிலும் மேல் அவத்தையிலும் நிகழும், இதன் இயல்பு ஆதலால் கீழ் இறங்கும் போதும் விழிப்பு நிலைக்கு வரும்போதும் கனவு முதலியன நிகழக்கூடும். இந்நிலைகளில் எல்லாம் வினைப் பயன் நிகழும். ஆகவே கனவு முதலியவற்றிலும் வினை நிகழ்ச்சிகள் உண்டு. தக்கவர்க்கு வினை நிகழ்ச்சிகள் (புசிப்பு) கனவிலேயே பெரும்பாலும் நிகழும். அவர்களுக்கு நிகழும் ஆயின் மெத்தென நிகழும். ஏனையோர்க்கு நனவிலேயே பெருக நிகழ்ந்து துன்பம் செய்யும். கனவு ஏற்படுவது பற்றி காகபுஜண்டர் கூறியுள்ளார்.

கனவுகள் ஏற்படும் நிலையை இரண்டாகப் பிரிப்பர். காணும் கனவு சில சமயங்களில் முன்னரே நினைத்த, கண்ட அல்லது சம்பந்தப் பட்டவைகளைப் பற்றிய கனவாக இருக்கும். இப்படிப்பட்ட கனவுகள் தூங்கும்போது உச்சியிலுள்ள உயிர்வளி வேகமாக இடப்பக்கம் உள்ள விலாவிலுள்ள உணர்வு நரம்புகளில் வழியாக மலசலங்கள் வயிற்றில் உள்ள பகுதியில் அடையும், தொடும். இந்த நிலையில் உச்சியிலுள்ள பித்த நீரானது இறங்கி வாயில் வந்து அடையும்போது மனத்தின் நினைவு தப்பும். வாயும் கசக்கும். இந்த நிலையிலே மேற்குறிப்பிட்ட கனவுகள் ஏற்படுகின்றன. தியானத்தில், தவத்தில் சரியான முறையில் செய்யாதபோது சுழுத்தி நிலையில் இதுபோன்ற கனவுகளும் ஏற்படும்.

உறங்குகின்றபோது அறிவொளியின் சிதறலானது வலப்புற உணர்வு நரம்புகளின் வலப்பக்க விலாவின் வழியாக அடிவயிற்றில் மலத்தைத் தொடும்போது இந்த ஒளிச் சிதறலானது கரி வளியாகி (கரியமிலவாயு) கலந்து விடும். கனலுக்கு அனல் இயல்பு. அதுபோல இவ்வொளியில் அனல் உந்திக் கமலத்தை அடையும். இச்சமயம் கனவு காண்பவர்க்கு பார்த்திராத, கேட்டிராத, சம்பந்தம் இல்லாத அல்லது வருங்காலங்களில் நடக்கக்கூடிய நிகழ்ச்சிகளைப் பற்றிய கனவாகவும் அமையும். சிலசமயங்களில் ஐம்பொருள்களின் அறிவிற்கு அப்பாற்பட்ட கனவுகளும், தெய்வீக கனவுகளும்கூடத் தோன்றும். இது அறிவொளிச் சிறதலால் ஏற்படும் கனவுகள்.

சில சமயங்களில் மேல் எழுந்த நினைவுகள் கனவாக உரு எடுக்கும். இச்சமயம் நினைவு தப்புகின்ற நேரங்களில் கனவுகள்

கண்டதுபோல் இருக்கும். ஆனால் தெளிவாகத் தெரியாது. இதற்குக் காரணம் உடலில் சிலேத்துமம் அதிகமாக இருப்பதே.[10]

## 9.5.3. வினைப் பயன் முன்பின்னாக வரும்

மரத்திற்கு வித்து காரணம். வித்திற்கு மரம் காரணம். இருப்பினும் ஏதேனும் ஒன்றுதான் இறைவனால் படைக்கப்பட்டிருக்க வேண்டும். அது மரமாகவே இருந்திருக்க வேண்டும். இக்கருத்தினை வலியுறுத்தி "விச்சது ஈன்றியே விளைவு செய்குவாய்" என்றார் மணிவாசகர். இதுபோலவேதான் தனி நிலையில் அறிவும் தொழிற் பாடும் இன்றி இருந்த உயிருக்குக் குருடனுக்குக் கோல் கொடுப்பதுபோல இறைவன் உயிருக்கு நுண்உடலைக் கொடுப்பன். அந்த நுண் உடலை இறைவன் தருவது வினைக்காரணம் அன்று. உயிர்கள் அறியாமைக்குட்பட்டு வருந்தும் காரணத்தினால் தரப்பட்டது. அந்த நுண்உடல் வீடு பேறுபெறும் வரை எத்தனைப் பிறவிகள் எடுத்தாலும் உயிருடன் உடனிருந்து வீடு பேறு பெற்றால் நீங்கும்.

அந்த நுண்ணுடல் எல்லா உயிர்க்கும் ஒரே தன்மை உடையதாகவே இருக்கும். இதனையே திருவள்ளுவர் "பிறப்பு ஒக்கும் எல்லா உயிர்க்கும்" என்றார். ஆனாலும் உயிரை முந்தி பொருந்தி நின்ற அறியாமை பல்வகைப்படும். எனவே அந்த அறியாமைக்கு ஏற்பவே பருவுடலும் அந்த உடலால் வினையும் உயிர்கள் தோறும் மாறி மாறி வருகிறது. அதனால் வினை உடல் என்ற இரண்டிற்கும் மூலமாகிய நுண்ணுடல் ஒன்று உண்டு எனத் தெளிக. எனவே வினைக்கும் உடலுக்கும் முற்பாடு பிற்பாடு கூறமுடியாது.

பழவினை (சஞ்சிதம்) இன்றி நுகர்வினை (பிராரத்தம்) பட்டறிவு வராது. எனவே ஊழ் அல்லது உணர்வு ஆகா. ஒருவன் செய்த பயிர்களுள் கீரை, கத்தரி, வாழை, தென்னை, பனை என்பன முன்செய்த முறையில் அன்றி விளைவு பெற்ற முறையில் முன்பு செய்த பயிர் பிற்பலனையும் பின்பு செய்த பயிர் முற்பலனையும் தருவது போல வினைப் பயனும் முன்பின்னாகவே வரும்.

## 9.6. வினை துய்க்கும் முறைமை

வினை பயன் தரும் முறை மூன்று: (1)நற்குடியில் பிறத்தல், (2) நீண்ட வாழ்நாளோடு இருத்தல், (3) அனுபவம் பெறுதல் என்னும் முறைமையை உடையதாக வரும். பழவினை காரணமாகவே வரும்.

முன்வினைப் பயன் ஆகிய ஊழ் அல்லாத வேறு எதுவும் உயிருக்கு அனுபவமாக வராது.

முன்பு அமைந்த வாழ்நாள் முடிந்ததும் ஒவ்வொரு உயிரின் பருவுடல்களைப் பிரித்து நல்வினை செய்த உயிர்களை எல்லாம் பருவுடல் (பூதசாரசரீரம்) ஆகிய இறந்த உடலுடன் (திவ்விய சரீரம்) நீண்ட வாழ்நாளுடன் இருக்கும்படியும் திருமால் உலகத்தில் திருமால்களாகவும் பிரமன் உலகத்தில் பிரமன்களாகவும் தேவர் உலகத்தில் தேவேந்திரர்களாகவும், பிற தேவர்களாகவும் முறையே அவர் அவர்களுக்கு என்று பல்வேறு வகையான இன்பங்களை அனுபவித்துக் கொண்டு இருக்குமாறு இறைவன் செய்கிறான்.

மேற்சொன்ன உலகத்திலுள்ள இன்பநுகர்ச்சி முடிந்த பிறகு மண்ணுலகில் மன்னர்களுக்குரிய செல்வங்களுடன் வாழ்கிறான். இவ்விதம் நல்வினைப் பயன்களை அனுபவித்து, முடித்தப்பின்னர் தீவினைப் பயன்களை அனுபவிக்கும் பொருட்டு இறைவன் முறையை அமைத்துள்ளான். "முன்னை தவத்தால் பரம் பொருளாகக் கொண்டு தமது காரியத்தை முடித்துக் கொண்டவர்கள் மீண்டும் பிறவார்கள்" திருவுந்தியார், "கண்டதைக் கொண்டு கருமம் முடித்தவரே அண்டத்தின் அப்புறத்து என்னாதே." திருக்களிற்றுப் படியார்.

## 9.6.1. வினையைக் கொடுப்பவனும் தீர்ப்பவனும் இறைவனே

உடலும் வினைப் பயனும் அறிவற்றவை. சடம். அதனால் உடல் வினைப் பயனைத் தானே எடுத்துக் கொள்ளாது. வினைப் பயனும் தானே உடலைப் பொருந்த முடியாது. ஆகவே உடம்பிற்கும் வினைப் பயனுக்குமிடையில் அறிவுடையவர் ஒருவர் இருந்தால் இரண்டையும் கூட்டுவிக்க முடியும். அவர்தான் இறைவன். உயிர்கள் இறைவன் செய்யும் பேருதவியினை மறக்கின்றன. செய்ந்நன்றி மறக்கின்றனர். கொல்கின்றனர். உலகத்தின் மீதுள்ள அளவற்ற ஆசையின் காரணமாக உயிர்கள் பல்வேறு செயல்களைச் செய்கின்றன.

ஒருபோதும் நீக்க முடியாத மிகுந்து எரியும் வயிற்றுப் பெரும் பசியைப் போக்குவதற்காகவும், பிறர் தன்னைப் புகழ்ந்து போற்ற வேண்டும், தன் காலடி வீழ்ந்து வணங்க வேண்டும் என்ற செருக்கின் காரணமாகச் செல்வம், பதவி ஆடம்பர வாழ்க்கையில் பெரும் கவனம் செலுத்துகின்றனர். அதற்காக தீய வழியிலும் செல்கின்றனர். பொய் பேசுதல், வஞ்சகம், கபடு, சூது, ஏமாற்றுதல், கொள்ளை அடித்தல், கொலை செய்தல் இன்னபிற தீயவழிகளில் செயல்படுகின்றனர். மக்களை ஏமாற்றுவது போல இறைவனையும் ஏமாற்றி விடலாம்

என்று எண்ணுகின்றனர். இன்னும் சிலரோ இறைவன் இல்லை. இவ்வுலகில் பிறந்ததே இன்ப வாழ்வு வாழ்வதற்கே இதற்கெல்லாம் பாவம் புண்ணியம் பார்த்தால் ஆகுமா? பாவம் புண்ணியம் என்பதெல்லாம் பொய். வயிற்றுப் பிழைப்புக்காகச் சொல்லப்பட்டவை என்பர்.

அவர்கள் செய்யும் எல்லாச் செயல்களிலும் இறைவன் தானும் உடனாய்க்கூடி இருந்து அவர்கள் அச்செயல்களைச் செய்யும்படி செய்து அச்செயல் செயல்படும் காலத்தில் அவர்களுக்கு இடையறாமல் ஏறுகின்ற ஏறுவினை (ஆகாமிய கன்மம்) பழவினைக்கும் (சஞ்சிதகன்மம்) நுகர் வினைக்கும் (பிராரத்த கன்மம்) கணக்கு எழுதி வைக்கும் கணக்கப்பிள்ளையாய் இருந்து அதை மீண்டும் அவரவர்க்குத் திருப்பி அளிக்கிறார்.

இறைவன் உயிருக்கு உடனாக இருந்தாலும் வினைப்பயன் உயிரையே சேருகின்றன. காரணம் என்னவெனின், உயிர்கள் வினை செய்யும்போது இறைவன் தன்னோடு இருக்கிறான் என்பதை உணர்வதில்லை. தாமே வினைகளைச் செய்வதாக எண்ணி செய்கின்றன. அதனால்தான் இறைவன் உயிருக்குச் செய்த வினையின் பயனைத் தருகிறான்.

வினைகள் வினையைச் செய்தவன் மனத்தில் இருந்து பயன்தரும் என்பது பொருந்தாது. செய்யப்படும் பொருளில் கிடந்து பின்னர் பயன் தரும் என்பதும் பொருந்தாது. ஆகவே இறைவனே இவற்றையறிந்து பயன் தரவேண்டும். முயற்சி எல்லாம் முன்வினைப்பயனை அனுபவிக்கும் பொருட்டு கொடுப்பதாகும். இது ஏவல்வினை. ஏவல் வினையாகிய முயற்சியைத் தாம் செய்தோம் என்னும் முனைப்பால் செய்வதால் அந்த முனைப்பு தீரும்பொருட்டு அந்த முயற்சியால் ஆகிய இருவினைகளை அறிந்து அந்த இருவினைநோய் நீக்கும் பொருட்டு இறைவன் பயன் தருகிறான். இது அவன் கடமையாயிற்று. இது பற்றியே சிவஞானசுவாமிகள் அஃது அவன் கடப்பாடு என்றார். அறிவில் குறைந்த உயிர்களை ஏமாற்றுதல் தீவினை. இறைவனுக்கு ஏற்புடைத்து அல்ல. தன்னலம் கருதி பிற உயிருக்குச் செய்யும் தீமைகள் அனைத்தும் ஊனங்கள் எனப்படும். அதற்குரிய பயனை அடைய வேண்டும்.

முயற்சிக்கு முதல் காரணம் உயிர். அந்த உயிர் தங்குமிடம் உடல். உடலில் பொருந்திய கருவிகள் ஏழு. அவை (1) காரணம், (2) வினை செய்தற்குரிய காலம், (3) வினை செய்யப்படுகின்ற பொருள், (4) அந்தப் பொருளைக் கூட்டுகின்ற முறை, (5) செய்யும் செயல், (6) செய்யும் உடல், (7) செய்வதால் உறும் பயன். இவற்றைத்

துணையாக் கொண்டு உயிர்கள் வினைகளைச் செய்தலும் அனுபவித்தலும் கூடும்.

இந்த ஏழு முதல் நிலைகளும் தானே தொழில்படாது. காரணம் அறிவற்றது. இறைவனே தனது திருவருளால் உயிருக்கு ஏழு முதல் நிலைகளைக் கூட்டுவிப்பான். எனவே இறைவனின் ஆணையாகும். கருவிகள் நிலையுடையன அல்ல ஆயினும் உயிர் கருவிகளுடன் பொருந்தியும் பொருந்தாதும் நிற்கும். அதனால் ஐவகை துன்பமுறும். வினை நீக்கம் பெறவேண்டி இறைவன் இந்நிலையைத் தருகிறான். எதுபோல் எனின், ஆடுகளுக்கு இலை தழைகளை அளிக்கும் ஆடு மேய்ப்போன் மரத்தை முழுமையாக வெட்டுவதில்லை. தேவையான அளவே வெட்டுவான். காரணம் பின்னும் மரம் வளர வேண்டும். இவ்வாறே இறைவனும் வினைநீக்கம் பெறும் அளவிற்குக் கருவிகளைக் கொடுத்தும், அவற்றால் கட்டுண்ட உடல் துயரால் அயர்வு நீங்கி அக்கருவிகளை விடுவித்தும் அருளுவான். மலநீக்கம் முழுமையாகப் பெறின் உயிரைக் கருவிகளிலிருந்து விடுவித்து விடுவான்.

மருத்துவ நூலில் கூறியுள்ளபடி வாழ்ந்தாலும், வினைக் காரணமாகப் பிணிவரக்கூடும். அந்தப் பிணியை அதற்குரிய கழுவாய் (பிராயசித்தம்) ஆகிய கொடை, பூசை, ஏமம் முதலிய நற்செயல்களால் போக்கலாம். இது வேதாந்தம் உணர்த்துவது.

நல்வினை நூல் வழிநிற்றல். ஆயினும் நான் செய்தேன் என்பது தன்முனைப்பு மலம். அதனை நீக்கி அருள்வழி நிற்காவிட்டால் அதுவும் மலமே. மலம் உறுதற்குக் காரணம் ஆகிய இருவினைகள் உயிர்க்கு நோயே. இறைவனாகிய மருத்துவனே நோய் தீர்ப்பான். உழவுத் தொழில் செய்வோர்க்கு அதற்குரிய பயனை அத்தொழில் தராது. விளை நிலமே தரும். அதுபோல உணவும் வித்துமாய்த் தொன்று தொட்டு வரும் இருவினையை இறைவனே தருவான்.[11]

தன்னிடம் புகழ் தேடி வந்தவர்களுக்குக் காத்தல் தலைவர்களின் கடமை. சிபிசக்கரவர்த்தி தன்னிடம் புகழிடம் தேடி வந்த புறாவிற்காகத் தன் தசையை அறுத்துக் கொடுத்த புறாவின் உயிரைக் காத்தான். அதுபோல தன்னைச் சார்ந்திருக்கும் நல்லடியார்களைத் தானாக நிற்குமாறு நிலை நாட்டி அவர்களது பழம் வினையை ஏறாது காப்பான். தன்னைச் சாராதவர்களுக்கு அவர்களுடைய பழம் வினையைச் சேர்ப்பன். அதுபோன்றே நுகர்வினையைச் சார்ந்தவர்க்குப் போக்கியும் சாராதவர்க்கு அளிப்பான். எனவே வினைப் பயனைத் தருபவனும் தடுப்பவனும் இறைவனே ஆவான்.

### 9.6.2. வினைப் பயன் வராதிருக்க

உயிர்கள் தாம் செய்யும் வினைகளுக்கு இறைவன் உடனாக இருக்கிறான் என்னும் உணர்வு இருத்தல் வேண்டும். தன்னுடன் உள்ள இறைவன் செய்கிறான். தான் செய்யவில்லை என்று எண்ண வேண்டும். அப்படி எண்ணினால் செய்த வினைப் பயன் தேடி வராது. சான்று "யான் செய்யும் துரிசுகளுக்கு உடனாக" சுந்தரர் 7.51,90.

### 9.6.3. வினையை இறைவனே போக்குவான்

ஒன்றை ஒன்று ஒவ்வாது வளர்ந்து வரும் இருவினைக் கண்ணும் ஒத்த உவர்ப்பு தோன்றி அவற்றின் பயனையும் சமமாகக் கருதப்படும் பொழுதே இறைவன் திருவருட் சத்தி உயிரில் பதிந்து அதனைப் பற்றிக் கொள்ளும். இறைவன் திருவருளால் இறைவனைப் பெறவேண்டும். நுகர்வினை வருவினை ஆகிய இவ்விரண்டும் திருவருள் நடப்போரை அணுகா. திருவருளைச் சார்ந்தவர்க்கு அவர்களுடைய வினைகளையும் வினைப்பயன்களையும் சுமப்பவராகிய கடவுள் தோன்றுவார். இறைவன் வினைநீக்கம் பெறும் அளவிற்குக் கருவிகளைக் கொடுத்தும் அவற்றால் கட்டுண்ட உடல் துயரால் அயர்வு நீங்க அவற்றை விடுவித்தும் அருளுவன். உயிர் முழுமையாக மலநீக்கம் பெறின் அக்கருவிகளிலிருந்தும் முழுமையாக விடுவித்து விடுவான்.

### 9.6.4. பரம்பொருளால் கருமம் முடித்தல்

தீட்சையால் பழவினையும், எடுத்த உடலால் நுகர் வினையும், ஞானாசிரியர் அருள் வழி நிற்றலால் வருவினையும் நீங்கும்.

"தன் செயல்தானே யென்று உந்தீபற" திருவுந்தியார் 6.

இறைவன் உயிரிடத்துள்ள மலம் பக்கவப்படுங்கால் தோன்றாத் துணையாய் நின்று அருளுவன். மலநீக்கத்திற்கும் உயிர் தாள் சேர்வதற்கும் இறைவனே காரணம்.

துன்பப் பிறப்பினால் பட்ட புண்ணுடம்புத் துன்பமும் இருவினைத்துன்பமும் உயிரைவிட்டு நீங்கும்படி திருக்கையைத் தலையின் மேல் வைத்து அருளி கல் போன்ற நெஞ்சை அக்கினியைச் சேர்ந்த மெழுகுபோல் உருக உபதேசிப்பார்.[12]

இறைவன் சீவன் முத்தன் இருவினைகளையும் இவன் செய்தான் எனக் கருதாது. யாமே செய்தோம் எனக் கருதுவர். சீவன்

முத்தனுக்கு ஒருவன் செய்த நல்வினை தீவினைகள் தமக்குச் செய்ததாக எண்ணுவார். மீண்டும் பிறவாமல் அவனுடன் கூடி ஒன்றுபட்டுக் கொள்வார்.[13] அஃதன்றி இறைவன் அவர்கள் மீதுள்ள அன்பாலே அவர்கள் பாவங்கள் செய்தாலும் நன்மையாக்கி விடுவார். எல்லாம் இறைவன் செயல் என்றும் தான் செய்ததும் தனக்குப் பிறர் செய்ததும் இறைவன் செயல் என்றும் இருப்பவனுக்கு வினை ஏறாது. திருவருளுக்கு ஆளாகுவான் பிறவி அவனுக்கு இல்லை.[14]

ஏன்ற வினை உடலோடு அழியும் ஏறும் வினை உண்டாகின் அருளால் நீங்குமென திருவருட் பயன் கூறுகிறது.[15] இறைவன் அடியாரைக் காத்தல் தன்னைச் சார்ந்தாரைக் காத்தல் தலைவர் கடன் என சிவஞானபோதம் கூறுகிறது.[16]

பெருங்காயம் வைத்திருந்த பாண்டத்திலிருந்து பெருங்காயம் முழுவதும் எடுத்து விட்டாலும் மணம் மட்டும் நீங்காது. அதுபோல சிவோகப் பாவனையிலுள்ள சிவஞானிகளுக்கு நீண்ட நாள் பழக்கத்தின் காரணமாக எப்போதாவது யான் எனது என்னும் உணர்வு மெல்லிதாக வந்து தாக்கக்கூடும். அதனால் நுகர்வினை வலிமையுடன் வந்து தாக்கும் எனவும், அதனால் வருவினை கூடும் எனவும், அதனால் இறப்பு பிறப்பு உண்டு எனவும், எண்ணக்கூடாது. எப்படியெனின் பெருங்காயம் இருந்த பாண்டத்திலுள்ள மணம் சமையலுக்கு உதவாது. அதுபோல வினையால் உண்டாகும் வாசனையும் பிறப்பிற்கு வழிவகுக்காது. மெலிதாய் வந்து மறையும். காரணம் சிவஞானிகள் தற்போதம் கெட்டவர்கள். சிவமாக இருப்பவர்கள். சக்கரத்தைச் சுழலாமல் தடுத்து நிறுத்தும் அச்சு போல இறைவனைப் பற்றிக் கொண்டு சிவஞானி விலகாமல் நிற்பான். ஒளி இருளைத் துரத்துவதுபோல இறைவன் வாசனையைப் போக்குவான்.

## 9.7. வினை செய்யப்படும் வகை

வினை தெரிந்தும் தெரியாமலும் செய்தல். வினை செய்யும் முறை இருவகைப்படும். (1) தெரிந்து செய்தல், (2) தெரியாது செய்தல்.

### 9.7.1. வினை அடுத்தப் பிறவிக்கும் வரும்

மூச்சு (சுவாசம்) உயிர்ச் செயல்களைச் செய்வது. உயிர் உடலை விட்டு நீங்கியவுடன், அதாவது இறந்தவுடன் மூச்சு நின்று விடும், உடல் மட்டும் அங்கேயே இருக்கும். அதனால் உடம்பால் எதனையும் எடுத்துச் செல்ல முடியாது. மலரின் வாசனையை மலர் எடுத்துச் செல்லாது. வீசும் காற்றுத்தான் எடுத்துச் செல்லும். நறுநாற்றும், தீ

நாற்றும் என்பதெல்லாம் காற்றின் மூலம்தான் அறிய முடியும். மூச்சே உயிருள் வினையை எடுத்துச் செல்கிறது. அச்செயல்கள் அடுத்தப் பிறவியில் கண்ணுக்குத் தெரியாத மாயை போன்று உயிருடன் உள்ளது.

## 9.7.2. துன்பத்திற்கு வினையே காரணம்

வள்ளல்பெருமான் இராமலிங்கசாமியின் கருத்து: "கடவுளால் சிருஷ்டிக்கப்பட்ட சீவர்களில் அநேகர் பசி, தாகம், பயம் முதலியவற்றால் மிகவும் துன்பப்படுகின்றனர். என்னெனில் முன்தேகத்தில் சீவகாருண்ய ஒழுக்கத்தை விரும்பாமல் கடினச் சித்தர்களாகித் துன்மார்க்கத்தில் நடந்த சீவர்களாதலால் கடவுள் விதித்த அருளாக்கினைப்படி பசி தாகம் பயம் முதலியவற்றால் மிகவும் துன்பப்படுகிறார்கள் என்றறிய வேண்டும்.

சீவகாருண்ய ஒழுக்கம் மிகவும் வழங்காமையால் துன்பமார்க்கப் பிறவியே பெருகி எங்கும் புல்லொழுக்கங்களே வழங்குகின்றன. அப்படியெனில்: சீவகாருண்யம் இல்லாத கடின சித்தர்கள் எல்லாம் அவரவர் கடினசெய்கைக்குத் தக்கப்படி சிலர் நரகவாசிகளாகவும், சிலர் சமுத்திரவாசிகளாகவும், சிலர் ஆரண்யவாசிகளாகவும், சிலர் புலி, கரடி, சிங்கம், யாளி, யானை, கடமை, கடா, பன்றி, நாய், பூனை முதலிய துஷ்டமிருகங்களாகவும், சிலர் பாம்பு, தேள் முதலிய விஷ செந்துக்களாகவும், சிலர் முதலை, சுறா முதலிய கடின செந்துக்களாகவும், சிலர் காக்கை, கழுகு முதலிய பட்சி சண்டாங்களாகவும் சிலர் எட்டி, கள்ளி, முதலிய அசுத்த தாவரங்களாகவும் பிறந்திருக்கின்றார்கள். ஆதலால் புல்லொழுக்கங்களே மிகவும் வழங்குகின்றது என்றறிய வேண்டும்.

## 9.7.3. வினை இருவகையாகச் செயல்படும்

(1) பிறவியைத் தருபவை, (2) போகம் தருபவை. எந்த வினையின் பயனாக உயர்ந்த அல்லது தாழ்ந்த பிறப்பு ஏற்படுகிறதோ அது பிறவிதரும் வினை. எந்த வினையின் காரணமாக இன்பம் துன்பம் ஏற்படுகிறதோ அது (போகம்) நுகர்வு தரும் வினை. எந்த உயிர் மானிடப் பிறப்பின் உண்மையை உணராமல் இருவினை செய்து இறப்பு பிறப்பு பெறுகிறார்களோ அவர்களுக்கு இவ்வுடல் பிறவி உடல்.

"சீவர்கள் முன்தேகத்தில் செய்த பாவகர்மங்கள் இந்நற்தேகத்திலும் வருமென்பது எப்படியென்னில்: ஒரு சமுசாரிமுன் குடித்தனம் செய்திருந்த வீட்டில் தன் தலைவன் கட்டளைப்படி

நடவாமல் துன்மார்க்கர்களை வரவழைத்து அவர்களோடு கூடிப் பழகியிருந்தானாகையால் அந்த சமுசாரி அந்த வீட்டைவிட்டு வேறொரு வீட்டில் குடிவந்த காலத்திலும் அந்தத் துன்மார்க்கர்கள் இந்த வீட்டிலும் வந்து அவனுடன் பழக்கஞ் செய்வார்கள். அதுபோல ஒரு சீவன் முன்குடியிருந்த தேகத்தால் கடவுள் கட்டளைப்படி நடவாமல் துன்மார்க்கத்தாற் பாவக்கர்மங்களை விரும்பிச் செய்திருந்தானாகையால் அந்தச் சீவன் வேறொரு தேகத்தில் வந்தபோதும் அந்தப் பாவக்கர்மங்கள் இப்போது வந்த தேகத்திலும் வந்து அந்தச் சீவனைச் சேருமென்றறிய வேண்டும்" வள்ளலார் உரைநடைப் பகுதி.

## 9.8. வினை செயல்படுமிடம்

மனம், மொழி, மெய் ஆகிய மூன்றும் வினை செயல்படுமிடம்.

### 9.8.1. மனத்தால் செய்யும் வினைகள்

(1) பொறுத்தற்கரிய வெகுளியும் துன்பமும் வந்தால் பொறுத்தல், (2) உடலின்பம் வேண்டி பிறர்பொருள் விரும்பாமை, (3) பிறர் செய்த நன்றியை மறவாதிருத்தல், (4) தீயன சிந்தியாதிருத்தல், (5) மானம் காத்தல். மானம் என்பது தன்னிலையில் தாழாமையும், தெய்வத்தால் தாழ்வுரின் உயிர் வாழாமையும். (6) நண்பர், பகைவர், நொதுமலர் ஆகிய மூவரிடத்தும் ஒரு பக்கமும் சாயாத நுகத்தில் பகலாணி போலிருத்தல், (7) அழுக்காறு இல்லாதிருத்தல் (பொறாமை), (8) பிறப்பிற்குக் காரணமான அவா அறுத்தல்,[17] (9) அருளுடைமையுடையவனராய் இருத்தல். பொறுத்தற்கரிய சிற்றினம் ஆகிய விலங்குகளுக்குத் தீங்குவருங்கால் நெருப்பில் தோய்ந்தால் என்ன துன்பம் ஏற்படுமோ அத்தகைய துன்பம் உடையவராய் கையறு நிலையிலிருத்தல். (10) பெருங்குணம் உடைமை. தன்னைவிட பிறருக்கு அறிவு, செல்வம், அழகு, வீடு இவை நான்கும் ஏற்பட வேண்டுமென என்னும் எண்ணம். "நான்பெற்ற இன்பம் இவ்வையகம் பெறுக" என்ற திருமந்திரம் நினைவுகூரத்தக்கது.

### 9.8.2. சொல்லால் ஏற்படும் நல்வினை

மிகுதியுடையதாகத் தருமங்களை நாள்தோறும் சொல்லல். பிறர் புறம் பார்த்துப் பொல்லாங்குச் சொல்லாமை. ஒரு சொல்லாலும் பிறருக்குத் தீங்கு வராது உண்மையைக் கூறல். சிறந்த

அறிவு நூல்களைக் கற்றுத் தெளிந்து நல்லறிவுடையவனாக விளங்குதல். கேட்பதற்குச் சுவையாயிருக்க ஆனால் அச்சொல் பிறருக்குத் துன்பம் தரும் சொற்களைச் சொல்லாமை. இனியவைக் கூறல்.[18] வேறுபாடு உடையதாயிருக்கும் சொற்களைச் சொல்லாமை உயர்ந்த ஆகம நூல்களை விளக்கம் கூறிக் கொண்டாடல். அரிய வேதம் ஆகமங்களை ஓதுதல் அரிய மறைகளில் அடங்கிய மந்திரங்களைச் செபித்தல். கடினச் சொற்களைச் சொல்லாதிருத்தல். நற்பண்புகளைப் பெறுவிக்கும் நூல்களைப் படித்தச் சொல்லுதல். பொய்ச் சொல்லாமை. பயன் பெறுமாறு கற்றல்.

### 9.8.3. மெய்யால் செய்யும் நல்வினை

அரியதவங்களைத் தொடங்கி செய்தல். நல்லோர்க்கு நன்பொருள்களை அளித்தல். தானமாக அளித்தல் என்பது அறநெறியில் வந்த பொருள்களைத் தக்கார்க்கு உவகையோடு கொடுத்தல். தவம்: மனம் பொறிவழி போகாது நிற்றல் பொருட்டு நோன்பிருத்தல், உண்டி சுருங்கல் முதலியன. கொடை: மடம் வரையாது கொடுத்தல். திவாகரம் விளக்கம். படை மடம் என்றது. வீரர் இல்லாதார், புறமுதுகிட்டார், புண்பட்டார், மூத்தோர், இளையோர் போன்றோர் மேல் செல்லுதல் புறநானூறு கருத்து. காரணமின்றி கொடை வழங்குதல். படைகலம் இல்லாதோரிடம் போரிடாமலிருத்தல். அமரர் பேணல். தேவர்களைப் போற்றி வழிபட்டும் யாகம் செய்தும் அவற்றால் ஆகூதிகளை அவர்கள் நுகரப் பண்ணல். தான் நின்ற நிலைக்குப் பொருந்திய ஒழுக்கத்தைப் பாதுகாக்கும் சிறப்பாகிய பெரிய தலைமை. வாளை ஏந்திக்கொண்டு தம் உடலைத் துணித்தற்குப் பிறர் கூடிவந்து வருத்துகிறபோது அவ்விடத்தே தாம்படும் துன்பம் அறியார். கொலை செய்து அவ்வுடலைச் சுவைத்துத் தின்னும் கூட்டத்தாரோடு சேராமையே அறிவுடைமை. யாம் செய்யும் கொலைச் செயலுக்கு நீர் உடன்படாவிடினும் நாங்கள் அதைச் செய்யச் சொல்லும்போது உடன் வரவேண்டும். வராவிட்டால் உன்னையே கொல்வோம் என்று சொன்னபோதும் அவர்களின் செயல்கண்டு வருந்துதல். கொலை புரிபவரோடு கூடுதலே குற்றம். அதுபோலவே கொலைக் குற்றத்தைப் பற்றியும் பேசாதிருத்தல். கொலை, கள், களவு, குருவைக் குறைகூறல், பொய்கூறல் ஆகியவைகளைச் செய்வரோடு சேராமை. பஞ்சமாபாதகம் என்னும் மாக்கடலில் விழுந்து அமிழாமல் தப்புதல். பொறிகளாகிய பெரிய யானைப் படையை அடக்குதல்.[19] வாளால் அறுத்து நோய் தருவனவற்றை ஒருவர் செய்தால் ஆயினும் அவருக்கு நன்மை செய்வனவற்றை அவருக்கு அப்போதே செய்தல்.[20] தனக்குரிய செல்வம் சாலச் சிறந்தது ஆயினும் பல விருந்தினருக்கும் பகுத்தளித்து உண்ணல்.[21] பெரிய பூச்சோலை அமைத்தல். பிறர்

மனைவிரும்பாமை. பிற மகளிரைத் தாயாக எண்ணல். உட்பகையாகிய காமத்தை அடக்கிய ஆண்மையே பேராண்மை.[22] புறப் பகைவர்களை வெல்லுதல். ஆண்மை எனப்படும். கடல் ஒத்த குளம் ஏரி தோன்றுதல். கிணறு வெட்டுதல். நல்வழியில் மடம் கட்டல். அறம் கூறும் நல்லோர்க்கும், தவத்தினருக்கும் மடம் கட்டிக் கொடுத்தல். கோயில் கட்டுதல். இவையெல்லாம் நல்வினையாகும். இவற்றால் புண்ணியம் வரும்.

## 9.8.4. தீவினை

மேற்கண்டவாறு மனம் மொழி மெய்யால் நல்வினை புரியாது அதற்கு மாறானவை செய்தல் ஆகும். மேலும் மனத்தால் தோன்றும் தீவினைகள் (1) கொலை, களவு, காமம் தீய வேட்கை, பொய் புறங்கூறல் கடுஞ்சொல் கூறல் பயனில கூறல் (சொல்லில் உண்டாகும் தீவினைகள்) வெகுளல், பிறர் பொருள்கவர எண்ணல் குற்றம்பட உணர்தல் முதலியன.

சிவஞானசித்தியார் சுபக்கம் கூறும் (பாடல் 113), நல்வினை. அறம் எனப்படுவது நல்வினையாகும். அது தனக்கும் நன்மை தரவேண்டும். பிறருக்கும் நன்மை தர வேண்டும். அவை: ஒழுக்கம், அன்பு, ஆசாரம், உபசாரம், உறவு, சீலம், வழு இலாத்துவம், கொடை, வணங்கி போற்றல், வாய்மை முதலியனவும், அழுக்கிலாதுறவு, வணங்கல், அடக்கம், அறிவு, இறை வழிபாடு இயற்றுதல் முதலியனவாம்.[23]

## 9.9. நல்வினை தீவினையாகும், தீவினை நல்வினையாகும்

இறையன்பர் தீவினை செய்யினும் நல்வினையாகும். இறைவன் திருவடிக்கு அன்பு இல்லாதவர் செய்யும் நல்வினை தீவினையாகும். தக்கன் செய்த பெரிய யாகம் நல்வினையாயினும் இறைவன் இடத்து அவனுக்கு அன்பு இல்லாமையால் அந்த நல்வினை தீவினையாயிற்று. சண்டீசநாயனார் தந்தையைக் கொன்ற கொலையாகிய தீவினை இறைவனிடத்து அன்பு அதிகம் கொண்டு இருந்தமையால் அந்த தீவினை நல்வினை ஆயிற்று.

நல்வினை தீவினைகளைக் கொள்பவரது உயர்வு தாழ்வுகளுக்கு இவையே சான்றாகும். ஆகவே இறைவனிடத்து அன்பு மிகுதி கொண்டு வழிபாடு செய்தல் வேண்டும் என்பது பெறப்படும்.

## 9.9.1. நல்வினை தீவினையாலும், தீவினை நல்வினையாலும் தீராது

புண்ணியம் பாவத்தால் அழியாது. பாவப் புண்ணியத்தால் அழியாது. புண்ணியம் இன்பம் தரும். பிறவி தரும். பெரும் பேறுகள் அனைத்தும் தரும். நன்மனம், நற்சொல், நல்லுடல், நல்ல உறவினர், நல்ல நண்பர், நல்ல பதவி, முதலியன தரும். பாவம் துன்பம், கவலை தரும், பிறவி தரும், புண்ணியத்தில் கிடைப்பனவற்றிற்கு மாறானதெல்லாம் தரும். இரண்டினாலும் வருவனவற்றைச் செய்தவன் அனுபவித்தே தீரவேண்டும். ஒவ்வொரு வினைக்கும் அதற்குரிய பயன் வேறு வேறாக இருக்கும். அவற்றை ஒன்றற்கு ஒன்று ஈடாகச் சரிசெய்திட இயலாது. கொலை செய்தல் பெரிய பாவம். அந்த பாவம் தீர என்ன புண்ணியம் செய்ய முடியும். அதற்கு ஈடு எதுவுமில்லை. வள்ளல் பெருமான் எழுதிய மனுநீதிகண்ட சோழன் வரலாற்றில் சோழமன்னன் மகன் கன்றின்மீது தேர்செலுத்திய கொலை குற்றத்திற்கு அமைச்சர்கள் கூறும் பிராயசித்தங்களை எல்லாம் ஏற்றுக் கொள்ளவில்லை. அவை எல்லாம் அறத்திற்கு ஒவ்வாதவை எனக் கூறுகிறார்.

"அந்த மனுநூல் அநித்தியமாகிய தேகத்தில் அபிமானமும் அசுத்தமாகிய பிரபஞ்சபோகத்தில் ஆசையும் வைத்த கர்மிகளுக்கே அவ்விதி கூறியதல்லது நித்தியமாகிய சிவத்தில் அபிமானமும் சுத்தமாகிய சிவபோகத்திலாசையும் வைத்த என்பிதா மூதாதை முதலானவர்க்குக் கூறியதல்ல. உயிர்க் கொலை நேரிட்டால் உயிர்விடக் கடவரென்றே குறிப்பினாற் கூறியிருக்கின்றது. என்பிதா மூதாததைக்கு எவ்விதியோ அவ்விதியே எனக்கும் என்புத்திரனுக்கும் வேண்டத்தக்கது." மனுமுறைகண்ட வாசகம் வள்ளலார். இதன்மூலம் பாவத்தைப் போக்க புண்ணியம் உதவாது என்பது தெளிவாகிறது. ஆயினும் இதற்குக் கழுவாய் (பிராயசித்தம்) உண்டு என்று கூறும் நூலும் உள. சித்தாந்தம் இந்தப் பாவத்தால் வரும் நுகர்வினையை நுகர்ந்தே தீர்க்க வேண்டும் என்றும் கழுவாய் மூலம் தப்ப இயலாது என்றும் கூறுகிறது. கழுவாய் முறையன்று என்று மனுநீதிகண்ட சோழன் வாயிலாய் வள்ளலார் கூறுவது இது. "இதற்குத் தக்க பிராயசித்தம் செய்விப்பதே முறை என்றீர்கள்; மலையை எடுத்துண்டு வயிறு நோகின்றவனுக்குச் சுக்கிடித்துக் கொடுத்துச் சொஸ்தப்படுத்துவார்களோ? அது போலக் கொலைப்பாதகஞ் செய்தோர்க்குப் பிராயச்சித்தம் செய்வித்துப் பாவ நிவர்த்தி செய்யப்படுமோ? அவ்வாறு செய்வேனானால் என்றும் மீளாநரகத்தில் என்புத்திரனை விழுத்துவதுமின்றி யானும் விழுந்து வருந்துவேன்."

மேலும், "கொலைப் பாதக நிவர்த்திக்கு மாத்திரம் எவ்வுயிர்களையும் சமமாகக் கொள்ள வேண்டுமென்பது எவ்வகையாலென்பீரேல்: உயிர்கள் எல்லாம் சிற்சத்துயினுருவ மாகலானும் எல்லா உயிர்களுக்கும் இறைவனே தனுகரணங்களைக் கொடுத்தலானும் அவனது சிற்சத்தியாகிய உயிர்களை அவன் கொடுத்தருளிய உடம்பினின்றும் நீக்குதல் நினைக்கப்படாத அபராதமாகலானும் எந்தெந்த உயிர்களும் இயல்பினால் அல்லாமல் இம்மையினால் உடம்பைவிட்டுப் பிரியும்படி நேரிட்டால் . . . .ஒருயிரை இறப்பிப்பதற்கும் பிறப்பிப்பதற்கும் இறைவனே சுதந்தரமுள்ளவனென்றெண்ணாமல் ஆகாமியத்தால் கொலை செய்வதனால் மீளாநரகம் நேரும் என்றறிந்து கொள்வீர்" வள்ளலார் உரைநடைப் பகுதி.

மேற்கண்ட கருத்துக்களின்படி பாவத்தைப் புண்ணியத்தாலும் கழுவாயாலும் போக்க முடியாது. கழுவாய் சிலவற்றிற்குப் பொருந்தும். பஞ்சமா பாதகம் போன்ற கொடிய பாவத்திற்குப் பொருந்தாது.

இந்த உண்மையை நன்குணராதவர்கள் நாள்தோறும் கொடும்பாவம் செய்து அதற்குரிய கழுவாயினையும் செய்துவிட்டு தப்பித்துக் கொண்டதாக எண்ணுகிறார்கள். கழுவாய் எதற்கு உண்டு எதற்கு இல்லை என்பதை நல்லோர்கள் கூறவேண்டும். இல்லாவிடில் பாவச் செயல்களும், அப்பாவச் செயலைப் போக்கச் செய்யும் கழுவாய் செயலால் நீங்கா, கழுவாய் செயலால் சிலருக்கு பொன்பொருள் கிடைக்கும். அறம் தழைக்காது. இறை உணர்வு உண்டாகாது என்பதை உணர வேண்டும்.

## 9.9.2. பாபம் செய்ய வாய்ப்பு

அறியாமை, வறுமை, மறதி, பேராசை, களவு, பொய்ச் சொல்லல், பொறாமை, வெறுப்பு பணபலம் அலட்சியம், காமம், நாக்குச் சுவை, வஞ்சம் தீர்த்தல், கஞ்சத்தனம், சுயநலம், பதவி வேட்கை ஆகியவற்றால் பாவம் செய்ய வாய்ப்பு உண்டு.

## 9.9.3. வள்ளலார் இராமலிங்கசாமிகள் கூறும் பாபங்கள் இவை

(1) நல்லோர் மனத்தை நடுங்கச் செய்தல், (2) வலிய வழக்கிட்டு மானம் கெடுத்தல், (3) தானம் கொடுப்போரைத் தடுத்து நிற்றல், (4) நண்பர்களுக்குள் கலகம் செய்தல், (5) மனம் ஒத்த நட்புக்கு வஞ்சகம் செய்தல், (6) குடிவரியை உயர்த்திக் கொள்ளை கொள்ளல், (7) ஏழைகள் வயிறு எரியச் செய்தல், (8) தருமம் பாராது தண்டம்

செய்தல், (9) மண்ணோரம் பேசி வாழ்வு அழித்தல், (10) உயிர்க்கொலை செய்பவர்க்கு உதவி செய்தல், (11) களவு தொழில் செய்பவர்க்கு உளவு சொல்லல், (12) பொருளை விரும்பி பொய் சொல்லல், (13) ஆசை காட்டி மோசம் செய்தல், (14) போக்குவரத்து சாலையில் வழியை அடைத்தல், (15) வேலை வாங்கிய பின்னர் கூலியைக் குறைத்துக் கொடுத்தல், (16) பசியால் வருந்துவோரின் முகத்தைப் பாராது இருத்தல், (17) பிச்சை எடுத்து உண்பவர்க்குப் பிச்சை இல்லை என்றல், (18) கோள் சொல்லி குடும்பத்தைக் குலைப்பது, (19) நடு ஆற்றில் செல்லும் போது கையை நழுவ விட்டு விடுதல், (20) மனம் கலங்கி ஒளிந்து இருப்பவரைக் காட்டிக் கொடுத்தல், (21) கற்பு அழிந்தவளைக் கலந்து இருத்தல், (22) காவலுடன் இருக்கும் பெண்ணை அழித்தல், (23) கணவன் மனவழி நடக்கும் கற்புடைய மகளிரைக் கற்பழித்தல் (24) கருப்பத்தை அழித்து களிப்பு அடைதல் (25) தன்குருவினை வணங்குவதற்குக் கூசி நிற்றல் (26) குருவிற்குத்தரவேண்டிய குரு காணிக்கையை கொடுப்பதற்கு மறத்தல், (27) கற்றவர்கள்மீது கடுமையாய் பேசுதல், (28) பெரியோர்கள் பாடிய பாட்டில் பிழை சொல்லல், (29) பறவைகள் துன்புறும்படி கூண்டில் அடைத்தல், (30) பால்குடிக்கும் கன்றுக்குட்டியைப் பால் குடிக்கவிடாது கட்டி வைத்தல், (31) பிற உயிரைக் கொன்று தின்று உடல் வளர்த்தல், (32) நெல்லில் கல்லைக் கலந்து விற்றல், (33) அன்புடையவர்க்குத் துன்பங் செய்தல், (34) குடிநீர்க்குளத்தைத் தூர்த்தல், (35) நிழல்தரும் மரத்தினை வெட்டிச் சாய்த்தல், (36) பகைமையால் பிறர் பயிரை அழித்தல், (37) மக்கள் கூடும்பொது மண்டபத்தை இடித்துத் தள்ளல், (38) சிவனடியார்மீது சினம் கொண்டு வைதல், (39) தவம் செய்பவர்களை தாழ்வாகப் பேசுதல், (40) சுத்த ஞானியை இழிவாகப் பேசுதல், (41) தந்தை தாய் செல்லைத் தட்டி நடத்தல், (42) தெய்வமகிழ்ந்து செருக்கு அடைதல் இவை பாபம்.

## 9.9.4. பாபம் செய்ய காரணமாக இருப்பவர்கள்

பெற்றோர், கணவன் அல்லது மனைவி, குழந்தைகள் அண்ணன், தம்பி, அக்காள் தங்கை, நண்பர்கள், உறவினர்கள், பகைவர்கள், பலமற்றவர்கள், முதலாளி, தொழிலாளி, பெரியோர், குரு, விலங்கு, பறவை, தாவரம், நச்சுயிர், மேற்கண்டவர்களுக்குப் பாவம் செய்ய வாய்ப்பு உண்டு. அதுபோன்றே பாபம் செய்வதற்கும் காரணமாக இருப்பார். இவர்கள் அன்றாட வாழ்வில் தொடர்பு உள்ளதால், இவர்களுக்கு இவர்களாலே பாபம் செய்ய வாய்ப்பு உள்ளது.

## 9.9.5. பாபத்தின் விளைவு

பாபம் செய்வதால் கீழ்க்கண்ட விளைவுகள் ஏற்படும். எனவே கீழ்க்கண்ட விளைவுகள் வாழ்வில் வராதிருக்க பாபம் செய்யாமலிருக்க வேண்டும். காமம் கட்டுப்படாது. பேராசைமிகும். சோம்பல் உண்டாகும். பொறாமை மிகும். அறிவு மங்கும். பயம் உண்டாகும்.ஊக்கம் குன்றும். ஐயம் பெருகும். உடற்பிணி மிகும். அருவருக்கத்தக்க நோய் உண்டாகும். பெருந்துன்பம் தரும் நோய் மிகும். தொழிலில் இழப்பு, அவமதிப்பு ஏற்படல், திடீர் இழப்பு ஏற்படும், வறுமை, கவலை, தீராக்கடன் ஏற்படல், ஏமாற்றம், தோல்விமேல் தோல்வி, இறையுணர்வு இன்மை, பணம் கையில் தங்காமை, தொழிலில் வளர்ச்சி இல்லை, கற்றல் இயலாது, மறதி ஏற்படல், குழந்தை பேறு இன்மை, நல்ல கணவன் , மனைவி வாய்க்காமை. இன்பம் கிட்டாமை, தீயவழியில் இறப்பு, இறப்பில் ஆவியாய் அலைதல், கெட்ட ஆவியால் தொல்லை, இறை வழிபாட்டில் ஈர்ப்பு இன்மை, சற்குரு அமையாமை. அறியாமை முதலியன பாபத்தின் விளைவாக வரும். ஆசை என்னும் பிணிவரும். ஆசை மனத்தைப் பிணிப்பதால் பிணி எனப்பட்டது. அவா உயிர்க்குப் பிறப்பை ஈனும் வித்து என்கிறது திருக்குறள்.[24] குழந்தை பருவம் அறிவை மயக்கி ஆடுகிற பாம்பையும் எரிகிற விளக்கையும் தனது நிழலையும் பிடித்து இழுப்பதற்கு அவாவும். அதனால் சொரூபமாக இருப்பது போல உயிருக்கு இன்பம் துன்பங்களைப் பகுப்பில்லாமல் எடுத்த அவாவே பக்குவமின்மை எனப்படும். அந்த அவாவானது பிற்பாடு பாகப்பட்டு புகழ் அவா என்றும் பொருள் அவா என்றும் நின்று விளைவுகளைத் தரும். இதற்கு அகப்பற்று, புறப்பற்று என்றும் உயிர் சார்பு பொருள் என்றும் இன்னும் பலபெயர்களைப் பெறும். புகழ் அவா ஆனது உயிர் சார்பாக நின்று உயிரை யான் என்னும் செருக்கிலே செலுத்தும். பொருள் அவாவானது பொருள்சார்பாக நின்று எனது என்னும் செருக்கிலே செலுத்தும். இந்த யான், எனது என்னும் செருக்கிற்கு ஆணவம் என்று பெயர்'' என்று சுத்த சிவப்பிரகாச கட்டளை உரைநடை நூல் நுவல்கிறது.

## 9.9.6. பாபம் நீக்கும் முறைமை

கழுவாய் இன்றி பாபம் நீக்கும் முறை உண்டு. சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நெறிகளில் நின்று ஒழுகி வந்தால் எவ்வளவு பாபம் செய்தாலும் அவ்வளவும் நீங்கும். அந்த நெறிகளில் நின்றும் நீங்காமல் நிற்கும் எஞ்சிய பாபங்கள் அடுத்தப் பிறவியில் வந்து பயன்தரும்.

## 9.10. வினைப்பயன் மூவகையில் வரும்

(1) ஆத்தியான்மிகம், (2) ஆதிபௌதிகம், (3) ஆதிதைவிகம் என்னும் மூவகையில் வினைப்பயன் வந்து துன்பம் தரும்.

### 9.10.1.1. ஆத்தியான்மீகம்

மனத்தைப் பற்றி வரும் துன்பம். பிரிவு, பெண்டீர், மகன், செல்வம் முதலியன நீங்கியது. ஆற்றாமையால் வரும் நினைத்தற்கரிய கவலை. ஞானம், உடல், அழகு, செல்வம் முதலியவற்றை உடையோரைக் கண்டும் கேட்டும் அழுக்காறு வருதல். மானம் இழந்தபோது, ஐம்பொறிகளுக்குப் போகமான பொருள்களில் வைத்த விருப்பம். பெருங்கோபம். வேறுபலவும் உள.

### 9.10.1.2. ஆதிபௌதீகம்

குளிரால் வரும் துன்பம். பெரும் மழையால் வரும் நடுக்கம். இருளைக் கெடுக்கும் மின்னலினால் துன்பம். மிக்க வலிமையுடைய இடியால் வரும் துன்பம். கட்டி வைத்தல், உடலில் துன்பம். கொலை செய்தல் முதலியவற்றால் துன்பம் வரும்.

### 9.10.1.3. ஆதிதைவீகம்

தாய் வயிற்றில் கருப்பையில் இருக்கும் கருப்ப வேதனை, முதல் திங்களில் இருமை துன்பம். இரண்டாம் திங்களில் ஒருமை துன்பம். மூன்றாம் திங்களில் மதம் பெருகும் துன்பம். நான்காம் திங்களில் பேரிருட்டு துன்பம். ஐந்தாம் திங்களில் முஞ்சு துன்பம் ஆறாம் திங்களில் ஊறலர்த் துன்பம், ஏழாம் திங்களில் புவிதழ் துன்பம், எட்டாம் திங்களில் இடநெருக்கடி துன்பம், ஒன்பதாம் திங்களில் நெருக்கடி மிகுதித் துன்பம் பத்தாம் திங்களில் கடற்போல துன்பம் நேருமென மாணிக்கவாசகர் திருவாசகம் போற்றித் திருவகலில் கூறுகிறார். மகப்பேறு துன்பம், வயது மூப்பால் வரும் துன்பம், அளவற்ற அறியாமையால் வரும் சங்கற்ப வேதனை, உயிர்விட்டு நீங்கும் காலத்து ஏற்படும் மரண வேதனை, "சாதலின் இன்னாது இல்லை" திருக்குறள். நிரையத்தில் படும் துன்பம் முதலியன.

இவ்வாறாக உயிரானது மூன்று வகையில் துன்பம் பெறுகிறது. அவை அளவில்லாதவை. தாங்க முடியாதவை. இதை எண்ணும் போதுதான் இனி பிறவி வேண்டுமா என எண்ணத் தூண்டுகிறது.

## 9.10.2. வினைபுரிய காரணமாயுள்ளவைகள்

(1) இராகம் - பற்று, பெண்ணாசை. (2) துவேஷம் - வேறுபாடு. தன் கோரிக்கையின் முயற்சி தடுக்கப்படின் உண்டாகும் உத்வேகம். காமம். விரும்பிய பொருள்கள் முன்னரே கிடைத்திருப்பினும் மேலும் பெறவேண்டி அதிக ஆசை. குரோதம், தன் விருப்பம் நிறைவேறாமல் எதிர்க்கும் முரட்டுத்தனம், அவற்றினால் சொல், செயல் ஆகியவற்றில் ஈடுபடுதல். உலோபம். கருமித்தனம். தன் பொருள்களை எவருக்கும் எப்போதும் எக்காரணம் கொண்டும் கொடுப்பது இல்லை என்ற மனநிலை. போகம் அனுபவித்தல். தன் மக்களிடத்து உண்டாகும் மிக்க ஆசை. மதம், செயல், செயலற்ற தன்மை, இவைகளில் விவேகம் இல்லாதிருத்தல். அசூசை. தான் துன்புறும்போது பிறரும் தான்போல் துன்பப் படவில்லையே என எண்ணல். டம்பம். ஆடம்பரம்: பிறர் தன்பேச்சை, செயலை, தோற்றத்தைப் பாராட்ட வேண்டும் என்ற எண்ணத்தினால் மட்டும் நற்செயல் செய்வது போல் நடித்தல். தர்ப்பம்-செல்வச் செருக்கினால் புத்தியை மதித்து அறத்திற்கு மாறானவை செய்தல். அகங்காரம்-தான் எண்ணியதை முடித்தல், மேலும் எச்செய்கையைச் செய்தாலும் அதைப்பற்றி மற்றவர் ஏதும் பேசக்கூடாது என எண்ணல். இச்சை. பசி, நீர் வேட்கைகளினால் துன்புறாது இருத்தலுக்கும், சிறுநீர் மலம் நீக்கத்திற்கும் மட்டும் சாதனை விரும்புதல். பத்தி: தன் மக்களிடம் உள்ளது போன்ற அன்பினை கடவுளிடமும் காட்டல். மாச்சர்யம், பொறாமை, சிரத்தா நூல்களிலும் குருவின் மொழிகளிலும் உண்மை உண்டு என்ற நம்பிக்கையாய் பொறுப்புடன் நடத்தல். மற்றும் ஈர்ஷயா போன்றவைகளால் வினைபுரிய வேண்டியுள்ளது. இவை வாழும் வாழ்க்கையோடு தொடர்புடையவை. இத்தொடர்புகளில் இருந்து விடுபட்டால் வினைபுரிதல் நிற்கும். மேலும் ஒரு வினைபுரியும் போது அதோடு தொடர்புடைய அல்லது மாறான வினையும் புரிய நேர்கிறது. தனக்காகவும், தன்னைச் சார்ந்தவர்களுக்காகவும் செய்ய வேண்டியுள்ளது. சில நேரங்களில் விரும்பாத செயல் பிறருக்காகக் கடமைபட்டதற்காகச் செய்ய வேண்டியுள்ளது. சான்றாக கர்ணன் துரியோதனன் தனக்கு அடைக்கலம் கொடுத்து ஆட்சியும் கொடுத்தலால் பாண்டவர்களுடன் போரிட்டான். கும்பகர்ணன் இராவணன் தன்னைக் காத்து வந்தமைக்காகச் செஞ்சோற்றுக்கடனுக்காக இராமனுடன் போரிட்டான். இதுபோன்ற சூழ்நிலைகளும் வினைபுரிய காரணமாகிறது.

## 9.11. வினையும் முயற்சியும்

மனிதர்களில் பொருள், இன்பம், வாழ்க்கை, வசதி, உடல், உள்ள நலம் வேண்டி பெரும் முயற்சி எடுத்து இரவு பகல் பாராமல் உழைப்பவர்கள் உண்டு. உண்டுகளித்து மடியை மடியில் கட்டி வாழ்பவர்களும் உண்டு. முயற்சி உள்ளவர்களின் முயற்சி சிலருக்கு முற்று பெறுவதில்லை. வெற்றி அடைவதில்லை. இடையில் தளர்வு உணர்கின்றது. தளர்வால் எடுத்த முயற்சி பயனற்றுப் போகும். எனவே முயற்சி உடையார் துன்பம் அடைகின்றனர். எந்த முயற்சியும் இல்லாதவர் பெரும் செல்வந்தராய் விளங்குகின்றனர். எனவே முயற்சி பிறழ்கின்றது என்பது தெரிகின்றது. முயற்சி பிறழ்வதற்கு ஏதேனும் ஒரு காரணம் இருத்தல் வேண்டும். அந்தக் காரணம் என்னவென்று ஆராய்ந்து பார்த்தால் ஊழ்வினை என்று அறியலாம் என்கிறது[25] சிவஞானசித்தியார் சுபக்கம். வள்ளுவர் பெருமான் இதுபற்றி ஆராயப்படும் என்கிறார். முடிவு கூறாமல் ஆராயப்படும்[26] என்பதால் முயற்சி வினை இரண்டின் வலிமை, விளைவு பற்றி ஆராயப்படும் என்கிறார். ஒவ்வொருடைய உயர்வு தாழ்விற்கும் பின்னணியாக வினையோ முயற்சியோ இருக்கும். வினை முயற்சி இவற்றால் அவர்களும் நலம் பெறுதலும் இழத்தலும் உண்டு. எனவே ஆராயப்பெற வேண்டியுள்ளது. எனவே "இவ்வுலகில் அனுபவிக்கப்பெறும் இன்பம் துன்பம் ஆகியவற்றிற்குக் காரணம் முயற்சி மட்டுமல்ல. வினை மட்டுமல்ல, இரண்டுமேயாகும்."

இப்பிறவியில் வரும் இன்பம் துன்பம், செல்வம் வறுமை, உயர்வு தாழ்வு என்னும் ஆறும் உடம்பு எடுப்பதற்கு முன்பே நுண்மையாய்க் கருவினுள் அமைந்திருக்கும். ஆனால் அவை கருவினுள் உண்டானவையல்ல. கருவினுள் நுண்மையாய் இருந்து அவை பிறந்த பின்னர் அனுபவிப்பதற்குத் துணை ஆகிய முயற்சியால் பருமையாய் வந்து கூடும். எனவே முயற்சி நுண்மையாய் இருந்ததைப் பருமையாய்ப் பெருக்கிச் செயல்படவைக்கும். நுண்மையாய் இருப்பதற்குக் காரணம் பழவினையே. எனவே வினைப் பயனும் முயற்சியும் இன்பத்திற்கும் துன்பத்திற்கும் காரணமாகிறது.

இன்பம் துன்பம் அனுபவிக்கத் துணையாக விளங்கும் முயற்சி அனுபவிக்கச் செய்தலுடன் ஒழியாது. மற்றோர் உடம்பில் பொருந்தும். செல்வம், வறுமை, உயர்வு, தாழ்வு, இன்பம், துன்பம், ஆகிய ஆறிற்கும் வித்தாய் நிலை பெறும். முற்பிறவியில் செய்த முயற்சி இப்பிறவியில் வரும். இப்பிறவியியல் செய்யும் முயற்சி மேல் விளைந்து வித்தாகும். அன்றி இப்பொழுது பயன்தருவதில்லை. எனவேதான் திருவள்ளுவரும் முயற்சி ஊழ்வினை என இரு

அதிகாரங்களில் விளக்கம் தந்து இரண்டிற்கும் உள்ள ஆற்றல் விளைவுகளை நன்கு விளக்கியுள்ளார்.

முற்பிறவியில் செய்த இருவினைகள் முயற்சியுடன் சேர்ந்து அனுபவத்தில் இப்பிறவியில் பருமையாய் வந்து தோன்றும். முயற்சி என்பது உற்சாகம், பிரயத்தனம், உழைப்பு ஆகும். அந்த உழைப்பு விருப்பு வெறுப்புக்களால் உண்டாக நல்வினை தீவினையாய் உருப்பெறும். முயற்சியோடு கூடிய அனுபவம் என்பது விருப்பு வெறுப்புகளால் உண்டாகும் தீவினைகளோடு கூடிய அனுபவம் ஆகும். நுகர்வு பருமையாய் அனுபவத்திற்கு வரும். அதற்கு முன்பு அந்த நுகர்வில் ஆசை நிகழும். அந்த ஆசைதான் விருப்பு வெறுப்பு எனப்படும்.

விருப்பு வெறுப்புக்கள் உண்டான பின்னர் அவற்றைச் செய்து முடிப்பதற்கு முயற்சி மேல் கொள்ளப்படும். அந்த முயற்சிகள் நல்வினையாகவும் தீவினையாகவும் முடியும். இந்த இருவினைகளே வருவினை (ஆகாமியம்) எனப்படும். இவ்வாறு ஒவ்வொரு நுகர்வுகளை நுகரும்போது விருப்பு வெறுப்பு காரணமாக நல்வினை தீவினைகள் உடன் நிகழும். எனவே தான் இன்ப, துன்ப நுகர்விற்கு இருவினை காரணமாகுமேயன்றி முயற்சி காரணம் ஆகாதெனச் சிவஞான சித்தியார் சுபக்கம் பாடல் 98 கூறுகிறது.

## 9.11.1. வினையால் முயற்சி, முயற்சியால் வினை

முன்பிறவிகளில் இறக்கும்முன் செய்த வினை அனுபவித்தது போக எஞ்சி இருக்கும். அதை முழுவதும் நுகரவேண்டி, மீண்டும் பிறவி உண்டாகிறது. எனவே பிறவிக்குக் காரணம் வினையே. அந்த வினையை உடம்பே செய்யும். உடலைக் கொண்டு செய்யும் முயற்சியால் வினை உண்டாகும். இவ்வாறு உடலால் வினையும், வினையால் உடலும் வருவது வித்தில் மரமும், மரத்தில் வித்தும் வந்து பொருந்துவதுபோல ஆகும். வினை உடம்பு என்னும் இவ்விரண்டும் ஒன்றிற்கு ஒன்று காரணகாரியமாகத் தொன்று தொட்டு ஒன்றன்பின் ஒன்றாய் வருகிறது. இப்படி ஒன்றன்பின் ஒன்றாய் வருவது அவற்றிற்கு முற்பாடு பிற்பாடு கூறமுடியாது.[27]

இதன் மூலம் ஒரு கருத்து புலனாகிறது. முயற்சியும் வினையும் ஒன்றோடு ஒன்று தொடர்பு உடையதாய் உள்ளதால் ஒன்றைக் கொண்டு ஒன்றை வெல்ல முடியும் என்பதும் புலனாகிறது. ஊழால் முயற்சி ஏற்படும். போகும் ஊழால் மடி தோன்றும்.[28] ஊழ்வினை போன்ற வலிமையுடையது வேறு இல்லை.[29] இடைவிடாது உழைப்பவர் ஊழ்வினையை வெல்வர். தெய்வத்தால் ஆகாது எனினும் முயற்சி உழைத்த உழைப்பிற்கு ஏற்ப கூலிதரும். முயற்சி

திருவினையாக்கும் போன்ற வள்ளுவர் கருத்து சிந்திக்கத தக்கது.[30] வினையைக் கூறி வீணனாய்ப் போக வேண்டாம் என்பதே முடிவு.

## 9.11.2. பாவம் நீங்க இருவழிகள்

(1) கழுவாய் (பிராயசித்தம்) செய்தல். இதற்கான வழிமுறைகள் நூலில் சொல்லப்பட்டுள்ளன. அவற்றைத் தானே செய்யலாம். "பிறர் மூலம் பொருள் கொடுத்துச் செய்தும் கொள்ளலாம். ஆனால் எல்லா பாவங்களுக்கும் கழுவாய் கிடையாது என முன்னரே சொல்லப்பட்டுள்ளது.[31] மீண்டும் செய்யாமையே நன்று என்கிறார் வள்ளுவர்."[32] சிலப்பதிகாரத்தில் கோவலன் செய்த கழுவாய் பலன் பார்ப்பனிக்கு எய்தியது.[33] நல்வினை செய்ய இயலாதோர்க்கு அதனைச் செய்யும் ஆற்றல் உடையவர் தாம் செய்து அதன் பயனை அவருக்குத் தரலாம். கர்ணன் தான் செய்த தானத்தின் பயனாகிய புண்ணியத்தையும் அந்தணன் வடிவில் வந்த இந்திரனுக்குத் தானமாகத் தருகின்றான். ஆயினும் வினைப்பயன் நுகர்வினை துய்த்தலின்றி தொலையாது. "நிழல் தன்னடி உறைவது போன்றது என்கிறார் வள்ளுவர்."[34]

(2) முன்செய்த குற்றம் போகப்பின் ஒருஞான்றும் குற்றம் செய்யாது அறவழி நிற்பது. அதாவது நன்னெறியில் நிற்கும் உரன் உடைமையோடு இறைவனை நோக்கிப் புறவழிபாடு, அகவழிபாடு ஒன்றிய வழிபாடு (யோகம்) ஆகியவற்றைச் செய்தல் ஆகும். வேதம் ஆகமங்களில் விதிக்கப்பட்ட சரியை, கிரியை, யோகம், ஆகிய நெறிகளில் ஒழுகி வந்தால் நீங்கக்கூடும். அந்நெறிகளில் நின்றும் நீங்காத பாவம் அடுத்து வரும் பிறவிகளில் அனுபவித்தே தீரவேண்டும். எனவே நல்லறிவுடையார் பாபங்கள் செய்வதைத் தவிர்த்தலே நலம். கடந்த பிறவி பாபத்திற்கு கழுவாய் செய்து பார்க்கலாம். அதைவிட இறைவன் திருவருளைப் பெறவேண்டும். பின்னர் கவலை இல்லை.

மரத்தில் உச்சிப் பொழுதில் அடங்கின நிழல் விரிதல் போலவும், தான் கற்ற கல்வி தன்னிடத்திலே அடங்கி கிடந்து பரிண மித்தாற் போலவும். ஆலமரத்தின் பெரிய கிளை, முதலிய பரிணாமம் எல்லாம் அடங்கிய சிறிய நுண்ணிய அவ்வாலம் வித்தில் கிடந்து பரிணமித்தற் போலவும் காரண வினையில்லை புண்ணிய பாவங்களாகிய வினைகள் காரிய வடிவாய் கிடந்து பக்குவப்பட்டபோது வினை பாவங்களாகி இன்பமும் துன்பமும் விளையும் என்பதை அறியவும்.

வரும் துன்பங்கள் உயிரைச் சேரும், உடலுக்கு வரும். உடலுக்கு வருவது உயிரையே நுகரச் செய்யும். எப்படி எனில் தண்ணீரில் நறுநாற்றம் உடைய மலரைப் போட்டால் நீர் நறுமணம் பெறும். நீரில் நெருப்பைப் போட்டால் நீர் வெந்நீராகி சுடும். நீருக்கு மணமும் வெப்பமும் பிறபொருள் சேர்க்கையாலேயே பொருந்துகின்றது. நறுமணம் நல்வினை. வெப்பம் தீவினை. நீர். உயிர் உடலுக்கு ஏற்படும் இன்ப துன்பத்தை உடல் நுகராது. ஏனெனில் உடல் அறிவற்றது. அறிகருவிகள் மூலம் உயிரே அனுபவிக்கும். எனவே உடல் இன்பம் துன்பம் அனுபவியாது. உயிரே அனுபவிக்கும். ஆயினும் உடலைத் தாக்கும் துன்பம் உள. மனம் பற்றி வருவது போலவே உடல் பற்றி வரும். எது பற்றி வந்தாலும் உயிரே அனுபவிக்கும் என்பதே உண்மை. பிணத்தை அடித்தால் என்ன, வெட்டினால் என்ன, எரித்தால் என்ன அந்தப் பிணத்திற்க அனுபவிக்கும் ஆற்றல் இல்லை என்பது தெரிந்ததே.

### உடலைப் பற்றி வரும் துன்பம்

துன்பம் நேரே உயிரைப் பற்றி வராது. ஒன்று மனம் பற்றி வரும் அல்லது உடல் பற்றி வரும். வேறு வழியில்லை. வாதம், பித்தம், சிலேத்துமம் காரணமாய் உடல் நோய்வரும். "மிகினும் குறையினும் நோய்" என்றார் வள்ளுவர்.[35] நாச்சுவையால் வரும். இதனையே குமரகுருபரசுவாமிகள் சுவைகள் பற்றி கூறி அவை அறிய நல்கின என கூறுகிறார்.[36] மேலும் தொழுநோய், நீர் அழிவு நோய், வெப்பு நோய், சூலை நோய், வரும். பிற உயிர்களால் வருவனவும் உள. பகைவர்கள், விலங்குகள், கொசு, ஈ பறவைகளால் வரும். நிருதர்களால், ஆண்-பெண் கூடி பிரிதலால், குருலிங்க சங்கமம் ஆகி இறை காரியம், பரிபாலனம், தவசு இயற்றல் ஆகியவற்றால் வரும் காய துன்பம், செல்வம், மிகுதியாக அதைத் தேடுதல், காத்தல், நுகர்தல் முதலியவற்றாலும் உடலுக்குத் துன்பம் வந்து உயிர் நுகரும்.

## 9.12. மெய்ஞ்ஞானிக்கு அறியாமை, வினை உண்டாகாது

மனிதர்கள், பாவத்தின் பயனாக உடலாலும் மனத்தாலும் துன்பம் பெற்று உயிருக்கு ஊட்டுகின்றனர். யாருக்கு இவை உண்டாகாது என வினவின் மெய்ஞ்ஞானிகளுக்கு உண்டாகாது என அறியலாம். எப்படி எனின், (1) இறைப் பணியில் நிற்பாரை நுகர்வினை பயன் தராது. அதனால் ஞானியர்க்கு அது உடல் ஊழாய்க் கழியும். அடுத்து ஏறும் வினை அவர்களுக்கு ஏறாது. (2) இறைவனைச் சார்ந்த மெய்யடியாரை நுகர்வினை தாக்காது. காரணம் தன்னிடம்

புகழிடம் தேடி வந்தவர்களுக்கு புகழிடம் தந்து காக்க வேண்டியது தலைவன் கடமை. சிபிசக்கரவர்த்தி அடைக்கலம் வந்த புறாவைக் காத்து தன்னுடல் சதையை புறா எடைக்குத் தந்து காத்தான் என்பது சான்றாகும். (3) மெய்ஞ்ஞானிக்கு எப்போதாவது நுகர்வினை பயன் தருமாயின் அது வாசனை அளவாகவே இருக்கும். மென்மையாய் இருக்கும். துன்பமுமில்லை. அதனால் அவர்களுக்கு மீண்டும் பிறவியில்லை. மெய்ஞ்ஞானிகள் இன்பம் துன்பம் வரினும் மனம் தளர மாட்டார்கள். அவர்கள் அப்படி இருப்பது தரையில் வைக்கப்பட்ட மணியின் நாவினைப் போன்றது. "எல்லாம் சிவன் செயல்" என்று இருப்பர். பொல்லாத தீவினை செய்யார். செய்தாலும் "சிவன் செயல்" என்பார்.

## 9.13. வினை: வகைகள்

வினை மூன்றாகும். அவை (1) பழவினை (சஞ்சிதம்), (2) நுகர்வினை (பிராரத்தம்), (3) வருவினை (ஆகாமியம்) இம்மூவகை வினையும், வினைப் பயனுமே மனிதர்களுக்குப் பிறவியும் இன்பம் துன்பங்களும் தருகின்றன.

## 9.14. வினை தோன்றும் முறை

மனித உயிர்கள் தனித்து இருக்கும்போது எவ்வினையும் செய்யாது. மாறுபாடின்றி இருக்கும். ஆனால் இயற்கை (பிரகிருதி) மாறுபாடின்றி ஒருபொழுதும் இருக்காது. இதன் தன்மை மானிட உயிருக்கு நேர்மாறானது. ஆனால் உயிர் எப்போது இயற்கையுடன் நெருங்கிய தொடர்பை ஏற்படுத்திக் கொள்கின்றதோ அப்போதே மானிட உயிரிடத்து மாற்றம் ஏற்படும். என்னவெனில் இரண்டும் தனித்தன்மையை விட்டுவிட்டு ஒன்றாக இருக்கும் நிலை (தாதாமின்யம்) ஏற்படுகிறது. அதனால் இயற்கையின் செயல் மானிட உயிரின் வினை ஆகிறது. மானிட உயிர் இயற்கைப் பொருளை அடைய வேண்டும் என்ற ஆசை (மமதை) ஏற்படுகிறது. அந்தப் பொருள்களின் மீது ஆசை என்னும் பற்று ஏற்படுகிறது. கிடைக்காத பொருளின்மீது ஏற்படும் உணர்வுக்குத்தான் ஆசை (காமனா). மனிதர்களின் இயல்பே எளிதாகக் கிடைக்குமாயின் அதன்மீது அலட்சியமும், கிடைக்காது என தெரியவரின் அதை அடைந்தே தீர வேண்டும் என்ற ஆவலும் ஏற்படும். இந்த ஆவல்தான் துன்பங்களுக்கெல்லாம் ஆணி வேர். மானிட உயிரும் இயற்கையும் ஒன்றாக இணைந்த நிலை, இயற்கை பொருள் மீது பற்று ஏற்படும் நிலை, கிடைக்காதப் பொருள்மீது ஏற்படும் ஆவல் நிலை ஆகிய

இம்மூன்றும் சேரும்போது மனிதன் என்னென்ன செயல்கள் செய்கின்றானோ அச்செயல்களுக்கு வினை எனப் பெயர்.

எடுத்த பிறவியில் செய்யும் வினைகள் வருவினை (ஆகாமியம்) எனப்படும். சிலவற்றின் பயனை அப்போதே நுகர்ந்து விடுகின்றான். எஞ்சியவை அடுத்து வரும் பிறவிக்கு இருப்பாகிறது. இந்த இருப்பு வினை அடுத்து வரும் பிறவிக்கு முன் வினை (சஞ்சிதம்) எனப்படும். முன்வினையின் ஒருபகுதியை இப்பிறப்பிலே மனிதன் அனுபவிக்கிறான். அதாவது நுகர்கின்றான். எனவே நுகரும் வினை (பிராரத்தம்) எனப்படும். இப்படியாகப் பிறவிதோறும் வினை கூடுதலும் பிறவிதோறும் நுகர்ந்து தீர்த்தலும் நடைபெறும்.

## 9.15.1. முன்வினை

பழவினை எனவும் சஞ்சிதம் எனவும் கூறப்பெறும். மனம், மொழி, மெய் ஆகிய மூன்றால் ஈட்டப்பட்டு பருவினையாய் (தூலகன்மம்) இருப்பது முன்வினை எனப்படும். முன்வினை வேறு மூலவினை (மூலகன்மம்) வேறு. மூலவினை கால பழைமைக்கும் எட்டாதது. உயிரோடு கூடியுள்ள விருப்பு வெறுப்பு ஆகியவை இது மூவினைக்கும் மூலமானதால் மூலவினை எனப்பட்டது. உயிர் செய்த நல்வினை தீவினைகள் பக்குவம் அடையும் வரைப் புத்தி தத்துவத்தைப் பற்றுக்கோடாகக் கொண்டு மாயையில் கட்டுப்பட்டு கிடப்பது நுண்வினை (சூக்கும கன்மம்). இந்த நுண்வினையே முன்வினை. முன்வினைக்கு முற்பாடு பிற்பாடு கூறமுடியாது. இது இனம், வாழ்நாள், நுகர்வு (சனகம், தாரகம், போக்கியம்) என்னும் மூவகையாய் ஆபுருவம், சஞ்சிதம், புண்ணிய பாவம் என்னும் பெயர் பெறும். பின்னர் பயன்படுங்கால் ஆதிதைவிகம். ஆத்தியான்மிகம், ஆதிபௌதிகம் என்னும் முத்திறத்தால் பலதிறப்பட்டு நுகர்வினையாய் மாறும். உயிர்கள் பெறும். உடல்களுக்கு முன்வினையே காரணமாகும். உயிரால் ஈட்டப்பட்ட வினைகளுள் முன்பிறவிகளில் துய்த்தனவும், இப்பிறவியில் முகந்து நின்றனவும் ஒழியப் பின்னும் துய்க்கக்கூடியதாய் எஞ்சியிருக்கும் வினைகள். புத்திதத்துவத்தைப் பற்றுக் கோடாகக் கொண்டு பலன் தரும் வரை இம்மண்ணுலகில் இருப்பது. முயற்சி பயனுக்கு வராமல் கட்டுப்பட்டு இருப்பது. கட்டப்பட்டு இருக்குமிடம் புத்தி தத்துவமும் மாயையும் ஆகும்.

முன்வினையில் இருபகுதி இருக்கும். ஒன்று செயல் தன்மை என்னும் இயல்பு. இது மீண்டும் மீண்டும் ஒன்றையே செய்வதால் ஏற்படுவது. சில மனிதர்கள் தெரிந்தோ தெரியாமலோ நன்மை தீமை என்ற பாகுபாடு அறியாது செய்ததையே மீண்டும் மீண்டும் செய்வர். அப்போது அச்செயலை அவரது இயல்பு என்பதுண்டு. இயல்பிலிருந்து

முளைப்பு ஏற்படுகிறது. அந்த முளைப்புகளிலும் புதிதாகச் செய்யப்பட்ட நிகழ்நிலை வினைகளின் முன்வினையால் இருக்கின்றவற்றினுடைய முளைப்பே ஏற்படுகிறது. சில சமயம் முன்வினையின் முளைப்பே வெளியாகலாம். முன்வினையின் ஒரு பகுதி பயன்பகுதி. இந்தப் பயன்பகுதிகளிலிருந்துதான் நுகர்வினை உண்டாகிறது. முளைப்பு முன்வினைக்கும், நுகர்வினைக்கும் ஏற்றவாறு நிகழ்கிறது.

முன்வினைக்கு ஏற்றவாறு ஏற்படும் முளைப்பு மனிதனை வேலை செய்ய கட்டாயப்படுத்துவதில்லை. முன்வினை முளைப்பில் பற்று வேறுபாடு (ராகதுவேசம்) சேரும். அது மனிதனை வேலை செய்யக் கட்டாயப்படுத்தலாம். ஆனால் அதில் நல்வினைகளையே செய்யத் தூண்டும். தடுக்கப்பட்ட வினைகளைச் செய்யத் தூண்டாது. ஏனெனின் மனிதன் அறிவுடையவன். நல்லது எது தீயது எது என அறிந்தவன். அதன் பயனையும் அறிவான். எனவே செய்யக்கூடாத வினைகளைத் தடுக்கும் பொறுப்பு அவனுக்குண்டு. ஆயினும் முளைப்பு எப்படி ஏற்படுகிறது என்பதை அறிதல் வேண்டும். முளைப்பு என்பது வெளிவருவது. ஒருபாத்திரத்தில் பலவித அளவுகளை உடைய பொருள்களைப் போட்டுவிட்டு ஒவ்வொன்றாக எடுக்கத் தொடங்கினால் முதலில் எடுக்க வருவது பெரிய பொருளே, பின்னர் மாறிமாறியும் வரலாம். இது முற்றிலும் பொருந்தாத உவமை. முன்வினை உருவமற்றது. புதிய நுகர் வினைகளின் முனைப்பு அதிகமாகவும், பழைய வினைகளின் முனைப்புச் சிற்சில சமயங்களிலும் இருக்கும்.

உறக்கத்தின்போதும் முளைப்பு உண்டு. உறக்கத்தின் போது விழிப்புநிலை அமுக்கப்பட்டுவிடுகிறது. அதனால் முன் வினையின் அந்த முளைப்பு கனவு உருவமாகத் தோற்றம் தரும். இது கனவுநிலை.

சீவன் முத்தர்கள் ஆன மனிதர்களின் மனத்தில் தூய்மையற்ற தீய எண்ணங்கள் இல்லை. அவருடைய உடலில் நுகர் வினையின் காரணமாக நோய் நொடியினால் சிலசமயம் மயக்கம் ஏற்படலாம். பித்துநிலை ஏற்படலாம். அப்பொழுதுகூட அவர்கள் சாத்திரம் தடை செய்தப் பேச்சைப் பேசமாட்டார்கள். அகக்கருவி தூய்மையாய் இருப்பதால் சாத்திரங்கள் தடை செய்ததைப் பேச அவர்கள் எண்ணத்தில் ஏற்படாது.

### 9.15.1.1. ஊழ்வினை

ஊழ்பொருள்: "பழைமையும், மரபும், பகையும், ஊழ் எனல்" - பிங்கல நிகண்டு 3218 என ஊழிற்குப் பொருள் கூறுகிறது. மேலும்

ஊழ் என்ற சொல்லுக்கு - உலகமுடிவு. குணம், நியமம், பகை, பழவினை, பழைமை, பூர்வகன்மம், முடிவு, முறை, விதி, வெயில், முதிர், வாடு, பதனழி, மலர், நினை, முதிர்வு, முதிர்ச்சி, தடவை, மலர்ச்சி, கதிரவன் என்றும் பொருள் கூறப்படுகிறது. எனவே இச்சொல்லிற்கு இடத்திற்கு ஏற்ப பொருள் கொள்ள வேண்டும்.

ஊழாகிய பழவினையை யாராலும் எளிதில் அறிய இயலாது. ஆயினும் ஆள்வினையுடையோர் அதாவது வினையை ஆள்பவர் சிலர் வினையால் ஆளப்படுவர். சிலர் வினையை ஆள்வர். தாழாது உஞற்றுபவர், இடைவிடாது முயல்பவர். தாளாண்மையுடையோரே ஊழ் என்னவென்று காணமுடியும். அதுவும் உப்பக்கம்தான் காணமுடியும் என்கிறார். ஊழைக்காண வேண்டுமாயின் ஆள்வினையுடையோர் தளர்ச்சியின்றி செயல்பட்டால் முன்னர் பலவற்றில் அனுபவம் கண்டது ஒப்ப இதில் காணமுடியும் எனலாம்.

மிக்க அறிவுடையாரும் ஊழால் குற்றம் உடையவராவர். நல்லறிவினை என்செய்த ஊழே அறியாமையுடையதாக்கும். 'அறிவினை ஊழே சுடும்' என பழமொழி நானூறு நவில்கிறது (228). பயன் ஒன்று நிகழ வேண்டுமாயின் வினையொன்று நிகழவேண்டும். வினைஇன்றி பயனில்லை. வினையின் வழியே பயனுண்டு. எனவே இப்போது பெறும் பயன் எல்லாம் முன்னர் செய்த வினையின் பயனே இதனையே பழமொழி நானூறு (232) "முதலிலார்க்கு ஊதியம் இல' என்று கூறுகிறது. இன்னும் விளக்கமாகப் பார்க்கின் தினை விதைத்தவர் தினை அறுப்பர். வினை விதைத்தவர் வினை அறுப்பர் என்ற பழமொழிகள் நல்வினையை விதைத்தவன் நன்மையையும் தீவினையை விதைத்தவன் தீமையை அடைவான் என்கிறது. எனவே நன்மை வேண்டுவோர் நல்வினை புரிக என்று சொல்லுகிறது. வினைப் பயன் வருவது வந்தே தீரும். அதைத் தடுக்கவோ மாற்றவோ முடியாது என்பதை 'உறற் பால யார்க்கும் உறும்' என பழமொழி (229) கூறுகின்றது. மேலும் வினைப் பயனை விரும்பினாலும் சரி விரும்பாவிட்டாலும் சரி அவனை வந்து அடைந்தே தீரும்.

"வேண்டினும் வேண்டா விடினும் உறறிபால
தீண்டா விடுதல் அரிது" பழமொழி 230.

அரும்பு பக்குவம் வந்தவிடத்து மலரும், மனிதர் விருப்பத்திற்கு ஏற்ப மலரா. செல்வம் ஒருவனுக்கு வரவேண்டிய நற்பேறு இருக்குமாயின் அவன் முயல்வான். ஊழ்வினை காரணமாக முயற்சி செய்தலினால் செல்வமும் வரும். ஊழ்வினை இல்லாக் காலத்து என்னத்தான் முயன்றாலும் செல்வம் வராது. விழலுக்கு இறைத்த நீராக முடியும். ஊழ்வினை நன்றாக உள்ள ஒருவன் நல்ல

நாள், தீய நாள், நல்ல நேரம், கெட்ட நேரம் பாராது காரியம் செய்தால் அது வெற்றி பெறும். இந்த வெற்றிக்குக் காரணம் காலமோ நேரமோ அல்ல முன்வினைப் பயன், முன்வினை நல்வினையாக இல்லாதவர். நல்ல நாள், நல்ல நேரம் பார்த்து முறையாகச் செய்தாலும் வெற்றி கிட்டுவதில்லை ஏன்எனின் அவனுக்கு ஆகும் ஊழ் ஆகுஉழ் இல்லை எனலாம். எனவேதான் 'நலிந்தவர்க்கு இல்லை நாளும் கிழமையும்' என்றும் 'தீநாள் திருவுடையார்க்குஇல்' என்றும் கூறப்பெறுகிறது. ஊழ்வினையால் நலிந்தவன் நல்ல நாள் பார்த்து செய்யினும் தோல்வியே. திருவுடையார் தீய நாளில் செய்தாலும் வெற்றி பெறுவர் என்பதன் வாயிலாக அறியப்பெறும் உண்மையாது எனின் ஊழ்வினை பயனே செயற்படும். இதனையே "ஊழ்வினை உறுத்து வந்தூட்டும் என்பதூஉம் சூழ்வினைச் சிலம்பு காரணமாக" என இளங்கோவடிகள் ஊழ்வினையின் வலிமையைக் கூறுகிறார்.

சூழ்வினைச் சிலம்பு காரணமாக என்பதின் மூலம் ஊழ்வினை பயன்தரவேண்டி சிலம்பைக் காரணம் காட்டி சூழ்நிலையை உருவாக்குகிறது. அந்தச் சூழ்நிலை குற்றம் அற்ற கோவலன் குற்றமுள்ளவனாகக் காணப்படுகிறான். காரணம் அவன் ஊழ்வினைக் காரணமாக கொலையுற வேண்டியுள்ளது. எனவே ஊழ்வினையே பயன்தரும் காலத்தில் நன்மை செய்யும்கால் நல்ல சூழ்நிலையையும், தீமை செய்யுங்கால் தீயசூழ் நிலையையும் உருவாக்கி தன்பயனைத் தரும்.

திருமந்திரம் ஊழ் என்ற சொல்லுக்கு விதி என்ற பொருள் தருகிறார். விதிக்கப்படுவது விதி. முன் வினையின் ஊழ்வினையின் பயனால் இன்ன இன்ன நடக்கும் என்று விதிக்கப்பட்டுள்ளது என்பது பொருளாகிறது. "தான் முன்னஞ் செய்த விதிவழி தானல்லால்" 2848 என்ற பாடல் அதற்கு வழிகாட்டுகிறது.

எனவே ஒருவன் செய்த வினையின் பயனை அது முன்பிறவியாகவும், இந்தப் பிறவியாகவுமிருக்கலாம் அடைந்தே தீரவேண்டும். இன்னசெயலுக்கு இன்ன பயன் என விதிக்கப்பட்டுள்ள விதிக்கு உட்பட்டே தீரவேண்டியுள்ளதை அறிக.

"வாழ்க்கையில் சிலர் எவ்வளவோ முயற்சி செய்தும் வெற்றி பெறாமல் துன்புறுகின்றனர். சிலர் பெரும் முயற்சி செய்யாமலே பெரும் பயன் எய்துகின்றனர். இதற்கு முன்னை வினைப் பயன்தான் காரணம் என்று கூற வேண்டியதாயிற்று. ஆகையினால் இதுவும் ஊழ்வழிக் கோட்பாட்டை மெய்ப்பிக்கிறது. சமயக் கொள்கையின்படி முன்னரே நெறிமுறைப்படுத்தப் பெற்ற ஊழ் வினையின்படியே பொருள்களாகிய உணவு உடை, உறையுள் முதலியவை

வாய்க்கின்றன. வினைக் கோட்பாட்டின்படி 'ஏறுவினை (ஆகாமியம்) என்பதில் மட்டுமே நமக்கு உரிமை உண்டு. ஏனைய இருப்பு வினை (சஞ்சிதம்) பயனளிக்கத் தொடங்கியவினை (பிராரத்தம்) பொறுத்தமட்டில் நமக்கு உரிமை இல்லை அவற்றைத் துய்த்துதான் தீர்க்க வேண்டும்.

நுகர்வினை எனப்படும் பிராரப்தம் மிகக் கடுமையானது. அதனை வெல்வது அரிது. ஆனால் என்ன வழிபாடு செய்தாலும் அதனைத் துய்த்தே தீரவேண்டும் எனச் சொல்வது தவறாகும். ஒருமைப்பட்ட வழி பாட்டால் நுகர்வினை எனப்படும் ஊழ்வினை (பிராரப்தம்) உடற்குத் தொடர்பின்றி உயிர் நுகர்வதாகச் செய்துகொள்ள முடியும்." (தஞ்சை பல்கலைக்கழக வாழ்வியல் கோட்பாடு, தொகுதி V).

ஊழ்வினையின் ஆற்றலை அறிய எளியவழி: ஒரு வகுப்பில் ஒரு ஆசிரியரிடம் ஒரு இருக்கையில் உடன் உட்கார்ந்து பாடம் கேட்கின்ற இருவரும் பொறுப்புடன் படிக்கின்றனர். ஆயின் ஒருவருக்கு எளிதில் புரிவது மற்றொருவருக்கு எளிதில் புரியவில்லை. மேலும் இருவருடைய தேர்வு மதிப்பெண்ணும் வேறுபாடு உடையதாக உள்ளது. உண்மையில் இருவரும் சம மதிப்பெண் பெற்று சமஅறிவு பெற்றிருக்க வேண்டும். பெறவில்லையே ஏன்? இதற்கு என்ன காரணம் சொல்ல முடியும். ஒன்று மட்டும் உண்மையாகப் புலனாகிறது. கற்பது வேறு. கற்பதால் பெறும் அறிவு வேறு. கற்றாலும் அறிந்த உண்மை அறிவு வேறு. வள்ளுவரும் உண்மை அறிவே மிகும் என்கிறார்.[37] எனவே அறிவு பெறுவதிலும் ஊழ்வினையின் பங்குள்ளதை அறியலாம்.

ஊழ்வினை பயன்தர சூழ்நிலையை உருவாக்கும். அந்த சூழ்நிலையால் என்ன விளையும், அதனை நன்மை தருவதாக எப்படி மாற்றலாம் என்பதை அறிவுடையார் அறிவார். அதனால் "அறிவுடையார் எல்லாம் உடையார்" என்றார் திருவள்ளுவர்.

## 9.15.2. நுகர்வினை - ஏன்ற வினை - பிராரத்தகன்மம்

உயிர்களால் அளவின்றி ஈட்டப்பட்ட வினைகளுள் பிறந்த உடம்பால் முகர்ந்து நின்ற வினை நுகர்வினையாகும். எடுத்த பிறவியில் உடலினால் அனுபவிக்கப்படும் இன்ப துன்பங்கள் நுகர் வினை. இறைவனால் கழிக்கப்பட்ட வருவினை முன்வினைகள் ஒழிய உடலில் நுகர்ந்தன போக மிஞ்சிய நுகர்வினையும் செயற்படுதல், இதுவரை உடம்பை வாட்டிய நோய் மாறவந்தது போலாகும். உபாய நிட்டையில் இடையறாது ஒழுகுவார்க்கு சூரியன் முன் இருளைப்

போல மறையும். நுகர்வினை நுகர்ந்தால் அன்றி தீராது. வினை மருந்து போன்றது என்றும், அவற்றுள் ஒன்றாகிய நுகர்வினை உடலுக்கு இசைய அடையும் என்று எண்ணின் உடலுக்கு ஏற்பதானே நுகர்வினை அடையுமானால் அது தொடர்ந்து வரவும் இயலாது. நுகர்வினை பிணி போக்கும். எப்படியெனின் நுகர்வினை மலப்பிணியைத் தணிக்கும் வகையில் தணிக்கும். அறியாமையைப் பயக்கும்.

இறைவன் குருவாக வந்து அருளும் நிலையில் அவனது தீட்சை நிலையால் பழவினையும், அவன் அருள்வழி நிற்றலால் வருவினையும் நீங்கும். உடலோடு இயைந்து நிற்கும் நுகர்வினையும் திருவருள் வயப்பட்டு விருப்பு வெறுப்பு அற்ற நிலையில் எதனையும் துய்த்தலின், அதனால் உண்டான துன்பம் அவரை அடைதல் இல்லை.

நுகர்வினையின் பயன்கள் சாதகமான அல்லது சாதகமற்ற சூழ்நிலைகளின் உருவத்தில் தோன்றுகின்றன. ஆனால் அவற்றை அனுபவிக்கும் முறையில் உயிர்களின் மனப்போக்கு மூன்று விதமாக இருக்கும். (1) தன் விருப்பப்படியானது. (2) தன் விருப்பப்படி அல்லாதது. தன் விருப்பப்படி அல்லாதது என்றால் வினைப்படியானது என்று பொருள், (3) மற்றவர்கள் விருப்பப்படி செயல்படுவது.

(1) இருவர் தாம் விரும்பிய வணிகம் செய்யத் தொடங்கினர். அதில் ஒருவருக்கு வணிகம் சிறப்பாய் நடந்து லாபம் கிடைத்தது. மற்றொருவருக்கு வணிகம் நன்றாய் நடக்கவில்லை. பொருள் இழப்பு (நஷ்டம்) ஏற்பட்டது. காரணம் என்ன? இருவரும் தம்விருப்பப்படி வணிகம் தொடங்கினர். நுகர்வினையின் பயனாக ஒருவருக்கு லாபமும், மற்றொருவருக்கு பொருள் இழப்பும் ஏற்பட்டது. விருப்பமும் முயற்சியும் இருந்தும் பலன் வேறு வேறு.

(2) இருவர் ஒருவேலைக்காக ஒரு நிறுவனத்தின் நேர்முகக் காணலுக்குச் செல்கின்றனர். ஒருவர் செல்லும் வழியில் அந்த நிறுவனத் தலைவரின் நெருங்கிய நண்பர், இவருக்கும் நண்பர். வழியில் கண்டு வேலை வாங்கித் தருகிறார். மற்றொருவர் இவருக்கு வேண்டாதவர் நேர்முகக்காணல் இருந்த இவருக்கு வேலை இல்லை என்கிறார். இருவரின் நுகர்வினையின் காரணமாக ஒருவருக்கு வேலை கிடைக்கிறது. மற்றொருவருக்கு வேலை கிடைக்கவில்லை. வேலை கிடைத்ததும், கிடைக்காமல் போனதும் பிறருடைய தலையீடும் விருப்பமும் ஆகும். பிறருடைய ஆதரவினாலும், எதிர்ப்பாலும் நன்மை தீமை உண்டாவதை வாழ்க்கையில் எத்தனையோ நிகழ்ச்சிகள் மூலம் அறியலாம். ஆயினும் அதற்கு அடிப்படை நுகர்வினையே ஆகும். மற்றும் வேலை கிடைத்தவரின்

முயற்சியும், கிடைக்காதவரின் கவனக்குறைவும் காரணமாக அமைதலும் கூடும்.

(3) ஒருவன் வீடுகட்ட குழிவெட்டினான். குழியில் புதையல் கிடைத்தது. இன்னொருவன் வீடுகட்ட குழி வெட்டினான். வெட்டும்போது கால் தடுக்கி குழியில் விழுந்தான். கால் முறிந்தது. புதையல் கிடைத்ததும், கால் முறிந்ததும் வினைப்பயனாகும். இதுபோல் அவர் அவர் சூழ்நிலைக்குத் தக்கவாறும், வினைக்குத் தக்கவாறும் நடைபெறும்.

வினைகள் செயல்களாகத் தோன்றாது. ஆனால் சூழ்நிலைகளாக வரும். நுகர்வினையின் பயனாகத் தோன்றுவது தக்க சூழ்நிலையாகவே இருக்கும். முன்வினை பயனாக பிறவியும், நுகர்வினையும் வரும். அதனால் புதிய வினைகள் தோன்றும். இப்படியாக முன்வினை தீர புது வினை நிகழ முடிவின்றி வினைகள் நடைபெற்றுக் கொண்டே இருக்கும். முடிவு கிடையாது.

நுகர்வினைக் காரணமாகக் கிடைக்கின்ற பயன்கள் இருவகையாகும். (1) கிடைத்துவிட்ட பயன். (2) இதுவரை கிடைக்காத பயன். கிடைத்துவிட்ட பயன் என்பது வாழ்வில் சாதகமான, பாதகமான சூழ்நிலை தோன்றி இன்பமோ துன்பமோ அடைந்திருப்பர். இது கிடைத்துவிட்ட பயனாகும். இதுவரை கிடைக்காத பயன் என்பது இனிமேல் வாழும் காலத்தில் வரவிருக்கின்ற சாதகமான பாதகமான சூழ்நிலை தோன்றி இன்பமோ துன்பமோ வரக்கூடும்.

முன்வினை உள்ள வரையில் நுகர்வினை வந்து கொண்டே இருக்கும். முன்வினை தீர்ந்தால்தான் நுகர்வினை வராது. அதாவது முன்இருப்பு தீர்ந்து ஆகவேண்டும். இதிலிருந்து யாரும் தப்பமுடியாது. நுகரும் காலத்து சூழ்நிலையில் தன்னை இணைத்துக் கொள்வதுதான் இன்பத்திற்கும் துன்பத்திற்கும் காரணம். சூழ்நிலை ஒருவனை துன்புறு இன்புறு என்பதில்லை. அனுபவிப்பன் மனம்தான் இன்புறுவதும் துன்புறுவதும். அவன் அறிவுடையவனாக இருப்பின் தன்வினையை நுகர்ந்தே தீர வேண்டும். கவலைப்படுவதால் அது தீர்ந்துவிடாது. அனுபவித்து விட்டால் முன்வினையும் நுகர்வினையும் தீர்ந்துவிடும். அதனால் இனிபிறவியும் துன்பமும் வராது என்று எண்ணுவான். இன்பத்தையும் துன்பத்தையும் சமமாக எண்ணுவான். ஞானியர்கள் பொன்னையும், ஓட்டையும் ஒன்றாக எண்ணுவார்கள். அதுபோலவே "இடும்பைக்கு இடும்பை படுத்துவர். இடும்பைக்கு இடும்பைப்படாதவர்" வள்ளுவர் நெறிப்படி.

அறநூல்களில் கூறப்பட்டுள்ள மனிதனின் விருப்பங்கள் (1) அறம், (2) பொருள், (3) இன்பம், (4) வீடு ஆகிய நான்காகும்.

## (1) அறம்: தர்மம்

மனம், மொழி, மெய்யால் செய்யப்படுகின்ற நல்வினைகள். தனக்கு நன்மை தருகின்றதோ இல்லையோ பிறருக்கு நன்மை தர வேண்டும். பிறருக்குத் தீமை தராவண்ணம்தான் நன்மை பெறலாம். வாழ்வில் பண்பும் பயனும் வேண்டும்.

## (2) பொருள்

இவ்வுலக வாழ்விற்குப் பொருள் இன்றியமையாதது. பொருள் இன்றி இவ்வுலகில் வாழ இயலாது.[38] எனவே இவ்வுலகத்திற்குத்தான் பொருள் வேண்டும். மறுமைக்குப் பொருள் வேண்டாம். எனவே இவ்வுலகத்திற்கும் பொருளும் அவ்வுலகத்திற்கு அருளும் தேடவேண்டும். அறத்தின்வழி பொருள் ஈட்டி அறத்தின்வழி பொருளைச் செலவிட்டால் பொருளைத் தேடுவதால், காப்பதால், செலவிடுவதால் வரக்கூடிய தீவினைகளை முற்றிலும் நீக்கி வாழ்ந்தால் பொருளும் வரும் அருளும் வரும். எனவேதான் அறத்தை முன்னர் சொல்லி பின்னர் பொருளைக்கூறி அறத்தையும் பொருளையும் கொண்டு நல்லின்பம் துய்க்க வேண்டுமென கூறினர் அறநூலார்.

## (3) இன்பம்

இன்பம் பலவகையாலும் மானிடர் பெறுவர். ஆயினும் அவற்றையெல்லாம் எட்டு வகைக்குள் அடக்கிக் கூறுவாருமுளர். அதன்படி (1) ஒலி, (2) ஊறு, (3) உருவம், (4) சுவை, (5) நாற்றம். இவ்வைந்தும் ஐம்பொறிவாயிலாக வரும் இன்பம். இவை புறக்கருவிகள். பெரும்பாலான இன்பங்கள் புறக்கருவியால்தான் கிட்டுகின்றன. ஆயினும் அகக் கருவியாலும் அகப்புற இருகருவிகளாலும் கிட்டும் இன்பமும் உள. (6) மானம், (7) பெருமை. இவ்விரண்டும் அகக் கருவியால் அடைவது. (8) வசதி அகப்புற இருகருவிகளால் அடைவதாகும்.

அறம் பொருள் இன்பம் வீடு ஆகிய நான்கு பொருள்களில் பொருளும் இன்பமும் பெறுவதில் நுகர்வினை பெரும்பங்கு வகிக்கிறது. மனித முயற்சி குறைவாகவே உள்ளது. இன்பம் பொருள், பெறுவதில் மனித முயற்சியைச் சிலர் பெரிய அளவில் பயன்படுத்துவர். அது அநேகமாகத் தீவினைவழியாகத்தான்

இருக்கும். மனித வாழ்விலே பெரும் பாலோர் பெரிய அளவு தீவினை புரிவதற்குக் காரணமே பொருள் நாட்டமும் இன்ப நாட்டமும் தான் இவ்விரண்டும் நிலையற்றவை. ஒவ்வொரு மனிதனுடைய வாழ்வின் வினைகளை எல்லாம் கணக்கிட்டு ஆராய்ந்தால் நல்வினையாகிய அறம் செய்தவர் குறைவாக இருப்பர். பொருளையும், இன்பத்தையும் வீட்டுப் பேற்றிற்குத் தடையென எண்ணி வாழ்ந்தவர்கள் மிகமிக குறைவாகவும் பொருள் இன்பம் நாடி, தீவினை செய்து, பிறவியும் பெருந்துன்பமும் அடைபவர் அதிகமாகவும் உள்ளனர் எனலாம்.

முன்வினையின் காரணமாக நுகர்வினையாக வந்து செயல்படுவதால் மனைவி, மக்கள், உறவு, நண்பர், உணவு, உடைமை ஆகியவற்றில் மனநிறைவு அடைதல் வேண்டும். மனித முயற்சியால் மேற்கொண்டு முயலலாம். அப்படி முயலும்போது அது நல்வினை வழியாகத்தான் இருத்தல் வேண்டும். ஒருவர் வாழ்க்கை நூற்றுக்கு நூறு முன்வினையால்தான் அமையும் என்று இல்லை. மனித முயற்சிக்கும் இடமுண்டு. மனித முயற்சிக்கே இடமில்லையெனின் வினையே இல்லையென்றும், வினையால் இறப்பும் பிறப்பும் இல்லை என்றாகிவிடும்.

அறமும் பொருளும் ஒன்றோடு ஒன்று தொடர்புடையனவே. அறம் செய்வதால் பொருள் வளரும். பொருளால் அறத்தை வளர்க்கலாம். மறத்தையும் வளர்க்கலாம். வறுமையால் தீவினை செய்பவர்களைவிட, பொருள் உடைமையால் செய்யப்படும் தீவினையே அதிகமாக உள்ளதை ஆராய்ந்தால் அறியலாம்.

அறமும் வீடும்: அறத்துவழி நடக்கின் அஃது இல்லறமாயினும் சரி துறவறம் ஆயினும் சரி குறளில் உள்ளபடி இல்லில் இருந்து அறம் செய்யினும், துறவில் இருந்து அறம் செய்யினும் வீடுபேறு உண்டு. மனித வாழ்வு இருவகையாய் அமையும். ஒன்று இல்வாழ்க்கை, அத்துடன் அறம் சேருமாயின் இல்லறம். மற்றொன்று துறவு வாழ்க்கை, அத்துடன் அறம் சேருமாயின் துறவறம். ஆக இரண்டிலும் அறம் உண்டென உணர்வதே அறிவுடையாகும்.

நுகர்வினையால் இன்பம் பெறும்போது இப்பொழுது பெறுகின்ற இன்பத்திற்குக் காரணம் முன்னர் செய்த நல்வினையே, எனவே பொருளும் இன்பமும் வந்துள்ளது. இந்த இன்பமான காலத்தில் பொருளைக் கொண்டு மேலும் நல்வினை செய்தல் வேண்டும் என்று எண்ண வேண்டும். இதற்கு வினை பற்றிய தெளிந்த அறிவு வேண்டும்.

நுகர்வினையால் துன்பம் வந்தபோது இந்த துன்பமும் வறுமையும் முன்னர் செய்த வினையின் பயன். எனவே இப்போதுள்ள துன்பத்தையும் வறுமையையும் பொறுத்துக் கொள்ள வேண்டும். இனிமேல் வருவது நன்மையாக இருக்கலாம். இன்னல் வரும்போது அடுத்து வரஇருக்கும் இன்பத்தை எண்ணி நகுக என்றார் வள்ளுவர்.[39] அத்துடன் இனியும் இதுபோல் துன்பமும் வறுமையும் வரக்கூடிய தீவினைகளை எக்காலத்தும் எவ்விடத்தும் எக்காரணம் கொண்டும் செய்ய மாட்டேன் என உறுதியுடன் வாழவேண்டும்.

செல்வமும் நுகர்வும் ஒன்றோடு ஒன்று தொடர்பு உடையதாக இருப்பதுபோல் இருக்கும். ஆனால் அது அனைவருக்கும் பொருந்தாது. எப்படியெனின் செல்வம் உடையோர் இன்ப நுகர்வு பெறுவோர் உளர். செல்வம் உடையோர் உடற் பிணியால், மனப்பிணியால் இன்ப நுகர்வு பெற முடியாதவரும் உளர். நல்ல உணவினைக்கூட உண்ண முடியாதவரும் உளர். சிலர் வறுமையில் வாடினாலும், உறவினர் மூலமோ, நண்பர் மூலமோ இன்ப நுகர்வு கிடைப்பதுண்டு. ஆக செல்வமின்றியே இன்ப நுகர்வு வேறு வழியில் கிட்டுகின்றது.. இதன் மூலம் ஒன்று அறிய கிடக்கின்றது. என்னவெனின் முன்வினை காரணமாகச் செல்வம் கிடைக்கும். இன்ப நுகர்வு கிடைக்கும். இரண்டும் பெறுவோரும் உளர். ஒன்றுமட்டும் பெறுவோர் உளர். எனவே இரண்டிற்கும் தனித்தனியே கொடுப்பினை முன்வினை இருத்தல் வேண்டும் என்பது பெறப்படுகிறது.

முன்வினை நல்வினை காரணமாகப் பெருஞ்செல்வம், பெருஞ் செல்வாக்கு இருக்கும். அதே நேரத்தில் அவருடைய தீவினைக் காரணமாக அதை முற்றிலும் அனுபவிக்க முடியாத உடற்பிணி, உள்ளப்பிணி இருப்பதுடன். வழக்கு, அரசர் தண்டனை, அவமதிப்பு முதலியவற்றிற்கு ஆளாகி சொல்லொண்ணா துன்பத்தில் ஆழ்வர். சிலருக்கு வறுமையிலும் மதிப்பும் நுகர்வும் கிடைக்கும். சிலருக்கு செல்வத்திலும் அவமதிப்பும் நோயும் கிடைக்கும். எனவே இதன் மூலம் அறிவது என்னவெனில் ஒவ்வொரு வினைக்கும் தனித்தனியே பயன் உண்டு. வினை வேறுபாடு உளதுபோல் பயன் வேறுபாடும் உள்ளது. அதனால்தான் நல்வினையைத் தீவினையாலும், தீவினையை நல்வினையாலும் போக்க முடியாதெனக் கூறப்பட்டது. அதுபோன்றே முயற்சியால் வினையும், வினையால் முயற்சியும் ஏற்படும் என்பது அறிய முடிகிறது.

ஞானியர்க்கு இறைவன் திருவருளால் நுகர்வினையால் வருவனவும், முன்வினையால் வருவனவும் பயனற்று போகும் என்பது எப்படி என்ற வினா எழும்பக்கூடும். முன்வினையோ நுகர்வினையோ ஞானியர்க்கு சாதகநிலை அல்லது பாதக நிலையை உண்டாக்கும்.

அதாவது சூழ்நிலையை உண்டாக்கும். சூழ்நிலைகளினால் இன்பம் தருவது துன்பம் தருவது வினையின் வேலை இல்லை. அதனால் அளிக்கவும் முடியாது. எப்படி எனின் சூழ்நிலையால் வருகின்ற இன்பத்தையோ, துன்பத்தையோ இன்பமாகவோ துன்பமாகவோ கருதாமல் இருப்பது நுகர்வோனின் மனநிலையைப் பெற்றது. அறியாமை உடையவன் வந்த இன்பத்தையோ துன்பத்தையோ பெரிதாக எண்ணி மகிழ்வான். வருந்துவான். ஞானியோ வரும் இன்பம் துன்பம் இரண்டையுமே மனத்தில் போட்டு வருத்தாமல் சமமாக எண்ணி ஏற்பர். அப்பொழுது இன்பம் இன்பமாகவோ துன்பம் துன்பமாகவோ தெரியாது. இந்நிலை இறைவன் திருவருளால் வருவது. காரணம் எல்லாம் இறைவன் செயல் என்கின்றபோது இன்பத்திற்கும் துன்பத்திற்கும் வேறுபாடு பார்க்கும் மனநிலை இல்லாமல் போய்விடுகிறது. "ஓடும் செம்பொன்னும் ஒன்று" என எண்ணுவோர் இன்பமும் துன்பமும் ஒன்று என்று எண்ணுவதில் என்ன வியப்பு. உடல் இன்பம் உடல் துன்பம் மன இன்பம் மன துன்பம் எல்லாம் மனநிலையைப் பொறுத்ததே என்பதுதான் பேருண்மையாகும்.

அன்பிற்குரிய மகன்,மகள் அன்பிற்குரிய பெயரன்,பெயர்த்தி சிறு குழந்தையாய் உள்ளபோது உதைத்தாலும் அடித்தாலும் அதனால் வரும் வலியை வலியாக எண்ணாது அக்குழந்தையை மேலும் கொஞ்சுவார்கள். அன்பு காட்டுவார்கள். அடியால் வந்ததைத் துன்பமாகவோ அடித்தத் குழந்தையின்மீது வெறுப்போ காட்ட மாட்டார்கள். இதுபோன்றே இறைவன் நிலையும். இறைவன் மீதுள்ள அன்பாலும் அவர்களிடம் திருவருள் பெறவேண்டும் என்ற உணர்வாலும் அவன் தந்த துன்பம் துன்பமாகத் தெரியாது. துன்பம் தந்த இறைவன்மீது பகைமையும் வெறுப்பும் தோன்றாது. எனவே ஞானியர்க்கு இறை பற்றும் கூடிக்கொண்டே செல்கிறது. இறைவனும் அவன் வினைகளையெல்லாம் நுகர்ந்து தீர்த்துவிட்டு தன்திருவடி சேர வழிசெய்கிறான். இதனையே சிலர் "இறைவன் சோதிக்கிறான்" என்கிறார்கள். சோதனை என்பதைவிட அவன் வினைப்பயனைத் துய்க்கச் செய்து தூய்மைபடுத்துகிறான் என்பதே பொருந்தும். மற்றும் முன்வினைகள் முழுவதும் நுகர்வினையாக வருவதில்லை. முன்வினையின் ஒருபகுதியே நுகர்வினையாக வருகிறது. மீதி இருப்பில் இருக்கும். பிராரத்தம் என்றாலே நன்கு தொடங்கியுள்ளது என்பது பொருள். இதன் மூலம் தொடங்காதது இருப்பு உள்ளது எனப் பெறப்படும் அல்லவா. நுகர்வினை நுகர்ந்த ஏனைய வினை விளையாது.

இப்பிறப்பில் நிகழ்வனவெல்லாம் நுகர்வினையே என்று எண்ண வேண்டாம். அதில் நுகர்வினையின் விளைவும் உள்ளது.

கவனக் குறைவும் உள்ளது. எனவே நடப்பன எல்லாம் வினைப்பயன் அல்ல என்பதையும் அறிய வேண்டும். எப்படி எனின் சாலையில் மிக்க கவனமாக நடந்து செல்லுகின்றபோது சாலையில் வரும் பேருந்து பிரேக் இல்லாமல் நிலைதடுமாறி சாலை ஓரத்தில் நடப்பவன்மீது மோதி விபத்து உண்டானால் இது கவனக்குறைவு இல்லை. இது விதியின் விளைவு. ஆனால் நெரிசல்மிக்க சாலையைக் குறுக்கே நடந்து கடக்கும்போது முன்னும் பின்னும் வண்டி வாகனங்கள் வருகின்றதா எனப் பாராது, சாலையில் நடந்து வரும் வண்டியில் மோதி காயம் பட்டால் இது கவனக்குறைவே. எனவே ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு செயலும் வினையாலோ கவனக் குறைவாலோதான் நடைபெறும் என்பதை அறிதல் வேண்டும்.

இறப்பு மூன்று வகையில் வரக்கூடும். ஒன்று தற்கொலையால் வருவது. தற்கொலை செய்து கொள்பவன் அறியாமையால் உணர்ச்சி வயப்பட்டு தன்னைத்தானே இறப்பிற்கு ஆளாக்குகின்றான். இது நுகர்வினையன்று எனலாம். மற்றொன்று இளமையிலோ முதுமையிலோ வருவது. ஏதோ ஒரு காரணம் பற்றி நோயால் வருவது. இது நுகர்வினையால் வருவது. மற்றொன்று விபத்தால் வருவது. இதுவும் நுகர்வினையால் வருவது. எப்படியெனின் அவன் இறப்பின் நேரம் வந்துவிட்டது. அதாவது வாழ்நாள் முடிந்துவிட்டது. நுகர்வினையின் காரணமாக விபத்தில் இறக்கிறான். விபத்திற்கு ஆளான வண்டியில் பலர் இருந்தும் எல்லோரும் இறப்பதில்லை. சிலர் இறக்கிறார்கள். சிலர் காயம் அல்லது படுகாயம் அடைகிறார்கள். சிலர் ஒன்றுமில்லாமல் தப்பித்துக் கொள்கிறார். இந்த மூன்றும் நுகர்வினையின் விளைவாகத்தானிருக்க இயலும்.

நுகர்வினை வாசனை பற்றறக்கழிந்தாலன்றி அவ்வாசத்தைக் கீழ்ப்படுத்தும் மெய்யுணர்வு மேம்படாது. ஆதலின் வினைகள் கழிய ஞானத்தை நாடித் தொழவே, அவ்வினை நீங்க மெய்யுணர்வு மேம்பட்டு நிகழும். அதனால் இறைவனை அன்பினால் வழிபடுக. திருவருளைப் பெற்றிடும் வழியை அறிக. அதன்வழி நடந்திடுக.

முன்வினையும் வருவினையும் நீங்கினும் நுகர்வினையால் உயிருக்கு உடல் இருக்கும். இவ்விரு வினைகளும் நீங்கப் பெற்றோர் ஞானியர் ஆகின் அருள்வழி உணர்வைச் செலுத்துபவர். எனவே அவ்வுடல்வழி வினை வருவதில்லை. அப்படி வந்தாலும் அவரைச் சாராது.

> "ஏன்றவினை உடலோடு ஏகும்இடை யேறும் வினை
> தோன்றில் அருளொடு சுடும்" திருவருட்பயன்.

மேற்கண்ட திருவருட்பயன் வழி நுகர்வினை பற்றி அறியலாம்.

## 9.15.3. வருவினை: ஆகாமியம்

முன்வினை நுகர்வினையாகி உயர் இன்பம் துன்பங்களை அனுபவிக்கும்போது முன்பு செய்த வினை அழியும். ஆயினும் வினை நுகர்வைப் பொருட்டுச் செய்யும் முயற்சியால் உயிர் பிறருக்கு நன்மை தீமைகளைச் செய்யும். இந்த நல்வினை தீவினைகளே வருவினை. இந்த நல்வினை தீவினை மனம் மொழி மெய்யால் செய்யப்படும். முந்தைய வினையைத் துய்க்கும்போது விருப்பு வெறுப்பு வரும். அப்போது தெரிந்தும் தெரியாமலும் செய்த வினையே வருவினை. வருவினை வித்தினை நிலத்தில் இடுதல் போன்றது. அது செடியாக முளைத்து முன்வினையாகி பின்னர் பூத்தல் காய்த்தல் போன்ற பயனைத் தரும். நுகர்வினையாக இருக்கும்.

உலகத்தில் உணவின் பொருட்டு விளைந்த கனி முதலாயின உணவாகவும், வித்தாகவும் வருவது போல நான் செய்தேன் என்னும் முனைப்பால் செய்யப்படும் முயற்சியும், எக்காலத்திலும் செயல் வகையாய் வினைக்கு ஈடாக வரும். அனுபவம் பயக்கும். அந்த அனுபவத்தை வினையின் பயன் என்று கருதாது நான் செய்தேன் என்னும் கருத்து வகையில் கருதிச் செய்கின்ற போது நல்வினை தீவினை எனப்படும். இது வருவினைப் பயன்களை இப்பிறவியில் அனுபவிக்கும்பொழுது இவை நான் செய்த முன்வினையின் பயன்கள். எனவே நானே அனுபவிக்க வேண்டும் என்று எண்ணி அனுபவித்து தீர்த்துவிட்டால் பின் பிறவிக்கு வருவினை ஏறாது.

அஃதன்றி நல்வினையின் பயனாகிய இன்பத்தை அனுபவிப்பதில் விருப்பமும், தீவினையின் பயனாகிய துன்பத்தை அனுபவிப்பதில் வெறுப்பும் கொள்வோம். ஆயின் அந்த விருப்பும் வெறுப்பும் ஆகிய வருவினை ஏறிப் பிறவியின் பயனாக வரும். அந்த விருப்பு வெறுப்புக்கள் மனத்தின் நினைவில் நிகழ்வன. விருப்பு வெறுப்புக்கள் எல்லாம் ஏற்படுவதுகூட ஊழ்வினையின் பயனாகும் எனக் கருதினால் அது பொருந்தாது. ஏன் என்றால் விருப்பு வெறுப்புக்கள் ஊழ்வினையின் பயனாக ஏற்படுகின்றன என்று கருதாமல் நான் செய்கிறேன் நான் அனுபவிக்கிறேன் என்னும் தன்முனைப்பு மிகுதியாகி அந்த முனைப்பின் பயனே வருவினையாய் வருகிறது என்பர்.

மனிதனுக்கு முன்வினை, நுகர்வினை, வருவினை ஆகிய மூன்றும் உண்டு. முத்தி நிலையினருக்கும் இதுபோல் உண்டு. பெத்தனுக்கு வருவினையிலே வருவினை முன்வினையிலே கட்டுப்பட்டு நுகர்வினை நுகரும்போது யான் எனது என்னும் செருக்கிலே இறைவன் உதவியை மறந்து நுகர்வதால் திரும்பவும்

வருவினை ஏறும். முத்தனுக்கு வருவினையிலே ஏறுகிற வினை முன்வினையிலே கட்டுப்பட்டு நுகர்வினையை நுகரும் போது யான் எனது என்னும் செருக்கு அற்று இறைவனுடைய திருவருளால் மீண்டும் வருவினை ஏறாது.

மூன்று வினையை ஆராயின் பயிர் செய்வது போன்றது வருவினை, பயிர்ப்பயன் கூட்டுவிப்பது போன்றது முன்வினை. கூட்டுவித்ததைச் சிறுக சிறுக அனுபவிப்பது போன்றது நுகர்வினை.

குழந்தை, பசி, பால், தாய் ஒரு உவமை. குழந்தைக்குப் பசி உண்டானவுடன் குழந்தை பசியால் பாலுக்கு அழும். தாய் அதை அறிந்து சங்கிலே பாலை ஊற்றிக் கொடுப்பாள். பசியைத் தீர்ப்பாள். இதுபோலவே குழந்தை போன்ற உயிர் பசி போன்ற ஆணவமல நோயினால் உயிர் வினையை விரும்பியது. தாய் போன்ற இறைவன் அதனை அறிந்து இரக்கம் கொண்டு சங்கு போன்ற உடலை உயிர்க்குக் கொடுத்து வினையை ஊட்டினான். இதனால் உடலை விரும்புவது உயிர். வேண்டிய உடலைக் கொடுப்பவன் இறைவன்.

புளியங்கொட்டை நட்டால் புளியஞ்செடி வளரும். மாங்கொட்டை நட்டால் மாஞ்செடி முளைக்கும். ஒன்று புளிக்கும் ஒன்று இனிக்கும். நட்டதே முளைக்கும். எனவே நல்வினையால் நன்மையும், தீவினையால தீமையும் விளையும். நல்வினை பொன்காப்பு. தீவினை இரும்பு காப்பு. பொன் காப்பானாலும் இரும்பு காப்பானாலும் காப்பு காப்புத்தான். காப்பு பிறவியைத் தரும்.

## 9.16. வினை நீக்கம்

எண்ணற்ற பிறவிகளைத் தருகின்ற இருவினையாகிய பழவினை தீயில் விழுந்த வித்து போல தீட்சைசெய்து வைக்கும் ஆசிரியரது திருநோக்கினால் விரைவில் நீங்கும். ஞானதீட்சையில் உடல் பொருள் ஆவி ஆகிய மூன்றும் ஞான ஆசிரியருக்குத் தானம் செய்யப்பட்டமையால், இந்த உடம்பு இறைவனால் ஏற்றுக் கொள்ளப்பட்ட உடலை இடமாகக் கொண்டு நிகழும் நுகர்வினை எனப்படும் ஊழ்வினையை உடல் உள்ள வரை உயிர் உடலிருந்து அனுபவிக்கும். முன்பிறவிகளில் ஏற்பட்ட ஊழ்வினையை நுகரும் போது வருவினை ஏறும். அதுபோலவே இந்தப் பிறவியிலும் வருவினை தோன்றும். அவ்வாறு இப்பிறவியில் வரும் வினை உண்டாகுமாயின் ஞானாக்னி அதனை அழித்து விடும்.

சீவன் முத்தர்களுக்கு உள்ள ஊழ்வினை அவர்களது உடல் அழியும் போது நீங்கும். இதனை உடல் ஊழாய்க் கழியும் என்பார் சிவஞானமுனிவர். அவர்களுக்கு ஏற்படப் போகும் பரமுத்திக்கு அவர்களது உடலின் முடிவுக்கும் இடையில் ஏற்படும் வினையைத் திருவருளே நீக்கும். சீவன் முத்தர்கள் செய்யும் தொழில்கள் அருள் செயலே அன்றி அவர்களது செயல்கள் அல்ல. ஆகவே அவற்றின் பயன் அவர்களைச் சேராது. உவமை: உழவன் ஒருவன் பயிரிட்டு ஆயிரம் கோட்டை நெல் கண்டு முதல் செய்தான். பின்பு அந்த நெல்லை ஐந்நூறு கோட்டை களஞ்சியத்தில் வைத்தான். உண்பதற்கு முந்நூறு கோட்டை நெல் வைத்துக் கொண்டான். இருநூறு கோட்டை நெல்லை வயலில் விதைத்தான். களஞ்சியத்தில் தீப்பட்டு நெல் அழிந்தது.. உண்பதற்கு வைத்திருந்த நெல்லை உண்டு தீர்த்து விட்டான். வயலில் விதைத்த நெல் தீய்ந்து போயிற்று. இப்போது உழவனிடம் நெல் இருப்பே இல்லை. மேலும் விளைந்துவர பயிரும் இல்லை. மேல்வருமானத்திற்கும் வழி இல்லை. அதுபோலவே உயிருக்குப் பக்குவம் வந்த காலத்து முன்வினை எல்லாம் ஞானாசிரியன் திருநோக்கால் வெந்து போகும். முன்னிருப்பு தீர்ந்து விட்டது. நுகர்வினை எடுத்த உடல்நுகர்ந்து தீர்த்து விட்டது. நுகர்வதற்கு ஒன்றுமில்லை. வருவினை சிவஞானத்தாலே மேல் சாராமல் நீங்கிப் போயிற்று. வருவதற்கு ஒன்றும் இல்லை. ஆக எவ்வகையிலும் வினை இல்லாமல் போய்விட்டது. முன்வினை - களஞ்சிய நெல். நுகர்வினை. உண்டநெல் வருவினை - விதைத்த நெல்.

## 9.16.1. இருவினை ஒப்பு

நல்வினை, தீவினை ஆகிய இரண்டும் இருவினை எனப்படும். எவ்வினை செய்தாலும் அதற்கு விளைவு உண்டு. விளைவு (போகமாகவோ) இன்பநுகர்வாகவோ, பிறவி எடுப்பதாகவோ அமையும். மீண்டும் பிறவி எடுப்பதோ அதன் வாயிலாய் இன்ப நுகர்வு பெறுவதோ மானிடப் பிறவியின் நோக்கம் இல்லை. இறைவன் திருவருளைப் பெற்று மீண்டும் மீண்டும் பிறவாமையைப் பெறுவதே நோக்கம். இருவினை ஒப்பு ஏற்பட்டால் வினையில்லாமையால் விளைவுமில்லை. விளைவு இல்லாமல் மீண்டும் பிறப்போ இறப்போ இன்ப துன்ப நுகர்வோ இருக்காது. எனவே இருவினை ஒப்பு ஏற்பட வேண்டும். இருவினை ஒப்பு என்றால் வினையின் பயனால் நன்மை வருங்கால் அதனை மகிழ்ந்து ஏற்றலும். தீமை வருங்கால் அதனையும் வெறு;க்காமல் ஏற்றலும் ஆம். இன்ப துன்பம் ஆகிய இரண்டையும் ஒன்றாக எண்ணி ஏற்பதாகும். எல்லாம் இறைவன் செயல் என்று உள்ளபடி காணும் இறைவனிடத்து அன்பு உண்டாகும். அப்போது உயிர் எடுத்த உடலுக்காக நுகரும் நுகர்வினைகளும் இறைவன் செயலாகவே நுகரப்படுதலின் அதனால்

வருகின்ற தீமைகள் உயிரைச் சாரா. அதனால் வருவினையும் பழவினையும் ஏறாது. சிந்தாந்த சிகாமணி.[40]

இருவினை ஒப்பினால் மலம் பரிபக்குவம் அடைந்து அசுத்த மாயை அல்லது தளையறிவுடன் உயிருக்கு எத்தகைய தொடர்பும் இருப்பதில்லை. அவன் இறைவனது தியானத்தில ஆழ்கிறான். இறைவன் அவன்மீது அருள் புரிகிறான். இப்படி அருள் கிடைப்பதுதான் சத்திநிபாதம் என்பது, பின்னர் இறைவன் காட்சி கிடைக்கிறது. இறைவன் அவனுக்கு முத்தி தரும் ஞானம் தருகிறான். இந்த ஞானமார்க்கத்தில் இறையருள் பெற்ற நிலையைச் சுத்த நிலை அதாவது அருள் நிலை என்பர். "நானே செய்வாய் பிழைசெய்வாய் நானே இதற்கு நாயகமே" எனக் கருதி வாழும் நிலை இன்பம் விழையாதவன் துன்பம் உறான் என்ற திருக்குறள் விளக்கம் தருகிறது.[41-42]

"மலநோயை நீக்கும் மருந்தாகிய வினைமல நோயோடு ஒன்றாகி அதில் கலந்து மலநோயை வலி ஒடுக்க உயிர் இறைவனைச் சாரச் செய்து சிவமேயாக விளங்கச் செய்யும்" என மனமே நம்பு என்பர்.

"அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமும் செவ்வியான்
கேடும் நினைக்கப் படும்" திருக்குறள்

அவ்விய நெஞ்சத்தால் கேடுஉறவேண்டும். செவ்வியான் ஆக்கம் பெறவேண்டும். இது வினையின் விளைவுக்கு உட்பட்ட நெறி. ஆனால் இவை முரண்பட்டுள்ளது. அதற்குரிய காரணத்தைக் கூறாமல் ஆராயப்படும் என்கிறார் திருவள்ளுவர். எனவே வினையின் விளைவு முரண்படவில்லை. வேறு காரணங்கள் உள்ளன. இப்போதைய நிலையை மட்டும் கணக்கிடுதல் கூடாது. இப்போது அனுபவிக்கும் நுகர்வினை இப்போது செய்த வினையின் விளைவு அல்ல. முன்வினையின் ஒருபகுதியே.இப்போது நுகர்வினையாக வந்து பயன்தருகிறது. இப்போதைய வினையின்படி அது முரணாக இருக்கலாம். இது முன்வினையின் பயனாக இருத்தல் கூடும். எனவே காரணமின்றி காரியமில்லை தத்துவப்படி கேட்டிற்கும் ஆக்கத்திற்கும் காரணம் ஆராயப்படும் என்கிறார். அப்படி காரணத்தை என்னவாய் இருக்கும் என்று நினைத்துப் பார்த்தால் இந்த இருவரின் இன்றைய நிலைக்கு உரிய காரணம் இருக்கும். இந்தப் பிறவியில் செய்த வினையின் பயன் இந்தப் பிறவியிலேயே அனுபவத்திற்கும் வரும். அதற்கு திருட்ட கன்மம் என்பர். எனவே அவ்விய நெஞ்சத்தானுக்கும் செவ்விய நெஞ்சத்தானுக்கும் நிலை திருட்ட கன்மம் அல்ல என்பது

புலனாகிறது. மற்றும் இரு (கன்மம்) வினை உள்ளது. அவை என்ன வினை? அது எப்போது விளைவு தரும். அதில் இவர்களுடைய நிலை என்ன என்று நினைத்துப் பார்க்கலாம். **அதிட்ட வினை**: ஒருபிறவியில் செய்த வினை அடுத்தப் பிறவியில் பக்குவமாகி நுகர்வினையாக வந்து பயன் தரும். இதன்படி பார்த்தால் இவர்களின் நிலைக்குக் காரணம் முன்பிறவி வினைப் பயன் என நினைக்கலாம். மற்றொன்று திருட்டா **திருட்ட வினை**: மேற்கண்ட இருவினைகள் அன்றி இன்ன காலத்தில் பக்குவம் ஆகும். இன்ன காலத்தில் அனுபவத்திற்கு வரும் என்று சொல்லுவதற்கு இடமின்றி நின்று பல காலம் கடந்து பக்குவம் உற்று ஏதாவது ஒரு பிறப்பில் அனுபவத்திற்கு வரும் வினை. இந்த வினைகூட மேற்கண்ட அவ்விய நெஞ்சத்தான் செவ்விய நெஞ்சத்தான் ஆக்கத்திற்கும் கேட்டிற்கும் காரணமாக இருக்கக்கூடும் என நினைக்கலாம்.

இதனை உவமை வாயிலாகப் பார்க்கலாம். தீவெப்பம். சுடும் தொட்ட இடம் புண்ணாகும். கருகும். வெந்தும் போகும். பனிக்கட்டி குளிர்ச்சி. தொட்ட இடம் மரத்துப்போகும். உணர்வு இருக்காது. ஆனால் ஒருவன் தீ கையில் எடுத்தான் சுடவில்லை. இன்னொருத்தன் பனிக்கட்டியைக் கையில் எடுத்தான். மரத்துப்போகவில்லை. காரணம் இருவருடைய கையிலும் கையுறை இருந்தது. அது அவர்களைத் தீயின் சூட்டிலிருந்தும், பனிக்கட்டியின் குளிர்ச்சியிலிருந்தும் காப்பாற்றியது. கையுறை கெடின் இருவேறு உணர்வுகளையும் அவர்கள் பெற்றே தீர்வர். அதுபோன்றே முன்வினையென்னும் கையுறை வலிமையுள்ளவரை சிலருக்கு உதவியாக இருக்கிறது. கையுறை கிழிந்தால், முன்வினைப் பயன் புண்ணியம் தீர்ந்தால் வினைப்பயன் உரியது கிடைக்கும்.

“இப்பிறப்பில் வாழச் செய்த நல்வினை அல்லது வேறு துணை எதுவுமில்லை யென புறநானூறு கூறுகிறது.”[43] சீலம் தாங்கி தானம் செய்பவர் வினைப் பயனாக மகிழ்ச்சியுறுவர் என்கிறது மணிமேகலை.[44]

## 9.16.2. வினையும் பிறவியும்

அறிவை வளர்த்துக் கொள்வதில் உள்ள வேறுபாடு ஒன்றே மறுபிறவிக் கொள்கையை ஐயம் இன்றி உறுதி செய்கிறது. ஒரு பொருளைப் பார்க்கிறோம். அந்தப் பொருள் என்ன வென்று எப்படித் தெரியும். அது என்னவென்று மனத்தில் தேடுகிறோம். காரணம் என்னவெனில், மனத்தில் இறந்தகால அனுபவங்கள் எல்லாம் ஒழுங்காக தனித்தனி அறைகள் போல் வரிசைப்படுத்தப் பட்டுள்ளன. ஒரு புதிய அனுபவம் கிடைக்கும்போது உடனே அதை மனத்தில் உள்ள

பழைய அனுபவங்களோடு ஒப்பிட்டுப் பார்க்கிறது. இதே மாதிரி அனுபவம் ஏற்கனவே இருந்தால் உடனே மனத்தில் இரண்டு அனுபவங்களையும் பொருத்திப் பார்த்து மனநிறைவான முடிவிற்கு வரமுடிகிறது. சான்றாக ஒரு மரத்தைக் காட்டில் பார்க்கும்போது என்ன மரம் என்று மனம் எண்ணத் தோன்றும். மனத்தில் இந்த மரம் முன்னரே பார்த்த மரம்தான் இது மாமரம். இந்த மரத்தின் இலை காய் கனி இப்படித்தான் இருக்கும் என்ற அனுபவம் இப்போது பார்த்த அனுபவம் இந்த இரண்டும் பொருந்துவதால் இது மாமரம் என உறுதியாகச் சொல்லமுடிகிறது.

ஏன்கனவே உள்ள அனுபவங்களோடு புதிய அனுபவத்தைப் பொருத்தவதால் பார்க்கும் பொருள் என்னவென்று தெரிகிறது. புதிய அனுபவம் பழைய அனுபவத்தோடு பொருந்தினால் ஏற்படும் மனநிறைவை அறிவு என்கிறோம். பொருந்தாமையை மனநிறைவு இன்மையை அறியாமை என்கிறோம்.

நாம் செய்யும் ஒவ்வொரு செயலும் நினைக்கும் ஒவ்வோர் எண்ணமும் நம் மனத்தில் ஒரு பதிவை உண்டுபண்ணுகின்றது. இதன் கூட்டுப் பலனே குணம் (நடத்தை) (Character). மரணத்திற்குப்பின் உயிர் போகும் இடத்திற்கு வழி காட்டுவது அம்மனிதனின் கூட்டுப் பலனே. இறப்பின் பின் உடல் அழிக்கப்பட்டு விடுகிறது. ஆனால் மனம் மட்டும் அழிவதில்லை. எண்ணம் மனத்துடன் ஒட்டிக் கொண்டு உள்ளது. எனவே உலகத்தை விட்டுவிட்டு உயிர் போகும்போது அப்பிறவியின் கூட்டுப் பயனை எடுத்துச் செல்கிறது. மனம் நுண்பொருள். அறிவு நுண்பொருள். நுண்பொருளோடு நுண்பொருள் செல்கிறது. உடல் பருப்பொருள். உயிர் பிரிந்தவுடன் தானாக அழியும். அல்லது உறவினர் நண்பர் அழிந்து விடுவர். அந்த உயிரும் உடலும் ஒன்றாக சேர்ந்து இருந்தபோது சேர்த்த அசையும் பொருள்கள் அசையா பொருள் எதுவும் அவ்வுடல் எடுத்துச் செல்ல இயலாது. மேலும் உடலில் போட்டிருந்த பொன் நகையை எடுத்துவிட்டுத்தான் புதைப்பர் அல்லது எரிப்பர். எனவே உடன் வர இயலாது என்பது தெளிவாகப் புரிகிறது. இதைத்தான் திருமூலர் "இறந்த பின்னர் கொண்ட விரதமும் ஞானமும்தான் பின்வரும். பிறவராது" என்கிறார். எனவே போன பிறவியில் எதைக் கொண்டு போனமோ அதை இப்பிறவியில் கொண்டு வருகிறோம். 'கருவில் திருவுடையார்' எனின் முன்பிறவி திரு கருவோடு வருகிறது என புலனாகிறது. மனிதர்களிடையே அறிவு நடத்தையில் வேறுபாடுகள் இருப்பதால் பிறவி உண்டு என முடிவிற்கு வரலாம்.

புண்ணிய பாவத்தால் பிறக்கும் பிறவியை உண்டாக்கி அதனால் செய்யும் இருவினையையும் ஏற்றுக்கொண்டு மீண்டும் அந்த

வினை அனுபவங்களை அனுபவிப்பதற்குக் கலை ஆதிஞானங்களைக் காட்டுவார் இறைவன் என்கிறது[45] போற்றிப் பஃறொடை.

தாய் வயிற்றை விட்டு இவ்வுலகில் குழந்தை பிறந்தவுடன் உடலுக்குக் காரணமான மாயை சண்டமாருதம் போல் அலைத்து மயக்க, முன் கருவில் இருக்கும்போது இப்பிறவித் துன்பத்தை நீக்கிக் கொள்ள வேண்டும் என்று அவ்விடத்திலேயே நிறைந்திருந்த நல்வினைவை மறந்து உயிர் உடம்பின் மயமாய் நல்வினை தீவினைத் துன்பத் தொடர்ச்சியாய்ப் பகுத்தறிவின்றி அக்காலத்தில் உயிர் நுகர்வில் விருப்பம் கொண்டு இருப்பதை அறிந்து பசி தெரியும்படி அறிவித்துக் கதறி அழும்படி இறைவன் செய்வான் என்பர்.

"உயிர்கள் செய்த இருவினைக்கு ஏற்ப ஏழுவகைப் பிறப்பும், எண்பத்து நான்கு நூறாயிரம் வகையில் பிறந்தும் இறந்தும் அந்தந்தப் பிறவிகளில் செய்த வினைப் பயனை நுகர்வர்"[46] என போற்றிப் பஃறொடையும், நெஞ்சுவிடுதூதும்[47] கூறுகின்றன. அவரவர் செய்த வினைகளைக் கணக்கு வைத்து அவரவர் செய்ததை அவரவரே நுகருமாறு செய்வான் இறைவன்[48] என்கிறது போற்றிப்பஃறொடை.

## 9.16.3. பிறவி உண்டு வள்ளல் இராமலிங்கசாமி கருத்து

முன்தேகம் உண்டென்பது எப்படி யென்னில்: ஒரு வீட்டில் குடிக்கூலி கொடுத்துக் குடித்தனஞ் செய்ய வந்த சமுசாரி அதற்குமுன் வேறொரு வீட்டில் குடிக்கூலி கொடுத்துக் குடித்தனஞ் செய்திருந்தானல்லது வீடில்லாமல் குடித்தனஞ் செய்யமாட்டானென்றும், இப்போது வந்த வீட்டிலும் கலகம் நேரிட்டால் பின்னும் வேறொரு வீட்டில் குடிபோவான் என்றும் அறிவது போல் இந்தத் தேகத்தில் ஆகாரக்கூலி கொடுத்துக் குடியிருக்க வந்த சீவன் இதற்கு முன்னும் வேறொரு தேகத்தில் அந்தக் கூலியைக் கொடுத்துச் சீவித்திருந்தானல்லது தேகமில்லாமல் சீவித்திருக்க மாட்டானென்றும், இந்தத் தேகத்திலும் கலகம் நேரிட்டால் பின்னும் வேறொரு தேகத்தில் குடிபோவானென்றும் துணியவேண்டும். ஆதலால், முன்னும் பின்னும் சீவர்களுக்குத் தேகங்கள் நேரிடும் என்றறிய வேண்டும்.

சீவர்கள் முன்தேகத்தில் செய்த பாவகர்மங்கள் இந்தத் தேகத்திலும் வருமென்பது எப்படியென்னில்: ஒரு சமுசாரி முன் குடித்தனஞ் செய்திருந்த வீட்டில் தன் தலைவன் கட்டளைப்படி நடவாமல் துன்மார்க்கர்களை வருவித்து அவர்களோடு கூடிப் பழகியிருந்தானால் அந்தச் சமுசாரி அந்த வீட்டை விட்டு வேறொரு வீட்டில் குடிவந்த காலத்திலும் அந்தத் துன்மார்க்கர்கள் இந்த

வீட்டிலும் வந்து அவனுடன் பழக்கஞ் செய்வார்கள். அதுபோல், ஒருசீவன் முன்குடியிருந்த தேகத்தில் கடவுள் கட்டளைப்படி நடவாமல் துன்மார்க்கத்தாற் பாவ கர்மங்களை விரும்பிச் செய்திருந்தானானால், அந்தச் சீவன் வேறொரு தேகத்தில் வந்தபோதும் அந்தப் பாவ கர்மங்கள் இப்போது வந்த தேகத்திலும் வந்து அந்தச் சீவனைச் சேருமென்றறிய வேண்டும்.

## 9. வினை அடிக்குறிப்புக்கள்

1. "இருவினையென்ப தென்னைகொல் லருளிய
மனமே காயம் வாக்கெனும் மூன்றின்இதமே
யகிதம் எனுமிவை"
இருபா இருபஃது: 1

2. "நில னே காலம் கருவி என்றா
இன்னதற்கு இது பயன்ஆக என்னும்
அன்ன மரபின் இரண்டொடுத் தொகைஇ
ஆயெட்டுடன்ப தொழில்முதல் நிலை யே"
தொல்காப்பியம்-சொல்லதிகாரம்-வேற்றுமை மயங்கியல்

3. "கருமமல மல்லக கருதுங்கால் ஈசன்
தருமமே யாகத் தருமாற் - பொருமலத்தை
ஒட்டி யுலிருக் குறும்அன்பே ஆக்கியரற் (கு)
ஊட்டுதற்கே நிற்குமென வோர்" அனுபோக வெண்பா 142.

4. " . . . . . . . . . . . . . . . . . . . கருத்தனடி
காட்டுதற்கே யுற்ற கருவி கருமமரற்(கு)
ஊட்டுதற்கே யாகுமென வோர். அனுபோக வெண்பா 140.

5. " . . . . . . . . . . . . . . . . . . . . . . சித்தமலம்
ஓட்டுதற்கே யாமாலுறுங் ஈசனுக்குங்
கூட்டுதற்கே யாமாம் என்றோர். அனுபோக வெண்பா 138.

6. "வருத்துத் தனுவினை யோரிடமாக மனஞ்சுருக்கி
இருத்த வரும்அரு ளென்மனம் நோக்கி" நிட்டை விளக்கம் 4.

7. நீர்வழிப் படூஉம் புணை போல ஆருயிர்
முறைவழிப் படூஉம் என்பது திற வோர் புறநானூறு 132.

8. இருத்தலும், கிடத்தலும் இருவினை இயற்றுதலும்
விடுத்தலும் பரநிந்தை மேவல்என் றெடுத்த
அறுவகை குணனும் கருமத் தருளினன். இருபா இருபஃது 8.

9. "இம்மை செய்தது மறுமைக்காம் என்னும் அறவிலை
வணிகன் ஆய் அலன்."

10. "நோக்கியே சொல்லுகிறேன் களவின் செய் கை
நுண்ணறிவாள் கண்டகனா சொல்வேன் கோ
தாக்கியே பிராணனது யிட விலாவில்
தானியிறங்கி மலச்சலத்தைத் தொடும் போதெல்லாம்
ஆக்கிய தோர் பித்தநீர் கீழிறங்கும்
அது வாயில் வந்தவுடன் நிறைவு தப்பும்
ஏக்கியயே நடுநினைவை மாற்றிக் கண்ணை
யிருக்கி விடுமேயறிவு மாறும் சொல்லே"

காகபுஜண்டர் சித்தர் பாடல் 30.

"செல்லுமே வலதுபுற விலாவின் கீழே
சொன்ன அறி வது விறங்கில் மலமே கூடும்.
வெல்லுமே தன்னறிவை விழுங்கிக் கொள்ளும்
மேலெழுந்த நினைவெல்லாம் கனவு மாகும்.
புல்லுமே நினைவிலுள்ள மற்றதெல்லாம்
புகலுமே சடமறந்து காதுங் கேளா
மல்லுமே போாபு ரிந்த விதமே காண
வாத பித்த சிலேத்துமத்தைப் போக்கு வீரே
காகபுஜண்டர் பெரும் நுல் காவியம். பாடல் 30, 31.

11. " . . . . . . . . . . . . . . . . . . . . . . . . வள்ளலவன்
செய்பவர்செய்திப் பயன்விளைக்குஞ் செய்யே போல
செய்வன் செயல் அணையா சென்று."

சிவஞானபோத வெண்பா

12. "முந்தனுடைய செயலென்று முடித்தொழுக வினைகள்
மூளா அங் காளாகி மீளான் அன்றே" சி.சித்தியார் 305.

"இவனுலகில் இதமகிதம் செய்த வெல்லாம்
இதமகிதம் இவனுக்குச் செய் தார்பால் இயையும்"

சி.சித்தியார் 303.

13. "கடிய பிறப்பால் பட்டபுண்ணும் இருவினையும்
போய்அகல வண்ணமலர் கைதலத்தை வைத்து
அருளி கல் ஆய நெஞ்சுருக்கி" போற்றிப் பஃறொடை

14. "ஏன்றவினை உடலோடு ஏகும் இடை யேறும் வினை
தோன்றில் அருளொடு சுடும்" திருவருட்பயன்

15. "சார்ந்தாரைக் காத்தல் தலைவர்" சிவ'ானபோதம்

16. "அவாவென்ப வெல்லா உயிர்க்கும் எஞ்ஞான்றும்
தவாஅப் பிறப்பீனும் வித்து" திருக்குறள் 361.

17. இனிய உளவாக இன்னாத க்கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று. திருக்குறள்

18. "உரனென்னும் தோட்டியான் ஓரைந்தும் காப்பான்
வரனென்னும் வைப்பிற் கோர்வித்து" திருக்குறள் 24.

19. "இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர்நாண
நன்னயம் செய்து விடல்" திருக்குறள் 314

20. "பகுத்துஉண்டு பல்உயிர் ஓம்புதல் நூலோர்
தொகுத்தவற்றுள் எல்லாம் தலை" திருக்குறள் 322.

21. "பிறன் மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்கு
அறன்ஒன்றோ ஆன்ற ஒழுக்கு" திருக்குறள் 148.

22. "ஒழுக்கம், அன்பு, அருள், ஆசாரம்,
உப சாரம், உறகு, சீலம்,
வழுக்கு இலாத் தவம், தானங்கள்
வந்தித்தல், வணங்கள் வாய்மை
அழுக்கு இலாத் துறவு அடக்கம்
அறிவொடு அர்ச்சித்தல் ஆதி
இழுக்கு இலா அறங்கள் ஆனால்
இரங்கு வான் பணி அறங்கள்"
சிவஞானசித்தியார் சுபக்கம் 113.

23. "அவாஎன்ப எல்லா உயிர்க்கும்எஞ் ஞான்றும்
தவாஅப் பிறப்புஈனும் வித்து" திருக்குறள் 361.

24. "இருவினைச் செயல்காண் இம்மை
இரும்பொருள் இன்பம் வேண்டி
வருவினை செய்யும் காலை
மடிவரும் . . . . . . . . . ." சிவஞானசித்தியார் சுபக்கம் 98

25. "அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமும் செவ்வியான்
கேடும் நினைக்கப் படும்" திருக்குறள் 169.

26. "உடல் செயல் கன்மம் இந்த
உடல்வந்த வாறுஏது என்னில்,
விடப்படும் முன் உடம்பின்
வினை இந்த உடல் விளைக்கும்
தொடர்ச்சியால் ஒன்றுக்கு ஒன்று
தொன்று தொட்டு அநாதி; வித்தின்
இடத்தின் மரம்; மரத்தின்
வித்தும் வந்து இயையுமே போல்"
சிவ.சித்தியார் சுபக்கம் 100

27. "ஆகூழால் தோன்றும் அசைவுஇன்மை கைப்பொருள்
போகூழால் தோன்றும் மடி" திருக்குறள் 371.

28. "நல்லவை எல்லாஅம் தீயவாம் தீயவும்
நல்லவாம் செல்வம் செயற்கு" திருக்குறள் 375.

29. "ஊழின் பெருவலியா உள மற்று ஒன்று
சூழினும் தான்முந் துறும்" *திருக்குறள் 380.*

30. "தெய்வத்தால் ஆகாது எனினும் முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும்" *திருக்குறள் 619.*

31. "இட்ட வித்தின் எதிர்வந் தெய்தி
ஒட்டுங்காலை ஒழிக்கவும் ஒண்ணாது" *சிலப்பதிகாரம்*

32. a) "பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று" *திருக்குறள் 390*

b) "எற்றென்று இரங்குவ செய்யற்க செய்வானேல்
மற்று அன்ன செய்யாமை நன்று" *திருக்குறள்*

33. "கோவலன் செய்த கருமகழிவு - பார்ப்பனிக்குச் செய்தது
புண்ணியம் பாவம் அட்டியும்" பட்டினப்பாலை

34. "தீவினை செய்தல் கெடுதல் நிழல்தன்னை
வீயாது அடியுறைந்தற்று" *திருக்குறள்*

35. "மிகினும் குறையினும் நோய்செய்யும் நூலோர்
வளிமுதலா எண்ணிய மூன்று" *திருக்குறள் 941.*

36. " . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
வளியுண் புளிப்பும் பித்துண் கைப்பும்
ஐயுரை மதுரமும் அல்லன பிறவும்
நாச்சுவை யறிய நல்கின" சிதம்பரமும்மணிக்கோவை.

37. "நுண்ணிய நூற்பல கற்பினும் மற்றுந்தன்
உண்மை அறிவே மிகும்" *திருக்குறள் 372.*

38. "அருள் இல்லார்க்கு அவ்வுலகம் இல்லை
பொருள்இல்லார்க்கு
இவ்வுலகம் இல்லாகி யாங்கு" *திருக்குறள் 241*

39. "இடுக்கண் வருங்கால் நகுக அதனை
அடுத்தூர்வது அஃதொப்பது இல்" *திருக்குறள் 621.*

40. "இருவினையு மொத்தா விசைந்தவரற் கன்பு
மருவு தலா லுண்டோ - உருவினுக்கங்(கு)
ஒத்த பிராரர்த்தமாற் கூட்டுதலாற் றீயவினை
தொத் துதலே யில்லையெனச் சொல்" *சித்தாந்தசிகாமணி 31.*

41. "நன்றாங்கால் நல்லாக் காண்பவன் அன்றங்கால்
அல்லல் படுவது ஏன்" *திருக்குறள் 379*

42. "இன்பம் விழையான் இடும்பை இயல்புஎன்பான்
துன்பம் உறுதல் இலன்" *திருக்குறள் 628*

43. "இரவலர்க்கு அருங்கலம் அருகாது வீசி
வாழ்தல் வேண்டும் இவண் வரைந்த வைகல்

வாழச் செய்த நல்வினை அல்லது
ஆழுங்காலை புணைபிறிது இல்லை" புறநானூறு 367.

44. "சீலம் தாங்கி தானம் தலை சிறந்து
மேவிய மகிழ்ச்சி வினைப்பயன் உண்டுவர்" மணிமேகலை

45. ". . . . . . . . . . . . . . . . . . . . . . . . . உள் நாடிக்
கட்புல னால் காணார்தம் கைக்கொடுத்த கோலேபோல்
பொறபுடைய மாயைப் புணர்ப்பின்கண் - முற்பால்
தனுகரண மும்புவன மும்தந் தவற்றால்
மனமுதலால் வந்தவிகா ரத்தால் - விரையிரண்டும்
காட்டி அதனாற் பிறபாக்கிக் கைக் கொள்ளும்
மீட்டறிவு காட்டும் வினை போற்றி" போற்றிப் பஃறொடை.

46. " . . . . . . . . . . . . . . . . . . . . நல்வினைக்கண்
வாணாளின் மாலாய் அயனாகி - நீணாகர்
வானாடர் கோ முதலாய் வந்த பெரும் பதத்து
நாணா விதத்தால் நலம்பெறும் நாள்"
போற்றிப் பஃறொடை 29:53

47. ". . . . . . . . . . . . . . . . . . . . . . . ஏற்றபிறப்
பெல்லாம் பிறந்தும் இறந்தும் இருவினையின்
பொல்லாங்குத் துய்க்கும் பொறியிலியேன்"
நெஞ்சுவிடுதூது 11.

48. "சொல் காலை முட்டாமல் செய்வினைக்கும்
முன்செய்த வினைக்கும் செலவு பட்டோலை
தீட்டும்படி போற்றி . . . . . ." போற்றிப் பஃறொடை

## 9.17. திரோதாயி

திரோதாயி ஒருமலம். சிவப்பிரகாசம், 20.

திரோதான சத்தி எனப்படும் மறைப்பாற்றல் உயிரோடு நின்று தன் முனைப்பு பக்குவம் அடையும் படி உயிர்க்குத் தேவையான வழி முறைகளைச் செய்கிறது. எனவே திரோதான சக்தியைத் திரோதான மலம் என்று வழக்கில் கூறுவர். மறைப்பாற்றலே உயிருக்குப்பக்குவம் வாய்க்கும் பொழுது அருள் ஆற்றலாக மாறும். இது இடையில் வந்த மலம். எனவே ஆகந்துகமலம் என்பர்.

தன் முனைப்பு மலம் உயிர்களை மறைக்கும் போது திரோதான சத்தியும் தன் முனைப்பு மலத்திற்கு உதவியாக நின்று உயிர்களை மறைக்கும். தன் முனைப்பு மலத்தின் ஆற்றல் சட ஆற்றல். ஆதலின் அதனை இயக்கும் பொருட்டு திரோதான சத்தி தன்முனைப்பிற்கு வலிமை தந்து நிற்கிறது. தன் முனைப்பு மறைப்பு

உயிரை விட்டு நீங்குவதற்காக திரோதான சத்தி கலை முதலானவற்றைத் தோற்றுவித்தும் வினைகளை உயிர்கள் நுகரும்படி செய்வித்தும் உயிருக்குப் பக்குவம் உண்டாக்குகின்றது. உயிர்களின் பிறப்பு நிலையில் இவ்வாறெல்லாம் உதவி செய்து வரும் திரோதான சத்தி தானே திருவருளாய் மாறி நின்று உயிருக்கு வீடு பேற்றினைத் தருகின்றது. எனவே திரோதான சத்தி என்பர். இதுவே ஐந்தொழிலும் செய்கிறது. அந்நிலையில் வியாபித்து நிற்கும். அதற்கேற்ப விருப்ப ஆற்றல் (இச்சாசத்தி) அறிவாற்றல் (ஞான சத்தி) செயலாற்றல் (கிரியா சத்தி ) எனப்படும்.

தன்முனைப்பு மலம் பரிபாகம் உயிர்க்கு ஏற்பட்ட பிறகு இந்த திரோதான சத்தி அருள் சத்தியாய் மாறிச் சிவனின் திருவடியை உயிர் அடையும்படி திருவருள் புரிகிறது.

இறைவன் திருவருள் அடையும் வழி யாதெனின் தன்முனைப்பு மலம் பரிபாகம் அடையும்படி செய்ய வேண்டும். மறைப்பாற்றலாய் இருக்கும் திரோதான சத்தி அருள் ஆற்றலாய் மாறும், உயிர் இறைவன் திருவடியை அடைய திருவருள் புரியும். எனவே திருவருளை திரோதான சத்தி அளிக்க தன்முனைப்பு மல பரிபாகம் ஆகும்படி செய்ய வேண்டும் என்பது தெளிவு.

பொருந்திய மும்மலங்களையும் தத்தம் தொழில்களைச் செய்ய ஏவும் சிவசத்தியை மறைப்பைச் செய்யும் திரோதாயி மலம் என்பர். திரோதாயி சத்தி உயிரின் வினைக்கு ஏற்றவாறு உயிரின் அறிவை மறைத்து நிற்கும். எனவே திரோதாயி சத்தியை மறைக்கும் தொழில் ஒப்புமையால் தன் முனைப்பு மலத்தில் அடக்குவர். எனவே இது ஒரு தனி மலமல்ல எனலாம்.

திரோதான சத்தியானது மருட்காலத்தில் மருளாயும், அருள் காலத்தில் அருளாயும் நிற்கும்.

"பாகமாம் வகை நின்று திரோதான சத்தி
பண்ணுதலான் மலமெனவும் பகர்வர்"

"மலம் மாயை கன்மம் மாயே
யம் திரோதாயி மன்னிச்" சி.சித்தி. 178

"முற்சினமருவு திரோதாயி கருணை யாகித்
திருந்தியகத் திநிபாதம் திகழும்."

திரோதானம் ஆகிய மறைப்பு ஆவது இருவினை ஒப்புவரச்செய்து மலங்களைத் தெளித்தல் ஆகும். அஃதாவது அனுபவிக்க வேண்டிய குற்றம் தோன்றாது இருக்கும்படி மறைத்து அனுபவிக்கச் செய்து மலத்தைத் தேய்த்தல் ஆகும். சித்தி 51.

## 9.17.1 திரோதானம் பற்றி போஜ தேவர் கருத்து

மலம், கர்மம். மாயை இந்தப் பாசங்கள் உயிரற்றவையாகையால் தாமாக முன்வந்து உயிரைக் கட்டுப்படுத்த முடியாது. எனவே பரமன் அவற்றினிடம் தன் சத்தியை ஆவேசித்து (புகச்செய்து) அவற்றைச் செயல்படுத்தி வைக்கிறான். இந்தப் பரமசத்தியின் தூண்டுதலினால் இந்தப் பாசங்கள் உயிரினிடமுள்ள அறிவையும் பார்வையையும் மறைக்கிற பரமனுடைய சத்தியும் ஒருவழியில் நோக்கினால் பாசமாகவே உள்ளது. எனவே சித்தாந்த சைவத்தில் பாசம் நான்கு என்றனர். தூய மாயையும் (உலகவடிவும்) சூக்கும மாயையும் சேர்ந்து முடிவான ஒரே மாயை தான் ஜீவனைக் கட்டுகிறது. எனவே நான்கே என்று கொள்வதுதான் பொருத்தம் என்றார். தத்துவப்பிரகாசம்1-18.

## 9.18. மாயேயம்

"மாயையின் காரியத்தை மாயேய மலம் அது என்றும்" சிவஞான சித்தியார் சுபக்கம் பாடல் 177, இன்பதுன்ப விளைவுகளுக்கு எல்லாம் இடமாக இருந்து உயிரின் அறிவு விருப்பம் செயல்களை ஒன்றுபடுத்தும். இந்த மாயையின் காரியம் ஆகிய உடல், கருவி, உலகம், நுகர்பொருள் மாயேயமலம் என்பர் இந்த இருமலங்களுள் மாயா காரியம் மாயையில் அடங்கும். ஆயினும் பந்தம் படுத்தும் வேற்றுமை பற்றி வேறாகக் கருதப்படுகிறது. இந்த வேற்றுமையாவது மாயை உயிரின் அறிவோடு கூடி அவ்வறிவை மயக்கும். மாயா காரியம் மயக்கத்திற்கு முன்னிலைப் பொருளாய் இருக்கும். இவையே வேற்றுமையாகக் கருதப்படுகிறது.

ஐந்து மலங்களையும் மும்மலங்களில் அடக்கிக் கூறும் போது மாயேயம் மலத்தை அடக்குவர். மாயை வேறு மாயேயம் வேறாக எண்ணப்பட்டதற்குக் காரணம் மாயை உயிரின் அறிவோடு சேர்ந்து அவ்வறிவை மயக்கும். மாயேயம் அந்த மயக்கத்திற்கு முன்னிலைப்பொருளாய் இருக்கும் என்பதால் தான்.

"தேகம் உறு கரணமொரு புவன போகச்
செயல் ஆகும் மாமாயைத் திரட்சி ஒன்று. . ."
சிவப்பிரகாசம் பாடல். 32

மாயேயத்தால் பிறப்பு உண்டு. தன் முனைப்பு, வினை, மாயை, மாயேயம், திரோதாயி ஆகிய ஐந்து மலங்களும் உயிருடன் பொருந்தி அந்த மலங்களுக்கு ஏற்ப இறைவன் ஆணையால் உயிர் இறப்பு பிறப்பு அடையும் நிலை, இல்லாத கொள்ளி வட்டமும் காற்றாடியும் போல் கணப்பொழுதில் பலமுறை சுழற்சி உற்றுப்பிறப்பு இறப்பு பொருந்தும். மண்ணுலகம். சுவர்க்கம், நிரையம் ஆகியவற்றில் போக்கு வரவு உடையதாய் உயிர் திரியும்.

"மலம்,மாயை,கன்மம், மாயே
யம், திரோதாயி மன்னிச்
சலம் ஆகும் பிறப்பு இறப்பில்
தங்கி இத் தரைகீழ் மேலும்
நிலையாத கொள்ளி வட்டம்
கறங்கு என நிமிடத்தின் கண்" சித்தியார் 178.

உடல், கருவி, உலகம், நுகர் பொருள்கள் தான் வினைபுரிவதும். வினைபுரிய காரணமாக இருப்பதும் இவை இல்லையெனில் வினைபுரிதலும் இல்லை, அதனால் இறப்பும் பிறப்பும் இல்லை. எனவே இவ்விரண்டிற்கு மாயேயமே காரணம் என்றாகிறது.

காரண மாயையே மாயை என்றும், காரிய மாயையே மாயேயம் என்றும் கூறுவர்.

9.19. மலங்கள் உண்மையில் உயிருக்கு மலமே அல்ல. மற்றும் உயிருக்கு உடையனவும் அல்ல. இம்மூன்றும் இறைவனுக்குரியது. இறைவனை மலமற்றவன், அமலன், நிமலன் என்றெல்லாம் அழைத்துவிட்டு இம்மூன்றும் இறைவனுக்கு உரித்தானது என்று கூறுவது எவ்வாறு பொருந்தும் என வினா எழுதல் இயல்பு. இறைவனுக்கு மாட்சிமை உண்டாகவே இம்மூன்றும் இறைவனுக்கு உரித்தானதாகக் கூறப்படுகிறது. எப்படியெனின் மலத்தினை நீக்கி உயிர்க்குப் பேரின்பமாகிய வீடுபேற்றினை மகிழ்ந்து அருள கருதி தன் அருளால் உயிர்க்கு உடம்பு முதலானவற்றைத் தருதற்கும், தன் முனைப்பு மலத்தைப்பக்குவப்படுத்துவதற்கும் தூய்மையிலா படைப்புத் தோற்றம் (அசுத்தமாயை), தூய படைப்புத் தோற்றம் (சுத்தமாயை), மறைப்பாற்றல் (திரோதனஉத்தி) இறைவனுக்குரியதாக எண்ணப்பட்டன.

ஆடையிலுள்ள அழுக்கினைப் போக்குவதற்காக வண்ணான் உவர்மண் முதலிய அழக்குப் பொருள்கொண்டு தூய்மையாக்குவது போல இறைவன் செயல் அமைகிறது. மற்றும் அழுக்கு என்பது

இருக்கும் இடத்தையும் செயல்படும் விதத்தையும் பொறுத்ததே. மண் நிலத்தின்பகுதி இதுவே மண்ணுலகு. இந்த மண்ணில் தான் உயிரினங்கள் தோன்றுகின்றன. உயிரினங்களுக்குத் தேவையான உணவு மற்றும் பல பொருள்களும் தோன்றுகின்றன. எனவே இந்த மண் மதிப்புடையது. போற்றுதலுக்கு உரியது. ஆனால் இந்த மண் நீருடன் கூடி வெள்ளை ஆடையில் பட்டு நீங்காது கறையாக, அழுக்காக அமைந்துவிடுவதுமுண்டு. இப்போது இந்த மண் அழுக்கு (அழுக்கு என்றால் மலம்). இந்த அழுக்குப் போக்கப்பட வேண்டிய ஒன்று. அதுபோல உயிருக்கு மலமாகக் கருதப்படும் இம்மூன்றும் இறைவனுக்கு மாட்சியமையுடையதாகக் கருதப்படுகிறது. எனவே இறைவனுக்கு உடைமைப் பொருளாகக் கருதப்படுவது உயிருக்கு மலமாகக் கருதப்படுவதற்குக் காரணம் அந்தப்பொருளின் ஆற்றலும் செயல்பாடுமே காரணமாகிறது.

எனவே தளை உயிருக்கு முதலில் ஒன்றாக இணைந்து இருந்து பின்னர் ஒவ்வொன்றாகக் காரண பற்றிக்கூடி மூன்று என்றும் ஐந்தும் என்றும் கூறும்படி அமைகிறது.

9.20.

| சமயம் | இறை | உயிர் | தளை ஆ.மா.வினை |
|---|---|---|---|
| 1) புறப்புறச்சமயம் | | | |
| 1. உலகாயதம் சாருவாகம் | இல்லை | உடல், பொறி, மூச்சு, அகக்கருவி | இல்லை |
| 2. மாத்தியமிகர் புத்தம் | இல்லை | அறிவு | வினை, பிறவி உண்டு. சுவர்க்கம், நரகம் உண்டு. |
| 3. யோகசாரர் புத்தம் | இல்லை | அறிவு | ” |
| 4. சௌந்திராந்திகர் புத்தம் | இல்லை | அறிவு | ” |
| 5. வைபாடிகர் புத்தம் | இல்லை | அறிவு தாவரத்திற்கு இல்லை | ” |
| 6. ஆருகதம் சமணம் | இல்லை அருகன் சமம் | உண்டு. நாதி அசீவன் உயிரற்றது | தளை எட்டு |
| 2) புறச்சமயம் | | | |
| 1. தருக்கம் 1. அ. வைசேடிகம் 1. ஆ. நையாயினர் நியாயநூல் | உண்டு | உண்டு 4. பரமாணுவின் காலம் திசை உயிர் மனம் நிலையானது | |
| | உண்டு | உண்டு | |
| 2. மீமாம்சை | உண்டு இல்லை பல இறைவன் | உண்டு | பந்தம், வினை உண்டு |

இதன் பிரிவுகள் : மாயா வாதம், பாற்கரிய வாதம், கீரிடா பிரம வாதம், ஏகான்மா வாதம், சப்தப் பிரமவாதம், ஏகான்மாவாதம் ஒரு உயிர் உண்டு.

| | | | |
|---|---|---|---|
| மாயாவாதம் | உண்டு | உள்பொருள் ஒன்று | பல கருத்து |
| பாற்கரிய வாதம் | இறைவன் ஒன்றே | ” | ” |
| கீரிடா பிரம வாதம் | ” | ” | ” |
| சப்தப் பிரம வாதம் | ” | ” | ” |
| 3. சாங்கியம் | இல்லை | புருடன் உண்டு மூலப்பகுதி உயிர் | -- |
| 4. யோகம் | உண்டு | உண்டு | தன்முனைப்பு நீங்க வேண்டும் |
| 5. பாஞ்சாந்திரம் வைணவம் | உண்டு | உண்டு | உண்டு |
| அகப்புறச்சமயம் | | | |
| 1. பாசுபதம் | உண்டு | உண்டு | மாயை, வினை உண்டு |
| 2. மாவிரதம் | ” | ” | ” |
| 3. காபாலம் | ” | ” | ” |
| 4. வாமம் | ” | ” | ” |
| 5. ஐக்கிய வாத சைவம் | ” | ” | ” |
| 6. வைரவம் | ” | ” | |
| 4. அகச்சமயம் | | | |
| 1. பாடாணவாதம் | உண்டு | உண்டு | தளை மூன்று |
| 2. பேதவாத சைவம் | ” | ” | ” |
| 3. சிவசமவாத சைவம் | ” | ” | ” |
| 4. சிவசாங்கிராந்த வாத சைவம் | ” | ” | ” |
| 5. ஈசுவர அவிகார வாத சைவம் | ” | ” | ” |
| 6. சிவாத்துவித சைவம் | ஏகான்மாவாதி. ஆணவம் உண்டு. முப்பொருள் கொள்கை இல்லை. | | |

# 10. திருவருள் அடையும் வழி

## 10.1. உயிருக்கு அடிப்படை அருளே

உயிர்கள் இறைவன் திருவருளால் தான் பிறப்பு எடுத்து, முன்வினைப்பயன் துய்க்கத்தக்க உடல் பெற்று, உலகமும் உலகப்பொருள்களும் கொடுத்து அவற்றைத் துய்க்க கருவிகளையும் கொடுத்துள்ளார். இது இறைவனின் திருவருள் என அறிந்து அவன் திருவடி ஞானம் பெற வேண்டும் என எண்ணவேண்டும். இப்பிறவிக்கே திருவருள்தான் தேவை என்பதை உயிர்களின் அறியாமை மறைக்கிறது. எப்படியெனின் பூமியில் போக்குவரத்துச் செய்பவர்கள் போக்குவரத்திற்குப் பூமியே காரணம் என்று அறியாமல் தமக்குத் தாமே என்று எண்ணும் அறியாமையைப் போன்றது. எனவே உயிர்கள் அருளே அடிப்படை என்பதை உணர வேண்டும் (சான்று. 36 சிவ)

மலை மீது நின்று கொண்டு மலை எங்கே உள்ளது என்று தேடுபவர், நிலத்தின் மீது நின்று கொண்டு நிலம் எங்கேயுள்ளது என்று தேடுபவர், தான் உலாவுகின்ற இடம் விண், விண்ணில் உலாவி கொண்டே விண் எங்கே உள்ளது என்று தேடுபவர், அறியாமை வயப்பட்டவர். இருப்பிடத்திலிருந்து கொண்டே இருப்பிடத்தைத் தேடினால் எப்படி கிடைக்கும். உயிர்கள் ஞானமாகிய அருளிலே இருந்து கொண்டு அருளைத்தேட வழி கேட்டால் எப்படி வழி காட்ட முடியும். நமக்கு உதவுகின்ற இறைவன் திருவருளை எங்கும் தேட வேண்டாம் இங்கேயே உள்ளது. அவர் அவரிடமே உள்ளது. ஆனால் அதை அறிய முடியாமல் தன்முனைப்பு இருள் மலம் மறைக்கின்றது. மறைக்கும் மாய இருளைப் போக்கவேண்டும்.

## 10.2 இறைவன் பேரருள் உடையவன்

இப்பிறவியில் ஏற்படுகின்ற இன்பத்துன்பங்களை அனுபவிக்கச்செய்கின்றார். இன்பத்துன்பத்திற்குக் காரணம் இரு வினைகளே. அனுபவத்தின் மூலம் இறைவன் இருவினைகளை நீக்குகின்றான். இதனால் இறைவன் பேரருள் உடையவன் (சித்தியார் 269) இறைவன் பேரருள் உடையவன் என்பதை உயிர் தான் அறியவில்லை. உயிர்கள் பேரருளை அறியாமல் இருப்பதற்குக் காரணம் உயிரினிடத்துள்ள தன் முனைப்பு மலத்தின் காரிய மாகிய அறியாமையே, எனவே அறியாமையை நீக்கினால் திருவருளை அடையலாம். உயிர் அறியாமையால் எப்படி உள்ளது என்றால்

தனக்குப் பின்னால் தனக்குத் துணையாக வருபவனை அறியாத வழிப் போக்கன் போலவும் தாம் காணும் காட்சி என்னது என்று அறிய துணையாக இருக்கும் உயிரை அறியாத ஐம்பொறிகளைப் போலவும், தனக்குத் துணையாக நிற்கும் ஞானமாகிய அருளை உயிர் அறிவதில்லை. உயிர்கள் ஞானம் பெற்றால் ஞானமாகிய திருவருள் பற்றி உணரலாம்.

## 10.3. இறைவன் திருவருளைச் சார்ந்து நிற்றல்

உயிர்கள் பிறவி நிலையில் ஞானம் வெளிப்படாமல் மறைந்து நிற்கும் நல்வினை தீவினை ஆகியவற்றின் உண்மையை அறிந்து, இறைவன் திருவருள் அடையும் வழியை அடைக்கும் தடைகள் என்பதை நன்குணர்ந்து அவற்றிலிருந்து நீங்கி நின்றால் உயிர் பக்குவம் பெறும். அந்தப்பக்குவம் உடைய உயிரினிடத்தில் ஞானம் வெளிப்பட்டு ஒளி மயமாய் நிற்கும். இந்த ஒளியில் தன்முனைப்பு மலம் இருள் மறைந்துவிடும். தடை நீங்கியதால் உயிர் இறைவன் திருவருளை அடையலாம் (". . . உயிரின் மேவும் அருளினில் ஒளி நிற்கும். . ." சிவப். . .69.)

## 10.4. ஞானத்தால் வரும் பயன் மூன்று

ஞானத்தால் வரும் பயன் மூன்று. 1. உயிர்க்காட்சி (ஆன்ம தரிசனம்) 2. உயிர்த்தூய்மை (ஆன்ம சத்தி) 3. உயிரின் சிவப்பேறு (ஆன்ம லாபம்) உயிர்க்காட்சி, இறைவன் திருவருளால் உயிர் ஞானத்தை அறியும், அப்போது தன்னுடைய அறிவுக்கருவிகளோடு கூடி அறிதலும் அறியும், தன் இயல்பையும் அறியும் உயிர் இறைவனோடு கூடி நின்று காண்பதே உயிர்க்காட்சி, உயிர்களுடைய முப்பத்தாறு கருவிகளின் இயல்பை ஆராய்ந்தால் அக்கருவிகள் உயிருக்கு வேறான பொருள் எனத்தெரிய வரும். அவை அறிவற்றன எனவும் தெரியவரும். இவ்வாறு உயிரின் அறிவில் தோன்றுவதே இறைஞானம். உலகப் பற்று முழுதும் நீங்கும்போது உயிர் தற்போத செயல் இன்றி இறைவன் திருவருளையே ஆதாரமாகக் கொண்டு அருளில் அடங்கி அவ்வருளே தானாகி நிற்றலே உயிர்த்தூய்மை. உயிரிடத்துள்ள மலம் நீங்கிய தால் உயிர் தூய்மை பெற்றது எனலாம் உயிர்ப்பேறு வீடு பேறு அடைதல்.

## 10.5. கருவிகளை ஒடுக்கும் வழி

உயிர்கள் தன் விருப்பப்படி கருவிகளை ஒடுக்க நினைத்தால் ஒடுக்க முடியாது. ஏனெனில் உயிரின் தற்போதம் ஒடுங்கினால் தான்

கருவிகள் ஒடுங்கும். உயிரின் தற்போதம் ஒடுங்காமைக்குக் காரணம் உயிரின் இச்சை ஞானக் கிரியைகள் ஆகும். கருவிகள் தானாகவும் ஒடுங்கா. ஒடுங்கினாலும் ஒடுங்கா. அப்படி கருவிகள் ஒடுங்கிவிட்டால் உயிரின் அறிவு விளக்கம் குறைந்து உயிர்தனி நிலை பெறும் உயிரின் தனி நிலையில் (கேவலாவத்தை) தன் முனைப்பு மலம் மறைத்துவிடும். பின் எப்படித்தான் கருவிகளை ஒடுக்குவது என்று வினவினால் உயிர் வேறு, கருவிகள் வேறு என்றும், உயிருக்கு வேறான பொருள்கள் கருவிகள் என்றும் எண்ணுவதே ஆகும். அப்போது உயிர் திருவருளில் ஒடுங்கி நிற்பதே வழி. உயிர் திருவருளில் அடங்கி நின்றால் திருவருளே கருவிகளை அடக்கும். அப்போது கருவிகளை விட்டு நீங்கி நிற்கும் நிலைவரும். கருவிகள் கொடுத்தது இறைவன் திருவருள். எனவே கொடுத்தவனிடமே அடங்கி நடந்தால் கொடுத்ததை ஒடுக்கி விடுவான் எனலாம். தன் முனைப்பிற்கும் இருவினைக்கும் காரணமாய் இருந்த கருவிகளை ஒடுக்குவதின் மூலம் திருவருளை அடைய தடையாய் இருந்த தடைகள் நீக்கப்பெறுவதால் எளிதில் அடையலாம்.

## 10.6. தற்போதம் ஒடுங்கவழி

அறிவுக்கருவிகள் புறத்தே உள்ள பொருள்களைக் கண்டு உயிருக்குச் சுட்டி காட்டி அறிவது உயிர் போதத்தின் இயல்பு. உயிர் தான் கெடாமல் இச்சா ஞானக்கிரியைகள் கெட்டால் உயிர் இறைவனை அடையும். பிறவி தோன்றாது. இச்சாஞானகிரியைகள் கெடுவது என்றால் உயிர் தான் அனுபவிக்கும் விருப்பத்தால் ஒன்றையும் விரும்பாமல் இருப்பது. தன்னுடைய அருமை பெருமையை வெளியுலகிற்கு காட்டி தன் அறிவை வெளிப்படுத்த வேண்டும் என்று எண்ணி எச்செயலும் செய்யாமல் இருப்பது. தன்னுடைய விருப்பம், அறிவு, செயல் ஆகிய முன்றும் இறைவன் அருளால் தான் தொழில்படுகிறது. அவன் அருள் இல்லையாயின் அவை தொழில் படா என்பதை உணர்ந்து அந்நினைவில் உறுதியாய் நின்றால் தற்போதம் கெடும் 'எல்லாம் இறைவன் செயல்' என எண்ணி செயல் பட்டால் தற்போதம் கெடும். கருவிகள் ஒடுங்கும் அதனால் இறையருள் அடையலாம்.

உயிரிலுள்ள தன் முனைப்பு ஆகிய நோயை உயிரோடு கலந்து நிற்கும் அருள் அறியும். வேறு ஒன்றும் அறியாது. எனவே அருள் உயிரோடு கலந்து நிற்கிறது என்பதையும் அதை உயிர் அறியாது இருக்கிறது என்பதையும் உணரலாம். அருள் காணமுடியாதது. ஆயினும் உயிர்களில் நின்று படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல் என்னும் நான்கு தொழில் செய்கிறது. உயிரையும் காக்கின்றது. ஐந்தொழிலில் ஒன்றாகிய, எஞ்சிய தொழிலாகிய

அருளைச் செய்வதற்கு இறைவன் குரு வடிவாய் வருவான். குரு வடிவாய் வருவது திருவருள். தன் முனைப்பு நோய் உயிரை விட்டு தானே விலகாது. இறைவன் திருவருள் குரு வடிவாய் வந்து போக்கினால்தான் நீங்கும். நீங்கும் என்பது தன்முனைப்பு உயிரைவிட்டு நீங்காது. வறுத்தவித்து முளைக்காதது போல் தன் முனைப்பு செயலற்று இருக்கும்.

## 10.7 ஞான நெறி

ஞான நெறியை சன்மார்க்கம். சத்திய நெறி என்பர். சுருங்கக் கூறின் அனைத்து சமய நூல் பொருள்களையும் கற்று, கேட்டு, உணர்ந்து அந்தப் பொருள் எல்லாம் கீழானது என்று அவற்றை நீக்கி ஞான நூலை விரும்பி இறைவன் திருவடியில் இரண்டறகலத்தல், திருவடி என்பது இறை உருவத்தின் காலடியை (பருப்பொருள்) குறிக்காது. திருவடி பேரறிவு எனப் பொருள், உயிராகிய சிற்றறிவு இறைவனாகியபேரறிவுடன் வேறுபாடின்றி கலத்தல் எனப்படும்.

### 10.7.1. ஞானம் வர மல பரிபாகம், இருவினை ஒப்பு தேவை

மலபரிபாகம் அடையும் போது திருவருள் உணர்வு உயிருக்கு ஏற்படும். அப்படி ஏற்படும்போது உயிர் தன் அறிவுக் கருவிகளால் நடைபெற்றது என்றும், அது சட அறிவு என்றும், அது தனக்கு வேறானது என்றும் தன்னுடைய தன்முனைப்பு பற்றிற்கு ஏற்ப திருவருளே தனக்கு அளித்தது என உணரும். உடற்கருவிகளின் இயல்பை ஆராயந்தால் அக்கருவிகள் உயிருக்கு வேறானவை என அறியலாம். அக்கருவிகள் அறிவற்றவை எனவும் அறியலாம். இவை உயிரின் அறிவில் தோன்றும். உயிரில் தோன்றும் உண்மை அறிவே சிவஞானம் எனப்படும். உணர்த்த உணரும் உயிருக்கு இறைவன் திருவருள் அறிவு ஊட்டும்.

## 10.8 முத்தி பெறும் வழி

முந்தைய பிறவிகளில் செய்த சரியை முதலிய தொண்டுகளின் பயனாக ஏற்படும் ஒற்றுமை. அதன் காரணமாக குருவின் அறிவுரைகளைக் கேட்டல், கேட்டப்பொருள் பற்றி நன்கு சிந்தித்தல், சிந்தித்ததலின் மூலம் உண்மையைத் தெளிந்து அறிதல், இறைவன் தானக வந்து இரண்டற்ற நிலை ஏற்படுமாறு நிட்டை கூடல் என்று ஞானம் நான்கு வகையாகும். ஞான நிட்டை திருவருளில் அடங்கி அழுந்தி உறுதியாகப் பற்றி நிற்பதாகும். இதனால் முத்தீ பெறலாம்.

## 10.9. ஞானத்தின் சிறப்பு

சரியை, கிரியை, யோகம் ஆகியவைகளை விட ஞானமே சிறந்தது "ஞானத்தால் வீடு" என்றே நான்மறைகள், புராணம்,நல்ல ஆகமம் சொல்ல . . ." சான்று சி.சித்தியார். 279.

"நவமாகும் தத்துவ ஞானத்தை நல்கி
நாதன் அடிக்கமலங்கள் நணுகுவிக்கும் தானே" சித்தி 278

"நண்ணிய ஞானத்தினால் இரண்டினையும்அறுத்து" சித்தி 283

"இறைவன் அடி அடைவிக்கும் எழில் ஞானபூசை" சித்தி 275

"ஞாலம் அதில் ஞான நிட்டை உடையோருக்கு
நன்மையொடு தீமை இல்லை. . ." சித்தி 284.

"பார்ப்பரிய பரம்பரனைப் பதிஞானத்தாலே
நேசமொடும் உள்ளத்தே நாடி . . ." சித்தி 292

இறைவன் திருவடியை அடையச் செய்வது இறைஞானமே. இறைஞானமே உண்மை ஞானம். தீக்கை, வேள்வி, பத்தி நெறி எல்லாம் ஞானம் ஆகா, இதனால் பற்று ஏற்படும். வீடு பேறு கிடைக்காது. பாசஞானத்தாலும், உயிர்ஞானத்தாலும் இறைவனை அடைய முடியாது. சரியை, கிரியை, யோகம் ஆகிய மூன்றினாலும் அடைவன சாலோக, சாமீப சாரூப பதவிகளே, இதனை பதமுத்தி என்னும் அபரமுத்தி என்றும் கூறுவர். ஞான நெறியால் தான் பர முத்தி எனப்படும் சாயுச்சிய பரவியை அடையலாம்.

## 10.10. ஞானம் கிடைக்கும் காலம்

உயிர்கள் ஞானம் பெற வேண்டும் என்று விருப்பம் ஏற்படவேண்டும். உலகப்பொருள்கள் மீது விருப்பம் கொள்ளும் உயிர் ஞானத்தின் மீது கொள்ளாது. ஏனெனின் இரண்டும் வேறானது. ஞானம் பெறவேண்டும் என்ற உணர்வு விருப்பம் அதிகமானால் இறைப்பணியில் ஈடுபடும். அந்த ஈடுபாட்டால் தான் மல பரிபாகம், இருவினை ஒப்பு, சத்தி நிபாதம் ஆகியவைகள் நிகழும். அப்போது ஞானம் கிட்டும். ஞானம் கிட்டினால் திருவருள் அடையலாம். எனவே திருவருள் அடையும் வழி எதுவென வினவினால் உடல், கருவிகள், உலகம், நுகர்வுப் பொருள்கள் மீதுள்ள பற்றினை நீக்கி

ஞானம் பெறவேண்டும், என்று எண்ணி இறைப்பணி செய்ய வேண்டும். மலபரிபாகம், இருவினை ஒப்பு, சத்திநிபாகம் நிகழவேண்டும். அப்போது ஞானமும் திருவருளும் கிடைக்கும்.

## 10.11. ஞானநெறியில் செய்ய வேண்டியது

ஞானநெறி சன்மார்க்கம் எனப்படும் இந்நெறியாளர் முப்பொருள் உண்மையையும் இயல்பையும் மிகவும் தெளிவாக அறிய வேண்டும். முப்பொருள்களின் இயல்பும் உண்மையும் தெளிவாக அறிந்தால் ஞானம் ஏற்படும். ஞானம் ஏற்பட இதுவே வழி. ஞானம் வந்தால் இறைவனை அறியும் உணர்வு தோன்றும். அப்போது உயிரானது தன்னையோ, தன்னுடைய அறிவையோ, இறைவனையோ வேறாக எண்ணாமல் இறையருளில் நிற்கும் பயிற்சி பெற வேண்டும்.

### ஞானம் மட்டுமின்றி வேறு வழியில் வீடுபேறு பெறலாம்

இறை நெறி நான்கு அவை சரியை, கிரியை, யோகம், ஞானம். இவை ஒன்றிலிருந்து ஒன்று வளர்ந்த நிலை, வேறான நிலை அல்ல சரியையை அரும்பு என்றும், கிரியை மலர் என்றும், யோகத்தை காய் என்றும், ஞானத்தைக், கனி என்றும் கூறுவார் தாயுமானசாமிகள்.

"விரும்பும் சரியை முதல் மெய்ஞ்ஞானம் நான்கும்
அரும்பு, மலர், காய், கனி அன்றோ பராபரமே."

அரும்பு, மலர், காய், கனி இந்நான்குமே அன்றாடம் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு வகையில் உதவுகின்றது போலவே சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நான்கும் அவரவா நிலைக்கு ஏற்ப உதவி வீடு பேறு அளிக்கும்.

## 10.12. சரியை நெறி

சரியை நெறி உடலால் வழிபடும் நெறி எனலாம். எவ்வாறெனின் இறைவன் குடிகொண்டிருக்கும் திருக்கோயில்களைத் தூய்மை செய்து திருமெழுக்கு இடுவது. திருவிளக்கு ஏற்றுவது, மலர்தோட்டம் வைத்து பூ பறித்து மாலை கட்டி இறைவனுக்கு அணிவிப்பது இறைவனுடைய புகழை வாயார வாழ்த்துவது இறையடியார்க்குத் தொண்டு செய்தல் ஆகியவையாம். இவை புறத் தொழில். உடலால் செய்யப்படுவது. உருவத்திருமேனியை

வழிபடுவதாகும். இந்நெறி நடப்பவர் சாலோக பதவியாகிய பதமுத்தி அடைவர்.

## 10.13. கிரியை நெறி

கிரியை நெறி ஐம்பொறிகளும் மனமும் ஒன்று கூடித்தொழில்படும். இது அகத்தொழில் புறத்தொழில் இரண்டும் நிகழ்த்தும். ஏனெனில் அகக்கருவி மனமும், புறக்கருவி ஐம்பொறிகளும் கூடித்தொழில் படுவதால் ஆகும். சாமீபம் பதவி என்னும் பதமுத்தி அடைவர். பூசனைக்கு வேண்டிய மலர், தாமம், தீபம் (புகை, சுடர்) தூய நீர், திருவமுது முதலியவற்றைக் கொண்டு ஐவகை சுத்தி செய்து இறைவனைப் பாவனை செய்து மெய்யன் பினால் வழிபடுவது ஆகும்.

## 10.14. யோக நெறி

மனம் முதன்மையாக இருந்து தொழில் படுவது. கீழ் நோக்கிச் செல்லும் காற்றினை அடக்கி சுழுமுனையில் காற்றைச் செலுத்தி மனத்தை ஒருநிலைப்படுத்தி ஆறு ஆதாரங்களையும் உணர்ந்து, அதன் அதி தேவதைகளைத் தியானித்து, அந்த ஆறு ஆதாரங்களிலும் இறைவன் வெளிப்படுவதாக நினைத்தல். இது வினைகளைக் கெடுக்கும். இதனால் சாரூபபதவி என்னும் பதமுத்தி அடைவர். இயமம் , நியமம் கடை பிடிக்கவேண்டும். இமயம் என்பது கொல்லாமை, உண்மை கூறல், களவு செய்யாமை பிறர் பொருள் விரும்பாமை, பொறி அடக்கம் முதலியனவாகும். நியமம் என்பது தவவாழ்க்கை, தூய்மை உடைமை, தத்துவ நூல் ஆராய்தல் தனக்குக் கிடைத்து பொருள்களைக் கொண்டு மகிழ்வோடு வாழ்தல் (போதும் என்ற மனமே பொன் செய் விருந்து ) இறைவழிபாடு செய்தல் முதலியனவாகும்.

### 10.14.1. அடையும் வழி நான்கு

சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நெறிகள் நான்கு இவைகளின் விரிவு பதினாறு நெறிகள். இந்நெறியில் செல்வோர் இறைவன் திருவருள் அடையலாம். இந்நெறி செல்வோர் அகக்கருவி புறக் கருவி துணையுடன் செயல்படுவர். சரியை நெறியில் தொடங்கி, கிரியை நெறி, யோக நெறி பின்பற்றி ஞான நெறியில் ஈடுபட்டால் ஞானம் வரும். இறைவனே குருவாக வந்து திருவருள் புரிவான்.

## 10.15. அறவழியும் திருவருளும்

இறைவன் திருவடியை வழிபடுவதே அறமாகும். வழிபாட்டின் முழுப்பயனையும் அளிக்கும் நல்வினை (புண்ணிய செயல்) ஆகும். இறைவனை நினையாது, வழிபடாது, செய்கின்ற நல்வினை அனைத்தும் இறைவன் திருவருள்பெற உதவாது. உலகியல் பயனை மட்டும் தரும். வழி பாட்டின் நோக்கமே இறைவனின் அருள்தன்மையை எண்ணி, எண்ணி, காதலால் (அன்பால்) கசிந்து உருகி கண்ணீர் மல்க வழிபடுவதாகும். இறைவனால் அளிக்கப்பட்ட உடல் மனம் மொழி ஆகிய அனைத்தும் செய் நன்றி மறவாது அவனை வழிபட பயன்படுத்த வேண்டும்.

## 10.16. இறைவன் திருவடி

இறைவன் திருவடி சேரவேண்டும் என்றும் குருபாதம், திருவடி, நற்றாள், இறைவனடி, பாதம் என்னும் பல சொற்கள் கூறப்பெறுகின்றன. பாதம் என்பது பரிபாசை சொல். பிரணவம், எனப்படும் வாசியைக் குறிக்கும் என்பர் சித்தர் நெறியினர். திருக்குறளில் 'நற்றாள்' மாணடி, தாள், இறைவன் அடி என்ற சொற்கள் வருகின்றன. அவை அனைத்தும் ஒரு பொருளையே குறிக்கும். இப்பொருள் அறிவு என்பதாகும். பாதம், அடி, தாள், என்பவை எல்லாம் அறிவு வடிவானவை. அவை இறைவனின் பருவுடலின் திருவடியென எண்ணுதல் கூடாது. ஏனெனில் இறைவன் உருவம் பெயர் ஆதி அந்தம் அற்றவன். ஆனால் பேரருள், பேரறிவு உடையவன், அறிவிற்கு அழிவு கிடையாது. அறிவு தான் இன்பம் துன்பம், இறப்பு பிறப்பு பற்று பாசம் முதலியவற்றின் உண்மை நிலையைத் துல்லியமாக அறியச் செய்யும். உண்மையை அறிபவர்கள், நிலையில்லாத பொருள் மீது பற்றும், தொடக்கத்தில் சிறிது இன்பமும் பின்னர் பெருந்துன்பமும் அளிக்கும் அழியக்கூடிய பொருள்மீது பற்று கொண்டு அறியாமை வயப்பட்ட அல்லல் படமாட்டார்கள்.

உயிர் சிற்றறிவு உடையது. அந்த அறிவும் தளைகளால் மறைக்கப்பட்டு அறியாமை இருளில் சிக்கி தவிக்கும் தன்மை போக்கக் கூடிய ஆற்றல் ஒளிக்குத்தான் உண்டு. ஒளி என்பது அறிவு. எனவே அறிவு ஒளி கொண்டு அறியாமை இருளை விரட்ட வேண்டும் (தன் முனைப்பு முதலிய மலத்திலிருந்து விடுபட வேண்டும்) இறைவனின் பேரறிவுடன் உயிர் சேர்ந்தால் உயிருக்கு இரண்டற கலக்கும் வாய்ப்பு தோன்றும். இறைவனின் பேரறிவுடன் கலப்பதின் மூலம் உயிர் அறிவும் ஆகும். அழியாமை அடையலாம். என்றும் அழியாத அறிவு உடல் பெற்று நிலையான இன்பம், முழுமையான

பெருவாழ்வு நித்திய சுகபூரணப் பெரு வாழ்வு அடையலாம்; இதுதான் மரண மிலாப்பெருவாழ்வு என்பர்.

'மனக்கவலை மாற்றல் அரிது' என்கிறார் வள்ளுவர். மனம் உள்ளவரை மனக்கவலை இருக்கும். மேலும் மனத்தின் தன்மையறிந்து அதனைக் கட்டுப்படுத்தா விட்டாலும் கவலை இருக்கும். எனவே மனம் அழியவேண்டும் அல்லது அடங்க வேண்டும். இந்த இரண்டினையும் செய்யும் ஆற்றல் அறிவிற்கு மட்டும் தான் உள்ளது. எனவேதான் தனக்குவமை இல்லாதான் தாள் சேர்ந்தார்க்கு முடியும் என்கிறார். அஃதாவது தனக்கு உவமை இல்லாததான் இறைவன் ஒருவனே. அவன் தாள் என்பது அவனுடைய பேரறிவு. அந்தப் பேரறிவுடன் உயிர் சேர்ந்தால் அறிவு பெறும். மனக்கவலைப்போக்க இயலும். மனமும் மறையும். "அறிவுக்கு அழிவில்லை ஆக்கமும் இல்லை, அறிவுக்கு அறிவல்லது ஆதாரமுமில்லை" என்கிறார் திருமூலர். கற்றதனால் ஆய பயன் இறைவனின் அறிவைச் சார்தலே. அறிவைச் சார்வது தான் கற்றதினால் ஏற்பட்ட பயன்ஆகும். அப்படிச்சாராத கற்றவர் கல்லாத மற்றவர் போன்றவர் ஆவார். கற்றது, வீண் வேலையாகும். கண்ணிருந்தும் குருடன் என்பது போல கற்றும் பயன்படுத்தாமை பயன்அற்றதாகும்.

திருவடி, நற்றாள் என்பது இறைவனின் பருவுடலின் கால் பாதத்தைக் குறிக்கவில்லை என்பதற்கு மற்றொரு காரணம் சாலோகம், சாமீப, சாருப, சாயுச்சிய முத்திகள் கூறப்படுகின்றன. இறைவன் உலகிற்குச்செல்லல், இறைவனுக்கு அருகில் இருத்தல் இறைவன் திருவுடல் பெறல் இறைவன் திருவடியில் இரண்டறக் கலத்தல் எனக் கூறப்பெறுகிறது. எனவே இறைவனின் திருவுடல் ஒன்றைப் பெற்றவுடன் அந்த உயிருக்குப் பேரறிவு தானே தேவை. உடல் மட்டும் இருந்தால் போதுமா. அந்த உடலுக்கு ஏற்ற அறிவு வேண்டாமா? கண் இருந்தால் மட்டும் போதுமா? அந்தக் கண்ணிற்குப் பார்க்கும் ஆற்றல் வேண்டாமா? உயிரினங்களில் ஒவ்வொரு உடலுக்கும் ஏற்றவாறே அறிவின் எண்ணிக்கை உள்ளது ஓர் அறிவு தொடங்கி மனிதனுக்கு ஆறு அறிவு வரை கூறப்பட்டுள்ளது. ஆறாவது அறிவும் சிற்றறிவே. அந்த அறிவையும் மலங்கள் மறைக்கின்றன. அதனால் அறிவு பெறும் பயன் இல்லை. எனவே சிற்றறிவின் துணை கொண்டு பேரறிவில் சேரவேண்டும் என்கின்றனர் சித்தர்கள், ஞானிகள்.

இறைவனின் பருவுடலின் குருவடியைச் சேருவது என்று எண்ணினால், ஒவ்வொருவரும் இறைவன் உருவை வீட்டில் வைத்து அதன் திருவடியில் தன்தலை வைத்து வணங்கலாம். இது எளிது. உடன் சொல்ல நற்பயன் எல்லாம் கிட்டி விடுமா? கிட்டாது. அது அந்த

உயிரின் அடக்கத்தைக் காட்டுமேயொழிய இறைவன் திருவருளை உடன் பெற்று விட இயலாது. அதுபோன்றே குருவின் அறிவை அறிந்து, அதன் உண்மை தன்மையைச் சிந்தித்துத் தெளிந்து அதன் படி நடந்தால் அறிவு பெறலாம். திருவருள் பெறலாம். எனவே பருவுடலின் தாளை, பாத்தைக் குறிக்காது. இறைவனின் பேரறிவினையே இச்சொற்கள் குறிக்கின்றன. பாதம்-பூரணமாய் நிறைந்தது.

## 10.17. நூல் சான்று

10.17.1. "திருவடி ஞானம் சிவமாக்குவிக்கும்
திருவடி ஞானம் சிவலோகம் சேர்க்கும்
திருவடி ஞானம் சிறை மல மீட்கும்
திருவடி ஞானமே தண் முத்தி சித்தியே." திருமந்திரம், 1598

10.17.2. "சாகாவரம் தந்த தாரக பாதம்
சச்சிதானந்த சகோதய பாதம்
தேகாதி எல்லாம் சிருட்டிக்கும் பாதம்
திதி முதல் ஐந்தொழில் செய்கின்ற பாதம்
ஓங்கார பீடத்து ஒளிர்கின்ற பாதம்
ஒன்றா யிரண்டாகி ஓங்கிய பாதம்
தூங்காத தூக்கத்தில் தூக்கிய பாதம்
துரியத்தில் ஊன்றி துலங்கிய பாதம்
ஆருயிர்க்கு ஆதாரம் ஆகிய பாதம்
அண்ட பிண்டங்கள் அளிக்கின்ற பாதம்
சாருயிர்க்கு இன்பம் தருகின்ற பாதம்
சத்திய ஞான தயா நிதி பாதம்
எண்ணிய வாறே எனக் கருள் பாதம்
இறவா நிலையில் இருத்தி பாதம்
அருட்பெருஞ் சோதிய தாகிய பாதம்
அம்மையும் அப்பனும் ஆகிய பாதம்" திருவருட்பா.

"பூரண மாய் நிறைந்தபரா பரத்தின் பாதம்"
போற்றியே சுழி முனையில் புகுந்துக்கொண்டு"

சுப்ரமணியர் ஞானம், காப்பு விருத்தம்.

10.17.4. "சேவடிக்கண் நம்சென்னி மன்னிச் சுடருமம்"
10.17.5. "சேவடிக்கண் சென்னி மன்னி மலருமே"
10.17.6. "சேவடிக்கண் சென்னி மன்னில் பொலியுமே"

*10.17.7.* "சேவடிக்கண் சென்னி மன்னித் தகழுமே

சென்னிப்பத்து - திருவாசகம்.

*10.17.8.* "சேவடிக்கண் சென்னி மன்னிமலருமே" என்கிறார்

மாணிக்கவாசகப் பெருமான்.

*10.17.9.* "காணும் தொழிந்தேன் நின்திருப்பாதம்"

எண்ணப்பதிகம் - திருவாசகம்.

*10.17.10.* "மாமறையும் அறியாமலர்ப் பாதம் வணங்குதும் ஆகாமத்

திருப்படையாட்சி - திருவாசகம்.

*10.17.11.* "உடைந்து நைந்துருகி உள்ளொளி நோக்கி

உன் திருப்பாதம் . . ." ஆசைப்பத்து - திருவாசகம்.

*10.17.12.* "சென்னியில் வைத்த சேவக போற்றி"

போற்றித் திருவகவல் - திருவாசகம்.

10.18. சிவயோகபாவனை

உயிர் இறைவனிடத்தில் அடங்கியும், தன்னிடத்தில் இறைவன் கலந்து இருப்பது சிவயோக பாவனை என்பர். அகப்பூசனைச் செய்தால் இறைவன் உயிரில் விளங்கித் தோன்றுவான். மலத்தால் வரும் துன்பங்களைப் பற்றத் துடைப்பான். தீயில் பட்ட இரும்பு தீயின் வண்ணம் ஆவதுபோல இறைவனும் தன் வயப்பட்ட உயிரைப் பேரறிவினைத்தந்து பேரருள் புரிவான். இறைவன் திருவருள் பெற புறப்பூசனைவிட அகப்பூசனையே சிறந்தது. பேரறிவு பெற்றதினால் மலம் நீங்கும் அதனால் வீடு பேறு கிட்டும்

". . . . அருக்கன்
புகுத இருள்போம் அடியிற் பொருந்த மலம் போமே"
சித்தி. 314.

"துங்க அரன் ஞானக்கண் கொடுத்து அருளினாலே
சோதிக்குள் சோதியாய்த் தோன்றிடுவன் காணே," சித்தி. 317

## 10.19. அகப்பூசைமுறை

அகப்பூசை செய்வோர் தன்னுடைய இதயத்தை (அகத்தை) பூசைக்குரிய இடமாகக் கொள்ள வேண்டும். தன்னுடைய கொப்பூழியிருந்து எட்டு அங்குல நீளத்தண்டு ஒன்று இருப்பதாக எண்ண வேண்டும். அத்தண்டின் உச்சியில் எட்டிதழ்கள் இருப்பதாக அதாவது எட்டிதழ் தாமரை இருப்பதாக எண்ணவேண்டும். அம்மலரின் நடுவில் வழிபடும் தெய்வம் இருப்பதாக

எண்ணவேண்டும். அந்தத் தெய்வத்திற்குத் திருமுழுக்கு ஆட்டவேண்டும். (அபிஷேகம் செய்தல்) ஆடை ஆபரணம் மாலை சூட்டி அர்ச்சனை செய்து திருவமுது படைக்கவேண்டும். புகைகாட்டி (தூபம்) கற்பூரசுடர் (தீபம்) காட்டவேண்டும். புறப்பூசையில் செய்வது போல் அகத்தில் செய்வதால், இஃது அகப்பூசை எனப்படுகிறது. புறப்பூசையின் போது மனம் ஒன்று எண்ணும், கை ஒன்று செய்யும், வாய் ஒன்று சொல்லும். மூன்றும் ஒன்றிய நிலை இருக்காது. ஒன்றிய நிலையில் இருந்தால்தான் பயன். எனவே அகப்பூசையில் மனம், மொழி, மெய் மூன்றும் ஒன்றிய நிலையில் உண்மையான பூசை செய்வதால், இறைவனைப் பற்றிய எண்ணம் உறுதியாக உள்ளத்தில் இருப்பதால், இறைவனும் உண்மையான வழிபாட்டினை ஏற்று திருவருள் புரிகிறார்.

## 10.20. ஞான வழிபாடு

ஞான நூல்களை ஆசிரியர் துணையுடன் ஐயம்திரிபற கற்றல், படித்து அறிந்தபின் அறிந்தவற்றைப் பக்குவம் உள்ளவர்களுக்குக் கூறல். சாத்திர நூல்களை நுட்பமாய் அறிந்து அறிந்தவற்றைப் பிறருக்குச் சொல்லல், படித்தலும் படித்ததை ஆய்ந்துப் பிறகுக்குச் சொல்லுவதும் ஆராய்ச்சி அறிவே. அனுபவ அறிவு ஆகாது. எனவே அனுபவ அறிவு ஏற்படும் பொருட்டு ஞான ஆசிரியரிடம் உபதேச முறையில் நூற்பொருள் கேட்டல், கேட்டப்பொருளைத் தனித்திருந்து சிந்தித்தல் இதுவே ஞான வழிபாடு. இறைவன் திருவருளும் வீடுபேறும் கிட்டும்.

## 10.21. திருவருட் சத்தி

சத்திநிபாதம் என்பது சத்தி பதிதல் சத்தி இறையருள். நிபாதம் வீழ்ச்சி. உயிரின் அறிவு விருப்பச் செயல்களை மறைப்பாற்றலால் நின்று மறைப்பைச் செய்து வந்த இறைவன் தன் ஆற்றல் மல பரிபாகம், இருவினை ஒப்பு உயிருக்கு ஏற்பட்ட பின் உயிரின் மீது பதியச் செய்யும். உயிருக்கு திருவருள் கிட்டும் என்பது பொருள். எனவே திருவருள் அடையும் வழி எது வென எண்ணின் உயிர் தன்னுடைய மலபரிபாகம், இருவினை ஒப்பு ஆகியவற்றை அடையவேண்டும். மலவாசனையை நான்கு கூறாக்கி அது இறைவன் திருவருள் சத்தியை நான்கு கூறாக்கி ஒரு கூறு மலவாசனை நீங்கினால் ஒரு கூறு திருவருள்சத்தி கிடைக்கும். இது மந்ததர சத்திநிபாதம் என்பர். இரு கூறு மல வாசைன நீங்கினால் இருகூறு சத்திநிபாதம் கிடைக்கும். இது மத்தசத்திநிபாதம் என்பர். மூன்று கூறு மலவாசனை நீக்கினால் மூன்று கூறு திருவருள் சத்தி கிட்டும். இது தீவிர சத்திநிபாதம் என்பர். நான்கு கூறு முழுதும் மலவாசனை

நீக்கினால் நான்கு கூறு (முழு) திருவருள் சத்தி கிட்டும். இது தீவிரதரசத்திநிபாதம் என்பர். ஆகவே உயிரிடமிருந்து எவ்வளவு முயற்சியுடன் ஞானத்துடன் தன்னிடமுள்ள மலவாசனையைப் போக்குகின்றார்களோ அவ்வளவுக்களவு திருவருட்சத்தி கிடைக்கும். மலவாசனையைப் போக்கினால் திருவருள் சத்தியைப் பெறலாம் என்பது பெறப்படுகிற கருத்து ஆகும்.

## 10.22. அருள் செய்யும் முறை

ஒரு மலம் உடைய (விஞ்ஞான கலர்) பக்குவம் உடையவர்களுக்கு இறைவனே அவர்களது அறிவில் நின்று அருள்புரிவான். மலத்தையும் நீக்குவார். இரு மலம் உடையவர் (பிரளயா கலர்) பக்குவம் பெற்றால் இறைவன் முன்னிலையில் நின்று தன் முனைப்பு வினையையும் நீக்குவார். மும்மலம் உடையவர் (சகலர்) பக்குவம் வாய்க்கப்பெற்றவருக்கு குரு வடிவாய் வந்து மும்மலங்கள் போக்கி அருள்வார்.

தன் முனைப்பு நோய் உள்ள காலத்தில் உயிருக்கு மறைப்பாற்றல் துன்பமாயத்தோன்றும். தன் முனைப்பு நீங்கின் உயிருக்கு அந்த மறைப்பாற்றலே திருவருள் ஆற்றலாக மாறும், மனம் பக்குவம் பெற்றால் இறைவனே உயிரின் தகுதிக்கேற்ப தோன்றி மல வாசனையைப் போக்குவான். மல வாசனை நீங்கியவுடன் திருவருள் சத்தியை அளிப்பான்.

அருள் இருவகையாக உயிரிடம் காணப்படும். ஒன்று அருளைப் பெற்றவர்க்கு (தன்னை அடைந்தவர்க்கு) உண்மைப் பொருளைக்காட்டும். தன்முனைப்பு மலம் நீங்காதவர்க்குப் பொய்ப்பொருளைக் காட்டும். எனவே பொய்ப்பொருளா? மெய்ப்பொருளா என்பது அந்த உயிர் தன் முனைப்பு மலத்தைப் பெற்று உள்ளதா! இல்லையா? என்பதைப் பொறுத்துள்ளது. அருளும் தன்முனைப்பும் எதிர் எதிரானவை. அருள் இறைவனைக் காட்டும். உலகை (தளை) மறைக்கும். தன் முனைப்பு உலகைக் (தளை) காட்டும் இறைவனை மறைக்கும். எனவே ஓர் உயிர் ஒன்று தன் முனைப்பு மலவாசனைப் பெற்றிருக்கும் அல்லது திருவருள் சத்தி பெற்று இருக்கும்.

திருவருளைத்தன்னுடைய முயற்சியால் திறமையால் பெற்றதாக எண்ணக் கூடாது திருவருளானது தானாக விரும்பி உயிருக்குப் பேரின்பம் கொடுக்கும்.

பேச்சை நிறுத்தி உலகப்பொருள்மீது பற்று அற்று உயிராகிய தான்வேறு உயிரோடு கூடி இயங்கும் உடல் வேறு, உடல் 'தான்' அல்ல என அறியவேண்டும். அருளால் தன்னையும் தலைவனையும்

அறிய இதுவேவழி. இறைவன் உயிரின் முன்வினையைத் தூய்மை செய்து நிகழ் வினையை அனுபவிக்கச் செய்து ஒழித்து வருவினையையும், தன்முனைப்பையும் நீக்கியருளுவான்.

## 10.23. கிரணாகமம் கருத்து

கிரணாகமம் பதிபடலம் தீட்சாகன்ம படலம், மாயா படலம் கூறுவது முக்கியமானது.

"உடம்பு இல்லையாயின் வீடுபேறு, போகம், அறிவு செயல், குருவருள் இவை உயிருக்கு இல்லை." சூ 29. எனவே மனிதர்கள் உடல் உள்ள போதே அறிவால், செயலால் குருவருள் பெற்று விடு பேறு பெறவேண்டும்.

"எவ்வாறு (ஓரிடத்தில்) ஒரு பொருளின் வீழ்ச்சி அங்குள்ளவர்களுக்கு அச்சத்தை விளைத்தல் இயல்பாகிறதோ அவ்வாறு சத்திநிபாதம் ஆன்மாவிற்கு உலகியலில் அச்சத்தைக் கொடுப்பதாகும். பொருள் வீழ்ச்சியினால் அச்சம் அடைந்தவன் அந்த அச்சத்தினால் வேறொரு (பாதுகாப்பான) இடத்தைத் தேடிச்செல்லுதல் போல சத்திநிபாதம் வரப்பெற்ற ஆன்மா உலகியலை நீக்கி . . . குருவைத் தேடிச் செல்கிறது. சத்திநிபாதம் படலம். சூ. 56.

ஆன்மா உண்மை ஞானத்தைப் பெறுவதே சத்திநிபாதம் என்று கூறப்படுகிறது. அதனால் சத்தி பதியப்பட்ட ஆன்மாவிற்கு அந்தச் சத்திநிபாதம் பக்தியினால் வருவது என்று சொல்லப்படுகிறது. சூ.7.7 ½

"அந்தச் சத்திநிபாதம் வந்தஉடனே ஞானம் பக்தியின் அடையாளம் இவைகள் உண்டாகும். இவற்றால் சிவனது உண்மை இயல்பு புலப்படுத்தப்படும்." சூ 9 ½

"இருவினையொப்பு இல்லாவிடில் அவ்வின்மையும் முத்தியும் ஒரே காலத்தில் அமையா. சூ 16.

"உடல் சடப்பொருளாயிருப்பதனால் அவ்வாறு (தீட்சைச் செய்யப்பட்டதாக) எண்ணப்படுகிறது யாவருக்கும் அருள் செய்பவனாகிய சிவன் அறிவுடைய ஆன்மாக்களுக்கு மட்டும் அருள் செய்பவனாகச் சொல்லப்படுகின்றான். சூ.4 தீட்சா கன்மம்."

சிவன் எல்லோருக்கும் அருள்புரிபவனாய் இருப்பதால் நியமம் தப்பாமலே தன்னுடைய திருநாமத்தைச் சொல்பவர்களுக்கு அருள் செய்கின்றான். அவனது அருளால் வினைகள் அழிகின்றன. சூ. 10.10 ½

“... அறிவையே இயல்பாக உடையவனிடத்தில் அறியாமையாகிய குணம் இருக்க மாட்டாது. இருப்பின் அவன் பரிணாமத்தை உடையவனாகிவிடுவான். ஆன்மாவின் அறிவு ஒரு காலத்தில் விளக்கப்படுகிறது. மற்றொரு காலத்தில் மறைக்கப் படுகிறது. சூ.24.25 ½

மாணிக்க வாசகர் சிவபெருமானின் பெருமைகளை எல்லாம் கூறி அருள்புரிக என்று வேண்டுகிறார். அருட்பத்து பிராத்தனைப்பத்து முதலிய பகுதியின் மூலம் இறைவனை மனமுருகிவேண்டினால் அருள்புரிவான் என்பது தெரிகிறது.

## 10.24. அருள் நெறி

“கடவுளது திருவருளை எவ்வாறு பெறக்கூடும்? அருள் என்பது கடவுள் தயவு. ஜீவகாருண்யமென்பது ஜீவர்கள் தயவு. ஆதலால் சிறு வெளிச்சத்தைக் கொண்டு பெருவெளிச்சத்தைப் பெறுவது போல சிறிய தயவாகிய ஜீவ தயவைக்கொண்டு பெருந்தயவாகிய கடவுள் அருளைப் பெற வேண்டும்.”

அக்கடவுள் தயவாகிய அருள் எத்தன்மையுடையது? நமது ஆன்ம அறிவாகிய புத்தி தத்துவத்தினுக்கு நன்மை தீமையை விளக்கிக் காட்டுவதாயும், வேதாகம கலைகளைக்கொண்டு நன்மையாதிகளை விதிப்பதாயும், அறிபவர்களின் தரத்திற் கொத்த தாயும், அறிபவர்கள் எந்த வஸ்துவை அறிகின்றார்களே. அந்த வண்ண மாயும் உள்ளது.

இவ்வண்ணம் விளங்கும் அருளை நாம் பெறுவதற்கு உபாயம் என்ன? புத்தி தத்துவத்தால் நன்மை தீமையை விசாரித்து, நன்மையே உருவாய் விளங்கும் பெரியாரைத் துணை கொண்டு, அவரால் கட்டளையிடும் திருப்பணியைக்கைக்கொண்டு இடையறாது. செய்யின் அவ்வருளைப்பெறலாம்.

வள்ளலார் உரைநடைப்பகுதி.

## 10.25 இப்பிறவியிலேயே திருவருள் பெறலாம்

"செனனம் ஒன்றிலே சீவன் முத்தர் ஆக." சி.சி. சு பக்கம். 268.

திருவருள் பெறவேண்டும் என்ற எண்ணம் உறுதியாக உள்ளத்தில் உள்ளவர்கள் பழ வினை, நிகழ்வினை, எதிர்வினை பற்றியும், தன் முனைப்பு மலமும் பற்றியும் கவலையுறாது, இறைவனைப்பற்றிய உண்மையான முழு அறிவும், உயிரைப் பற்றிய உண்மையான முழு அறிவையும், தளையைப் பற்றிய உண்மையான முழு அறிவும் ஞான நூல் வாயிலாக அறிந்து, சிந்தித்துப் பார்க்கின் இறைவன் பேரறிவும் பேரருளும் உடையவன். தளை அறிவற்றது. உயிரை இறைவன் திருவருள் பெறாமல் தம் பக்கம் ஈர்த்து இறப்பு பிறப்பு இன்ப துன்பத்திற்கு ஆளாக்குகின்றது என்பதை அறியலாம். அப்படியறியின், மனப்பக்குவம் பெற்றால் மலவாசனையை விட்டு ஒழித்தால் பிற உயிர்களிடம் அருள் என்னும் தயவு காட்டினால், இறைவன் தானே முன் வந்து அருள்புரிவான். அவன் அருள் பெற பல பிறவிகள் வேண்டாம். ஒரு பிறவியே போதும். எனவே திருவருளை இப்பிறப்பிலேயே இறை தொண்டாலும், அன்பு அருள் உள்ளம் கொண்டு உலகப்பொருள் மீதுள்ள பற்றினை விட்டு,. மலவாசனை நீக்கி, தம்மினும் அருளிலும் அறிவிலும் மிக்கவர் இறைவனே, எல்லாம் இறைவன் செயல், தான் நினைத்ததை எல்லாம் முடித்திட முடியாது என்று எண்ணி, இறைவன் அருள் கொண்டு அவன் நற்றாளாகிய பேரறிவில் கலந்தால் திருவருள் அடையலாம். வீடுபேறும் பெறலாம். சிற்றறிவு கொண்டு பேரறிவு பெறுக. அருள் கொண்டு திருவருள் பெறுக.

எல்லாம் இறைவன் செயல்.

## ஆறு யோக ஆதாரங்கள்


பிரம்ம கபாலம்
சகஸ்ராரம்
1000 இதழ்
வெள்ளை நிறம்
புருவ நடு
ஆக்ஞை
2 இதழ்
வெள்ளை நிறம்
ய
வ
மிடறு
விசுத்தி
16 இதழ்
சாம்பல் நிறம்
நெஞ்சம்
அனாகதம்
12 இதழ்
நீல நிறம்
இதய சக்கரம்
சி
மேல் வயிறு
மணிபூரகம்
10 இதழ்
ஊதா நிறம்
ம
தொப்புள்
சுவாதிஷ்டானம்
6 இதழ்
ஆரஞ்சு சிவப்பு நிறம்
ந
ஓம்
மூலம்
மூலாதாரம்
4 இதழ்
சிவப்பு நிறம்